# ஒரு சிட்டுக்குருவியின் வீழ்ச்சி



சாலிம் அலி

தமிழாக்கம்
நாக. வேணுகோபாலன்

# ஒரு சிட்டுக்குருவியின் வீழ்ச்சி

ஒரு சிட்டுக்குருவி விழுவதிலும்
பரம்பொருளின் சிறப்பு இருக்கிறது.
ஹாம்லெத் V.ii.232-3

சாலிம் அலி

தமிழாக்கம்
நாக. வேணுகோபாலன்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

எனது கதை சுவையானதாக அமையக்கூடும்
என்று என் மனதில் முதலில் எண்ணத்தை விதைத்த
திரு 'ஹாக்' (ஆர்.ஈ. ஹாகின்ஸ்) அவர்களுக்கு
இந்நூல் காணிக்கை

# பொருளடக்கம்

# முன்னுரை

முக்கால் நூற்றாண்டு காலம் வாழ்க்கை நினைவுகளை எழுத வேண்டும் என்கிற எண்ணமே இல்லாமல் வாழ்ந்துவிட்டு திடீரென்று ஒருநாள் எழுதலாமென்று முடிவு செய்வது சரியான வேலையல்ல என்று தெளிவாகவே உணர்கிறேன். பாதுகாத்து வைத்த கடிதங்கள், நாட்குறிப்புகள் முதலான பழைய ஆதாரங்கள் ஏதுமில்லாமல், கண்ணாமூச்சியாடும் நினைவுத்திறனை மட்டுமே வைத்துக்கொண்டு செய்துள்ள இப்பணியில் நிறைவு இராது. இந்தச் சூழ்நிலையில், என் வரலாற்றை எழுதுவதற்கான துணிவை உண்டாக்க நண்பர்களும் என் 'விசிறி'களும் செய்த வற்புறுத்தல் கொஞ்சநஞ்சமல்ல. இந்தியர்களுக்கு அந்த 'நோய்' பற்றி எதுவுமே தெரியாத காலத்தில் பறவையியலுக்கான கிருமிகளை எப்போது, எப்படி நான் என்னுள் ஏற்றிக்கொண்டேன் என்பதை அறியும் ஆவல் கொண்டவர்களுக்கு அதைக்காட்ட இது ஒரு பயனுள்ள வழிதான். கட்டாயத்தினால்தான் இதை எழுதினேன் என்பதை சொல்லவே வேண்டியதில்லை. இந்நூலை எழுதும் முயற்சி எட்டாண்டுகள் முன்பு துவங்கியது. திட்டவட்டமான பணி முறைகளிலும் காலவரிசையிலும் எழுதப்படாமல், கிட்டத்தட்ட சிதறலான ஒரு நினைவுத் தொகுப்பாகவும், துண்டுத் துணுக்கு களாகவும் எழுதப்பட்ட முக்கிய நிகழ்வுகளுமாக, எண்ணம்போல், மனம் போன போக்கில் எழுதியிருக்கிறேன். நேசபூர்வமான, ஆனால் நலம் விரும்பி நண்பர்களும் உறவினர்களும் செய்த நச்சரிப்புதான், தள்ளிப்போட்டுக் கொண்டேபோய் புதை குழியில் இந்த திட்டமே மூழ்கிப்போய்விடாமல் இது நூலாக உருப்பெறும் நிலைக்குப் பொறுப்பாகும்.

தனித்தனியே குறிப்பிடுவது இயலாத செயல் என்னுமளவுக்கு எண்ணற்றவர்கள் எப்போதோ மறந்துபோன செய்திகளை நினைவு கூர்வதிலும், பிறவகைகளிலும் உதவியிருக்கிறார்கள். அவர்களுக்

கெல்லாம் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். அனைவரிலும் மேலாக ஆர்.இ. ஹாகின்ஸ் (ஹாக்). குழப்பமாக இருந்த பகுதிகளை சீர் செய்து, குழப்பத்தின் இடத்தில் ஏதோ ஒரு வகை தெளிவை ஏற்படுத்த மகிழ்வோடு ஒப்புக்கொண்ட அவருக்கு என் நன்றி உரியது. நான் குறிப்பாக நன்றி சொல்லவேண்டிய மற்றவர் களில் இருவர் மிகமுக்கியமானவர்கள். ஒருவர் முப்பதாண்டுகளுக்கும் மேலாக என் இன்றியமையாத உதவியாளரான ஜெ.எஸ். செர்ராவ்; பொறாமைப்படத்தக்க அரிய நினைவாற்றல் கொண்டவர். பழைய விஷயங்களுக்கு அவரே என் களஞ்சியமும் ஆவார். ஆர்வமே உருவான அர்ச்சனா மெஹ்ரோத்ரா அடுத்தவர். முதல் வரைவு களை தட்டெழுத்தில் படைத்தவர். திரும்பத்திரும்ப மாற்றிய போதெல்லாம் தட்டெழுத்தில் தந்தவர். இடைவிடாமல் தூண்டிக் கொண்டே இருந்தவர். நல்ல கருத்துக்களை அவ்வப்போது கூறியவர். இந்தத் தூண்டுதலும் கருத்தளிப்பும்தான் முடிவேயின்றி நீண்டு கொண்டு போயிருக்கக்கூடிய இந்த வேலையை ஒழுங்காக முடிக்க வைத்தன. இப்படிப்பட்ட சூழ்நிலைகளில் இந்நூலில் இடம் பெற்றிருக்க வேண்டிய வேறு பலரும் வேறுபல நிகழ்ச்சிகளும் கவனக்குறைவினால் விடுபட்டிருக்கலாம் என்று எனக்குத் தெரிகிறது. ஆனால் எண்பது ஆண்டுகள் என்பது இந்த சில பக்கங்களில் அச்சில் கொண்டு வருவதற்கு முடியாத அளவுக்கு நீண்ட காலகட்டமாகும். ஆக, இந்தக் கட்டத்தில் நான் செய்யக் கூடியதெல்லாம் அதற்காக வருத்தப்படுவது ஒன்றுதான்.

சாலிம் அலி

1

# அருட்கொடை

பறவைகளிடம் எனக்குள்ள ஆர்வம் எப்படிப் பிறந்ததென்ற கேள்வி சில ஆண்டுகள் முன்பு வரை, எனக்கோ மற்றவர்களுக்கோ மனதில் படவில்லை. நான் அப்படியே வளர்ந்தேன்; மற்றவர்களும் இவன் இப்படித்தான் என்று விட்டுவிட்டார்கள்; அவ்வளவுதான். நெடுங் காலத்துக்குப் பிறகு ஒரு துறுதுறுப்பான பத்திரிகையாளர் இந்தக் கேள்வியை என்னிடம் கேட்டபிறகுதான் நானே இதுபற்றி சிந்திக்க லானேன். அப்போதுதான், எனது இளமைக்காலப் பின்னணியை வைத்துப் பார்த்தால் இந்தக்கேள்வி முதலெடுப்பில் தோன்றுவது போல அப்படி ஒன்றும் சம்பந்தமில்லாத கேள்வி அல்ல என்று உணர்ந்தேன். விபரங்களை நினைவில் வைத்திருப்பதற்கு 87 ஆண்டுகள் என்பது மிக நீண்ட காலவெளி. ஆனாலும், கேத்வாடியில் இருந்த எங்கள் கோணல்மாணலான பரம்பரை வீடு என் நினைவில் தெளிவாக இருக்கிறது. மும்பை நகரின் கிர்காவ், சர்னி ரோட் இரண்டுக்கும் இடையே இப்போது ஏக நெரிசலாகிவிட்ட பகுதியில் அது ஒரு மத்தியவர்க்க குடியிருப்புப் பகுதியாகும். அநாதையாக்கப் பட்ட ஐந்து சகோதரிகள், நான்கு சகோதரர்கள் கொண்ட குடும்பத்தில் இளையவனாக அங்கேதான் நான் வளர்ந்தேன். எனக்கு சுமார் மூன்று வயதிருக்கும்போது அம்மா ஜீனத்-உன்-னிசா இறந்து விட்டிருந்தார். அதற்கு இரண்டாண்டுகள் முன்னர் தந்தையாரும் காலமாகி விட்டார். தாய்மாமன் ஒருவரின் அன்புப் பராமரிப்பில் நாங்கள் வளர்ந்தோம். மாமா அமீருதீன் தியாப்ஜி, அத்தை ஹமீதா பேகம் ஆகியோருக்கு மகப்பேறில்லை. ஆனால் எங்கள் அனை வருக்கும் அவர்கள் எந்தப் பெற்றோரையும் விட மேலாகக் கிடைத் திருந்தனர். மிக வித்தியாசமான சுதம்பமான பல குழந்தைகளுக்கு இருவரும் காப்பாளர்களாயிருந்தனர். அவர்களில் சிலர் அநாதைகள்; சிலரின் பெற்றோர் ஊரில் இல்லை. சிலர் உறவினர்கள்; சிலர் நணபர்களின் குழந்தைகள். வயதால்

வேறுபட்ட அவர்கள் குணத்தாலும் அப்படித்தான்—சிலர் சந்தேகத்துக்குரியவர்கள். எப்போதாவது பண்டிகையில் சமைக்கப் படுமே புலாவ், அதில் பறவையும் ஒரு அங்கம் என்பது தவிர பறவைகளைப் பற்றிய அக்கறை ஏதுமே அந்த விசித்திரமான மனிதக் கூட்டணியில் எவருக்குமே எப்போதுமே இருந்ததில்லை என்றே என் நினைவுக்கு எட்டியவரை தோன்றுகிறது.

அப்போதெல்லாம் 'இயற்கையைப் பேணிக்காத்தல்' என்ற தொடர் காதில் விழுவதே அரிதாகத்தான். குயில்களும் காடைகளும் சர்வசாதாரணமாகவும் ஏராளமாகவும் சந்தையில் விற்கப்பட்டன. குயில் ரூபாய்க்கு ஏழெட்டு கிடைக்கும். காடையென்றால் பதினைந்து-இருபது கிடைக்கும். கோழி ஆறணா-எட்டணா (35 பைசா 50 பைசா). எனவே பெருநாட்களிலும் விடுமுறைகளிலும் குயிலும் காடையும், எப்போதும் சாப்பிடும் கோழிக்கு மாற்றாக அமையும். கேத்வாடியில் பறவைகளை வீட்டுக்கு உயிரோடு கொண்டுவந்து தட்டையான பெரிய பெரிய வட்டவடிவ மூங்கில் கூடையில் மூடிவைப்பது வழக்கம். கூடைகளில் ஒரு திறப்பும் இருக்கும். பிறகு மதச் சட்டங்களில் விதிக்கப்பட்ட முறையில் அவற்றைக் கொல்வார்கள். எனக்குத் தெளிவாக நினைவிருக்கிறது. அப்போது எனக்கு சுமார் பத்து வயதிருக்கும். நானும் என்னில் இரண்டு வயது இளைய எனது ஒன்றுவிட்ட தம்பி சுலைமானும் பரிதாபத்துக்குரிய அப்பறவைகளில் சிலவற்றைத் திருட்டுத்தனமாகக் காப்பாற்றி விருப்பப் பிராணிகளாக வைத்திருப்போம். அதற்கு வசதியாக கரடுமுரடாக திறந்த வாணலி மாதிரி ஒரு பாத்திரம் இருந்தது. அது கம்பி வலைகளும், சாமான்கள் வைக்கும் பெட்டி களுக்கான மூலகங்களும் கொண்டு செய்யப்பட்டிருந்தது. இதற் கெல்லாம் சமையல்காரர் நன்னூரவும் உதவுவார். அவர் குடும்பத்தின் மூத்த உறுப்பினர்! நம்பிக்கைக்கு உரியவர். தம் முதலாளிகளுக்கு அறிவுரை சொல்லவும் உரிமை கொண்ட பணியாளர். எங்களைப் போன்ற சிறார்களுக்கோ, இந்த மாதிரி வேலைகளில், தவறாமல் ஒத்துழைக்கும் நண்பர், தூண்டிவிடுபவர், சக குற்றவாளி, உடந்தை யாயிருப்பவர்—எல்லாம் அவர்தான். அவரை அறிந்த எங்கள் எல்லாருக்கும் அவர் ஒரு அதிசயம். அதுவும் பணியாளர்கள் பிரச்சினை வலுவாகக் காணப்படும் இந்த காலகட்டத்தில் அந்த அதிசய உணர்வு வளர்ந்து கொண்டே போகிறது. இந்த மாதிரியான பணி தவிர்த்த பொழுதுபோக்கு வேலைகளுக்கெல்லாம்கூட அவருக்கு நேரம் கிடைத்ததுதான் அந்த அதிசயம். அதுவும், எப்போதும் அவ்வளவு ஆர்வமும் மகிழ்ச்சியும் ததும்ப கலந்து

கொள்வது அதிசயம்தான். பத்துபேருக்குக் குறையாத ஆட்களுக்கு இரண்டுவேளை சாப்பாடும் அவர் பணிதான். அதுவும் எல்லாரும் நல்ல பசியுள்ள இளைஞர்களும் சிறுவர்களும். ஆனாலும் அவர் ஒற்றையாளாகவே எல்லா வேலைகளையும் செய்துவிடுவார். பானை சட்டிகளை விளக்கிக் கழுவுவது, கோதுமை மாவைப் பிசைவது, சப்பாத்தி சுட்டு அடுக்குவது எல்லாம் இதில் அடங்கும் (துணையாள் யாரும் கிடையாது). சிலசமயங்களில் அவர் சுட்டுப்போடுவதைவிட விரைவாக எங்களால் சாப்பிட முடியுமா என்று வேடிக்கையான போட்டிகள் வேறு! தரையில்தான் அமர்வது. விறகடுப்பு புகைந்து கொண்டேயிருக்கும். பறவைக் கூண்டு எனக்கும் சுலைமானுக்கும் பொதுச் சொத்து. கூண்டின் அறைகளைப் பார்த்தபடி தொடர்ந்து மணிக்கணக்காக உட்கார்ந்துகொண்டு அவற்றின் அசைவுகளையும் நடத்தையையும் கவனிப்பது அளவற்ற மகிழ்வளிக்கும் செயலாகும். சில செல்லப் பறவைகளுக்குப் பெயர்கள்கூட வைத்திருந்தோம். பள்ளி விடுமுறை நாட்களில் இப்படிப் பொழுதைக் கழிப்பதில் நிச்சயமாக வீட்டுப் பாடம் எழுதுவதைவிட எக்கச்சக்கமான மகிழ்ச்சிதான்!

எங்களுக்கு மாதாந்திர கைச்செலவுக்குத் தரப்படும் இரண்டு ரூபாயில் எத்தனை தரம் போகமுடியுமோ அத்தனைதரம் கிராபோர்ட் சந்தையின் பறவைப் பகுதிக்குப் போவோம். எங்களிடம் உள்ள பறவைகளின் எண்ணிக்கையை அதிகப்படுத்தக்கூடியதாக ஏதும் வந்துள்ளதா என்று பார்ப்போம். ஆரம்பத்தில் எங்கள் ஆர்வம் முக்கியமாக வேட்டைப் பறவைகள் பற்றியதாகத்தான் இருந்தது. சாம்பல் நிறம் மற்றும் வண்ணமிகு காடை, பழுப்புக்குயில் முதலிய பலவகைக் குயிலினங்கள் எங்களிடம் இருந்தன. மிக உல்லாசமாக உணரும் பிறந்தநாள் போன்ற சமயங்களில் ஓரிரு ஜோடி காட்டு வாத்துகள், செங்காடைகள் ஆகியவற்றை வாங்குவதுண்டு. ஆனால், வளர்ப்புப் பிராணிகளை நெடுநாள் உயிரோடு வளர்ப்பதில் அன்றும் சரி, இன்றும் சரி, எனக்கு வெற்றி கிடைப்பதில்லை. பலமுறை மீண்டும் மீண்டும் ஏமாற்றமும் தோல்வியும் கண்டபிறகு நான் அந்த முயற்சிகளைக் கைவிட்டுவிட்டேன். பிற்காலத்தில் பலவிதப் பரிசோதனைகளுக்காக அவ்வப்போது பறவைகளைப் பிடித்து வைத்திருப்பது உண்டானாலும், வேலை முடிந்ததும் அவற்றைப் பறக்க விட்டுவிடுவதும் வழக்கம். எங்கள் வளர்ப்புத் தந்தையாரை அவரது வேட்டைத் திறமைக்காக ஒரு கதாநாயகரைப்போல நாங்கள் போற்றி வந்தோம். எனக்கு சுமார் பத்துவயதாகையில் அவர் ஒரு துப்பாக்கி பரிசளித்தார். அதைத் துப்பாக்கி என்பதைவிட பொம்மை

என்பதே சரியாயிருக்கலாம். எனக்கு நன்கு நினைவிருக்கிறது. அது நிக்கல் முலாம் பூசிய 500 வாட் விசைத் துப்பாக்கி. திரும்பத் திரும்ப சுடும் 'டெய்சி'. அந்நாளில் பிரபலமான தயாரிப்பு. முன்புறமுள்ள ஒரு ஓட்டைவழியே 'பிபி' அளவு 500 சிறு தாமிர குண்டுகளை உள்ளே போட்டால் அவை அடிப்புறத்தை சார்ந்த ஒரு சிலிண்டர் வடிவப் பகுதியை சென்றடையும். ஒரு முறை சுட்டதும், கைப்பிடியை இயக்கினால் ஸ்பிரிங் பகுதி அழுந்தும். அதே சமயம் அடுத்த குண்டு வெளியேறிய குண்டின் இடத்தில் சென்றமர்ந்து கொள்ளும். அது ஒரு அருமையான ஆயுதம் என்று சொல்ல முடியாது. ஏர்-கன் துப்பாக்கி துல்லியமாக இயங்கக் கூடியதல்ல. அதன் வேலை நேர்த்தி எவ்வித நிச்சயத்தன்மையும் அற்றது. முப்பதடி தொலைவே உள்ள இலக்கை சுடுவதற்குக்கூட குறிபார்ப்பதில் ஏகப்பட்ட முயற்சி தேவை. அப்போதும் வெற்றியை ஓரளவுதான் எதிர்பார்க்கலாம். இப்படியெல்லாம் இருந்தும் அப்போது அதுவே ஒரு புதுமைதான். எனது சக சிறுவர்களுக்கு பொறாமைதான்! சிலரிடம் ஒரேமுறை சுடும் துப்பாக்கி இருந்தது. ஆக இப்படியான ஒரு 'நவீன' ஆயுதம் வைத்திருப்பது எனக்கு கர்வமளித்தது என்பதும் உண்மைதான். அதைக் காட்டிக்கொள்ளவும் நான் தயங்கியதில்லை. இத்தனை குறைகளையும் மீறி அதை வெற்றிகரமாகப் பயன்படுத்தக் கற்றுக் கொண்டேன். வீட்டுக் குருவிகளை எளிதில் சுடமுடிந்தது. லாயத்தில் சிட்டுக்குருவிகளின் ஒரு குடியேற்றமே இருந்தது வசதியாகப் போயிற்று. குதிரைகளின் கொள்ளுப் பைகளிலிருந்து சிதறும் தீனி, கூரையின் ஓட்டைகள், கூடுகட்ட வசதியான சுவர்கள் என்று அவற்றுக்கு வசதியான வாழிடத்துக்கான வாய்ப்புகள் அதிகம் இருந்தன. நாங்கள் இறை அச்சம் உள்ள இஸ்லாமிய சிறுவர்களாக நெறிப்படி வளர்க்கப் பட்டோம். எனவே, சிட்டுக்குருவிகள் உண்ண அனுமதிக்கப் பட்டவை என்றாலும்கூட, அவையும் மார்க்க சட்டத்தின்படி ஹலால் முறையில் அறுக்கப்பட்டால்தான் உண்ணுதற்குரியன என்று உணர்ந்தேயிருந்தோம். மறுபிறவி பற்றிய பயங்கர அச்சங்களும், பெரியோர்களின் உரியகால அறிவுரைகளும் எங்களை பொதுவாக இதுபற்றிய விதிகளை மீறாமலே வாழப் பழக்கியிருந்தன. சிலசமயம் இறந்து குளிர்ந்துபோய் நெடுநேரமான குருவிகளைக்கூட ஒருமுறை கழுத்தை வெட்டித்தருமாறு நானு மாமாவிடம் கெஞ்சிக்கூத்தாடுவது உண்டு. (இஸ்லாமிய மார்க்க நெறிகளின்படி, கழுத்தை அறுத்து உயிர்நீக்கியவைதான் உண்ணத் தகுந்தவை). சரியான சடங்குகள் முடிந்தபிறகு, குருவியை என்ன செய்யவேண்டுமென அவர்

எங்களுக்கு கற்பித்திருந்தார். அதன்படி, கொஞ்சம் மசாலா, கொஞ்சம் நெய், ஒரு வாணலியைப் பயன்படுத்தி அதை எப்படி ஒரு இன்சுவை உணவாக மாற்றுவதென்பதில் எங்களில் சிலர் வித்தகர்களாகவே ஆகியிருந்தோம்.

பறவைகள் பற்றிய எனது முதல் குறிப்பு இந்த காலகட்டத்தில் தான் எழுதப்பட்டது. அப்போது வயது ஒன்பது-பத்திருக்கும். கேத்வாடி வீட்டு குதிரை லாய வேட்டைகளில் ஒன்று சம்பந்தப் பட்டது அது. சுவரில் முளைகள் அடித்து குதிரைகளின் கடிவாளங் களை மாட்டியிருப்பார்கள். அவற்றில் ஒருமுளை கழன்று சுவரில் பொந்தாக அமைந்திருந்தது. சிட்டுகளுக்கு அருமையான கூடுகட்டு மிடமாக அது ஆயிற்று. அதில் வசித்த பெண்குருவி பற்றியதே நான் முதன்முதலில் எழுதிய குறிப்பாகும். அறுபதாண்டுகளுக்குப் பின் அதை மீண்டும் கண்டெடுத்தபோது அது ஒழுங்காகவும் இல்லை-முழுதாகவும் இல்லை. இருந்தும் அதன் உள்ளடக்கம் நியூஸ் லெட்டர் பார் பர்ட்வாட்சர்ஸ் இதழில் (பறவையாளர் களுக்கான செய்திமடல்) அநேகமாக மாற்றமில்லாமலே வெளியிடுவதற்குத் தக்கதாயிருந்தது. அது பின்வருமாறு:

> "1906/7: பொந்தின் வாயிலில் ஒரு ஆணியில் ஆண்குருவி அமர்ந்திருந்தது. உள்ளே பெட்டை முட்டைகளை அடை காத்துக் கொண்டிருந்தது. நிறுத்தப்பட்டிருந்த ஒரு வண்டியின் பின்னிருந்து நான் தாக்கினேன். ஆண்குருவி சுடப்பட்டு வீழ்ந்தது. விரைவிலேயே, பெட்டை மற்றொரு ஆண்குருவியை சம்பாதித்துவிட்டது. புதுக்குருவி வாசலில் அமர்ந்து காவல் புரிந்தது. நான் அதையும் சுட்டேன். இப்போதும் பெட்டை விரைவில் ஒரு புது ஆண்துணையைக் கொணர்ந்துவிட்டது. அதையும் சுட்டுவிட்டேன். அடுத்த ஒருவாரத்தில் நான் 8 ஆண்குருவிகளை சுட்டேன். ஒவ்வொரு முறையும் அடுத்த ஆண்குருவி, தன் முறைக்காக காத்துக் கொண்டிருப்பதுபோல, இறந்த குருவியின் இடத்துக்கு வந்து சேர்ந்தது."

இந்தக் குறிப்பு பற்றி நான் மிகவும் பெருமைப்படுகிறேன். காரணம் எனது வேட்டைப் பிரதாபத்தைக் குறித்து வைக்கவே எழுதப்பட்டது என்றாலும், இதன் உட்பொருள் பற்றிய அறிவுணர்வு எனக்கு ஏற்படுவதற்கு நெடுநாள் முன்பு எழுதப்பட்டிருந்தும், பறவைகளின் நடைமுறைகள் பற்றிய தற்கால ஆய்வுகளுக்குக் கூட அது தரும் செய்தி முக்கியத்துவம் கொண்டுள்ளது.

ஒவ்வொரு ஆண்டும் கோடையில் விடுமுறை துவங்கும். கேத்வாடி குடும்பம் முழுதும் செம்பூருக்குப்போய்விடும். செம்பூர் இன்று மும்பை மாநகரின் இரைச்சல் மிகுந்த ஒரு பகுதி. ஆனால் அன்று சோலைகள் சூழ்ந்ததோர் அருமையான புகலிடம். மேற்குத் தொடர்ச்சி மலைகளின் குன்றுகளையடுத்த இரண்டாம்தர ஈரப்பத இலையுதிர் தாவரக் காடுகளான பகுதி. அந்தப் பகுதியிலேயே மிக உயரமான இடம் 300 மீட்டர் உயரமான டிராம்பே ஹில். இப்போது அங்குதான் பாபா அணு ஆராய்ச்சி நிலையம் அமைந்துள்ளது. அப்போது அது இளமைத் துடிப்பு கொண்ட எங்களுக்கு மலை யேற்றத்துக்கான மனங்கவர்ந்த பகுதி. பல பகுதிகள் மரங்கள் மிக அடர்ந்து காணப்படும். ஆனால், அடிவாரத்தில், இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு பொதுமக்கள் குடியேற்றம் ஒன்று அங்கு ஏற்படுத்தப்பட்டு, அந்த மக்களால் விறகுத் தேவைக்காக சீரான முறையில் ஒருபகுதி மரங்களேயின்றி மொட்டையடிக்கப்பட்டு, ஜிப்ரால்டர் பாறை போலாகிவிட்டது. மாநருக்கு மிக அண்மையில் அமைந்திருந்தும்கூட அன்றைய செம்பூர் அதன் அமைதியான வனாந்தர மண்வாசனைக்கும் வனவுயிர்களுக்கும் பெயர் பெற்று விளங்கியது. மூன்று மைல் தொலைவில் இருந்த குர்லாதான் அங்கிருந்து அண்மையில் அமைந்த புகைவண்டி நிலையம். நடந்தும் போகலாம், மாட்டுவண்டியும் உண்டு. சுற்றுவட்டாரத்தில் ஆலை களோ கல்விச்சாலைகளோ, கடைத்தொகுதிகளோ, பிற வசதிகளோ கிடையாது. கார்களும் பேருந்துகளும் படையெடுத்திராத காலம். பிற பகுதிகளுக்கு செல்வதற்கு என்று யாரும் அங்கு வசித்தால்தானே அவை வரும்! எங்களைப்போல் எப்போதேனும் அங்கு வரக்கூடிய நகரவாசிகள், விடுமுறையைக் கழிப்பவர்கள். மாந்தோப்புகளும் பண்ணைகளும் அப்பகுதியில் ஏராளம். மாநகரில் வாசம் செய்து கொண்டிருந்த அவற்றின் உரிமையாளர்களும் வார இறுதியில் வந்துபோவதுண்டு. காலங்காலமாக செம்பூர் பகுதி நியாயமாகவே அதன் அல்போன்சோ, பெர்ரி போன்ற மாம்பழங்களின் இனிமைக் காக மிகமிக பிரபலமாயிருந்து வந்தது. துரதிருஷ்டவசமாக இப்போதும் வீடுகட்டுதல், தொழிற்சாலை இவற்றை மீறி மிச்சம் மீதி உள்ள தோப்புகள் வானுக்கு ஏறிவரும் நிலவிலை உயர்வு களாலும், மாநகரின் வளர்ச்சியாலும் மறையத் தலைப்பட்டு விட்டன. ஒருகாலத்தில் அருமையாக வளர்க்கப்பட்ட மாமரங்களில் பல மறைந்துவிட்டன. பல புறக்கணிக்கப்பட்டு மெலிந்துபோய் காணப்படுகின்றன. பந்தா தாவரங்களால் இவை இருக்குமிடம் தெரியாமல் போய் சட்டவிரோதமாக வனமழிப்பவர்களின்

கோடாலிக்காக காத்து நிற்கின்றன. எங்கள் பள்ளி விடுமுறை நாட்களை நினைவூட்டும் உயிரினங்களின் ஓசைகளெல்லாம், தவிர்க்க முடியாத 'நாகரிகம்' தாக்கியதில் ஒவ்வொன்றாய் அமைதியாகி நெடுங்காலமாகி விட்டது. இருட்டியதிலிருந்து இரவு முழுதும் ஒலித்துக் கொண்டிருந்த ஓநாய்களின் ஓலம் செம்பூர் பற்றிய எவர் நினைவிலிருந்தும் பிரிக்கமுடியாதது. அது நின்று நெடுங்காலமாகிவிட்டது. அப்போதே அங்கொன்று இங்கொன் றாய் இருந்த கழுதைப் புலிகளும் இப்போது அறவே இல்லை. எனது மிகப்பழைய இளம்பிராய பறவை நினைவுகளில் ஒன்று மாக்பி-ராபினின் உற்சாகமான கீதம். பொழுது புலர்ந்தது என அப்பறவையினம் குரல்எழுப்பும்போது அரைத்தூக்கத்தில் மயங்கிய நிலையில் இருப்போம். படுக்கை சுகத்திலிருந்து எழப் பிடிக்காது! அப்பறவையின் கானத்தை செவிகள் பருகும் போதெல்லாம் நான் இருக்குமிடம் எதுவாயிருந்தாலும் என்மனம் அந்த கவலையில்லாத ஒப்பற்ற கோடைவிடுமுறைக்கால செம்பூர் வாசத்தை மீட்டெடுத்து வந்துவிடுகிறது.

உலகெங்கும் உள்ள கவலையறியாத சோம்பேறி பள்ளி மாணவர்களைப் போல்தான் நாங்களும் இருந்தோம். வேட்டை யாடுதலின் தார்மீக நெறிகளும் (அவை எப்படியாயினும்) இயற்கையைப் பாதுகாத்துத் தக்கவைத்தல் பற்றிய பெரியோர் அறிவுரைகளும் எங்களை ஒன்றும் செய்வதில்லை. மாறாக, அந்த விக்டோரியா காலத்திய வேட்டை ஒரு ஆண்மை மிகு வீர விளையாட்டு என்ற கருதுகோள் நெஞ்சில் இருந்தது. கையில் சிறு துப்பாக்கியோடு நாட்டுப்புறத்தை சுற்றி வரும் சுகம்! அதுவும் அவ்வளவு அருகில் அணுக எங்களை நம்பி அனுமதித்துவிட்ட பறவை எதுவாயினும் அதைக் குறிவைக்கத் தயங்காத காலம். அந்த காலித்தனமான விளையாட்டில் தேன்குடிக்கும் சிறு பறவைகளை வீழ்த்தி விடுவதற்குக்கூட நான் பெருமைப்பட்டுக் கொண்டதும் நினைவிருக்கிறது. நல்லவேளையாக, அத்தகைய செயல்கள் மிகமிகக் குறைவு. பக்கத்து குக்கிரமமான தியோனார் பகுதிக்கு அந்திப் பொழுதுகளில் செல்வது எங்கள் கும்பலின் முறையான திட்டமிட்ட வேட்டை நிகழ்ச்சிநிரலின் ஒரு பகுதியாகும். மிகப்பெரும் எண் ணிக்கையில் வீட்டுக்குருவிகள் வைக்கோல் போர்களில் உறங்கு வதற்காக வரும். வைக்கோலை கால்நடைகள் பசியாறிவிடக்கூடாது என்று மரங்களில் கட்டி தொங்கவிட்டிருப்பது அவற்றுக்கு வசதியாயிருக்கும். மாலை மயங்குகின்ற நேரம் குருவிகள் வரும். அவசர அவசரமாக வைக்கோலைத் துளைத்துக்கொண்டு புகுந்து

கொள்ளும். அவை வரும் முன்பே அங்கு போய்க் காத்திருப்பது, வந்ததும் வைக்கோலுக்குள் புகுவதற்குள் ஆண் குருவிகளை இலக்காக்குவது என்பதே எங்கள் போர்முறை. தியோனார் பயணம் பெரும்பாலும் இருநோக்குப் பயணமாகும். எங்கள் குடும்பங் களுக்குத் தேவையான முட்டை, பால், கறிகாய் எல்லாம் அங்கிருந்து வரவேண்டும். எங்கள் வேட்டையின் லாபப் பைகளுடன், குடிசைக்கு குடிசை தயாராக வைத்திருக்கும் முட்டைகளையும் சேகரித்து வருவது எங்களுக்கிட்ட பணி. ஒருமுட்டை காலணா. அதாவது ரூபாயில் 48ல் 1 பகுதி. என் நினைவுக்கெட்டிய வரையில், இந்த காலகட்டத்தில்தான்—எனது குருவிவேட்டை விஜயங்களில் ஒன்றின் போதுதான்—அதன் தற்செயலான உடன்விளைவாக எனது முதல் 'அறிவியல்' பூர்வமான பறவையியல் ஆர்வம் பிறந்திருக்க வேண்டும்!

எனக்கு பலியான ஒரு உயிர் கழுத்தறுக்கப்பட்டபோது, இக்குருவியிடம் ஏதோ தவறென்று எனக்குப்பட்டது. அவ்வப்போது நான் பிடித்துவரும் பெண் குருவிகளைப் போலவே இருந்தாலும், தொண்டையில் ஏதோ கறியின் கறைபோல ஒரு திட்டு மஞ்சள் நிறமாக இருந்தது. எனது உடனடிக் கவலையெல்லாம்—இந்த மாதிரிக் குருவி ஒரு கடவுள் பயமுள்ள இசுலாமிய சிறுவன் உண்ணலாம் என்று விதிக்கப்பட்டதுதானா இல்லை விலக்கப் பட்டதா என்பதுதான். மேலோகத்தில் என் நிலைமையை மோசமாக்கிவிட விரும்பாத நான் அதன் கழுத்தை சீவுமுன்பு தடுத்தேன்! ஏற்கெனவே இறந்திருந்த அந்தக் குருவியைத் தூக்கிக்கொண்டு முறையான தீர்ப்பைப் பெறுவதற்காக அமீருதீன் மாமாவிடம் கேட்கலாமென்று வீட்டுக்குள் போனேன். மாமாதான் குடும்பத்திலேயே வேட்டை விஷயங்களில் மன்னர். நுட்பமாக அதை கவனித்துவிட்டு இது ஒரு வித்தியாசமான குருவிதான் என அவரும் ஒப்புக்கொண்டார். இப்படிப்பட்ட ஒரு குருவியை அதுவரை அவரும் பார்த்ததில்லை. மும்பை இயற்கை வரலாற்றுக் கழகத்தின் மிக ஆரம்பகால இந்திய உறுப்பினர்களில் அவரும் ஒருவர். 1883இல் அது ஆரம்பிக்கப்பட்டதுமே உறுப்பினரான அவர் அதன் பணிகளிலும் ஆர்வமாக ஈடுபட்டார். கழகத்தின் அப்போதைய கௌரவ செயலர் திரு டபிள்யூ எஸ். மிலார்ட்டுக்கு ஒரு அறிமுகக் கடிதம் கொடுத்து இந்தப் பறவையை அடையாளம் காண்பதில் உதவுமாறு கேட்டார். திரு. மிலார்ட், ஒயின் வணிக நிறுவனமான பிப்சன் குழுமத்தின் தலைவராவார். பிப்சன் நிறுவனத்தின் கட்டிடத்தில் அமைந்திருந்த மு.இ.வ. கழகத்துடன்

எனது முதல் தொடர்பு இப்படியாகத்தான் ஏற்பட்டது. அது ஒரு அற்புத அனுபவம். இப்போதும் நெஞ்சில் பசுமையாகப் பதித்துள்ள அனுபவம்.

ஃபோர்ப்ஸ் வீதி/அப்பல்லோ வீதி முனையிலான இக்கட்டிடம் பம்பாய் உயர்நீதிமன்றத் தலைமை நடுவரின் முன்னாள் இல்லமாகும். அந்நாட்களில் வெள்ளையர்க்கும் நம்மவர்க்கும் சுத்தமாக சமூகத்தொடர்புகளே இருந்ததில்லை—அதுவும் என் வயதொத்த சிறுவர்களுக்கு! துரைமார்கள் தமக்காக அமைத்துக்கொண்ட குட்டி இங்கிலாந்துகளில் தங்களை பிறரிடமிருந்து தவிர்த்துக் கொண்டு வாழ்ந்தனர். அவர்களது அறைகளில் கறுப்பர்களின் நிழல்கூட படிய முடியாது—அவர்களுக்கு அளவறிந்து மது ஊற்றிக்கொடுக்கும் பணியாளர்களைத் தவிர. தம்மைச் சுற்றி வெள்ளையர்-அவர்கள்தான் பெரிய மனிதர்கள், பெருந்தகையாளர்கள், உயர் பண்பாளர்கள் என்று ஒரு மாயையான ஒளியை கற்பித்துக் கொண்டு வாழ்ந்தனர். அவர்கள்தான் கறுப்பர்களைக் காப்பாற்ற வந்தவர்கள். இப்படியாக கதை போகும். இந்த மாயை எவ்வளவு வேரோடிப் போயிருக்கிறதென்றால், இந்தியா விடுதலை பெற்று நாற்பதாண்டுகளான பின்பும் இந்த நம்பிக்கை வாழ்கிறது. ஒரு மத்தியவர்க்க இந்தியன் ஒரு வெள்ளையனை சந்தித்துரையாடுவது, அவர் அலுவலராக இருப்பினும் இல்லாவிடினும் பணி நிமித்தமல்லாது உரையாடுவது, ஒரு அரிய நிகழ்வாயிருந்தது. ஒரு பள்ளி மாணவனுக்கு ஆங்கிலேயருடன் இருக்கக்கூடிய ஒரே தொடர்பு கல்விப் பரிசோதகர் ஆண்டுக்கு ஒருமுறை அவன் வகுப்பறைக்கு வரக்கூடிய நிகழ்வாகத்தானிருக்க முடியும். அந்த அலுவலராக எப்போதுமே 'துரை'தான் இருக்க முடியும்.

என் கூச்ச உணர்வு எனக்கு நினைவிருக்கிறது. பெரியவராக வளர்ந்த ஒரு துரையை நேருக்குநேர் சந்திப்பதிலான அச்சமும் நடுக்கமுமாக, அந்த பழக்கமற்ற பழைய வீட்டை அடைந்தேன். கம்பீரமான உறுதியான தேக்குமரக் கதவுகள் வழியே உள்ளே புகுந்தேன். நான் முறைப்படி வருகை தருபவன்தானா என்பதற்கான சோதனைகளுக்குப் பிறகு காக்கிச் சீருடையணிந்த சேவகன் கயிற்றுக் கம்பளம் மூடிய இறுகலான படிகள் வழியே என்னை இட்டுச் சென்றான். இருபுறச் சுவர்களையும் அச்சுறுத்துமளவுக்கு வேட்டையாடிப் பெற்ற மிருகங்களின் தலைகள் ஏராளமாக அலங்கரித்துக் கொண்டிருந்தன. மாடியில் மர அடிப்பாகம் கொண்ட அந்த அறையின் ஒரு மூலையில் காட்சிப் பெட்டக மேசைகளில், கடற் கிளிஞ்சல்கள், வண்ணத்துப் பூச்சிகள்,

முட்டைகள், பலவிதமான இயற்கை வரலாற்று அரும்பொருள்கள் முதலியன காணப்பட்டன. சுவர்களோ இன்னும் நெரிசலாக மண்டையோடுகளும் பதம் செய்த மிருகத்தலைகளுமாகக் காணப்பட்டன. சிறுத்தைத் தலைகளும் புலித்தலைகளும் உள்ளே புகுந்தவனை ஊடுருவிப் பார்ப்பதுபோல இருந்து, வெறும் பற்களைக் காட்டி மிரட்டிய தோரணை அவை உயிரோடிருந்த எந்த சமயத்தையும்விட உக்கிரமாக இருந்தது. இறந்த மிருகங்களின் உடல்களினூடே ஒரு வழியாக 'கருவறை'க்கு இட்டுச் செல்லப் பட்டேன். பதம்பண்ணிய முதலைகளும், சாம்பர் மான், தோலாலான தரைவிரிப்புகள், இப்படி நெரிசலாக காயலான் கடைபோலிருந்ததுதான் கழகத்தின் அந்நாளைய அருங்காட்சியம். அதன் ஒரு மூலையில் ஒரு அடைப்பு போல் செய்து ஊசல் கதவுகள் அமைந்திருந்த பகுதியில் மேசையில் சாய்ந்தபடி அமர்ந்திருந்த இதமான வதனம் கொண்ட வழுக்கைத் தலையர்தான் கழகத்தின் கௌரவச் செயலர் திரு. வால்டேர் சாமுவல் மிலார்ட்.

இது நிகழ்ந்தது 1908இல் என்று எண்ணுகிறேன். மு.இ.வ. கழகத் துடனான இந்த எனது முதல் சந்திப்பு பின்னால் என் வாழ்வையும் பணியையும் கொண்டு செலுத்தியதில் மிக முக்கியப் பங்கு வகித்தது. அவரது பரிவின் கவர்ச்சியிலும் அன்பின் முன்னும் என் அச்சம் முற்றாக மறைந்தது. தேயிலைத் தோட்டத்து சுசப்பான சம்பவங்களும், புகைவண்டிப் பெட்டிகளில் நடக்கும் ரகளைகளும் நம் இளம் சிந்தனையில் சித்தரித்துக் காட்டும் நரமாமிச அரக்கர்களாக எல்லா ஆங்கிலேயர்களும் இல்லை போலும் என்று நான் அப்போது உணர்ந்தேன். தன் மூக்குக் கண்ணாடி வழியே அவர் என்னைப் பார்த்தபோது நான் வந்த விஷயத்தை ஒருவிதமாக சொல்லி காகிதப் பொட்டலத்திலிருந்த குருவியையும் அவரிடம் தந்தேன். ஒரே பார்வையில் அது மஞ்சள் தொண்டை சிட்டுக்குருவி என்று அவர் கூறினார். அதன் விலங்கியல் பெயர் 'பெட்ரோனியா சாந்தகோலிஸ்' என்பதாகும். அடுத்திருந்த ஒரு ஆலோசனைப் பெட்டகத்துக்கு அழைத்துச் சென்று பதம் செய்த பல பறவைகளை எடுத்து ஒப்புநோக்கி தாம் கூறியதை உறுதிப்படுத்தினார். பல விதமான குருவிகளும் காணப்பட்டன. அவற்றையெல்லாம் எனக்குக் காட்டி வேறுபாடுகளை விளக்கிக் கூறி ஒவ்வொரு இனத்துக்கும் அடையாளம் என்ன என்றும் கற்பித்தார். மிக முயற்சி எடுத்து எனக்குப் புரியவைத்தார். இந்திய ஏதாதிபத்தியப் பகுதியில் காணப் பெறும் எண்ணிறந்த பறவைகளின் இறந்த மாதிரிகளை

பொறுமையாக ஒவ்வொரு பேழையாகத் திறந்து காட்டினார். அந்தக் கணங்களில்தான் பறவைகள் பற்றிய ஆர்வம் என்னுள் பற்றிக் கொண்டது என்று நம்புகிறேன். அங்கிருந்த சிறு நூலகத்திலிருந்து பறவைகள் பற்றிய என் அறிவை வளர்க்க சில நூல்களையும் அவர் தந்தார். எட்வர்ட் ஹாமில்டன் எய்ட்கென் எழுதிய இணையற்ற காவியங்களான 'மும்பையின் சாதாரணப் பறவைகள்', 'அலையும் ஒரு இயற்கையியல் மாணவன்' (*Common Birds of Bombay, A naturalist on the prowl*) ஆகிய இரு நூல்களையும் முதன்முதலில் பார்த்ததும் அப்போதுதான். அவை என் ஆர்வத் தீக்கு நெய்யூற்றின. கடந்த அறுபதாண்டுகளுக்கு மேலாக அவற்றை மீண்டும் மீண்டும் படித்து வருகிறேன். பயில்தொறும் நூல்நயம் நவிலற்கரியதாகிறது. சுகானுபவமும் அவற்றின் மீதான என் மதிப்பும் வளர்கின்றன. எனக்கோர் அரிய வாய்ப்பாக வெளியீட்டாளர் விருப்பப்படி 'மும்பையின் சாதாரணப் பறவை'களின் புதிய பதிப்பொன்று 1946ல் வந்தபோது அதில் விளக்கக் குறிப்புகள் எழுதும் பேறு எனக்குக் கிடைத்தது. அப்பதிப்பில் ஆசிரியரின் வரலாறு பற்றிய சிறு உரையை என் நண்பர் லோக் வான் தோ எழுத, நூல் தலைப்பு மட்டும் 'இந்தியாவின் சாதாரணப் பறவைகள்' என்று மாற்றப்பட்டு வெளியாயிற்று. பறவைகளை சேகரிக்க திரு மிலார்ட் என்னை உற்சாகப்படுத்தினார். அதுவே அவற்றைப் பற்றிக் கற்பதற்கு அனைத்திலும் சிறந்தவழி என்றார். இறந்த உயிரினங்களை உரித்துப் பதப்படுத்துவதிலும், பராமரித்தல், குறிப்பெழுதுதல் ஆகியவற்றிலும் கழகத்திலேயே எனக்குப் பயிற்சி தருவதாகவும் உறுதியளித்தார். அடுத்த அறையிலிருந்த ஓர் இளம் ஆங்கிலேயருக்கும் என்னை அறிமுகப்படுத்தினார். அவர்தான் நார்மன் பாய்ட் கின்னியர். பிகு இவர்தான் கழகத்தின் சம்பளம் பெறும் காட்சியகக் காப்பாளராக முதன்முதலில் நியமிக்கப்பட்டார். முதல் உலகப் போருக்குப் பிறகு பிரிட்டிஷ் அருங்காட்சியகத்தின் பறவைகள் பிரிவில் பணி யாற்றினார். 1947-50இல் அருங்காட்சியகத்தின் இயக்குநர் பொறுப்பே இவரைத் தேடி வந்தது. சர் பட்டமும் நாடி வந்தது. கின்னியர் ஒரு தீவிர ஸ்காட்ஸ்மேன். கலகலப்பானவரல்ல, கொஞ்சம் ஒதுங்கியிருப்பவர் என்று முதல் சந்திப்பில் எனக்குத் தோன்றியது. வெளித்தோற்றத்தில் மட்டுமாவது இளமையில் வெள்ளையர் பற்றி மனதில் இருந்த 'பக்கா துரை' என்ற சித்திரத் தோடு ஒத்துப் போனார் அவர்! ஆனால், விலகி நிற்பது போன்ற தோற்றம் 'தோற்றம்'தான். அதன்பின்னே கூச்ச சுபாவமிருந்தும், அன்புமனமும் உதவும் மனப்பான்மையும் கொண்டவர் அவர்.

என்னுள் புதிதாய்ப் பரவிய ஆர்வத்தை வளர்ப்பதில் அவர் பங்கும் ஏராளம். மும்பையில் காப்பாளராக இருந்தபோது மட்டுமின்றி லண்டனில் பறவைப் பகுதிப் பொறுப்பாளராக இருந்தபோதும் அவர் உதவி எனக்குக் கிடைத்தது. இரு இளம் உதவியாளர்களிடம் என் பயிற்சிக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. எஸ்.எச். பிராட்டர், பி.எப். கோமஸ் இருவரும் பறவைக் களஞ்சியம் முழுதையும் சுற்றிக் காட்டினர். தோல்பதனிடும் கலையையும், உயிரின மாதிரிகள் தயாரிப்பது, பெயர் ஒட்டுவது ஆகியவற்றையும் எனக்கு அறிமுகம் செய்துவைத்தனர். சேகரித்துக் கற்கும் கலையில் இவ்வம்சங்கள் முக்கியமானவை. தம் பணிக்காலம் முழுதும் இவ்விருவரும் கழகத்திலேயே பணியாற்றினர். பிராட்டர் பல வகைகளிலும் பின்னாளில் புகழ்பெற்றார் (அவரைப் பற்றிப் பிறகும் விரிவாகச் சொல்வேன்). மிக முக்கியமான வளர்ச்சிக் கட்டத்தில் கழகத்தில் காப்பாளராக இருந்தார். மேற்கிந்தியாவில் ஆங்கிலோ இந்திய சமூகத்தினரின் தலைவராக இருந்தார். பிறகு அரசியல் நிர்ணய சபை உறுப்பினராயும் பம்பாய் மாகாண சட்ட மேலவையிலும் 1948 வரை சேவை செய்தார். அந்த ஆண்டு வேலையிலிருந்து ஓய்வுபெற்று இங்கிலாந்தில் குடியேறினார். திரு கோமஸ் ஒரு அழுத்தக்கார மனிதர். உணர்ச்சிகளைக் காட்டாதவர். கோபக் காரர். பின்னாளில் கழகக் காட்சியகத்தின் சிற்றுயிர்ப்பிரிவு பொறுப்பாளராகப் பணியாற்றினார். உன்னதமான திறமையை அலட்டிக் கொள்ளாது அப்போது வெளிக்காட்டினார். அவரை முக்கியமாக நான் நினைவுகூர்வது மிக அழகிய அவரது கையெழுத் துக்காகத்தான். இன்றும் கழகத்தின் பழைய ஆவணங்களில் அந்த அழகைக் காணலாம். ஆய்வுக்கான சேகரிப்புகளிலும் பெயர் சீட்டுகளிலும் அந்த அழகு சுடர்விடுகிறது. இன்னொன்று— தசைகளையும் எலும்பையும் பிணைக்கும் நாண்களை இவர் 'நாஸ்ட்ரில்' என்று குறிப்பிடும் விசித்திரம். தோல்கள் பற்றி எனக்குக் கற்றுக்கொடுக்கையில் இதை கவனித்தேன். அதிலும் 'ட்டி' (T) என்ற எழுத்தை ஒரு போர்த்துகிசிய மென்மையோடு இவர் உச்சரிக்கும் விதம் ஆரம்பத்தில் புதிராக இருந்தது. பின்னாளில் ஒரு வேடிக்கையாக ரசிக்கக்கூடிய அம்சமாகிப் போயிற்று.

எப்படியோ நிகழ்ந்த மஞ்சள் தொண்டைக்குருவி நிகழ்ச்சி கனவுகூட காணாத பல புதிய பாதைகளை எனக்குத் திறந்துவிட்டது. அப்போதிருந்து என் படிக்கும் வழக்கம் பொதுவாக இயற்கை வரலாற்றுக்கும், அதிலும் குறிப்பாக பறவையியலுக்கும் திரும்ப லாயிற்று. அப்போது இந்தியப் பறவைகள் பற்றி படங்கள் கொண்ட

நூல்கள் மிக அரிது. பிறகும் பல்லாண்டுகள் அதே நிலைதான். ஒருவன் தன்னைச் சுற்றியுள்ள பறவைகளைப் பற்றி அறிய விரும்பினால் பாலபாடமாகப் பயில அவனுக்குக் கிடைத்தவை சொற்பமே. பொதுவாக இந்தியரிடையே பறவைகளைப் பற்றிப் பயில, அதை ஒரு பொழுதுபோக்காகக் கொள்ள பெரும் தடை இத்தகு நூல்களின்மை என்று நான் கூறுவேன். ஆக இந்தியாவில் ஆரம்பக் கட்டத்தில் இத்துறையில் பெருங்பங்காற்றியோர் அநேகமாக வெள்ளையரே! அவர்களுள் பெரும்பாலோர் ஆங்கிலேயர்கள். அவர்கள் தம் தாயகமான இங்கிலாந்தில் காலம்காலமாக புகழ்பெற்ற பிரிட்டிஷ் இயற்கை வரலாற்று மரபுகளிடையே வாழ்ந்து இங்கு வரும்போதே பறவையியலில் ஒரு அடிப்படையான ஞானம் பெற்றிருந்தனர். இங்கே தம்மைச்சுற்றி அவர்கள் கண்ட அபரிமிதமான பறவைச் செல்வங்கள் அவர்களைத் தூண்டிவிட்டன. வாய்ப்புகளும் அதிகம். வனப்பகுதிகளில் தனியாக வாழும் சமூக கட்டாயத்தின் உந்துதல் வேறு. பலர் வேட்டையாடுவதையும், இயற்கை வரலாற்றையும் மிக அதிக முக்கியத்துவத்தோடு அணுகினர். சிலர் பறவை முட்டைகள், உயிரினங்களின் தோல்கள் ஆகியவற்றில் ஈடுபாடு கொண்டனர். காலப்போக்கில் இவர்கள் இயற்கையியல் மேதைகளாயும், உன்னதத் திறம்படைத்த பறவையாளராகவும் மலர்ந்தனர். இவர்களே இந்தியாவில் அறிவுபூர்வமான இயற்கை வரலாற்றுக் கல்விக்கு அடித்தளமிட்டவர்கள். உங்களுக்கு மிக அடிப்படையான பறவைகளை அடையாளம் காணும் திறம், தேவையான தணியாத ஆர்வம் ஆகியவை இருந்தால், அடையாளம் காணும் கலையில் உங்களை உயர்த்திவிட, ஜெர்தோன் எழுதிய 'இந்தியப் பறவைகள்' என்ற நூலும் (1864), பிறகு 4 தொகுதிகளாக வந்த ஓட்ஸ்–பிளான்போர்ட் இருவரும் எழுதிய 'இந்திய பறவைகள் விலங்குகள்' பற்றிய நூல் இவையிரண்டும் போதும். சித்திரங்கள் கொண்ட கள வழிகாட்டி நூல்களும், சிறப்புக் கண்ணாடிகளும் இல்லாமையே இந்தியாவில் பறவையியல் கல்வியை பெரிதும் வளராமல் தடுக்கின்றன. பறவைகள் பற்றிய என் தீவிர ஆர்வத்தின் ஆரம்பத்துக்காக, புதிராய்த் தோன்றிய மஞ்சள் தொண்டைக் குருவிக்கும், அதைத் தொடர்ந்து இடம்பெற்ற நிகழ்ச்சிச் சங்கிலிக்கும் நான் கடமைப்பட்டுள்ளேன் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

2

# பள்ளிப் பருவம்

எட்டு-ஒன்பது வயதுவரை அக்தர்-காமு என்ற இரு சகோதரி களோடு நானும் கிர்காம் பகுதியில் கிறித்தவ மடத்தினர் நடத்திய ஒரு மகளிர் பள்ளிக்குப் போய்க் கொண்டிருந்தேன். ஜனான விவிலிய, மருத்துவ மடாலய மகளிர் உயர்நிலைப்பள்ளி (சுருக்கமாக இஸட்பிஎம்.எம்.) என்பது அதன் வாய்கொள்ளாத பெயர்! ராணி மேரி மகளிர் உயர்நிலைப்பள்ளி என்று பிறகு பெயரை மாற்றி விட்டார்கள். சின்னஞ்சிறு பையன்களும் அங்கு சேர்த்துக் கொள்ளப் பட்டனர். ஆனால், அவர்கள் 'பெண்களாக இருக்கும்' (!) வரைதான் அங்கு பயிலலாம். எனக்கும் அப்படித்தான் ஆயிற்று. பிறகு செயின்ட் சேவியரில் சேர்ந்தேன். அவரவர் காலத்தில் என் சகோதரர்களும் அங்குதான் படித்தனர். அந்தக் காலத்தில் பணக் காரப் பள்ளிக்கூடம் என்றழைக்கப்பட்ட அந்தப்பகுதிக்கு— இப்போதைய டோபிதலாவ்—குதிரை வண்டியில்தான் போய்வர முடியும். அதுதான் அங்கு சேர்ந்ததில் மிகப் பெரிய மகிழ்ச்சி. ஒட்டுகிறவருக்குப் பின்னால் இருந்த முதல் பெஞ்ச்சில் அமர சிறார்களான எங்களுக்குள் வலுவான போட்டி! அங்கே இருந்து கொண்டு வண்டி ஓட்டும் அதிசயத்தையும் அதன் உல்லாசத்தையம் காணவேண்டும். ஓட்டுபவர் மிகவும் பேறு பெற்றவர், அனுபவிக் கிறார் என்பது (அப்போதைய) எங்கள் எண்ணம். அவர்மீது பொறாமையே உண்டு. ஆஸ்திரேலியாவிலிருந்து இறக்குமதியான பெரிய 'வேலர்' ஒற்றைக்குதிரை வண்டி இன்னொரு வகை. பெரும்பாலும் ஈராக்கிலிருந்து இறக்குமதியான இரட்டைக் குதிரைகள் இழுப்பது. குதிரைகள் எப்போதும் அழகாக பரா மரிக்கப்படும். அதுவும் 'வேலர்' என்றால், வெள்ளைக்கார துரைகள் போல அவற்றுக்கும் சூரியனின் கடுமையான வெப்பத்திற்கு பாதுகாப்பாக பெரிய தொப்பிகள் உண்டு. காதுகள் தொப்பியின் பெரிய துளைகளிலிருந்து துருத்திக்கொண்டு வெளியே தோன்றும்.

வண்டியில் ஐந்தாறுபேர் அமரக்கூடிய பெஞ்சுகள் வரிசையாக முன்பக்கம் பார்த்து அமரும் வகையில் பொருத்தப்பட்டிருக்கும். ஒவ்வொன்றுக்கும் பக்கவாட்டில் நுழைந்து உட்கார வேண்டும். முதல் பெஞ்சுக்கும் முன்னே ஓட்டுபவர் நிற்பார். வண்டியின் மரத்தளத்தில் சாட்டைமாட்ட ஒரு வளையம். அதை எடுத்து உலோகம் பொருத்தப்பட்ட முனையை வண்டியில் தட்டி, குதிரையை விரட்டுவார். கயிற்றை இழுத்துப் பிடிக்கையில், வண்டியை நிறுத்த ஒரு சுழலும் நெம்புகோல் 'பிரேக்' உண்டு. பேருந்துபோல குறிப்பிட்ட நிறுத்தங்கள் இருந்ததாக, என் நினைவுக்கெட்டியவரை தோன்றவில்லை. யாரும் இறங்க வேண்டுமானாலோ, ஏறவோ பயணிகள் வசதிக்கு அது நிற்கும், அல்லது வேகம் தணியும். ஓட்டுபவர் கால் வைக்குமிடத்துக்குக் கீழே ஒரு மணி இருந்தது. நடந்து போகிறவர்கள் கைவண்டிக் காரர்கள் ஆகியவர்களை ஒதுங்கச் செய்ய அது உதவியது. பாலம் மாதிரி ஏறுமுகமான சாலைகளில் இரண்டாவது குதிரை தேவைப்படுமென்று ஒரு பணியாள் தயாராக பாலத்தின் துவக்கத்தில் இருப்பார். வண்டி ஓடிக்கொண்டிருக்கும்போதே லாகவமாக இரண்டாவது குதிரை வண்டியில் மாட்டப்படும். வண்டி பாலத்தில் உச்சகட்ட உயரத்துக்கு வரும்வரை ஓட்டுநரின் அருகிலேயே நிற்கும் அப்பணியாளர் உச்சத்துக்கு வந்ததும் லாகவமாகக் குதித்து வண்டி ஓடிக்கொண்டிருக்கும்போதே இரண்டாவது குதிரையை அவிழ்த்து விடுவார். அதை கீழே ஓட்டிக்கொண்டுபோய், அடுத்த வண்டி வரும்வரை மீண்டும் பாலத்துப் பக்கத்தில் காத்திருப்பார். இது தொடர்ந்து நடந்து கொண்டேயிருக்கும்.

எனக்கு நாள்தோறும் இரண்டு அணா கிடைக்கும். பள்ளிக்குப் போகவும், பள்ளியிலிருந்து எங்கள் கேத்வாடி பகுதியின் டிராம் நிறுத்தமான கிராண்ட்ரோடு சந்திப்பிலுள்ள பிளேஹவுஸ் (பில்லா ஹவுஸ் என்று பெயர் மருவிவிட்டது) வருவதற்குமான செலவுக்கு தான் அந்த இரண்டு அணா (இப்போதைய 12 காசு). பள்ளிக்கூடப் பகுதிக்கும் கிராபோர்ட் கடைவீதிக்குமிடையே கால்மணிக்கொரு முறை 'ஒற்றைக் குதிரை' வண்டி உண்டு. கடைவீதி சேவியர் உயர்நிலைப்பள்ளியை அடுத்த பகுதியாகும். அங்கிருந்து, பைதோனி வழியே கிராண்ட்ரோட் வர இரட்டைக்குதிரை வண்டிக்கு மாற வேண்டும். பொதுவாக பைதோனியில் குதிரை மாற்றுவார்கள். மாற்றுக் குதிரைகள் வண்டியில் பூட்டப்பட ஆயத்தமாக அங்கே காத்திருக்கும். என்னைப் பொறுத்தவரை, பயணச் செலவுக் காசில்

இடைவேளையில் பேல்பூரி வாங்கித்தின்றுவிட்டு வீட்டுக்கு காலாற நடையைக்கட்டுவது பழகிப்போன ஒன்று. நடப்பது ஒரு தொல்லை யென்றாலும், இரண்டு மைல்தான். அதற்கென சந்துகளும் சிறு தெருக்களுமான குறுக்குப்பாதை உண்டு. அப்படிப்பட்ட ஒரு நாளில் மறதியாக பள்ளியிலிருந்து கிளம்பும் வண்டியில் ஏறி உட்கார்ந்தேன். காசுகொடுக்க பையில்கைவிட்டபோதுதான் தெரிந்தது—பை காலி! நடத்துநர் ஒரு இரக்கமுள்ள தாடிக்காரக் கிழவர். உத்திரப் பிரதேசத்து ஆள்—மும்பை டிராம்வே நிறுவன ஊழியர்களில் பலபேர் உபி. காரர்கள்தான். தினமும் வரும் பையனாக என்னை அறிந்திருந்த அவர் எனது சங்கடத்தை உணர்ந்திருக்கவேண்டும். ஆகையால், நான் பயந்ததுபோல் என்னை இறக்கிவிட்டுவிடாது பேசாமல் ஒரு டிக்கெட்டை கொடுத்துவிட்டு "கவலைப் படாதே! நாளைக்கு கொடுத்தால் போதும்" என்று பரிவாகச் சொன்னார்! போயும் போயும் ஓரணா! அது அவரைக் கவிழ்த்துவிடாது என்பது உண்மை தான். ஆனால், இந்த அவசரக்கார உலகில், பண்பைத் தொலைத்த எந்த நடத்துநர் பணமின்றி பயந்து நடுங்கும் சின்னஞ்சிறு பள்ளிச் சிறுவனிடம் இப்படி பரிவாக நடந்து கொள்கிறார்? இதை நான் ஒருநாளும் மறக்க முடியாது. எங்களுக்குள் இந்நிகழ்ச்சியால் ஒரு மகன்–தந்தை உறவே ஏற்பட்டுவிட்டது. அவரது பரிவான இயல்பைப் பயன்படுத்திக்கொள்ள எனக்கு வெகுநாள் பிடிக்கவில்லை. அதன்பிறகு பேல்பூரி ஆசையை நிறைவேற்றிக்கொள்வதை அதிகரித்துக் கொண்டேன்!

என் பள்ளி வாழ்வில் பெருமையாகச் சொல்லிக்கொள்ள அநேகமாக ஒன்றுமில்லை. எவ்வளவு குறைவாக சொல்கிறேனோ அவ்வளவு நல்லது எனலாம். பெரும்பாலான பாடங்களில் சராசரி, விளையாட்டிலும் பூகோளத்திலும் கொஞ்சம் மேலே, கணக்கில் சராசரிக்கு ரொம்பவும் கீழே—இதுதான் நான். என் ஆங்கிலம் சிறப்பாகப் பேசப்பட்டது. சில சமயம் ஆசிரியர்கள் என் கட்டுரை களை வகுப்பில் உரக்கப்படித்துக் காட்டியிருக்கிறார்கள் என்று நிறைவு கொள்ளலாம். பிற்காலத்தில் 1934இல் இந்திய ஆசிரியர் களின் ஆங்கில உரைநடைத்தொகுதி ஒன்றில், அதுவும் ஹைதராபாத் உஸ்மானியா பல்கலைக்கழக முதுநிலை ஆங்கிலப் பேராசிரியரான ஈ.ஈ. ஸ்பைட் என்ற ஆங்கிலேயரால் தேர்ந்தெடுக்கப்பட்டு தொகுக்கப் பட்டதில் நம்பமுடியாமல், வியப்புடன் என் கட்டுரையையும் பார்க்க நேர்ந்தது. கல்லூரி மாணவர்களுக்கான அந்தத் துணைப் பாடநூல் 'இந்தியாவின் ஆங்கில மேதைகள்' என்ற கம்பீரமான பெயரில் வந்தது. ரவீந்திரநாத் தாகூர், சரோஜினி நாயுடு முதலிய

சக மேதைகளுடன் நானும்! பள்ளித் தேர்வுகள் என்ற இடைஞ்சல்கள் அனைத்தையும் வரும்–போகும் என்று எடுத்துக்கொண்டவன் நான். ஒரே சீராக எல்லாவற்றிலும் சுமார்தான். பள்ளியில் எனக்குக் கிடைத்த ஒரே பரிசு, நாலாவது படிக்கையில் 'நல்லொழுக்கத்துக்காக' கிடைத்ததுதான். தீர்க்கதரிசனமாக 'நமது விலங்கு நண்பர்கள்' என்ற நூல் கிடைத்தது. வெளிப்புற விளையாட்டுகளில் ஹாக்கி, டென்னிஸ், பாட்மின்ட்டன் ஆகியவற்றில் எனக்கு விருப்பமிருந்தது. சராசரிக்கு மேலான தேர்ச்சியும் இருந்தது. கால்பந்தும் எனக்குப் பிடிக்கும். கிரிக்கெட்டைப் பொறுத்தமட்டில் சிலசமயம் விளையாடினேன் என்றாலும், அதில் எனக்கு ஈர்ப்பு ஏற்படவில்லை. ஆனாலும் நல்ல கிரிக்கெட் என்றால் விரும்பிப் பார்ப்பதுதான். ஆனால், முழு ஐந்துநாள் போட்டிகளல்ல—'வேகமான' கிரிக்கெட், மிதமான அளவு பார்ப்பேன்! குதிரை சவாரி பிடிக்கும். டேராடூனில் கொஞ்சநாள் கிடைத்தது தவிர குதிரையேற்றத்துக்கு நான் விரும்பிய அளவு வாய்ப்புகள் கிடைக்கவில்லை. பறவைகளை சுடுவதும் முறையான வேட்டையும் எப்போதுமே என் முதல் விருப்பமாக இருந்திருக்கும் என்று தோன்றுகிறது. இவற்றில் என் தேர்ச்சியும் சராசரியைவிட அதிகம்தான். கொல்லுவதோ, எவ்வளவு கிடைத்தது என்பதோ எனக்குப் பெரிதல்ல. வெளியில் சுற்றுவதும், காட்டில் திரிவதும் பரபரப்பும் சாகசமும், சில சமயங்களில் ஆபத்தை எதிர் கொள்ளும் உல்லாசமும்தான் பெரிது. அதுதான் வேட்டையனுபவங்களை இன்பமயமாக ஆக்குவது. சரி, பள்ளி வாழ்க்கைக்கே திரும்புவோம்.

சுமார் 13–14 வயதில் (1910) எனக்கு தீராத தலைவலி ஏற்பட்டது. அது என்ன, ஏது, எதனால் என்றே புரியவில்லை. சூழ்நிலை மாற்றம் நிவாரணம் தரக்கூடுமென மருத்துவர்கள் நினைத்தனர். ஒரு ஆறுமாதம் படிப்பைத் தள்ளிப்போட முடிவாயிற்று. எனக்கு கலப்படமற்ற களிப்பு! சிந்து மாகாண உலர் வானிலை நல்லது என்று கருதப்பட்டதால் ஹமீதண்ணனும் ஷரிபா அண்ணியும் என்னை தங்களுடன் அங்கே அழைத்துச் செல்கிறோம் என்று கூறிவிட்டார்கள். அண்ணன் அங்கே நில ஆவணங்கள் அலுவலகத்தில் கண்காணிப்பாளர். அத்துடன் ஹைதராபாத் (இது இன்றைய பாகிஸ்தானில் உள்ள ஹைதராபாத்) நில அளவையாளர் பள்ளியின் தலைவரும் அவர்தான். குளிர்காலத்தில் சிந்து மாகாணம் முழுவதும் விரிவான சுற்றுப்பயணம் போகவேண்டிய தேவையுள்ள பணி கண்காணிப்பாளர் பணி. அழகிய கோட்டை போன்றதோர் மாளிகையில் அவர்கள் வசித்தனர். ஹைதராபாத் நகரில் ஒரு எல்லையில் அமைந்திருந்த அம்மாளிகை, 1840ஆம்

ஆண்டோ, அதற்கு சற்று முன்பின்பாகவோ சிந்து மாகாணம் ஆங்கிலேயர் வசமான போது, ஜேக்கப் என்ற வெள்ளைத் தளபதியால் கட்டப்பட்டதால் 'ஜேக்கப் கோட்டை' என அழைக்கப் பட்டது. தலைவாசலுக்கு இருபுறமும் இரு முனைகளிலும் இரண்டு வட்டக்கோபுரங்கள் உண்டு. கோபுரங்கள் என்றே கூறலாம். திறந்த வெளி மொட்டைமாடி அவற்றை இணைத்திருக்கும். முதல்மாடியில் என்னுடைய அறை. அதற்கு நேர்மட்டத்திலே, கோபுரத்தில் ஒரு குளியலறை இருந்தது. அந்த வீடு தரைமட்டத்திலிருந்து சற்றே உயரமான தளத்தில் அமைந்திருந்தது. ஒரு சின்னஞ்சிறு குன்றின்மேல் என்று வேண்டுமானால் கூறலாம். களிமண்ணால் சுற்றுச்சுவர் எழுப்பப்பட்டிருந்தது. வீட்டெல்லைக்குள் கண்டி மரங்களும் வேல மரங்களும் அடர்ந்து ஒரு ஒழுங்கற்ற வனமாக அமைந்திருந்தது. சின்னஞ்சிறு பறவைகளுக்கு அது ஒரு அருமையான வாழிடமாக அமைந்திருந்தது. விடுமுறைக்கு செம்பூர் போகிற நாட்களில் பாயாப் பறவையின் கூடுகளை நான் பார்த் திருக்கிறேன். ஆனால் அவை ஓங்கி உயர்ந்த பேரீச்ச மரங்களின் உச்சியில் இருக்கும். உயரம் பார்த்தே கழுத்தெல்லாம் சுளுக்கிப் போகும்! இங்கேயோ, குட்டை குட்டையான வேல மரங்களில் குருவிக் கூடுகளைக் கண்டதும் எனக்கு உண்டான மகிழ்ச்சி இப்போதும் நினைவிருக்கிறது. சிரமமின்றி அவற்றை அணுகி எதுவும் செய்யக்கூடிய உயரம். அந்தக் காலத்தில் முட்டைகள் சேகரிப்பதில் முனைப்பாயிருந்தவன் நான். ஹமீதண்ணாவின் பணியாளர்களில் ஒரு முரட்டு பலூஷி ஆள் ஒருவர் இருந்தார். அவர் பெயர் ஊர்ஸ். அவர்தான் வேட்டை விஷயங்களுக்கு பொறுப்பாளர். துப்பாக்கி முதலான வேட்டைக் கருவிகளைக் கவனித்து வந்தார். வாத்து, காடை, குயில், உள்ளான் குருவி உட்பட சிறு பறவைகள் எங்கெங்கே வசிக்கின்றன என்ற விபரங்களை சேகரிப்பவராக அவர் தம்மைத்தாமே நியமித்துக் கொண்டு, அப்பணியையும், ஆட்கள் சேர்ப்பதையும், அவரது அய்யா (ஹமீதண்ணா) பயணம் போகும்போதெல்லாம் வேட்டைக்கான சகல ஏற்பாடுகளுக்கும் அவரே பொறுப்பேற்று செய்வார். எப்போதும் நமக்கு அவர்தான் கூட இருப்பார். குறிப்பாக வேட்டை யில் என்னை உசுப்பிவிடுவதும், முட்டை சேகரிப்பதில் முழு உதவி செய்வதும், கூடுகளைக் கண்டுபிடிப்பதும்...

ஒரு நாள் காலை. அண்ணாவின் குதிரை வண்டியில் தான்டோ ஹைதர் என்ற பகுதிக்கு காடைக்குருவி சுடப்போனோம். அந்த இடம் ஹைதராபாதிலிருந்து சில மைல் தூரமிருக்கும்.

பொதுவாக நட்சத்திரங்கள் மட்டுமே நிறைந்த விடியற்காலை இருட்டில் அன்று ஹெய்லியின் வால்நட்சத்திரம் தலைக்குமேலே பிரகாசமாக ஒளிர்ந்தது. அது மீண்டும் தோன்றப்போவது 1986இல்தானே, அப்போதும் எங்களில் யாரும் உயிருடன் இருப்போமா என்று அதிசயப்பட்டுக்கொண்டே போனோம். இப்போது, என் எண்பத்தொன்பதாம் வயதிலும், 1986 அதிக தொலைவிலிருந்தாலும் எங்கள் அட்துல்லாலி வம்சத்தாரின் நெடிய ஆயுளைப் பார்த்தால் (தாத்தா 114 வயதுவரையும், மாமா 103 ஆண்டுவரையும், ஒரு அத்தை நூறு வயதும், ஒரு சகோதரி 97 வயதும் வாழ்ந்தவர்கள்) அப்போது அந்த விடியற்காலையில் தோன்றியதுபோல் 1986வரை வாழ்வது அப்படியொன்றும் முடியாத காரியமல்ல என்று தோன்றுகிறது! அந்த அருமையான வைகறை அனுபவம் என் நெஞ்சின் பசுமையான பதிவுகளில் ஒன்றாகும்.

'மர்மத்' தலைவலியால் ஓராண்டு பள்ளி செல்வதை நிறுத்திய பிறகு 1913இல் ஒருவகையாக மும்பை பல்கலைக்கழக மெட்ரிக் தேர்வில் நூலிழையில், அந்த ஆண்டு தேர்வெழுதிய சுமார் மூவாயிரம் பேரில் ஆகக் கடைசி ஆளுக்கு அருகில் என் இடம் என்கிற பெருமையுடன் தப்பித்தேன் பிழைத்தேன் எனத் தேறினேன். பின்னால் போனால், 1908க்கு சற்று முன்பின்னாக பார்த்தால், ஒரு வேட்டைக்காரனாக வரவேண்டுமென்பது எனது நெஞ்சார்ந்த ஆசைகளில் ஒன்றாயிருந்தது. அதுவும், முடிந்தால் பிரபலமாக! நான் படித்ததெல்லாம்-அதை ஆழமான படிப்பென்றோ ஆர்வமிக்கதென்றோ கூற முடியாது-இயற்கை வரலாறு பற்றியும் வேட்டையாடுதல் பற்றியுமான நூல்களும் கட்டுரைகளும்தான். சான்டர்சனின் 'இந்திய வனவிலங்குகளுடன் பதின்மூன்றாண்டுகள்', கேப்டன் ஏ.ஐ. ஆர். கிளாஸ்பர்ட் எழுதிய 'இந்தியக் காடுகளில் உல்லாசமும் துப்பாக்கியும்', தியோடர் ரூஸ்வெல்ட்டின் 'ஆப்பிரிக்க வேட்டை முயற்சிகள்', மற்றபடி 19ஆம் நூற்றாண்டில் இந்தியாவிலிருந்த ஆங்கில வேட்டைக்காரர்களின் எழுத்துகள்தான். "காலைச் சிற்றுண்டிக்கு முன்பு 2-3 புலியோ காண்டாமிருகமோ" என்பது இந்தக் காலத்தில் நம்பமுடியாத செய்தி. நான் குறிப்பிட்ட நூல்களில் சாதாரணமாகக் காணப்படும் இத்தகைய குறிப்புகள் அக்காலத்தில் காடுகளும் வனவுயிர் வாழ்வும் எப்படி இருந்தன என்பதைக் கோடிட்டுக் காட்டும். நான் முன்பே கூறியதுபோல, அமீருதீன் மாமாவை நாங்கள் ஒரு நாயகனாகவே கொண்டாடி வந்தோம். அவர்தான் இந்தியாவில் வேட்டைக்கலையில் எங்களுக்கு ஒரு மேதாவி. இருப்பினும் அவரது அனுபவங்கள்

(ஏறக்குறைய) எல்லாமே பல்வேறு இந்தியக் குறுநில மன்னர்களின் விருந்தினராகப் பெற்றவைதாம். அவற்றில் ஒரு அரச கம்பீரம் உண்டு. ஆனால் தாமாக அவர் ஏதும் வேட்டை நிகழ்ச்சி ஏற்பாடு செய்ததுண்டா, அவர் வேட்டையாடிய மிருகங்கள், பறவைகளைப் பற்றிய அவர் அறிவு எவ்வளவு, வனவாழ்வு பற்றிய கதைகள் அவருக்கு எவ்வளவு பரிச்சயம் என்பதெல்லாம் எனக்கு நிச்சயமாகத் தெரியாத சங்கதிகளாகும். நவீனப் பார்வையில் அவரது ஆயுதங்கள் பழைமையானவை. இங்கிலாந்தில் தயாரிக்கப்பட்ட இரட்டைக்குழல் 12 போர் துப்பாக்கி, அதிலேயே காம்பினேஷன் வகையான ஒன்று (450 கறுப்பு மருந்து துப்பாக்கி—இது தரைப்படை, கப்பற்படை கூட்டுறவு சங்கத்துக் காக உருவாக்கப்பட்டது); டமாஸ்கஸ் உருக்கிலான அடிப்பாகம் கொண்ட அழகான (ஆனால் பழங்கால) 16 போர் இரட்டைக்குழல் துப்பாக்கி (இது 1870 வாக்கில் ஒரு பிரபல பிரெஞ்சு துப்பாக்கி உற்பத்தியாளரிடம் சொல்லி செய்யச் சொன்னது, பொன் வேலைப்பாடுகளும் பொன்னெழுத்துகளும் கொண்டது); ராணுவத்துக்கான மார்ட்டினி—ஹென்றி குதிரைப் படை கார்பைன் 577/450 (.25 வெடி மருந்துக்கான குழாய் பொருத்தப்பட்டது); கைத்துடி போன்ற பின்-பையர் துப்பாக்கி (410 போர்), 32 காஜ் 'ரூக்' துப்பாக்கி முதலியவையே அவை.

ஒரு கட்டைவிரல் நெம்புகோல் இதன் வயிற்றுப் பகுதியில் இருக்கும். அதை பக்கவாட்டில் திருப்பி, வயிற்றுப் பகுதியை ஓரிரு அங்குலம் முன்னால் இழுத்து இடைவெளியில் குண்டைப் போட்டு, பிறகு வயிற்றுப் பகுதியை பின்னால் இழுப்பதுதான் அதில் குண்டு நிரப்பும் முறை. காகங்களையும் திரியும் பூனைகளையும் சுடுவதற்கு சற்று பெரிய பையன்களான நாங்கள் இதைப் பயன்படுத்த அனுமதி உண்டு. கேத்வாடியில் எங்கள் அண்டை அயல் பகுதிகளின் நெரிசலில் அதை நாங்கள் பொறுப்பின்றிப் பயன்படுத்திய அழகுக்கு, அங்கே ஏதும் விபத்து நேராதது அதிருஷ்டவசமான ஆச்சரியமே! 'ஹாமர்' இல்லாத துப்பாக்கிகளும், மாகசின் வசதி உள்ள துப்பாக்கிகளும் அப்போது பிரபலமாகவில்லை. ஹாமர் பகுதி இல்லாததால், "அது பார்வைக்கு மறைந்த ஆபத்து; எப்போது வெடிக்கப்போகிறது என்று தெரியாததால் அபாயகரமானது" என்று முதியவர்களும் பழங்காலத்தவருமான வேட்டைக்காரர்கள் அவற்றைக் குறை கூறுவர்.

மன்னர்கள், ஜமீன்தார்கள், ஆங்கில அரசின் விருது மரியாதை களை ஏற்றவர்கள் போன்ற அரசு விசுவாசிகளைத் தவிர

இந்தியர்களுக்கு ஆயுத உரிமம் என்பது மிகவும் கட்டுப்படுத்தப் பட்டு வழங்கப்பட்டது. அது ஒரு சமூக அடையாளமாகக் கருதப் பட்டு அதற்கு ஏகப்பட்ட சிபாரிசுகள் வேண்டப்பட்டன. இவை மிகமிக அரிதாகவே, அதுவும் நன்னடத்தை, நிதி நிலை ஆகியவை தீவிரமாக அலசப்பட்டே தரப்பெற்றன. பெரும்பாலும் இவை பெருமை யடித்துக் கொள்ளவே பெறப்பட்டன என்பது வேறு கதை. உரிமத்துக்கான மனுவிலேயே 'வேட்டை',—'சுயபாதுகாப்பு' என்பவற்றுடன் 'காட்சிக்காக' என்பதும் ஒரு நோக்கமாகக் குறிக்கப்பட்டிருந்தது! ஒரு கௌரவ நீதிபதியாக இருந்தமையால் அமீர்மாமா நியாயமான அளவுக்கு எண்ணிக்கையில் ஆயுதங்கள் வைத்துக் கொள்ள உரிமமோ கட்டுப்பணமோ இன்றியே தகுதி பெற்றிருந்தார். ஆயுத வணிக உரிமமும் இந்தியர்களுக்கு மிகமிக அரிதாகவே வழங்கப்பட்டது. இத்துறையில் மிகமிகச் சிலரே இந்தியர். மும்பையிலும் கல்கத்தாவிலும் தரைப்படை–கப்பற்படை கூட்டுறவு பண்டகசாலை, மும்பையில் ஐ.ஹோலி அண்ட் சன்ஸ், கல்கத்தாவில் ஆர்.பி. ரோபி அண்ட் கம்பெனி, மான்ட்டன் அண்ட் சன்ஸ் இப்படி பெரும்பாலும் பிரிட்டிஷ் நிறுவனங்கள் கையிலேயே இந்த வணிகம் இருந்து வந்தது. ஆண்டுதோறும் கிறிஸ்துமசுக்கு முன் இவர்கள் தமது ஆயுதப் பட்டியல், வெடிமருந்துப் பட்டியல், வேட்டைக்கருவிகள், கூடாரக் கருவிகள் ஆகியவற்றின் பட்டியல்களை கௌரவ நீதிபதிகட்கும், அவர்களைப் போன்றவர் களுக்கும் அனுப்பி வைப்பர். நானும் என்னையொத்த மனதினரான ஒன்றுவிட்ட சகோதரர்கள் சிலரும் இவற்றுக்காக ஆர்வமுடன் காத்துக்கிடப்போம். ஒவ்வொரு துப்பாக்கி, கைத்துப்பாக்கி பற்றியும் அதன் சக்தி, வேகம், தொலைவு/எடையுடன் தொடர்பான தாக்குதிறன், பல்வகை வெடிமருந்துகள், பல்வகை குண்டுகளின் எடை, இன்னபிற விபரங்களை எல்லாம் கவனமுறப் படிப்போம். கடையில் வேடிக்கை பார்ப்பது போன்று இதுவும் ஒரு சுகந்தான். இதுதான் சிறந்தது, அதுதான் உயர்ந்தது என்று முடிவற்ற விவாதங்கள், பட்டிமன்றங்கள் வேறு. அவரவருக்குப் பிடித்த துப்பாக்கியை அல்லது வெடி மருந்தைப் பற்றி முக்கிய விபரங்களை மனப்பாடம் செய்துகொண்டு பிறகு நெடுங்காலம் சும்மா அவற்றை பேச்சோடு பேச்சாய் எடுத்துவிடுவதுண்டு. பின்னொரு கால கட்டத்தில் என்னைப் பொருத்தமட்டில் இதேபோன்ற மோட்டார் சைக்கிள்களைப் பற்றிய ஒரு வெறி என்னைப் பற்றிக் கொண்டது. அது ஒரு அற்புதமான சுகானுபவம்.

காலந்தோறும் என்னிடமே இருந்த ஆயுதங்கள் பற்றிப்

பார்த்தால், முதலில் பிஎஸ்ஏ. ஒற்றை வயிற்று 410 'த்வாய்' துப்பாக்கி. 1917இலிருந்து 1927 வரை பர்மாவிலும் இந்தியாவிலும் என் பெரும்பான்மையான பறவை சேகரிப்புக்கும் வேட்டைக்கும் இதுதான் கருவி. எனது 31ஆவது பிறந்த நாளுக்கு என் மனைவி தெஹ்மினா ஒரு இரட்டை வயிறு ஹாமரற்ற 20போர் கொண்ட ஷாட்கன் பரிசளித்தார். அது ஒரு லிங்கன் ஜெப்ரிஸ் தயாரிப்பு. அப்போதிருந்து இது என் வேட்டைக்களத் துணைவனாக இருந்து வருகிறது. ஐம்பத்தாறு ஆண்டுகளாக என் நேசத்துக்குரிய இந்தத் துப்பாக்கியே என் பெரும்பான்மையான வட்டார பறவை ஆய்வுகளிலும் வேட்டை விளையாட்டுகளிலும் பயன்படுத்தப்பட்டு வந்திருக்கிறது. 1918இல் ஹமீதண்ணாவிடம் அன்பளிப்பாகப் பெற்றது வின்செஸ்டர். 351 'தரம்' கொண்ட பாதி தானியங்கி ரைபிள். ஆபத்தில்லா நடுத்தரமான வேட்டைக்கு அது சரியானது. ஆனால் எதிர்பாராத நேரத்தில் உட்புறம் நெரிசலாகி காலை வாரி விட்டுவிடும். அடிக்கடி அப்படி ஆனதில்லை என்றாலும் ஒரு அவசரத்துக்கு உதவாது என்று கூறுமளவு தொல்லை பிடித்தது. இதைவிட்டு 1922இல் ஒரு .423 (10.5மிமீ) தாழ் உள்ள 'மசூர்' மாகசின் துப்பாக்கிக்கு மாறினேன். தவாயில் பெரிய எடுப்பிலான வேட்டைகளுக்குப் பயன்பட்டது போலவே பிறகு இந்தியாவிலும் இது உதவியது. தவாயில் காட்டெருமைகளையும், இந்தியாவில் இரு புலிகள் இரு சிறுத்தைகள், சோம்பல் கரடிகள், மான்வகைகளில் சாம்பர், சித்தல், நீல்கய், பிளாக்பக் ஆகியவை இதற்கு பலியானவை யாகும். 1927இல் மும்பை இயற்கை வரலாற்றுக் கழகத் துணைப் பொறுப்பாளராக பணி ஏற்றபோது ஒரு 6.5 (.256) மான்லிக்கர் ஸ்கோநார் மாகசின் கார்பைன் வாங்கினேன். கையடக்கமான இந்தச் சிறு துப்பாக்கி நுண்ணியதும் கையாள மகிழ்ச்சி தருவதுமாகும். மென்முனை குண்டுபோட்டு சுட்டால் முரட்டு விலங்குகளான நில்கய், சாம்பர் இவற்றையே சமாளிக்கும். இது நிக்கல் முலாமிட்ட உறுதியான குண்டுபோட்டு அண்மையில் நின்று சுட்டால் பெரும் பறவைகளுக்கு ஒரு .22 துப்பாக்கி ஏற்படும் விளைவையே தரும்.

எனது .32 'தரம்' கோல்ட் தானியங்கிக் கைத்துப்பாக்கிக்கு மாற்றாக தவாயில் பிற்காலத்தில் நான் வாங்கிய மசூர் கைத் துப்பாக்கி உண்மையிலேயே குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இது முதல் உலகப்போரில் ஜெர்மானிய குதிரைப் படையினருக்குப் பயன்பட்ட ரகமாகும். சாதாரணமாக புழக்கத்தில் இருந்த கைத்துப்பாக்கிகள் போலன்றி இது மிகவும் எடையுள்ளதாயிருந்தது. இதன் வயிற்றுப்

(குழல்) பகுதி ஓரடி நீளம் கொண்டிருந்தது. சேணத்திலிருந்தோ, இடுப்பிலோ மாட்டிக்கொள்ளக்கூடிய மரத்தாலான உதவி இருந்ததால் அதை சாதாரண கார்பைன்போல தோளிலும் பயன்படுத்தலாம். ஒரு பாதி தானியங்கி 10 ஷாட் மாகசின் கொண்ட இது, ஒரு கிலோமீட்டர் தொலைவுவரை வீச்சு கொண்டது. மிக நுண்மை கொண்டது. ஆனால் மிக நெருக்கத்தில் தற்காப்புக்கு உதவுமா என்றால் சொல்ல முடியாது. என் அனுபவத்தில் 150—200 மீட்டர் தூரத்துக்கு இது மிகப் பொருத்தமானதெனக் கண்டேன். ஊருக்கு வந்தபின் என் ஒன்றுவிட்ட சகோதரரும், ஒரு காலத்திய வேட்டை சகாவும், வாழ்நாள் முழுதிலும் இனிய நண்பருமான அசப் பைசீ தனது .366 (9.5 மி.மீ) மசூர் மாகசீன் துப்பாக்கி ஒன்றை அன்பளிப்பாகத் தந்தார். அதுவும் பல்திறம் கொண்ட புகழுக்குரிய ஆயுதமே.

1909க்கு சற்று முன்பின்னாக கேத்வாடியில் இருந்த நாட்களில் வேட்டைக்கும் பிற நடவடிக்கைகளிலும் எங்கள் குழுவில் ஒருவராக சுற்றித்திரிந்த என் வயதினரான இஸ்கந்தர் மிர்சா என் தூரத்து உறவினரும்கூட. இவரது விரைவான எதிர்பாராத வளர்ச்சியும் அதிகார நிலைக்கு உயர்ந்தமையும் பிறகு பாகிஸ்தானில் முதன் முதலில் ராணுவம் ஆட்சியைக் கைப்பற்றியபோது நிகழ்ந்த அவமானகரமான வீழ்வும் இத்தன்மையரான தகுதியுறாமலே திடீரென உயர்ந்து விடுகிற நபர்களுக்கு ஒரு எச்சரிக்கையும் பாடமும் ஆகும். சிறுவர்களாயிருந்த நாட்களில் இஸ்கந்தர் ஒரு அருமையான சகா. வசதிகொண்டவன், என்னதான் நடக்கும் நடக்கட்டுமே என்ற அணுகுமுறை கொண்டவன். குறும்புக்கார இளைஞர்களான எங்கள் எல்லாவித நடவடிக்கைகளுக்கும் இணையில்லாத, ஏற்கப்பட்ட தலைவன். கேத்வாடி வட்டாரத்தில் கூரை மீது புறாவேட்டை நடத்திய காலத்தில் யாரும் பொறாமைப் படத்தக்க விதத்தில் வைத்த குறி தப்பாமல் சுடக்கூடிய விற்பன்னன். 'ஜெம்' துப்பாக்கி வைத்திருந்தவன். பல விளையாட்டுகளில் சராசரிக்கு மேலான திறமைகொண்ட இஸ்கந்தரின் கிரிக்கெட் திறமை குறிப்பிடத்தக்கது. இப்போது ஹர்கிஷன்தாஸ் மருத்துவமனை உள்ள இடத்துக்கு அருகில் சந்துர்ஸ்ட் சாலை அருகே திறந்த வெளியில் சனி-ஞாயிறில் நாங்கள் கிரிக்கெட் ஆடிய காலங்களில் பந்து வீச்சாளனாக அவனுக்கு எவ்வளவு கிராக்கி இருந்தது என்பது எனக்கு நினைவிலேயே நிற்கிறது. தரையைத் தொடுவதுபோல அவ்வளவு தாழ்வாகப் பந்தை வீசி விளை யாடுகிறவனையும் விக்கெட்டையும் வீழ்த்திவிடும் தந்திரமான திறமை

அவனுக்கிருந்தது. இதே விதமாக எதிர்பாராத நேரங்களில் அடிமடியில் கைவைப்பது, பின்னாளில் அரசியலிலும் பல அரிய விக்கெட்டுகளை அவனுக்கு சம்பாதித்துக் கொடுத்தது. எடுத்துக் காட்டாக, கான் அப்துல் கபார்கான் அவர்களுடைய குதாய் கித்மத்கார் (இறைவனின் தொண்டர்கள்) இயக்க காலத்தில் அங்கே (வடமேற்கு எல்லை மாகாணத்தில்) ஆங்கிலேயரின் அரசியல் பிரதிநிதியாக இருந்த காலத்தின் நிகழ்ச்சிகளைக் கூறலாம். அதற்கு ஆங்கிலேயர்களின் உன்னதமான பாராட்டு கிடைத்தது. ஆனால் இத்தகைய தவறான அணுகுமுறைகளை இடந்தெரியாமல் பயன்படுத்தியதுதான் கடைசியில் பாகிஸ்தான் அதிபர் பதவி என்ற அவன் விக்கெட்டையும் வீழ்த்திவிட்டதோ? முதன் முதலில் வெலிங்டன் பிரபுவின் பார்வைக்கு இஸ்கந்தரைக் கொண்டு வந்ததே கிரிக்கெட்தான். அவரே அந்நாட்களில் சிறந்த கிரிக்கெட்வீரர்.

இந்தியர்களை பிரிட்டிஷ் ராணுவத்தில் அதிகாரிகள் மட்டத்திலும் சேர்த்துக் கொள்ள சந்துர்ஸ்டுக்கு பயிற்சிக்கு அனுப்பப்பட்டவர்களில் அவனும் ஒருவன். இந்திய தேசியவாதிகளின் கட்டாயத்தினால் பிரிட்டிஷ் நாடாளுமன்றம் இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் பிடிவாதக்காரர்களின் எதிர்ப்பையும் மீறி தயக்கத்துடன் 1924இல் சம்மதித்தபோது வெலிங்டன் பிரபுவின் செல்வாக்கினாலும் தயவினாலும்தான் முதலாவதாண்டு தேர்ந்தெடுக்கப்பட்டோரில் ஒருவனாக இஸ்கந்தர் மிர்சாவும் இங்கிலாந்து போனான்.

3

# பர்மா—1914-17
(பர்மா–இப்போதைய மியான்மர்)

பெரியவனாகி உயிரியலை—அதிலும் குறிப்பாக பறவையியலை தொழிலாக ஏற்றுக்கொள்ள வேண்டும், துணிவுடன் உலகைச் சுற்றிப் பார்த்து புது இடங்களைக் கண்டறிய வேண்டும், பெரிய வேட்டைக் காரனாக வேண்டும் என்றெல்லாம் கேத்வாடியில் பறவைகளை சேகரித்த பாலபருவத்திலேயே கனவு கண்டவன் நான். 'வேட்டைக் காரர்' என்பது அந்நாளில் பெருமைக்குரிய அடைமொழி. உயர்சமூக அடையாளமென்றே சொல்லலாம். நான் படித்ததெல்லாம் பறவைகள், பொதுவாக இயற்கை வரலாறு, பயணங்கள், நாடுகளைக் கண்டறிதல்; அத்தோடு வேட்டை–அதிலும் துணிகரச் செயல்களும் பரபரப்பும் மிக்க பெரிய அளவு வேட்டைக்கலை–பற்றிய நூல்கள்தான். உயிரியலும் தாவரஇயலும் இணைந்த அறிவியல் படிப்பதற்கு அப்போதெல்லாம் மெட்ரிக் முடித்துவிட்டு முன்னிலை அல்லது முதலாண்டுப் படிப்பு படிக்க வேண்டும். புனித சேவியர் கல்லூரியில் லாகரிதம் முதலிய பிசாசுகளைக் கட்டியழுத ஆரம்ப மாதங்களில், இந்தத் தாண்ட முடியாத் தடையினை என்னால் தாண்ட இயலுமென்று தோன்றவில்லை. முற்றிலும் மோசமான நிலையிலிருந்தேன். என்னடா தப்பும் வழி என்றிருந்தது. நல்வினைப் பயனாய் பர்மாவிலிருந்த ஜபீர் அண்ணாவிடமிருந்து அமீருதீன் மாமாவுக்கு என்னைக் காப்பாற்ற வந்ததுபோல் ஒரு கடிதம் வந்தது. வேளாண்மையில் கேம்பிரிட்ஜில் படித்து பட்டம் (டிப்ளமோ) பெற்றவராக 1910இல் ஜபீர் இந்தியா திரும்பியிருந்தார். ஏகப்பட்ட நம்பிக்கையுடன் வந்திருந்த அவருக்கு வேளாண்மைத் துறையிலோ வேறிடத்திலோ பொருத்தமான வேலை கிடைக்காத வெறுமையில் ரங்கூனில் வணிகராக இருந்த சாலா தியாப்ஜி என்ற அத்தானிடம் சேர்ந்து கொண்டார். அந்த சகோதரர் அப்போதுதான் தெனாசரிம்

பகுதியில் தவாய் மாவட்டத்தில் ஒரு டங்ஸ்ட்டன் தாதுச்சுரங்க உரிமை வாங்கியிருந்தார். தவாய் மாவட்டம் அப்போதுதான் டங்ஸ்டன் தாது, தகர் ஆகியவற்றின் சுரங்கங்கள் கொண்ட பகுதி என்று பெயர் பரவத் தொடங்கியிருந்தது. சாகசக்காரர்களையும் பொன்னுக்கு அலையும் ஒருமாதிரியான ஆட்களையும் ஈர்த்துக் கொண்டிருந்தது. ‘கலப்பின நாய்கள், குட்டி நாய்கள், வேட்டைநாய்கள், பிற மிருகக் குட்டிகள்’ என்று எல்லாவித மனிதர்களும் முட்டி மோதி இடித்துக் கொண்டு காசு-காசு-காசு- நேர்வழியோ-குறுக்குவழியோ காசு என்று அலைந்து கொண்டிருந்தார்கள். இரும்பு சாமான்கள், வளர்ந்துவரும் மர அறுவை ஆலைகளுக்கும் அரிசி ஆலைகளுக்குமென இயந்திர சாதனங்கள் ஆகியவை தியாப்ஜியின் முக்கியமான வணிகப் பொருட்களாகும். அந்த காலகட்டத்தில் அவரது முக்கிய வியாபாரம் ‘க்ரிப்லாய்’ பெல்ட்டுகள் ஆகும். “தோல் முனை கொண்டது” என்று பெருமையாக விளம்பரப் படுத்திக்கொண்ட ‘க்ரிப்லாய்’ நிறுவன பெல்ட் அப்போது மிகமிகப் பிரபலமாக இருந்தது. அவருக்கு ஆள் பலம் குறைவாயிருந்ததால் ‘நீ வரமுடியுமா’ என்று ஜபீரைக் கேட்டிருந்தார். வந்தால் தவாய் பகுதியில் டங்ஸ்டன் தாதுச் சுரங்க வேலையைக் கவனிக்கத் தோதாயிருக்குமென்பது திட்டம். ஜபீரும் ஓராண்டுக்கும் மேலாய் வேலை தேடிச் சலிப்புற்றிருந்த நேரம். உடனே தலையசைத்துவிட்டார். கேம்ப்ரிட்ஜில் மண்ணியலில் ஏதோ கொஞ்சம் படித்திருந்தது சுரங்கத் தொழிலில் பயன்படக்கூடும் என்பது கணிப்பு. ஆனால் ஜபீர் மனமெல்லாம் பண்ணை வேளாண்மையே நிறைந்திருந்தது. மனம் விரும்பிய தொழில் கிடைக்கவில்லையே என்ற நினைப்பிருந்தாலும், காலப்போக்கில் சம்பாதித்து, சேமிப்பில் தானே ஒரு பண்ணை ஆரம்பிக்க உதவக்கூடுமே என்று சுரங்க வேலைக்கு அவர் ஒப்புதல் கொடுத்தார்.

மாங்-லு-பே என்ற பர்மியர் உரிமம் பெற்றிருந்த சுரங்கத்தில் தியாப்ஜி ஒரு பங்கு போட்டிருந்தார். தவாய் நதிப் போக்கில் சாம்ப்பான் மூலம் ஒரு இரவு பயணத் தொலைவில் தலங்கியா என்ற இடத்தில் அந்தச் சுரங்கம் அமைந்திருந்தது. அதற்கான ஏற்பாடுகளுக்காகவும், மேற்பார்வைக்கும் அவர் அடிக்கடி அங்கு செல்லவும் அங்கே சிலநாட்கள் தங்கும்படியுமிருந்தது. எனவே அத்துடன் ஒரு துணைத்தொழிலாக தவாய் நகரில் ஒரு கடையும் திறந்திருந்தார். தவாய் நகரம் தவாய் மாவட்டத்தின் தலைநகரும் சுரங்கத்தொழிலின் மைய நகருமாகும். எனவே, சுரங்கத்தொழில்,

கட்டிடம் கட்டுதல் ஆகியவற்றுக்கான கருவிகளும், விரைந்து வளர்ந்துவந்த சுரங்கத் தொழிலுக்குத் தேவையான பொருட்களும் விற்பதாக அக்கடை அமைந்திருந்தது. பெரிய அளவு சம்மட்டிகள், மண்வெட்டிகள், கொத்திகள், துளைக்கும் சுரங்கத்தொழில் உருக்குக் கருவிகள், அலைத்தொடர் போல் செதுக்கப்பட்ட இரும்புத் தகடுகள், சிமென்ட், பீப்பாய்கள், கயிறுகள், ஆணிகள் என்று சலிப்பூட்டும் பலசரக்கான சாமான்களும் ஒரு கட்டிடத்தின் முதல்தளத்தில் வைக்கப்பட்டிருந்தன. அதுவே பிரிக்கப்பட்டு கிடங்காகவும் காட்சிப் பகுதியாகவும் பயன்பட்டு வந்தது. மத்திய சந்தைக்கருகே கடைவீதித் தெருவில் அமைந்திருந்த அக்கட்டிடத்தின் உரிமையாளர் மாங்க்-ஈ-சோ என்ற ஒரு செர்பாடி மனிதர் (இந்திய-பர்மிய கலப்பின இசுலாமியர்கள் செர்பாடி எனப்படுவர்). அவரது பெரிய குடும்பம் மேலே குடியிருந்தது. அவர்கள் சத்தமிட்டு சண்டை போடுவது அடிக்கடி நிகழ்கிற ஒரு சம்பவமாகும். அடித்தளத்தில் முன்பகுதி கடை, பின்புறம் எங்கள் குடியிருப்பு. தண்ணீர்த் தேவையை நிறைவேற்ற ஒரு திறந்த கிணறும் குடியிருப்புப் பகுதியில் அமைந்திருந்தது. அறுபதாண்டுகள் ஆகிவிட்டபோதும், இப்போதும், அந்த நேசிக்க முடியாத வீட்டின் சாராய ஆலை நாற்றம் தெள்ளத் தெளிவாக எனக்கு நினைவு வருகிறது.

பிறவியிலேயே ஜபீர் 'திருத்த முடியாத' நம்பிக்கைவாதி. அவருக்கு எவ்வித வறட்டு கௌரவமோ, கூச்சமோ கிடையாது. கௌரவம் பார்க்கிறவர்களும் கர்விகளும் தமது தகுதிக்குக் குறைவானதென்றும் தரக்குறைவானதென்றும் கூறக்கூடிய பணி களைக்கூட, அவை நேர்மையானவையாக இருக்கும்பட்சத்தில், தயங்காமல் ஏற்றுக்கொள்ளும் பக்குவத்தினர். ஒளிமயமான எதிர் காலத்தில் பண்ணைத் தொழில் செய்வதென்ற அவரது கனவும், அதை நனவாக்க வேண்டிய கட்டாயமுமே அவரை இரும்புக் கடையில் உட்கார வைத்தன என்பதில் எனக்கு ஐயமேயில்லை. சுரங்கத்தொழிலில் ஏறுமுகம் இருந்தவரை கனவு மெய்ப்படும் வாய்ப்புகள் ஒளிமயமாகவே இருந்தன. ஆனால் அவர் வளர்ந்த பின்னணி, கல்வி, அறிவுலகப் பின்னணி ஆகியவற்றை எண்ணிப் பார்த்தால், அப்படிப்பட்ட ஒருவர் அரை கிலோ ஆணியை நிறுத்துக் கொண்டும், பொட்டலம் போட்டுக் கொண்டும் மாற்றிக் கொடுத்துக் கொண்டும் கயிறு விற்றுக்கொண்டும் உட்கார்ந்திருக்க ஒருவரது குணாதிசயம் எத்தகைய அரிதான உறுதிகொண்டதாய் இருக்க வேண்டும்! அதுதானே அவர் செய்யவேண்டியிருந்த தினப்படி வேலை.

இந்தப் பின்னணியில்தான் ஜபீர் அண்ணா எனக்கு (சலீம் அலி) கல்லூரிப் படிப்பைத் தொடர்வதில் குறிப்பான இச்சை ஏதும் இருந்தாலன்றி, நான் ஏன் அவருக்கு வியாபாரத்தில் பங்காளி யாகக் கூடாது என்று கேட்டும், சரியென்றால் உடனடியாக பர்மா வரவேண்டும் என்று கூறியும் அமிருதீன் மாமாவுக்கு எழுதியிருந்தார். குழந்தைப் பருவத்திலிருந்தே எனக்கு—கடை, கடைக்காரர் என்பன பற்றி மிகத் தாழ்வான கருத்தே இருந்து வந்தது—வணிகம், வணிகர் ஆகியவற்றில் அப்படி நினைக்கா விட்டாலும். வணிகம்-வணிகர் என்பதையும் கடைக்காரர் என்பது பற்றியும் எனக்கு துல்லியமான தெளிவு இருந்ததா என்றால், அது சந்தேகமே! என் வணக்கத்துக்குரிய மூத்தோர் பலர் வணிகர்களாயிருந்ததே வணிகர் பற்றிய என் மதிப்புக்குக் காரணம் என்பதில் ஐயமில்லை. ஆனால் அவர்களின் பரிணாம வளர்ச்சியில் இன்றைய நிலை இதுவே தவிர, இதை அடைய அவர்களும் வீதிவணிகராகத் துவங்கி இதே 'கடை- கடைக்காரர்' என்ற நிலையின் வழியேதான் பயணம் செய்தார்கள் என்பதைத்தான் மறந்துவிட்டேன்!

எப்படியோ, நான் லாகரிதம், கணக்கு இவற்றிலிருந்து எப்படித் தப்பலாம் என்று தந்திரம் தேடிக்கொண்டிருந்த மனநிலையில் ஜபீர் அண்ணனின் கடிதம் வந்தது. கல்லூரிப் படிப்புக்கு ஒரு கும்பிடு போட எனக்கும் மகிழ்ச்சிதான். 'வியாபார'த்தில் என்னை நுழைத்துக் கொள்ளத் தயாரானேன். கல்லூரியில் கணக்கில் எனக்கு அவ்வளவு வெறுப்பு ஏற்பட்டிருந்ததால், தொழில்முறை உயிரியல்வாதியாக ஆகவேண்டும் என்ற என்கனவுக்கும் இது முற்றுப்புள்ளி என்பது குறைந்தபட்சம் உடனடியாக என்னை பாதிக்கவில்லை. இதெல்லாம் நடந்தது 1914இல். எனக்கு அப்போது 18 வயது. பல்கலைக்கழக முதலாண்டுப் பாடங்களுடன் நான் எட்டு மாதம் போராடிக் களைத்துப் போயிருந்த சமயம். செப்டம்பர் மாதம் கல்கத்தா வழியே ரங்கூனுக்கு பயணமானேன். முதலாம் உலகப்போர் ஆரம்பித்து ஒரு மாதம் ஆகியிருந்தது. "ஆங்கிலப் பேரரசருக்கு நெருக்கடி நேரத்தில் உதவுங்கள். பரிசாக உங்களுக்கு சுயாட்சி தருகிறோம்" என்று மாயையாக ஒரு வாக்குக் கொடுத்து ஆங்கில அரசு தந்திரமாக இந்தியாவையும் போரில் ஈடுபடுத்திவிட்டிருந்தது. புகழ் பெற்ற ஜெர்மானியப் போர்க்கப்பல் எம்டன் தன் 'தர்மவீர்' விளையாட்டுகளைத் தொடங்கியிருந்தது. அதாவது கப்பல்களைக் கவிழ்த்துவிடும். ஆனால் பயணிகளைக் காப்பாற்றிவிடும். கம்பி யில்லாத் தந்தியின் மழலைப் பருவம். வானொலி வரவில்லை. ராடார் பற்றி எவரும் எண்ணிப் பார்த்ததுகூட இல்லை. இவை

யாவும் சேர்ந்து அப்போது ரங்கூனுக்கு கப்பலில் பயணம் செய்வதை மிகமிக விறுவிறுப்பானதாக ஆக்கியிருந்தன.

நாளொரு வதந்தி பொழுதொரு புரளியாக எம்டன் பற்றித் தகவல்கள் வரும். திடீரென்று ஒன்றுக்கொன்று தொலைவான இடங்களில் தோன்றி தன் வேலையைக் காட்டிவிட்டு மாயமாய் மறைந்ததாகச் சொல்வார்கள். வேலையைக் காட்டுவதென்றால்– திடீரென வருவது, கடலோர நகரங்களில் குண்டுபோடுவது, கப்பல்க ளுள்ள மனிதர்களைக் காப்பாற்றிவிட்டு, அவற்றை மூழ்கடிப்பது, மந்திரம் போல் மறைவது இவைதான். சொல்பவர் நா வண்ணத்தில் கதைகள் வளரும். நடக்க முடியாத சம்பவங்களாக எம்டனைச் சுற்றி கதைகள் பலவாகி வளர்ந்து பரவலாயின. அதேசமயம் எம்டனின் தலைமை கேப்டன் ஷ்மிட் எதிரியென்றாலும், துணிவும், பரிவும், வீரமும் இணைந்த எதிரி என்பதை ஒப்புக்கொண்டேயாக வேண்டும். நாங்கள் போய்க் கொண்டிருந்தபோது எம்டன் வங்கக் கடலில் உலவி வருவதாக நம்பப்பட்டாலும், ஐயத்துக்குரிய கப்பல் நடமாட்டங்கள் தென்படுவதாக ஓரிரு முறை அயல்நாட்டுத் தகவல்கள் வந்து கொண்டிருந்தாலும், எங்கள் பயணம் ஒருவித பரபரப்பு நிகழ்ச்சியுமின்றி நிறைவுற்றது. ஆனால் மழைக்காலம் முடியாததால் வானிலை மட்டும் மிக மோசமாக இருந்து வந்தது. வதந்திகளுக்கும், புரளிகளுக்கும் பின்னணியில் எங்கள் கப்பல் தலைவரின் மூளை இருந்தது என்பது என் ஊகம். கப்பலில் தரப்படும் பயிற்சிகளில் பங்கெடுப்பவர்களின் தொகை குறையாமலிருக்க இந்தத் தந்திரம் என எண்ணினேன். பயிற்சிகளில் ஆட்கள் பெருமளவில் கலந்து கொண்ட வகையில் இது அவருக்கு வெற்றிதான்.

அனுபவமிக்க பிரிட்டிஷ் இந்திய (B.I.) அஞ்சல் கப்பல் ஒரு தலைமுறை காலத்துக்கு மேலாக கல்கத்தா-ரங்கூன் கடற்பாதையில் ஓடிக்கொண்டிருந்ததாகும். அலைசீறும் ரங்கூன் நதித் துவாரத்தில் கேப்டன் அதை நிலை நிறுத்தினார். மெள்ளக் கரையேறினோம். நீராவிக்கப்பல்களின் ஓலம், நெல்லும் சம்பானும் சுமந்த சிறு கப்பல்கள் ஆகியவற்றின் ஊடே, அலைவரிசை செதுக்கிய இரும்புக் கூரைகள் கொண்ட அரிசி ஆலைகளையும் அறுவை ஆலை களையும் ஊடுருவி நதி சென்றது. அறுவை ஆலைகளில் மாபெரும் தேக்குமரக் கட்டைகள் பரவிக்கிடந்தன. காட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட அவற்றில் சில சதசதவென்ற சேற்றில் புதைந்தும் புதையாமலுமாகக் கிடந்தன. ஆற்றில் ஆழம் குறைந்த பகுதிகளில் கரையோரத்தில் இவற்றை ஏராளமாகக் காண முடிந்தது. அவை

யானைகள் வந்து ஆலைகளுக்குத் தூக்கிச் செல்வதற்காக காத்துக் கிடந்தன.

கல்கத்தாவிலிருந்து இந்த 40 மணி நேரக் கப்பற்பயணம் எனக்கொரு பரபரப்பான அனுபவம்தான். அதுவரை 'கடற் பயணம்' என்றால் விடுமுறைக் காலங்களில் ஹோம் போகும்போது மும்பை துறைமுகத்தை நீராவிப்படகில் கடந்து செல்வதுதான். கப்பலிலேயே உண்டு, வாழ்ந்து, உறங்குவதும் புதுமையாயிருந்தது. நினைத்துப் பார்க்க இனியது என்றோ சொகுசானது என்றோ கூறமுடியாது. 'ஐரோப்பியர் டெக்' என்பது சாதாரண டெக்கைவிட சற்று அதிக கட்டணம் உள்ளது. இரண்டாம் வகுப்பைவிட மலிவானது. வெள்ளையரில் ஏழையாயிருப்பவர், ஆங்கிலோ–ஆசியர், மற்ற இனத்தவரில் மேலை நாகரிகம் பழகியோருக்காக இவ்வகுப்பு இருந்தது. பிரிட்டிஷ் இந்திய நீராவிக்கப்பல் கழகத்தின் கடலோரப் பயணக் கப்பல்களில் இப்படி ஒரு வகுப்பு உண்டு. 'ஐரோப்பியர் களுக்கான டெக்' வகுப்பில் பயணம் என்றால் அவ்வளவுதானே! சீக்காய் மவுங் தவ்லே துறையில் அக்தர் அக்காவும் தியாப்ஜி அத்தானும் என்னை வரவேற்றனர். அப்போது அவர்கள் வாடகைக்குக் குடியிருந்த பங்களாவில் தீவிபத்து நடந்து அதில் பொருளனைத்தையும் இழந்திருந்தனர். ப்ருக்கிங் வீதியில் ஒரு மிக எளிய வீட்டில் சற்றே சிரமமான வாழ்க்கை நடத்தி வந்தனர். ஆங்கிலோ–இந்தியர்கள் மட்டுமே வசிக்கக்கூடிய வகையான வீடு. ஒரு வயதுக் குழந்தைகளான அவர்களுடைய இரட்டைக் குழந்தையரில், நாதிர் அவர்களுடனும், அஹ்சான் அமீனா பாட்டி–அப்பாஸ் தாத்தாவோடு பரோடாவிலும் வசித்து வந்தனர். இரண்டு மூன்றாண்டுகட்குப் பின் அக்காவும் அத்தானும் கொஞ்சம் மதிப்பான பகுதியில் நெரிசல் குறைவான வீட்டுக்கு மாறியபின்தான் அவனும் பெற்றோரிடம் வந்து சேர்ந்தான்.

கீழ்பர்மாவின் உப்பங்கழி நகரமான தவாய் சிறுநகர்தான் 1914 முதல் 1923 வரை என் வாழ்விடமாக இருக்கப்போகிறது— அக்டோபர் 1917 முதல் பிப்ரவரி 1919 வரை நிகழ்ச்சிகள் நிறைந்த சுமார் 15 மாத இடைவெளியைத் தவிர. என் வாழ்விலும் பணியிலும் இக்காலம் வேறெப்போதையும்விட சிறப்பானதாக விளங்கப் போகிறது. அது ஒரு புறமிருக்கட்டும். புதிய சூழலில் 'பழகிக்கொள்ள' சில நாட்கள் ஆயின. அதன்பின் ரங்கூனிலிருந்து ஒரு பழங்காலத்திய நீராவிக்கலத்தில் (அதுதான் பிரிட்டிஷ் இந்தியா நாவிகேஷன் கம்பெனியின், பெனாங்கி தடத்தில், கடைசிக்கலமாக இருக்கும்) 24 மணிநேரம் பயணம் சென்று தவாய் நதிமுகப்பகுதியை அடைந்து,

பிறகு ஒரு சிறிய, தற்கால நீராவிக் கலமொன்றில் இரண்டுமணிநேரம் பயணம் செய்தோம். இந்த நீராவிக் கலத்தின் பெயர் யெங்யுவா. நதியின் இருபுறமும் அலைபாயும் சேறான சிற்றாறுகளும் மாங்குரோவ் மரங்களும், அவற்றுக்கப்பால் கண்ணுக்கெட்டிய தொலைவில் பரந்த நெல்வயல்களும் நேபா மரங்களும் பயணம் முழுவதும் விழிகளுக்கு விருந்தாயிருந்தன. தெனாஸ்ஸரீம் பகுதியை பிரிட்டிஷார் 1870ஆம் ஆண்டுவாக்கில் கைப்பற்றினர். அதற்குப் பின்னும் சில ஆண்டுகள் வரை தவாய் குற்றவாளிகளுக்கான இடமாக—அந்தமான் போலத்தான் இருந்துவந்தது. அவர்களில் பர்மியர், சீனர், இந்தியர் உட்பட பல இனத்தவரும் இருந்தனர். விடுதலையானபின் அவர்களில் பலர் பர்மிய மங்கையரை மணந்துகொண்டு அங்கேயே வாழத் தொடங்கி விட்டனர். சிலர் மனந்திருந்தியவர்களாய் மதிப்புக்குரிய குடி மக்களாய் வாழ்ந்தனர். பலர் தமது கடந்தகால வரலாற்றுக்கு வாழும் ஆதாரங்களாக வாழ்க்கை நடத்தினர்! சுரங்கத்தொழிலின் பயங்கர வளர்ச்சியின் 'உடனுற்பத்தி'யான எத்தர்கள், அயோக்கியர்கள், வேடதாரிகள் என்று மனித இனத்தின் கழிசடைகளுக்கான இலட்சியபுரியாக அது மாறியது.

இரும்புக்கடையில் பயிற்சி எடுத்துக்கொள்வதில் சில மாதங்கள் சென்றன. அலுவலக நடைமுறைகள், தட்டெழுத்து தொழிலுக்கு தேவையான இன்னபிறவற்றை ஜபீர் அண்ணனிடம் கற்றேன். நாங்கள் புதிதாக நிறுவிய ஜே.ஏ. அலி சகோதரர்கள் அண்ட் கம்பெனியின் மூத்த பங்குதாரரான அவர், நேர்மையான பணியாளர் மட்டுமல்ல, கடுமையாக வேலைவாங்கும் முதலாளியாகவும் விளங்கினார். நான் முன்பை எல்லாம்விட சுதந்திரமாயிருந்தேன், அதுவும் வார விடுமுறைகளில். இது சுற்றுப்புற சிற்றூர்களை சுற்றிப்பார்த்து கண்டறிய வசதியாயிற்று. ஜபீரண்ணாவிடம் அழகியதோர் வெள்ளைக்குதிரை இருந்தது. சனிக்கிழமை அரைநாளோடு கடையை அடைத்து விடுவதால் பலவாரங்களில் பிற்பகலில் 3–4 மைல் குதிரையில் சுற்றிவிட்டு வருவது வழக்கம். நண்பர்களின் பழத் தோட்டங்களும் ரப்பர் எஸ்டேட்டுகளும் பலவிதப் பறவைகளைக் கண்ணுக்கும் மனதுக்கும் விருந்தாகத்தரும். அப்போது என்னிடம் தொலைநோக்கி (Binoculars) இல்லை. ஆனால் விழிகளின் இளமைசக்தியாலும் பறவை ரசனையாலும் அது ஒரு குறையாகவே இல்லை. அந்த ஆரம்ப நாட்களில் பாரதப் பறவைகள் பற்றிய என் அறிவையும்விட பர்மியப் பறவைகள் பற்றிய அறிவு குறைவாகவே இருந்தது. அவற்றை

அடையாளம் காண்பதே பெரும் சிக்கலாயிருந்தது; உதவவும் ஆளில்லை. என்னிடமிருந்த ஒரே புத்தகமான முர்ரே எழுதிய ‘இந்தியப் பறவைகள்’ ஒரு குறைபாடுள்ள நூல். படங்களின்மை அதை இன்னும் குறையுள்ளதாக்கிற்று. ஆனால் கஷ்டப்பட்டு கற்றுக்கொள்ளும் கல்வியே இன்பம். அதில் தவிர்க்க முடியாத சலிப்பையும் மீறி இறுதியில் நிறைவளிப்பதும் நிலைப்பதுமாக அது அமையும். விலங்குகளில் பலவகைகளும் அபரிமிதமும்—குறிப்பாக தவாய் மாவட்டப் பறவைகளை குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்—அவற்றில் மிகப்பல எனக்குப் புதியவை. நானும் ஒரு சிறு மாதிரித் தொகுப்பை உருவாக்கிக் கொண்டேன். மரங் கொத்திகளிலேயே எத்தனை வகை என்பதைக் குறிப்பிட்டு சொல்லவேண்டும். முதன்முதலில் என் கண்ணைக் கவர்ந்தவற்றில் கறுப்பும் மங்கலான மஞ்சளும் கலந்த மெய்க்லிப்டஸ் ஜுகுலாரிஸ் நமது இந்திய புள்ளிமார்பு மரங்கொத்தியை (ஹைமிசர்க்கஸ் கெனன்ட்டே) சில விதங்களில் ஒத்திருக்கும்; சில விதங்களில் மாறுபட்டிருக்கும். பலவண்ண நாரைகளும் பரவசமூட்டுபவை. ஆனால் யாவற்றிலும் உன்னதம்—வெள்ளைச் சிறகு கொண்ட கறுப்பு ஜே பறவை ஒன்றை முதன்முதல் இனங்கண்டமைதான். இதை உயிரியலில் பிளாடிஸ்முரஸ் லியூகோப்டரஸ் என்பார்கள். இந்தியாவில் இதைப் போல என்று சொல்லக்கூடிய பறவை ஏதுமில்லை. அறுபதாண்டு களுக்கு முன் அந்தக் குருவி எப்படி, எவ்விடத்தில், எம்மரத்தில், எக்கிளையில் கூடுகட்டும் என்பதை அத்தனை விபரமாகக் கூறமுடியும். நினைவுத் திரையில் எப்படி சில வேளைகளில் சில மிகச்சிறிய, முக்கியமற்ற பயனற்ற விபரத் துணுக்குகள்கூட பதிந்துவிடுகின்றன என்பது ஒரு விசித்திரம்தான்.

எனக்கு ஒரு நல்ல மனிதர் நல்லாசிரியராக அமைந்தார். அவர் தான். ஜே.சி. ஹாப்வுட் அப்போதைய மன்னரின் வனநலப்பணித் துறையைச் (Imperial Forest Service இன்றைய Indian Forest ஐப்போல—மொழிபெயர்ப்பாளர்) சேர்ந்த அவர்தான் அப்போது அங்கு வட்டார வனத்துறைத் தலைவர். பர்மியப் பறவைகளைப் பற்றி ஆழ்ந்த நுண்ணறிவு கொண்ட அவர், தானே அப்போது பறவை முட்டைகள், கூடுகள், பறவைகள் ஆகியவற்றை சேகரிப்பதில் தீவிரமாயிருந்தார். ‘பிரிட்டிஷ் இந்தியப் பறவைகள் விலங்குகள்’ என்ற நூலின் இரண்டாம் பதிப்புக்கான பணியில் ஈடுபட்டிருந்த ஸ்டூவர்ட் பேக்கருக்காக ஹாப்வுட் இந்த சேகரிப்பில் ஈடுபட்டிருந்தார். பீஹாரில் சாயச் செடிப் பண்ணையும் தேயிலைத் தோட்டங்களும் வைத்திருந்தவரும் இந்தியப் பறவைகளைப் பற்றிய – அதுவும்

வடகிழக்குப் பகுதிகளைப் பொறுத்தமட்டில் – சிறந்த அறிஞருமான சார்லஸ் எம். இங்கலிஸ் என்ற அறிஞருடன் அவ்வப்போது எனக்குக் கடிதத் தொடர்பு இருந்தது. எங்களுக்குள் அடிக்கடி கருத்துப் பரிமாறல்களும் பறவை மாதிரி பரிமாற்றங்களும் நடந்துவந்தன. 1954 இல் அவர் காலமான பிறகு அவரது சேகரிப்புகள் பலருக்கும் பகிர்ந்தளிக்கப்பட்டுவிட்டன. பெரும்பகுதியை யேல் பல்கலைக்கழக உயிரியல் துறைத் தலைவராயிருந்த முனைவர் தில்லோன் ரிப்ளி தங்கள் உயிரியல் அருங்காட்சியத்துக்காக விலைக்கு வாங்கிச் சென்று விட்டார். பர்மாவில் என் முதல் விஜயத்தின்போதும், (1914–17) உயிரியல் கல்வியில் தேர்ந்து பின் 1919இல் மீண்டும் துவங்கிய போதும் பறவைகள் தொடர்பான என் செயல்பாடுகள் தொழில் முறையான அளவிலின்றி ஒரு பகுதிநேரப் பயில்வோன் நிலையிலும் அவ்வப்போது என்ற முறையிலும் அமைந்திருந்தன.

இரும்புசாமான்களும் இயந்திரங்களும் விற்பது மட்டுமின்றி தகரம், டங்ஸ்டன் ஆகியவற்றுக்கான சுரங்கப் பணியோடும் நில்லாது, கைக்கும் வாய்க்குமாய்ப் பிழைத்துவந்த சிறு உற்பத்தியாளர் களிடமிருந்து தாதுப்பொருளையும் ரப்பர் பாய்களையும் சிறு அளவில் வாங்கி, பெரிய வணிகர்களுக்கு பெருமளவில் விற்பதிலும் ஜே.ஏ. அலி சகோதர நிறுவனம் முனைந்திருந்தது. இந்தப் புதிய முயற்சி அந்த போர்க்கால சந்தையின் ஏற்ற இறக்கங்களில் ஒரு சூதாட்டம் போன்ற முயற்சியாக இருந்தது.

ஜபீர் திருமணத்துக்காக பாரதம் திரும்பியிருந்த 1915 நவம்பரில் தொடங்கி 2–3 மாதம் தவாய் வணிகம் என் முழுப் பொறுப்பில் இருந்தது. அவர் மும்பை திரும்பும் முன்னரே மணமகளை எதிர் கொண்டு குடும்பம் வைக்க பசார் சாலை கடையின் இருண்ட பின்பகுதியை காலிசெய்துவிட்டு நகர எல்லையில் ஒரு இனிய பகுதிக்கு வீடுமாற்றிவிட்டோம். புதுவீட்டில் மாடி கிடையாது. அவர்கள் கூரை எல்லாம் மரத்தினாலானவை. சுற்றுச் சுவர் இல்லாததால் கதவைத்திறந்தால் சாலைதான். ஆனாலும் கதவைத் திறந்தால் பச்சை வயல்வெளிகள்; தொலைவில் மரங்கள் நிறைந்த காடு. மெய்யாகவே முன்பு குடியிருந்த துர்மணம் வீசும் லாயம் போன்ற வீட்டிலிருந்து இது ஒருமிக விரும்பத்தக்க மாற்றமாகும். அதுவும் சஃபியா அண்ணி வந்தபின் (சபியா முன்பு 'மூத்த' பத்ருதீன் தியாப்ஜி) பெண்மையின் கைவண்ணத்தில் அது வசதியும் வனப்பும் மிக்க இல்லமாக மாறிப்போயிற்று. (சுரங்கத் தொழில் சுணக்கத் தொழிலானதால் இரும்பு வணிகமும் இறங்கு முகமாயிற்று. அதன் குறைவுகளை ஈடுசெய்ய) ரங்கூனில் ஒரு கிளை

துவங்க அண்ணனும் அண்ணியும் 1921இல் ரங்கூன் சென்றனர். அங்கே எங்கள் எதிர்கால நிதி உதவியாளர்களான உஸ்மான் மஸ்திகான் நிறுவனத்தாரோடு பங்காளிகளாக அதைத் துவக்கினோம். அவர்கள் பலுசிஸ்தான் பொதுப்பணித்துறையின் பிரபலமான ஒப்பந்தக்காரர்கள் ஆவர். அண்ணனும், அண்ணியும் ரங்கூன் போனதில் நானும் என் துணைவி தெஹ்மினாவும் இங்கே தொடர்ந்து மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தோம். அதெல்லாம் சிறிது காலத்திற்குப் பின்னால்.

இளம் மனைவியுடன் தவாய் திரும்பிய அண்ணன் உடனேயே வணிகநிமித்தமாக பிரிட்டனுக்கு கிளம்பிவிட்டார். அண்ணியும் புதிய பங்காளிகளில் ஒருவரும் கூடவே போயினர். ரங்கூன் கிளைக்கு பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் வணிக உறவுகளை ஏற்படுத்திக் கொள்வதே பயணத்தின் நோக்கம். கூடப்போன பங்காளி—எங்கள் பங்காளிகளான முஸ்திகான் சகோதரர்கள் மூவரில் இளையவரும், எங்களுடன் நேரடியாக ஒத்துழைப்பு தருவதற்கானவரும், மூவரிலும் அதிக இனிய இயல்பு கொண்டவருமான யூசுப்கான். அந்த சகோதரர்களில் அவரே மற்றவர்களை விட கல்வியிலும் பகுத்தறிவிலும் சிறப்புற்றவர். ஆனால்—விதி வசமாக, லண்டன் சென்று சேர்ந்த சிலநாட்களிலேயே அவர் மாரடைப்பு ஏற்பட்டு உயிரிழந்தார். திட்டங்கள் யாவும் வேரோடு சாய்ந்த நிலையில் எதையும் சாதிக்காமல் அண்ணன் லண்டனிலிருந்து திரும்பினார். யூசுப்கான் போனதில் அவரது சகோதரர்கள் மனமுடைந்து போயினர். அவர்களுக்கு இரும்பு வணிகத்தில் இருந்த ஆர்வமும் போய்விட்டது. அது ஆரம்பிக்கும் முன்பே அஸ்தமித்துவிட்டது. அவர்களின் ஒத்துழைப்பு சரியாக இல்லை. அவர்களுடன் பணி செய்வது அண்ணாவுக்கு சிரமமாயிற்று. சுமார் ஒரு வருடம் போராடிப் பார்த்துவிட்டு அலுத்துப்போய் அண்ணாவும் கைவிட்டார். 1923இல் இந்தியாவுக்கு திரும்பிவந்து வேளாண் பண்ணை என்ற தன் கனவை மெய்யாக்கும் முயற்சிகளை ஆரம்பித்தார். ஒருவழியாக, மங்காத நன்னம்பிக்கை, தளராத மன உறுதி, இடைவிடாமல் மெய்வருத்தி உழைத்த உழைப்பு ஆகியவை அவருக்கு வெற்றியைத் தந்தன. முயற்சி தன் மெய்வருத்தக் கூலி தந்தது. இதற்கு அவரை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

ஜபீரும் அண்ணியும் ரங்கூன் செல்வதற்காக தவாயிலிருந்து சென்ற ஈராண்டுகளில் நானும் என் மனைவியும் இன்னும் கொஞ்சம் வசதியான இனிய இல்லம் ஒன்றுக்கு குடிமாறினோம். அங்கே பெரிய சுற்றுச்சுவரும் முந்திரி மரங்களும் இருந்தன. நகர

எல்லையிலிருந்த 'சிவில் லைன்ஸ்' என்றழைக்கப்பட்ட அந்தப் பகுதி இன்னும் கொஞ்சம் 'கௌரவம்' மிக்கவர்கள் வாழும் பகுதியாகும். அழகாகவும், சீரான அமைப்போடும் அவ்வீடு துலங்கியது. சதசதப்பி லிருந்து தப்புவதற்காக கம்பங்களை நிறுவி தரைமட்டத்திலிருந்து உயரத்தில் அக்கம்பங்கள் மேல் அமைக்கப்பட்ட அதன் சுவர்கள் ஆஸ்பெஸ்டாஸ்—சிமெண்ட் சுவர்கள். கூரையோ மரக்கூரை. ஆக அது ஒரு பக்கா கட்டுமானமல்ல. வீட்டளவில் கோழிப்பண்ணையும் கறிகாய்த் தோட்டமும் அமைக்க இங்கு கிடைத்த வசதியை என் மனைவி முற்றிலும் பயன்படுத்திக்கொண்டார். எங்கள் வாத்தையே வறுத்து எங்கள் தோட்டத்திலேயே விளைந்த இளசான பச்சைப் பட்டாணியைத் தொட்டுக்கொண்டு சுவைத்தோம்! சேகரித்த காட்டு முட்டைகள் கொண்டு சில பர்மிய 'வெண்மயில்'களை வளர்த்தோம். ஒரு சிறுத்தைப் பூனை (பெலிஸ் பெங்காலென்சிஸ்), ஒரு மர எலி (டுபய்யா க்ளிஸ்), ஒரு பறக்கும் அணில் (கேலயோ . பிதிகஸ் ஓலன்ஸ்), கொம்பு நாரை (பெரியது) ஒன்று (டிகரோாஸ் பைகார்ஸிஸ்) ஆகியவற்றை மழலைப் பருவத்திலிருந்து செல்லப் பிராணிகளாக வளர்த்து வந்தோம். இவைதவிர 'ஜிப்' என்ற பெண் நாயும், 'ஜெனரல் டயர்' என்ற ஆண் மரங்கொத்தியும் வளர்த்து வந்தோம். ஜலியன் வாலாபாக் கொடுமையின் நாயகன் 'டயர்' பெயரைக் கொண்ட அந்த மரங்கொத்தி மற்ற செல்லப்பிராணி களிடம் நடந்துகொண்ட முறை அந்த டயரை நினைவூட்டக் கூடிய தாக இருந்தது. ஹமீதண்ணனும் அண்ணி ஷரீஃபாவும் (அண்ணா ஓய்விலிருந்தார்) இங்கு வந்து எங்களுடன் ஒருவாரம் உல்லாசமாய் தங்கி இருந்தனர். (முன்னர் குறிப்பிட்டது போல) மரக்கடை முயற்சி தோற்றதும் தவாய் வணிகத்தை மூடிவிடுவதென்று முடிவெடுத்து அதற்கேற்ப அவர்கள் பம்பாய் திரும்ப ரங்கூன் போகும்போது என் மனைவியும் அவர்களுடன் போய்விட்டார். பிரிட்டிஷ் இந்திய கப்பல் போக்குவரத்துக் கழகத்தினர் கல்கத்தா செல்லும் தங்கள் அஞ்சல் கப்பல்களின் முதல்வகுப்புப் பயணிகளின் பெயர்களை நாளிதழ்களில் விளம்பரங்கள் செய்வார்கள். ஒருநாள் காலை அத்தகைய பட்டியலில் 'திரு ஹமீது அலி, திருமதி அலி மூவருடன்' என்று பார்த்து எனக்கு சிரிப்பு தாங்கவில்லை. ஆக, ஒரு உண்மையான முஸ்லீமாவது இருக்கிறார் என்று நம்பிக்கையில்லாத வர்க்கும் நம்பிக்கை தரும் அறிவிப்பு! ஷரீஃபா தெஹ்மினா ஆகி யோருடன் ஜபீரின் துணைவியார் சஃபியாவும் சேர்ந்து கொண்டார் போலும், அதுதான் 'மூவர்'.

வியாபாரத்தை மூடுவதற்கான நடைமுறைகள் முடியும்வரை

தவாய் ஆசியர் சங்கக் கட்டிடத்துக்கு நாங்கள் குடிமாறினோம். அது என் கைக்கு வந்ததே ஒரு கதை. வங்கிக்கு வைக்கப்பட்டிருந்த அடமானம் மூழ்கிவிடாமல் நான் காப்பாற்றப்போய் அது என்னிடம் தங்கிவிட்டது. தவாய் விளையாட்டு சங்கத்தில் சில ஆண்டுகள்— ஊரைவிட்டுப்போகும்வரை-நான் செயலாளனாக இருந்தேன். அது உண்மையிலே, சர்வதேச உறுப்பினர்கள் கொண்டதோர் கால் பந்தாட்டக்குழு. எங்களில் சிலர் சில ஆண்டுகள் முன்பு ஆரம்பித்தது. அதில் நான் சேர்த்திருந்த எஃப்.டபிள்யு. ஸ்காட் அனைவரிலும் ஆர்வமிக்க சிலரில் ஒருவர். அன்புமிக்கவர், ஆங்கிலேயர். மற்ற ஐ.சி.எஸ்.காரர்களைப் போலல்லாத ஒரு ஐ.சி.எஸ் (இந்திய நிர்வாக சேவை) அதிகாரி. விசித்திர குணவான். அப்போது டெனஸ்ஸரிம் பிரிவின் குற்றவியல் நடுவராக இருந்தவர். எங்கள் விளையாட்டு மைதானத்தின் குறுக்கே புகுந்து செல்பவர் களிடமிருந்து அதைக் காக்கும் காப்பாளராக தம்மைத் தாமே நியமித்துக் கொண்டவர். அதில் மிகத் தீவிரமானவர். பெரும்பாலும் பால்காரர்கள்தான் அதைக் குறுக்குப் பாதையாகப் பயன்படுத்தி வந்தனர். அவர்களை ஆவேசமாகத் துரத்துவார். பிடிபட்டோர் அவரிடம் அடிபட்டோர் ஆகிவிடுவதுமுண்டு. நடுவர் மன்றம் துவங்குமுன்னர் ஒரு காலைநேரத்தில் மூச்சிரைக்க எங்கள் வரவேற்பறைக்குள் ஓடிவந்து பத்து லிட்டர் பால் என்ன விலை என்று கேட்டார். அவர் விசித்திர சித்தர் என்று அறிந்திருந்த எனக்கே இது என்ன ஏது என்று ஒன்றும் விளங்கவில்லை. நடந்திருந்தது என்னவென்றால் வேலைக்குப் போவதற்கு இவர் மைதானத்தை யொட்டிய பாதையில் காரில் போய்க் கொண் டிருந்திருக்கிறார். கையில் குவளையுடன் ஒரு பால்காரர் மைதானம் வழியே குறுக்கே போவதைப் பார்த்துவிட்டு காரை அப்படியே நிறுத்திவிட்டு குதித்திறங்கி விரட்டியிருக்கிறார். அந்த ஆள் அச்சமடைந்து தப்பினோம் பிழைத்தோம் என்று பாத்திரத்தைப் போட்டுவிட்டு பறந்தோடிப்போய்விட்டான். இவர் பாலை எடுத்து தரையில் கவிழ்த்து விட்டார். இப்போது அதற்கு இழப்பீடு செய்ய நினைப்பதால் இந்தக் கேள்வி! இன்னொருதரம் நீதிமன்றத்திலிருந்து பணிமுடிந்து திரும்புகையில் எங்கள் வீட்டுக்குள் விழுந்து விடுபவர்போல வந்தார். பார்க்கவே பாவமாக வெளுத்துப் போய், நடுங்கியவராகக் காட்சி தந்தார். ஓய்வு நாற்காலியில் விழுந்து களைப்பாறினார். உணர்ச்சி வேகத்தில் உடலெல்லாம் நடுங்க அப்போதுதான் ஒரு பர்மிய கொள்ளையனுக்கு தூக்குதண்டனை விதித்து விட்டு வந்தது பற்றிய விபரங்களைக் கூறினார். அவனைக்

காவலர்கள் அழைத்துச் செல்வதற்கு முன்பு அவனது கடைசி ஆசை ஏதும் உண்டா என்று கேட்டிருக்கிறார்கள். தண்டனையைக் கேட்டு கடுகளவும் கலங்காத அவன் மிகச் சாதாரணமாக ஒரு துரியன்பழம் (கெட்ட நாற்றமுள்ள ஒரு பழம்) சாப்பிட வேண்டும் என்று சொல்லியிருக்கிறான்! தண்டனை கொடுத்தவரின் நிலை தண்டனை பெற்றவனின் நிலை இரண்டுக்கும் இடையிலிருந்த முரண்பாடு மனித இயல்பு பற்றிய ஓர் அரிய விளக்கம் என்றார் அவர்.

# 4

# இடையில் மும்பை—திருமணம்

பதினெட்டு வயது இளமையிலேயே என்னை வியாபாரத் துறையில் நுழைத்துக் கொண்டது—அதுவும் அதற்கான எவ்விதப் பயிற்சியோ இயல்பான ஆர்வமேதும் இல்லாமல் கல்வியையும் பாதியில் நிறுத்தி விட்டு அப்படி செய்தது, ஒரு நிறைவளித்த முயற்சி அல்ல என்பதை இரண்டாண்டுகளுக்குப் பின்பு உணர ஆரம்பித்தேன். என் விடுமுறை 1917 இறுதியில் துவங்க இருந்தது. ஆனால் மூத்தவர்களைக் கலந்து கொண்டு நான் விடுமுறையை நீட்டித்து மும்பையில் தங்கி தாவர் வணிகவியல் கல்லூரியில் முறையாக வணிகவியல் சட்டம், கணக்கு முறைகள் பற்றிய ஓராண்டுக் கல்வியைப் பயில்வதென முடிவாயிற்று. இந்த முடிவு மறைமுகமாக ஒரு வரப்பிரசாதமாக ஆயிற்று. புனித சேவியர் கல்லூரியில் உயிரியல் துறைத் தலைவராயிருந்த மறைத்திரு தந்தை பிளாட்டர் அடிகளுக்கு என் ஆர்வம் எதில் என்று புரிந் திருந்தது. அவரது அன்புத் தூண்டுதலாலும் ஆதரவாலும் அதே ஆண்டு நான் உயிரியலில் பி.எஸ்சி (அந்தக் காலத்தில் பி.ஏ. ஹானர்ஸ்) முடித்தேன். பேராசிரியர் ஜால். பி. முல்லன் என்ற உயர்ந்த மனிதரிடம் அப்போது படித்தேன். அருமையான அந்த ஆசிரியரின் போதனை என் வெற்றிக்கு உதவியது. பிற்காலத்திலும் 1953வாக்கில் காலமாகும்வரை அவர் ஒரு மதிப்பிடற்கரிய நண்பராக விளங்கினார்.

புனித சேவியர் கல்லூரியில் முறையான பாடத்திட்ட விலங் கியலுடன் எனது அறிமுகம் மனப்பாடத்துக்குரிய வகையினதான மெல்லிய நூல்வழியே ஆரம்பித்தது. 'கல்லூரி மாணவர்கட்கான விலங்கின வகைகள்' என்ற நூல் என்னைவிட இத்துறையில் ஆர்வமுள்ளவனைக்கூட 'ஆளைவிடு' என்று சொல்ல வைக்கக்கூடிய ஒருவகையான முதல் பகுதியுடன் துவங்கும். நல்லவேளையாக அந்த ஆசிரியரே எங்களுக்குப் பாடம் நடத்தினார். அமீபாவைப் பற்றியது முதல்பாடம். அதில் முதல் வாக்கியத்தைப் பாருங்கள் (எவ்வளவு

நன்றாக நினைவிருக்கிறது!): "அமீபா அல்லது புரோதியஸ் அனிமல் கியூல் என்பது லோபோசா வகையைச் சார்ந்த புரோட்டாசூனும் தம்முள் தொடர்பு கொண்டிராத மொட்டையான பொய் போடியம்கள் என்ற எளிய அமைப்புகளை உள்ளடக்கியதுமாகும்." அற்புதமான செய்தி-இல்லையா! இத்தகைய பயங்கர மொழி நடையையும் மீறி, உயிரியலில் என் ஆர்வம் தொடர்ந்தது மட்டு மின்றி மேலும் வளர்ந்து நெடுங்காலம் சுடர்ந்தது என்றால் அதற்கான பெருமை பேராசிரியர் முல்லன் அவர்களையே சாரும். அவர் மனித இயற்கையை அதிநுட்பமாக அணுகிப் புரிந்து கொண்டவர். அவருக்கென்று ஒருவகை நகைச்சுவையுணர்வு இருந்தது. அபாரமான பொது அறிவும், மனிதர்கள் பற்றியும் வாழ்வு பற்றிய கூர்மையான விமரிசனப் பார்வையும் கொண்டவர். மொத்தத்தில் அவர் ஒரு மிகப்பெரிய ஆள்.

தாவரவியல் கல்லூரியில் வகுப்புகள் காலை எட்டுமணி முதல் பத்துமணி வரைதான். எனவே எல்பின்ஸ்டன் சர்க்கிளில் ஒரு சின்னஞ்சிறு மாடியில் குடியிருந்த ஸ்டான்லி பிராட்டரை எனது டக்ளஸ் வண்டியின் பின்னிருக்கையில் அமர்த்திக்கொண்டு சேவியர் கல்லூரியில் உயிரியல் வகுப்பு துவங்குவதற்குள் சரியாகப் போய்ச் சேர போதுமான நேரம் இருந்தது. பிராட்டர் அப்போது தான் பள்ளிப்படிப்பை முடித்த உலகம் தெரியாத இளைஞனாக, சுமார் பத்தாண்டுகள் முன்பு மும்பை இயற்கை வரலாற்று கழகத்தில் பாட்டில் கழுவுகிறவனாக சேர்ந்திருந்த, ஆங்கிலோ இந்திய இளைஞன். அருங்காட்சியகத்தின் சம்பளம் பெறும் காப்பாளராக முதன்முதலில் பதவி வகித்த என்.பி. கின்னியரின் கீழ் உதவி யாளனாகவும் களத்தில் சேகரிப்பாளனாகவும் பயிற்சி பெற்றபோது தன் பணியினால் நம்பிக்கையை வென்றவன். நான் தவாயில் இருக்கும்போதே வழக்கமாக இவனோடு கடிதத் தொடர்பில் இயற்கை வரலாற்றுச் செய்திகளைப் பகிர்ந்து கொண்டவன்-குறிப்பாக பறவைகளைப் பற்றி. காலப்போக்கில் அது பொதுவான விருப்பங்களாக அமைந்த வேறு செய்திகளையும் தழுவிச் சென்றது. எங்களிடையே நெருக்கமான நட்பும் நல்லுறவும் உருவாகியிருந்தது. பிறகு கழகத்தில் இருவரும் சகாக்களாக இருந்து, அது தொடர்ந்து வளர்ந்து, அருமையான உறவாக உரம்பெற்றது. ஆனால் அறிவியல் உறுப்பினராகத் தன்னை கழகம் பதிவு செய்து கொள்ளவேண்டும் என்ற அவனது வேண்டுகோளைப் பரிசீலித்த செயற்குழு அதற்குத் தகுதியாளனாவதற்கு அவன் உயிரியலில் முறையான கல்வியை பிளாட்டர் பாதிரியாரிடம் பயில வேண்டுமென்று விதித்தது.

அவனது பன்முக ஞானம் குறித்து எனக்கு ஆழ்ந்த மரியாதையும் போற்றுதலும் உண்டு. அறிவியலில் அவனே தானாக ஏதும் பங்களித்திருக்காவிடினும்கூட, ஏராளமாகப் படித்தவன். அவனால் இயற்கை வரலாற்றில் புத்தம்புதுச் செய்தி எதுவாயினும் அதை உடனே தெரிந்து வைத்துக்கொள்ள முடிந்தது. அபாரமான நினைவாற்றலும் சிக்கலான செய்திகளையும் புரிந்துகொண்டு உள் வாங்கும் திறனும் கடினமான தொழில்முறைத் தொடர்களைக் கூட சாமானியனும் புரிந்து கொள்ளும் வகையில் எளிய மொழியில் கூறும் வித்தையும் அவனிடம் இணைந்து விளங்கின. இந்த எளிமையாக்கல்தான் அவனது மிகப்பெரும் வல்லமை. விலங்கியல் ஞானத்தை எளிய மக்களுக்கு எடுத்துச் செல்வதில் அவன் நிகரிலா வல்லுனன். அவனது எழுத்துக்கள் அவன் கலையின் மேதைத் தன்மைக்கு சான்றாய் நிற்கின்றன. மெலிதான நகைச்சுவை கலந்த இனிய நடை அவனுடையது. விலங்கியல் சோதனைக்கூடத்தில் நாங்கள் இருவர் இருவராகப் பங்குபெற வேண்டும். கரப்பான் பூச்சியை அறுப்பது போன்ற கசப்பான வேலைகளைச் செய்ய அவனைத் துணைவனாகக் கொண்டிருந்தது எவ்வளவு வசதி என்று இப்போதும் நினைவு வருகிறது.

இந்தியா விடுதலை பெற்றதும், துணைவியின் அர்த்தமற்ற மிகையான அச்சமும், ஆங்கிலோ இந்திய நண்பர்களின் ஐயங் களுமாக அவனை நெருக்கித் தள்ளி இந்தியாவை விட்டு வெளி யேறும் முடிவுக்கு கொண்டு சென்றுவிட்டன. அதில் எனக்கு ஆழ்ந்த துயரம்தான். அவனுக்கும் அப்படித்தான் என்று பிறகு நான் சந்தேகித்தேன். இந்தியாவில் பிறந்து இங்கேயே வாழ்வின் பெரும் பகுதியைக் கழித்த பிறகு இங்கிலாந்தை அவனால் தாய்வீடாக ஏற்கவே முடியவில்லை என்பது எனது உறுதியான முடிவு. தனக்கு இயல்பாக ஒத்துப்போன மக்களுடனும் சூழலிலும் வாழ அவனுள் இருந்த ஏக்கம் மனம் தளர்ந்துபோன சில சந்தர்ப்பங்களில் உணரக் கூடியதாயிருந்தது. ஆனால் படகுகளை எரித்த பிறகு பயணம் திரும்புவதேது? அவனது தன்மானம் அவனை நாடுகடத்தப்பட்ட அந்நிலையிலும் மகிழ்ச்சியாய் வாழ்வதுபோல நடிக்கவைத்துவிட்டது. அவன் காலமாவதற்கு சில ஆண்டுகள் முன்பு லண்டன் வீட்டில் அவனைப் பார்த்தது எனக்கு சொற்களில் அடங்காத, மனமுடைந்த அனுபவமாகும். உடலின் ஒரு பகுதி செயலிழந்த நிலையில் படுக்கையில் முடங்கிப்போன எனது பிராட்டருக்கருகில், அலுப்பையும் தனிமையையும் தணிக்க ஒரேஒரு வானொலிப் பெட்டிதான் துணை. மனைவியும் மகளும் சம்பாதிக்க தத்தம்

பணியிடங்களில். அவன் தேவைகளைக் கவனிக்கவும், நாள் முழுவதும் பேச்சுத் துணைக்கும் வேலையாளோ வேறு மனிதர்களோ கிடையாது-வீட்டின் மேற்பகுதியில் குடியிருந்த அன்பான ஒரு கிழவியைத் தவிர. எல்லாம் சரியாய்த்தான் இருக்கிறதா என அவ்வப்போது அவள்தான் பார்த்துக்கொண்டாள். அவனது துள்ளித் திரிந்த இயல்பென்ன, ஓட்டமென்ன, விசையுறு பந்தினைப்போல் மனம் விரும்பியபடி செல்லும் உடலென்ன, எல்லாம், எல்லாம்... தன் சொந்தச் சூழலில் எந்த நேரமும் ஏவிய குரலுக்கு எடுபிடிகள் எத்தனைபேர் என்று பழகிய பிராட்டருக்கு அது எவ்வளவு வேதனையளித்திருக்கும் என்பதை என்னால் நினைத்துப் பார்த்து உணரமுடிந்தது.

சேவியர் கல்லூரியில் விலங்கியல் வகுப்பு முடிந்ததும் கழக அறைகளுக்கு ஓட்டம் பிடிப்போம். அது அப்போதும் சரி, பின் 1953 வரையும் சரி, பிப்சன் அண்ட் கோ என்ற மதுக்கடைக் கட்டிடத்தில் இயங்கி வந்தது. இந்தியப் பறவைகளைப் பற்றித் தெரிந்து கொள்ளவும் பர்மாவில் எனக்குப் புதிராகத் தோன்றிய சில பறவைகளை பிராட்டர் துணையுடனோ, கின்னியர் உதவியுடனோ புரிந்து கொள்ளவும் பறவைகள் தொகுதியில் மேய்ந்து கொண்டிருப்பதும், இல்லாவிடில் நூலகத்தில் கழிப்பதுமாக வாரத்தில் பலமுறை பலமணி நேரங்களை செலவிட்டுக் கொண்டிருந்தேன்.

அதிர்ஷ்டவசமாக சற்றும் எதிர்பாராமல், விலங்கியல் வகுப்பில் இன்னொரு சகமாணவனாக, என் தூரத்து உறவினனும், குழந்தைப் பருவத்து நண்பனும், பிறகு காலமெல்லாம் என் தோழனாகிப் போனவனுமான ஆசப் அலி அஸ்கர் ஃபைசியை சந்தித்தேன். அவன் பெயரின் முதல் எழுத்துக்கள் காரணமாக அவன் ஏ.ஏ.ஏ. என்று பிரபலமாகி இருந்தான். அவன் ஒரு பிரமாதமான அறிவாளி. அனுக்கு மாணவ வாழ்க்கை நெடுகிலும் பரிசு வாங்குவதே ஒரு வழக்கமாகிப் போனது! அவன் ஹானர்சில் முதல் வகுப்பில் தேறியும்கூட, உயிரியலை விட்டு விட்டு கேம்பிரிட்ஜில் சட்டம் பயிலப் போனது எனக்கு வருத்தத்தையும் ஏமாற்றத்தையும் தந்தது. எதிர்பார்க்கக் கூடிய வகையில் அங்கும் அவன் பலவிதமான உதவித் தொகைகளுக்கும் உன்னத சாதனைகளுக்கும் உரிமையாளன் ஆனான். விளையாட்டுத் துறையிலும் அவன் பன்முகச் சாதனையாளன். இளமையில் துப்பாக்கி சுடுவதில் குறிப்பிடத்தக்க திறம் காட்டியவன். கேம்பிரிட்ஜ் புனித யோவானில் படிக்கையில் தன் நிறுவனத்து டென்னிஸ் அணி, கிரிக்கெட் அணி இரண்டிலும்

இருந்தான். டென்னிசில் ஒருமுறை அணித்தலைவனாகவே இருந்து தன் புகழ்பெற்ற மாமன்மார்களான அஸ்கர், அத்தர் என்ற உலகறிந்த டென்னிஸ் மன்னர்களின் சீடன் என்ற பெருமையை நிலை நாட்டினான். அவர்கள் உலக டென்னிஸ் அரங்கில் 'ஃபைசி சகோதரர்கள்' என்று பெருமையாக அறியப்பட்டவர்கள். அரபி மொழியிலும் அவன் ஒரு புலவனாக விளங்கி மாணவ வாழ்விலும் பின்னரும் பல பரிசுகளும் பாராட்டுகளும் ஈட்டினான். இசுலாமிய சட்டத்தில், அதுவும் இஸ்மாயிலிகளின் சட்டத்தில், நதிமூலமான நூல்களையே கற்றுச் சிறக்க அந்த அரபி ஞானம் உதவிற்று. அதை அறிவுபூர்வமாகவும், விமர்சித்தும் எழுத உதவியது. இந்தியா விலும், வெளியிலும் அவனது பல நூல்கள் பல்கலைக்கழகங்களில் ஆய்வுத்துணை நூல்களாக இடம்பெற்றன. இசுலாமிய நாடுகளில் பெரும்புகழ் பெற்றன. அத்தகைய ஒரு பணி உன்னதமும், பிரகாசமும், பன்முகமும் கொண்ட பணி, குடும்ப சேதங்களால் பின்னாளில் முடக்கப்பட்டுப் போனதும் அவன் ஒரு தனிமை விரும்பியாகவும் மானிடத்தை வெறுப்பவனாகவும் மாறிப்போனதும் பெரும் சோகமாகும்.

சரி, பம்பாய்க்குப் போவோம். 1917இல் எங்கள் பெரியக்கா அஷ்ரப் உன்னிசா—சுருக்கமாக அஷ்ரப்-ஷம்ஸ் அத்தான் ஆகியோருடன் குதிரைக் கொட்டகைக்கு மேலே அமைந்த என் பாலபருவ குருவி வேட்டைக்கால வீடான கேத்வாடி இல்லத்தில் வாழ்ந்துவரும் சமயம். அத்தான் ஒரு வேட்டைக்கார வழக்கறிஞர். அமீருத்தீன் மாமாவின் பழைய அமீர் பவனத்தின் புறவீடு இது. ஆறேழு மாதம் முன்பு 1917 பிப்ரவரியில்-நான் பர்மாவில் இருந்த போது-அவர் காலமாகி விட்டிருந்தார். சொத்து பிரிக்கப்பட்டு விற்கப்பட்டும் விட்டது. அஷ்ரப் அக்காவும் தங்கை காமுவும் எல்லா அன்புச் சகோதரிகளும் செய்வதுபோல இரகசியமாக தம்முள் கலந்து சதிசெய்து திட்டமும் தீட்டி எனக்குத்தெரியாமலே ஒரு அழகான உறவுக்காரப் பெண்ணை எனக்கு மணமுடிக்க வேலைசெய்து கொண்டு இருந்திருக்கின்றனர். அந்தப் பெண் அவர்களைக் கவர்ந்து மயக்கி வீழ்த்திவிட்டது உண்மை. நான் தவாயில் இருந்தபோது கடிதங்களிலும் பிறகு நேர்முகப் பேச்சிலும் தேவைக்கதிகமான சந்தர்ப் பத்திலும் அவர்கள் இந்த மாயாவியை சாமர்த்தியமாக நுழைத்துக் கொணடேயிருந்தனர். எனக்கு அப்போது பெண்களிடம் ஈடுபாடே யில்லை என்று நான் தெள்ளத்தெளிய தெரியப்படுத்தி விட்டதாக நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனாலும் இது நடந்து கொண்டே தானிருந்தது. தெஹ்மினாவும் நானும் மழலையர் பள்ளியில் ஒன்றாகப்

படித்திருந்தோம் போலிருக்கிறது. அதாவது 1904 அல்லது 1905இல், ஜனானா பைபிள் மருத்துவ மட பெண்கள் உயர்நிலைப் பள்ளியில்! பிறகுதான் அவள் தந்தையார் சி.ஏ. லத்திப் தன் முத்து வணிகத்தை ஐரோப்பாவிலும் பரப்ப குடும்பத்தோடு லண்டன் போய்விட்டார். பல்லாண்டுகளுக்குப் பின் ஒரு பழைய குழு புகைப்படத்தை யாரோ காட்டும்வரை அவள் என் நினைவிலேயே இல்லை.

சர்ரீயில் ஒரு உயர்ந்த தரத்து விடுதியுடன் அமைந்த பள்ளி ஒன்றில் லண்டன் மெட்ரிக் தேறிய பின்பு பல்கலைக்கழகத்தில் மேற்படிப்புக்கு சேர்வதை அவளது தந்தை உற்சாகப்படுத்தவில்லை. மாறாக நிறைவுப் பள்ளி என்ற வகையான ஒரு நிறுவனத்தில் சேர்த்து விட்டார். அது இளமங்கையர் நளினமும் நாகரிகமும் கற்றுத் தேர்வதற்கான பயிற்சியாகும். அங்கு கற்பிக்கப்பட்ட நாகரிக நடத்தைகளின் சில பாடங்களை அவ்வப்போது வேடிக்கையாக தெஹ்மினா கூறுவது வழக்கம். உதாரணமாக ஒரு விருந்தில் தேநீர்ப் பாத்திரத்தில் தேநீரைக் கரண்டியால் கலக்குமுன் ஒவ்வொரு முறையும் 'மன்னியுங்கள்' 'மன்னியுங்கள்' என்று சொல்ல வேண்டும் என்று அவள் சொன்னது நினைவு வருகிறது. அதையும் ஒரு தயவான புன்னகையுடன் கூற வேண்டுமாம்! லத்தீப் குடும்பத்தினர் முதல் உலகப்போர் துவங்கி விட்டதாலும், விரைவில் முடிவதற்கான வாய்ப்புகள் தெரியாததாலும், லண்டனிலும் அதன் சூடு உணரப்பட்டதாலும், 1915இல் இந்தியா திரும்பி மும்பை சௌபாத்தி அடென்வாலா மாளிகையில் ஒரு அழகிய பகுதியை வாடகைக்கு எடுத்துக்கொண்டு வாழத் துவங்கினர். ஹார்வி சாலையில் அவர்களுடைய சொந்த வீடான 'லத்திபா' அப்போது கட்டப்பட்டு வந்தது. வாடகைக்கு வசித்துவந்த வீடும் அதற்கு மிக அண்மை யிலேதான் இருந்தது. என் சகோதரிகள் அந்த வாடகை வீட்டில் எனக்கும் தெஹ்மினாவுக்கும் ஏதோ தற்செயலாக நிகழ்ந்தது மாதிரி ஒரு சந்திப்பை மிக சாமர்த்தியமாக ஏற்பாடு செய்தனர். காலப்போக்கில் நிகழ்வுகள் யாவும் அவர்கள் திட்டப்படி நிறைவேறின. வெளிநாட்டில் வாழ்ந்து கல்வி கற்ற, வாழ்வின் சொகுசான வசதிகளுக்குப் பழகிய, வித்தியாசமான சூழ்நிலையில் பழகிய ஒரு பெண், தவாய் நகரின் உப்பங்கழிகளுக்கும், அதன் முன்னேற்றமேயில்லாத நிலைமைகட்கும் சற்றே கடுமை யானதும் சமூக வாழ்வோ, கேளிக்கைகளோ சற்றுமில்லாத ஒரு வாழ்க்கைக்கும் எப்படி ஈடுகொடுப்பாள் என்று துவக்கத்தில் என் மனதில் ஒரு அச்சமிருந்தது.

பிரிட்டனிலிருந்து தெஹ்மினா திரும்பியபின், அவர்களது

முதல் சந்திப்பிலேயே காமுவுக்கும் அவளுக்கும் ஒருவரை ஒருவர் மிகவும் பிடித்துப் போயிற்று. இந்த நேசம் காமு எங்கள் உறவினர் ஹசன் அலியை 1918இல் மணமுடித்து ஜப்பானுக்கு சென்றபிறகும் நீடித்தது. ஜூலை 1939இல் தெஹ்மினாவின் மறைவு பிரிக்கும்வரை அவர்கள் ஒருவர்க்கொருவர் வேறெவரையும்விட நெருக்கமான தோழியராக வாழ்ந்தனர். நான் .தவாயிலிருந்து திரும்புவதற்கும் மிக முன்னதாகவே தெஹ்மினாவை தயார்ப்படுத்தும் முன் முயற்சிகளில் காமு ஈடுபட்டிருக்க வேண்டும். இல்லாவிடில் நான் எதிர்பார்க்கவே முடியாத பல செய்திகளை (என்னைப்பற்றி) தெஹ்மினா எவ்வகையிலும் அறிந்திருக்க முடியாது. நெருங்கிப் பழகியதில், அவளது விருப்பு வெறுப்புகள், சுவைகள், ஆர்வங்கள் ஆகியவை என்னுடையவையுடன் ஒத்து இருந்ததை அறிந்தபோது எனக்கு மிகவும் நிம்மதியாக இருந்தது. அவளது பின்னணியையும், அதிநாகரிக முறையில் வளர்க்கப்பட்டிருந்ததையும் மீறி மனதளவில் அவள் ஒரு கிராமத்துப் பெண்ணாகவே இருந்தாள். நல்ல வேளையர்க அவளது 'முழுமை'(நிறைவு)ப் பள்ளி அவளது இயல்பான ஆளுமையை முழுமையாக தீர்த்துக்கட்டிவிடவில்லை! என்னைப் போலவே அவளும் விருந்துகள் 'சமூக' மாதர் சந்திப்புகள், சில்லறைப் பேச்சுகள் இவற்றில் 'விட்டால் போதும்' என்கிற போக்குடையவளாக இருந்தாள். பகட்டற்ற நேசபாவமுள்ள உறவுகள்–அதுவும் மிதமாக–அவளுக்குப் பிடித்திருந்தன. பொதுவான அணுகுமுறைகளும் விருப்பங்களும் உள்ளவர்களை அவள் விரும்பினாள். பகட்டு, படாடோபம், பாசாங்கு ஆகியவற்றை வெறுத்தாள். வெற்று ஆடம்பரம் அவளுக்கு ஒத்துக் கொள்வதே யில்லை. மரங்களடர்ந்த சூழலையும், வனத்திடையே உலவுவதையும், ஆங்கிலம் உருது இரண்டிலுமே நல்ல நூல்களையும் கவிதைகளையும், மலர்களையும் தோட்டக்கலையையும் அவள் ஆழமாக நேசித்தாள். பிற்காலத்தில் எனது பறவை ஆராய்ச்சி நாட்களில் பறவைகளிலும் அவளுக்கு தீவிர ஆர்வம் உண்டாயிற்று. சுருக்கமாகச் சொன்னால் எங்கள் சுவைகள் ஒன்றிக் கலந்திருந்தன. எவ்வளவு விரும்புகிறோமோ அவ்வளவுக்கும் இந்த ஒற்றுமை பரவலாயிருந்ததை அறியும்போது எதிர்காலம் பற்றிய என் நம்பிக்கை அதிகரித்தது. பின்னாளில் டேராடூனில் வசித்தபோது மொஷைரா (மொஷைரா—ஒருவகை கவியரங்க நிகழ்ச்சி)களுக்குப் போகும் வாய்ப்பு அடிக்கடி கிட்டியது. அந்நியப் பின்னணியில் வாழ்ந்ததால் அதன் சுவைகளை அனுபவிக்க முடியவில்லையே என்று வருந்திய அவள் தீவிரமாக மனமொன்றி உருது கற்க ஆரம்பித்தாள். ஒரு தொழில் முறை

ஆசிரியரும் இருவழி அகராதியும் துணைநின்று அம்முயற்சியை வளர்த்தன. விரைவில் உருதுவில் ஒரு மோகமே ஏற்பட்டு, வீட்டில்-வெளியில், எங்காயினும் நேரம் கிடைத்த போதெல்லாம் கவிதைத் தொகுதிகளில் மூழ்கலானாள். உருது-ஆங்கில அகராதி அவளது நிரந்தரத் துணைவனாயிற்று.

அவளது உயிரோட்டமுள்ள மனநிலையாலும் நேசபாவத் தாலும் என் உடன்பிறப்புகள் அனைவரும் அவளுடன் இனிமை யாகப் பழகி அவளை நேசித்தது எங்கள் இருவர்க்குமே மிகவும் நல்லதாயிருந்தது. குடும்பத்தில் அவள் ஒன்றிப் போனாள். காமுவும் ஃபர்ஹாத்தும் அவளுக்கு மிகவும் பிடித்தவர்கள். அவர்களோடு இருக்கும்போது நிம்மதியாயும் நிறைவாயும் இருந்தது போல அவள் வேறெப்போதும் இருந்ததில்லை என்று நினைக்கிறேன். என் இரண் டாவது அக்காவான ஃபர்ஹாத்துக்கும் இவளைப் பிடித்திருந்தது. பர்ஹாத் எங்கள் வீட்டில் நான்காம் குழந்தை; அஷ்ரபுக்கு 2 வயது சிறியவர். நான் இசெட்.பி.எம்.எம். பள்ளியில் சேர்வதற்கெல்லாம் முன்பே அங்கே ஆரம்பக் கல்வியை முடித்து விட்டவர் அந்த அக்கா. கேத்வாடி வீட்டில் வீட்டுப் பொறுப்புகளிலும், பணிகளிலும் அத்தை ஹமீதா பேகத்தின் சுமையைப் பகிர்ந்துகொண்டவர். வளர்ந்துவரும் வீட்டுக் குழந்கைளின் பராமரிப்பும் இவரது சேவை தான். சொல்லப்போனால் இந்த அக்காவை என் வளர்ப்புத் தாயென்றே கூறலாம். உருதுவில் என் ஆரம்பகால ஆசிரியை அவர்தான். 1982இல் காலமாகும்வரை என் சகோதரிகளுக்குள் பலவகையிலும் அவரே எனக்கு மிகவும் பிடித்தவர். குடும்பத்தின் கடைக்குட்டி என்பதால் மற்ற குழந்தையர்க்குக் கிட்டாத பல சலுகைகளும் உரிமைகளும் எனக்குக் கிட்டின. முடிந்தபோதெல்லாம் அக்காவின் மிதமிஞ்சிய தாய்ப்பாசத்தின் கருணையைப் பயன் படுத்திக்கொள்வதில் நான் தயங்கியதேயில்லை. அவர் மென்மை யானவர், மகிழ்வான இயல்பினர், உயிரோட்டமுள்ள நகைச்சுவை உணர்வுள்ளவர். ஹமீதண்ணாவைப் போலவே இவரும் எல்லா மட்டங்களிலும் காலத்தை வெல்லும் நட்புறவுகளை உருவாக்கும் வித்தை கைவந்தவர். சில முறை சந்திப்பவர்கள்கூட பிறகு காலமெல்லாம் அவரை நினைவு வைத்திருப்பார்கள். 1911இல் அவருக்கும் ஷுஜாவுத்தீனுக்கும் திருமணம் நடந்தது. அப்பாஸ் தியாப்ஜி மாமாவின் மூத்தமகன் ஷம்ஸ் வேட்டைக்காரராகவும் வழக்குரைஞராகவும் விளங்கினார். ஷம்சின் தம்பிதான் ஷுஜ்ஜு பாய். (அப்பாஸ் மாமாவின் மூன்றுபிள்ளைகள் என் மூன்று சகோதரிகளை மணந்துகொண்டனர். ஷம்சும் அஷ்ரப் அக்காவும்,

ஷுஜாவும் ஃபர்ஹாத் அக்காவும், சலாவும் அக்தர் அக்காவும் ஆக மாமா மார்க்கெட்டில் மற்றவர்களை அணுகவிடவில்லை!) அதிருக்கட்டும். ஃபர்ஹாத் அக்கா ஒவ்வொருமுறை எங்கள் வீட்டுக்கு வருவதும் இனிமையான அனுபவமாகும். ஹைதராபாதில் வேலை ஏதும் கிடைக்குமென்று கிஹீம் என்ற ஊரில் தங்கியிருந்தபோதும் சரி, கேரளாவில் வேலை கிடைக்குமென்று கோத்தகிரியில் இருந்த போதும் சரி, அவரது வருகைகள் இனிமையானவை. அதே போல்தான் டேராடூனில் வாழ்ந்தபோதும். அவர் நம்மோடு இருப்பதே மகிழ்வூட்டுவதுதான். சிரிக்கவும் சிந்திக்கவும் வைக்கும் உரையாடல்கள், எங்களுக்காக அவர் உரக்கப் படித்துக்காட்டும் முஸத்தஸ்-ஏ-ஹாலி, காலிப் இக்பால் ஆகியோரின் எழுத்துக்கள், பிரேம்சந்தின் நாவல்கள் இவற்றையெல்லாம் எவ்வளவு அனுபவித்து சுவைத்தோம்! பிற்காலத்திலும் நானும் தெஹ்மினாவும் தொடர்ச்சியாக பல வாரங்கள் ஃபர்ஹாத் அக்கா–ஷுஜா மைத்துனருடன் விடுமுறைகளைக் கழித்துள்ளோம். நிஜாம் அரசில் அத்தான் வருவாய்த் துறை அலுவலராகப் பல மாவட்டங்களிலும் பணியாற்றியபோதும் சரி, பிறகு ஓய்வு பெற்றபின் தௌலதாபாத்தில் உல்லாசமான அந்த வீட்டிலும் சரி, அப்படிக் கழித்த காலம்...!

எனக்கும் தெஹ்மினாவுக்கும் நிச்சயமான அந்த நாட்களுக்கு மீண்டும் திரும்பினால் ஒரு தந்தி நினைவு வருகிறது. மிக அற்புதமாக சிதைக்கப்பட்டு, அந்த குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் எனக்கு வேடிக்கையைவிட தர்ம சங்கடம் ஏற்படுத்துவதாக அமைந்த தந்தி! உலகப்போரில் நான்கு ஆண்டுகளில் நேர்ந்த உயிரிழப்பைவிட அதிக உயிரிழப்பை அதைத் தொடர்ந்த சில குறுகிய வாரங்களிலேயே ஏற்படுத்தி பல கண்டங்களையும் பாதித்த 1918ஆம் ஆண்டின் உயிர்கொல்லி இன்புளுயென்சா தொற்றுநோய் உங்களில் பலருக்கு நினைவிருக்கலாம். அப்போது விலங்கியலும் வணிகவியலும் படித்துக்கொண்டு மும்பையிலிருந்த நேரம். அவளுடைய அண்ணா மாவட்டப் பொறியாளராக நிஜாம் அரசில் பணியாற்றிக் கொண்டிருந்தார். குழந்தைகள், பணியாட்கள் உட்பட முழுக் குடும்பமும் நோய்கண்டு உதவிக்கு ஆளின்றித் தவிப்பதாக செய்தி கிடைத்திருந்தது. அவரது தங்கைக்காக அப்போதுதான் நிச்சயிக்கப்பட்டிருந்த நிலையில் அந்தக் குடும்பத்துடன் எனது பரிவைப் பகிர்ந்து கொள்ளும் முறையில் ஹைதராபாத் சென்று அவர்களுக்குப் பணிவிடை செய்ய சித்தமாய் இருப்பதைத் தெரிவித்துக்கொள்ளும் ஆர்வத்தில் நான் ஒரு தந்தி அனுப்பினேன்.

அதைப் படித்துவிட்டு ஹசன் என்னடா இது, சலீம் மாமனார் வீட்டாரை சுரண்டுவதை இவ்வளவு சீக்கிரமே ஆரம்பித்துவிட்டான் என்று அதிர்ந்துபோனதில் ஆச்சரியமே இல்லை. "நான் வந்து உதவவா?" என்று நான் எழுதித் தந்த தந்தி அங்கே "வருமானம் குறைவு; உதவுங்கள்" என்று போய்ச் சேர்ந்தது! ("Shall I come and help" as "Small income send Help" !).

1918 டிசம்பரில் எங்கள் திருமணம் நிகழ்ந்தது. அப்போது எனக்கு வயது 22தான், திருமணத்துக்கு அது மிகவும் குறைந்த வயதுதான் என்றாலும் மறுபடி எப்போது மும்பை திரும்புவேன் என்பது உறுதியாக இல்லாததால், என்னை வலியுறுத்தினார்கள். போரின் முடிவில் எங்கள் வணிகம் சீராக தளர்ச்சியடைந்ததால் அப்போது திருமணம் செய்துகொண்டதும் ஒருவகையில் நல்லதாயிற்று. இல்லையேல் பல்லாண்டுகள் தள்ளிப்போயிருக்கும். அதற்கு ஓராண்டு முன்புதான் நான்கு வயது மூத்தவரான சகோதரர் ஆமிர், அழகும் அறிவும் கொண்டவரான லைலா ஹைதரியை மணந்திருந்தார். நிஜாம் அரசின் காவல்துறையில் பணியாற்றுவதில் சலிப்படைந்திருந்த அவர், ஜே.ஏ. அலி சகோதரர்கள் நிறுவனத்தில் சேர்ந்து வியாபாரத்தில் தன்னை ஈடுபடுத்திக்கொள்ள தீர்மானித் திருந்தார். அப்போது அண்ணி தாயாகும் நிலையில் இருந்ததால் அவரை ஹைதராபாதில் பிறந்தகத்தில் விட்டுச் செல்லத் தீர்மானித் திருந்தார். ஆனால் அவர் மறுபடி அண்ணியைப் பார்க்கவேயில்லை. சில மாதங்களுக்குப் பின் மியன்மரில் விசித்திரமான சோகச் சூழலில் அவர் காலமானதைப் பற்றி பிறகு பார்ப்போம். எது எப்படியோ, எதிர்காலம் தனக்காக என்ன வைத்திருக்கிறது என்று அறியாத ஆமீர் அண்ணா கல்கத்தாவிலிருந்து ரங்கூனுக்கு, மணமாகி ஒரு மாதமே ஆகியிருந்த எங்களுடன் 1919 ஜனவரியில் கப்பலேறினார்.

5

# மியான்மர் நினைவுகள்

உருவத்தால் சிறியவர்களான அக்தர் அக்கா–சலா அத்தான் பிரபல்யம், அதுவும் ரங்கூன் இந்தியர்களிடையே அவர்கள் புகழ் பிரமிக்கத்தக்கது. மேட்டுக்குடி என்று சொல்லப்படுகிற வழக்கறி ஞர்கள். மருத்துவர்கள் போன்ற கற்றறிந்த தொழில் நிபுணர்கள், அரசு உயர் அதிகாரிகள், உயர்நீதிமன்ற நடுவர்கள் போன்றோ ரிடையே மட்டுமின்றி குதிரை வண்டிக்காரர்கள், ரிக்ஷாக்காரர்கள் போன்ற ஏழை எளியோர் வரை அனைவரும் அவர்களுக்கு மதிப் பளித்தனர். அவர்கள் அந்நாட்டில் வாழ்ந்த கிட்டத்தட்ட 35 ஆண்டு காலமும் இந்த மரியாதை நீடித்ததுடன் வளர்ந்து கொண்டும் வந்தது. அங்கு இருந்த அரசியலமைப்புகள், தொழிற்சங்க அமைப்புகள் அனைத்திலுமே அவர் ஏதோ ஒரு காலகட்டத்தில் தலைவராகவோ செயலராகவோ இருந்து வந்திருக்கிறார். அங்கு இந்திய தேசிய காங்கிரசின் தலைவராக இருந்திருக்கிறார். சுதந்திரத்துக்கு முன்பு நிலவிய இரட்டையாட்சி முறையின்கீழ் சட்ட மேலவையில் இந்தியர்களின் பிரதிநிதியாக இருந்தபோது காலனியாதிக்க நிர்வாகத்துக்கு ஒரு முள்ளாக உறுத்தியதும் உண்டு. பெண் கல்வியில், அதுவும் இசுலாமிய மகளிர் கல்வியில்—அது இந்திய முஸ்லீமாயினும் சரி இந்தோ பர்மிய கலப்பின முஸ்லீம் ஆயினும் சரி—அக்தர் அக்கா ஒரு இயக்கும் சக்தியாக விளங்கினார். இரண்டாம் உலகப்போரில் 1942இல் ஜப்பான் அந்த நாட்டை நசுக்கியபோது அங்கிருந்த இந்திய வம்சாவழியினரை சாகசமான முறையில் நாகலாந்து வழியாக ஆபத்தான பாதையில் வெற்றிகரமாக இந்தியாவுக்குத் திருப்பியனுப்பியதில் அத்தானும், அவர் மகன் நாதிரும் செய்த உன்னதமான வீரப்பணி மனித இயல்புக்கு மீறிய துணிவுக்கும் உடலுழைப்புக்கும் எடுத்துக்காட்டான தீரச் செயலாகும். அதில் ஏற்பட்ட சிரமங்களின் மொத்த விளைவாகவும், கறுப்புநீர்க்காய்ச்சல் காட்டுப் பாதையில் அவரைப் பற்றிக்

கொண்டதாலும் முசௌரி வந்து சேர்ந்ததும் சேராததுமாய் சலா அவர்கள் படுக்கையில் விழுந்தார். ஹமீதண்ணா-ஷரீஃபா அண்ணியின் 'தெற்குவனம்' (Southwood) என்ற இல்லத்தில் அவர்கள் உபசரிப்பில் பலநாட்கள் நோயுடன் உயிருக்குப் போராடி மீண்டார். அவர்களது நண்பர்கள், தெரிந்தவர்கள் வட்டம் மிகப்பெரியது. அந்நாட்டில் வசித்த அல்லது தலைநகர் வழியே செல்ல நேர்ந்த குறிப்பிடத்தக்க எல்லா இந்தியர்களும், அப்படிப் பிரபலம் அடையாதவர்களிலும்கூட மிகப்பலரும் இவர்களை அறிந்திருந்தனர். இந்தியர்க்கு அவ்வீடு ஒரு அடையா நெடுங்கதவு. எல்லார்க்கும் ஒப்புரவு ஒல்லும் வகையான் ஒவாதே நல்லுதவி என்பதும், உடுக்கையிழந்தவன் கைபோல யார்க்கும் இடுக்கண் களைவதும் அவர்கள் வாழ்க்கை நெறியாயிருந்தது. அந்நாட்டிலிருந்து தாயகம் ஓடிவந்தவர்களில் 35 ஆண்டுகளுக்குப் பிறகும் அந்தத் தலை முறையினரில் இவர்களை நன்றியுடன் நினைவுகூர்பவர்களின் எண்ணிக்கையே பிரமிப்பூட்டுவதாகும். அப்போது புலம் பெயர்ந்தோரில், அக்கா-அத்தான் அல்லது இருவரிடமுமே ஒரு சமயமில்லாவிட்டால் ஒருசமயம் உதவி பெறாதோர், இந்த அரிய தம்பதியின் சிறு உதவியையோ அன்பு உபசாரத்தையோ நினைவு கூராதோர் மிகமிகச் சிலரே இருப்பர்.

முதல் உலகப்போர் முடிந்ததும் பர்மாவில் தளர்வடைந்து வந்த எங்கள் சுரங்கத் தொழிலை அரசாங்கக் காடுகளை குத்தகைக்கு எடுத்து இந்திய ரயில்வேயின் ஸ்லீப்பர்கட்டை தேவைகளுக்காக அனுப்பிவைக்கும் தொழிலாக மாற்றியபின் பெரிய அளவில் வேட்டையாடுவது எனக்கு பர்மாவில்தான் அறிமுகமாயிற்று. இந்த வேலைக்குப் பெரிதும் பயன்பட்டவை பிபிங்கடோ என்ற பெயரில் பர்மாவில் அறியப்பட்ட உரமான மரங்கள், தாவரஇயலில் எக்சைலியா டொலாப்ரிஃபார்மஸ் என்று இதற்குப் பெயர். தவாய் நதியின் உயர்படுகைகளில் நட்கிசின் ஹெயின்சீ பகுதிகளில் அமைந்திருந்த ஈர இலையுதிர் காடுகளில் இம்மரங்கள் நிறைய இருந்தன. அவை உள்ள பகுதிகளைக் கண்டறியவும், அவற்றின் அளவு, வெட்டமுடியுமா என்பது, கிடங்குகளுக்கும் அறுவைக் குழிகளுக்கும் அனுப்பத் தேவையான போக்குவரத்து வசதி உண்டா, இந்தியாவுக்குக் கப்பலேற்றுதல் என்ற பன்முக ஆய்வுகளுக்காக காடுகளைச் சுற்றிப்பார்த்து ஒரு ஆய்வே செய்ய வேண்டியிருந்தது. இதில் தொலைதூர உட்பகுதிகளில் போக்குவரத்து வசதிகளும் செய்தித் தொடர்பு வாய்ப்புகளும் இல்லாமைதான் பெரிய சிக்கல். இதற்காகவே ஏற்படுத்தப்பட்ட

அரபுவகைச் சிறுகப்பல்களில் அனுப்புவதிலும் பிற ஏற்பாடுகளிலும் பல சிரமங்கள் இருந்தன. அதுவும் உள் வனாந்திரங்களிலிருந்து சரியான கப்பல் பழுதுபார்ப்பு வசதிகளில்லாத துறைமுகங்கள் வழியே அனுப்புவதில் இருந்த சிரமங்கள் இந்த வியாபாரத்தையும் முடிவுக்குக் கொண்டு வந்துவிட்டன. ஏட்டளவிலும் எங்கள் பங்காளிகளின் நம்பிக்கையிலும் மட்டுமே அவை எங்களைத் தூக்கி நிறுத்தக்கூடியவை போலத் தோன்றின. தவாய் மர வணிகம் என்ற பெயரில் இருந்த இவ்வமைப்பில் ரங்கூனில் இருந்த பார்சி நண்பர் ஜாம்ஷெட்ஜி மானேக்ஜி பங்காளியாயிருந்தார். அவருக்கு அதிதமான வலிமையும் செல்வாக்கும் இருந்தது. ஆனால் எந்த சந்தர்ப்பத்திலும் அளவுக்கதிகமான நன்னம்பிக்கையும் இருந்ததுதான் வம்பு. சில ஆண்டுகள் முன்னதாக அவரைச் சுரங்கத்தொழிலில் இழுத்துவிட்டது இந்த அளவு மீறிய நம்பிக்கைதான். மர வணிகம் ஒருநாளும் ஒழுங்குபட்டு வரவேயில்லை. வியாபாரம் என்ற வகையில் பணவிஷயத்தில் நிலைமை அப்படியிருப்பினும் தனிப்பட்ட வகையில் என்னைப் பொறுத்த அளவில் வேட்டை, இயற்கை வரலாறு ஆகியவற்றில் மிகவும் வெற்றிகரமாக இருந்தது. மனிதனின் கால்படாத உள்வனாந்தரங்களில் திரியவும், தொடர்ந்து பலநாட்கள் அங்கு காட்டு பங்களாக்களில் வாழவும் அருமையான சந்தர்ப்பங்கள் வாய்த்தன. சில நேரங்களில் இரவைக்கழிக்க மாற்றுப் பயிர்செய்யும் எளிய விவசாயிகளின் தனித்த குடிசை களைப் பகிர்ந்து கொண்டதும் உண்டு. எங்கள் வழிகாட்டியும் அவர்களைப் போலவே கரேன் இனத்தவராயிருந்ததால் இது வசதியாய்ப் போயிற்று. குதூகலமான ஒரு தென்னிந்தியர் ஒரு இக்மிக் சமையல் பாத்திரம் ஒன்று வைத்திருந்தார். அதனால் நினைத்தபோது சூடாக சாப்பிட முடிந்தது. முதுகில் படுக்கை, தோளில் தொங்கும் நம்பற்குரிய மசூர் துப்பாக்கி, வாடகைக்கு எடுத்த ஒரு வாகனத்தில் பைகளில் அரிசி, பருப்பு வகைகளும் சமையலுக்கான பிற வகையறாக்களும்... அப்படியே போய்க் கொண்டே இருப்போம். எங்கள் வழிகாட்டி திரு. யூ க்யான் தா, கிறிஸ்தவ மதத்தை தழுவிய கரேன் இனத்தவர். காட்டிலிருந்து அறுவைக் குழிகளுக்கு மரக்கட்டைகளை இழுத்துச் செல்லும் பணிக்கான எங்கள் ஒப்பந்தக்காரர். அவரிடமே ஒரு யானையும் இருந்தது. அந்தப் பகுதிகளை அவர் துல்லியமாக அறிந்திருந்தது காட்டில் எங்கள் தொழிலுக்கு ஏற்ற பகுதிகளைத் தேர்ந் தெடுப்பதில் மதிப்பிட முடியாத வசதியாயிருந்தது. அவர் வன இயலிலும் அருமையான தேர்ச்சியுள்ளவராகவும் வேட்டையில்

விற்பன்னராகவும் அமைந்துவிட்டார். அவரும் அவரது பெல்ஜிய நாட்டு 12போர் ஒற்றைக்குழல் துப்பாக்கியும் இணைபிரிக்க முடியாதவர்கள்! சாம்பர்மான், குரைக்கும் மான், பன்றி என்னும் பிற விலங்குகளை அதனால் வேட்டையாடியதாக அவர் சொல்வார். புலி, காண்டாமிருகம், ஏன் ஒரு மதம்பிடித்த யானையையே அதனால் கொன்றிருந்தாராம். "கதைக்கிறவருக்கே அந்தப் பெருமை சேரட்டும்" என்று முகலாய மாமன்னர் பாபர் சொன்னதுபோலத் தான்! ஆனால் ஒன்று—நிச்சயமாக யூ க்யான் தாவின் தாயகத்து வனவுயிர்களையும் மரங்களையும் பற்றிய அறிவு மிகமிகக் குறிப் பிடத்தக்கது. அந்தக் காடுகளையும் அவை பற்றிய நாடோடிக் கதைகளையும் பற்றி நான் அவர் மூலமாகத் தெரிந்துகொண்டது ஏராளம். நான் பார்க்கவும், முடிந்தால் படமெடுக்கவும் மிகவும் ஆவலாகயிருந்த ஒற்றைக்கொம்பு காண்டாமிருகம் அப்போதே (1922இல்) விரைவாகக் குறைந்துகொண்டு வந்த விலங்காகும். (ரினோசரஸ் சொன்டய்கஸ் என்பது இதன் உயிரியல் பெயராகும்). அது அடிக்கடி வரக்கூடிய ஹெய்னஸ் நதிப்புறத்து சதுப்பு நிலங்களை அவர் நன்கறிந்திருந்தார். அது வரக்கூடிய அசலான பல இடங்களுக்கு என்னை அழைத்துச் சென்றிருக்கிறார். ஆனாலும் ஒரு சமயம் ஒரு இடத்தில் அது வந்துபோன காலடித்தடமும் படுத்துப்புரண்டது மாறாத அடையாளங்களும் தென்பட்டன. அந்த அடையாளங்கள் அது அண்மையில் எங்கோ வாழ்வதற்கான உறுதியான ஆதாரங்கள் என்றாலும்கூட அதைக்காணும் பேறுமட்டும் ஒருமுறைகூடக் கிட்டவில்லை. 

அப்போதுதான் பர்மாவின் காலனி அரசு காண்டாமிருகங் களைக் கொல்வதைத் தடை செய்திருந்த நேரம். ஆனால் எல்லா ஊர்களிலும் நடப்பதைப் போலவே பர்மாவிலும் கள்ளவேட்டைக் காரர்களின் களவாணித்தனம் தொடர்ந்து கொண்டுதான் இருந்தது. ஆகக்கூடி அந்த இனம் இப்போது அநேகமாக அழிந்தொழிந்து போயிருக்கும். கீழ்பர்மாவின் வரைபடத்தில் ஹெய்ன்ஸ் பகுதியைக் கண்ணுறும்போது இன்றும் அந்த வசதிக்குறைவான ஆனால் உற்சாகமூட்டும் அந்தக்கால வனாந்தர நாடோடி நினைவுகள் நெஞ்சம் நிறைத்து அலைபாய்கின்றன. அந்தக் கொசுக்களும், ரத்தம் உறிஞ்சும் அட்டைகளும், நாள்முழுதும் இடைவிடாத மழை ஆளை நனைத்ததும், இரவின் ஈரமாகி ஊதிப்போன படுக்கையும், மறந்து போய், இந்தக்காலத்தில் அவை உல்லாசமாகத் தோன்றுகின்றன. எது எப்படியோ, அறுபதாண்டுகள் முன்பு அதெல்லாம் ஆனந்த மயமாக இருந்தது என்பது உண்மை.

மற்றொரு மனிதரைப் பற்றிக் கூறாவிடில் பர்மா புராணம் முழுமையுறாது. அவர்தான் பெர்ட் ரிப்பன்ட்ராப். அந்த விந்தை மனிதர் ஒரு புதிரான பாத்திரம். சுரங்கத்தொழில் ஒளிமயமாகத் தெரிந்த ஆரம்பகட்டத்தில் எதிர்பாராதவிதமாக என் வாழ்விலும் நடவடிக்கைகளிலும் நுழைந்தவர். சுரங்கத்தொழில் பரபரப்பாக பரவி வந்த அந்த அலையில் தவாயில் வந்து சேர்ந்தவர்தான் அவரும். குறிப்பிடத்தக்க, ஏன், பாராட்டுக்கே உரிய, ஆனால் விவரிக்க முடியாத மனிதர். நலிந்துபோன எங்கள் சுரங்கத் தொழில்காலத்தில் மூன்றாண்டுகளுக்கு மேல் நெருங்கிப் பழகியிருக்கிறேன்; ஒரே சமயத்தில் தொடர்ந்து மூன்று நான்கு நாட்கள் கம்பத்தின்மீது மூங்கில்களாலும் பனைஓலைகளாலும் நிர்மாணிக்கப்பட்ட அவரது பழங்காலத்திய குடிசையில் கழித்திருக்கிறேன். அப்படியெல்லாமிருந்தும் அவரது வாழ்க்கை வரலாறு பற்றியும் முந்தைய நடவடிக்கைகள் பற்றியும் நான் கண்டறிய முடிந்ததெல்லாம் மிகவும் சொற்பமே. டயட்ரிக் பேண்ட்ரில் அறிவுரைப்படி 1866இல் பிரிட்டிஷ் இந்திய அரசால் வனத்துறை அறிவியலை முறைப்படுத்தவும் இந்திய வனவியல் பணித்துறையை உருவாக்கவும் ஜெர்மனியிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவர் பெர்த்தால்ட் ரிப்பன்ட்ராப் அவர்களது மகன்களில் இவரும் ஒருவர். இவரது தந்தையார் கம்பானியன் ஆப் தி ஆர்டர் ஆப் தி இந்தியன் எம்பயர் (C.I.E) என்ற பிரிட்டிஷ் விருது பெற்றவர். தமது தந்தையார் 1900இல் தலைமைக் கண்காணிப்பாளர் (I.G.) பதவியில் இருந்து ஓய்வுபெறும் வரையிலான முந்தைய சில ஆண்டுகள் சிம்லாவில் கழித்ததைப் பற்றி இவர் நிறைய சொல்வார். அப்பா காலத்தில் அரசுப் பணியிலிருந்த பல சமகால அதிகாரிகளைப் பற்றிப் பேசுவார். ஆனால் இவர் இந்தியாவில் பிறந்தாரா, குழந்தைப் பருவத்தை இங்கு கழித்தாரா என்றெல்லாம் நான் அறியவே இல்லை. தன் தாயைப் பற்றி எதுவுமே கூறியதில்லை; அந்த அம்மையார் ஜெர்மானியரா இல்லையா என்பதுகூட பேச்சில் வந்ததில்லை. பேச்சுவாக்கில் லண்டனில் ஒரு சகோதரி இருப்பதைக் குறிப்பிட்டதுண்டு. அந்த சகோதரியிடம் அவருக்கு பாசம் மிகுதியென்று படுகிறது. லண்டனில் இவரது மனைவியாரும் மகளும்கூட இருந்ததாக அறிய நேர்ந்தது. தம்பதிகளுக்குள் பிளவோ மணவிலக்கோ ஏற்பட்டிருக்க வேண்டும். தன் தனிப்பட்ட வாழ்வு, சொந்தபந்தம் பற்றியெல்லாம் பேசியது மிக அரிது. எனக்குத் தெரிந்தவரை நான் பழகிவந்த அந்த கால கட்டத்தில் உறவினர் யாரோடும் அவருக்கு கடிதத் தொடர்புகூடக் கிடையாது.

தாயகமான இங்கிலாந்துக்குத் திரும்பும் ஆசையைக்கூட அவரது வாய்மொழிகள் காட்டியதில்லை. பணம் அனுப்பியதுமில்லை, யாரிடமிருந்தும் பணம் வந்ததுமில்லை. அனுப்பாததில் ஒரு மர்மமுமில்லை. அனுப்புமளவுக்கு எதுவும் அந்த ஏழை மனிதரிடம் இருந்ததேயில்லை. பலநேரங்களில் அவர் பிழைப்பே எப்படி நடக்கிறது என்று நான் ஆச்சரியப்பட்டிருக்கிறேன். ஏனென்றால் சுரங்கத்தொழிலில் அவரது நம்பிக்கை அசைக்க முடியாத தாயிருந்தாலும் ஆதாரமற்றதென்பது என் எண்ணம்—அதில் ஒருபோதும் அவர்க்கு எந்த லாபமும் கிட்டவில்லை. வெறும் அரிசியும் பருப்பும் மட்டுமே இருந்தாலும், காலம்வரும் என்ற எண்ணத்தையும் நம்பிக்கையையும் தாராளமாக தாளித்து கொஞ்சநாளாவது காலம் தள்ளிவிடலாம் போலிருக்கிறது. பெர்ட் ஒரு தீராத நம்பிக்கைவாதி, ஆனால் அந்த நம்பிக்கையின் அடிப்படைகள்தான் காணக்கிடைக்கவில்லை. சுரங்கத்தொழில் முயற்சிகளின் முடிவுகள் ஒருபோதும் அந்த நம்பிக்கையை நியாயப் படுத்தவேயில்லை.

மூன்றாண்டு கூட்டு வணிகத்தின் பிறகு அவரையே சுரங்கங் களின் ஏகசக்கரவர்த்தியாக விட்டுவிட்டு, தொழிலில் 'அடிபட்டு விலகிக்கொண்டு' நான் பர்மாவிலிருந்து திரும்பினேன். செம்மையாக ஏமாந்து புத்திகொள்முதலுடன் நான் விலகினேன். அவரோ, அப்போதும் குறையாத நம்பிக்கையோடும் நல்லெண்ணத்துடனும் வீராவேசமாக போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தினார். அனால், வழக்கத்துக்கு மாறாக அவ்வப்போது ஆழ்ந்த விரக்தி அவரை ஆட்டி வைக்கத் துவங்கியது. அத்தகையதொரு கரிநாள் இரவில் அவர் காட்டு பங்களா ஒன்றில் தன்னைத் தனிப்படுத்திக்கொண்டு துப்பாக்கியால் சுட்டுக்கொண்டு காலமான சோகச்செய்தியை சில மாதங்களுக்குப் பிறகு நான் கேள்விப்பட்டேன். இப்படியாக என் சுரங்கத்தொழில் முயற்சிகளுக்கு மட்டுமின்றி சர்வ நிச்சயமாக உலகின் முதல் எண் நம்பிக்கைவாதியாக சுரங்கத்தொழில் மரபுகளுக்குரிய ஆர்வலராக விளங்கிய ஒரு மாமனிதர் வாழ்வும் முடிவெய்தியது. ஜெர்மனியின் ஃப்ரெய்பர்க் பல்கலைக்கழகத்தில் சுரங்கப் பொறியியலில் பயிற்சி பெற்றவர். பிரிட்டிஷ் கயானாவில் தங்கச் சுரங்கங்களில் முயற்சி செய்தவர். அதிலும் ஒன்றும் தேறவில்லை என்பது வெளிப்படை. தவாய் சுரங்க முயற்சிகளுக்கு அவரை இழுத்துவிட்டவர் அவரது நண்பர் ஜே.டபிள்யூ. டொனால்ட்சன் அய்க்கின். அந்த நண்பருக்கு எகேன் நதிப்புறத்தில் ஒரு ரப்பர் பண்ணையும் பகாயேயில் சுரங்கமொன்றும் இருந்தன.

அவரும் பின்னாளில் சுரங்கத்தை பர்மா நிதி மற்றும் சுரங்க நிறுவனம் என்ற அமைப்புக்கு விற்றுவிட்டார். அது ஒருபுறமிருக்க நமது நண்பர் ரிப்பன்ட்ராப் ஒரு உல்லாச மனிதர். பரிவும் நட்புணர்வும் கொண்டவர். சுரங்கத்தொழிலாளர் தவிர மற்ற கிராமத்தவர்களும் அவரை நேசித்தனர். தமது சொந்தப் பிரச்சினைகள் தொழில் பிரச்சினைகள் எதற்குமே அவர்கள் அவர் உதவியை நாடிவருவது வாடிக்கை. அவரது பன்முகத் திறமைகளில் விந்தையான ஒரு அம்சம் அவர் ஒரு நடைமுறை செவிலியாகவும் விளங்கியதாகும். நள்ளிரவில் கூட தாய்மை நிலையிலிருந்த மாதர்களின் கணவர்மார்கள் தொலைதூரச் சிற்றூர்களிலிருந் தெல்லாம் உள்வனாந்தரப் பகுதியிலிருந்தெல்லாம் அவரைத்தேடி வருவார்கள். அவருக்கு அந்தத் துறையில் ஏக கிராக்கியும் பயங்கரமான புகழும் இருந்தது. எப்போதும் எல்லா மருத்துவப் பொருட்களும் சில அறுவைக்கருவிகளும் கொண்ட பை ஒன்று அவர் கைவசமிருக்கும். அழைப்பு வரும் நேரம் எதுவாயிருந்தாலும் ஒருமுறைகூட அவர் மறுப்பு சொல்லி நான் கண்டதில்லை. சில சமயங்களில் அந்த மக்கள் வாழைப்பழங்கள், அப்போதுதான் பிடித்த மீன், கோழிமுட்டை ஆகியவற்றைக் கொண்டு வருவதுண்டு. ஆனால் அவையெல்லாம் அவர்கள் தாமே உவந்தளித்த காணிக்கைகளே. அவரது உதவிகள் யாவும் அறப்பணிகள்தான்.

ஜெர்மனியில் ரிப்பன்ட்ராப் என்ற பெயர் அபூர்வம். எனவே பின்னாளில் (1937) அந்தப் பெயரில் ஒருவர் லண்டனில் ஹிட்லரின் தூதராக விளங்கியபோது எனக்கு ஒரு ஆர்வம் ஏற்பட்டு எனது பறவை இயல் நண்பர் கர்னல். ஆர். மெய்னட் சகனைத் தொடர்பு கொண்டு (அவர் ஜெர்மானியத் தூதரை அறிந்தவர்) இந்த ரிப்பன்ட்ராப் ஒரு காலத்தில் இந்திய வனத்துறை தலைமையதி காரியாயிருந்த ரிப்பன்ட்ராப்போடு எவ்விதமேனும் தொடர் புள்ளவரா என கேட்கச் சொன்னேன். அடுத்த வாய்ப்பிலேயே ரிப்பன்ட்ராப்பைக் கேட்டு கர்னல் எனக்கு அனுப்பிய பதில்: “உங்கள் ரிப்பன்ட்ராப் பற்றி நீங்கள் கூறியது நினைவிருக்கிறது. நான் கேட்டதற்கு இந்த மனிதர் (இவர் ஒரு பொய்யர்) தமக்கு எவ்வித வணிகத் தொடர்புமில்லை என்றும் அதுவும் மரவணி கத்துடன் ஒரு உறவுமில்லை என்றும் மறுத்துவிட்டார். (ஜெர்மனியின் மிக மோசமான மனிதர்களில் ஒருவர் மகா கர்வியுமான இவர் வேறென்ன சொல்வார்?)”

6

# மும்பை—1924-29

நானும் தெஹ்மினாவும் 1924இல் பர்மாவிலிருந்து திரும்பி வந்தோம். சகோதரி காமு, மைத்துனர் ஹசன் ஆகியோருடன் சிறிதுகாலம் வசித்தோம். அவர்களது பாலி ஹில் பகுதியிலிருந்த பரந்த புதிய மும்பை வீட்டில் பெயரளவுக்குப் பணம் கொடுத்துவிட்டு தங்கி யிருந்தோம். சாமுவல், சாமுவல் அண்ட் கம்பெனியின் இந்தியப் பிரிவு மேலாளராக, ஜப்பானில் கோபே எனும் ஊரில் ஹசன் வெற்றிகரமாக வணிகத்துறையில் ஈடுபட்டிருந்தார். ஆனாலும் திரும்பிவந்து இந்தியாவில் வாழ்வதையே விரும்பினார். இங்கு வந்து பழைய பள்ளிக்கால நண்பர் ரத்தன் சந்திர தலக்சந்திர மாஸ்டர் என்பவருடன் பங்குச் சந்தையில் இறங்கினார். அந்த நண்பர் ஒரு வெற்றிகரமான தரகராக இருந்திருந்தும், குருட்டுத் துணிவில் பங்கு வணிகத்தை சூதாட்டம்போல் நடத்தியதால், தோல்விகளை சந்தித்து விரைவில் ஆண்டியாகி மஞ்சள் கடிதம் தரும் நிலைக்கு வந்து விட்டார். கூட்டுவியாபாரம் முடிவுற்றது. தானே சிலகாலம் பங்குத் தரகில் இருந்து பார்த்துவிட்டு வெற்றிகிட்டாமல் போய் மனைவி யையும் சாத், லயீக், அமீர் ஆகிய குழந்தைகளையும் மும்பையில் விட்டுவிட்டு தான் ஜப்பான் திரும்ப நிச்சயித்தார். அவர் அங்கு காலூன்றியதும் குடும்பத்தை அழைத்துக் கொள்வதென்றும் இந்த வீட்டை பர்மா ரஷல் நிறுவன மேலாளருக்கு வாடகைக்கு விடுவதென்றும் திட்டம். பாலிஹில், அதன் அடிவாரப்பகுதிகளான மீனவக்குப்பமான தண்டா, கார், வைல்பார்லே, சாந்தாகுரூஸ் சுற்றுவட்டாரங்களும் மந்த்ராவின் தென்புறம் ஆகியவையும் மீன்பிடி கிராமங்களான வயல்வெளிகளும் குறிப்பிடத்தக்கவை. ஆங்காங்கே வயல்களிடையே மாஞ்சோலைகளும், புளியந்தோப்புகளும், பனங்காடுமாக நிலம் விரவிக் கிடந்தது. மருதமும் நெய்தலும் மயங்கிய நிலவெளி பாலிஹில்லின் பெரும்பகுதி—கோல்ப் மைதானம் உட்பட—தண்டா வரை, முல்ராஜ் கடாவ் என்பவரின்

தனிச்சொத்தாகும். அது ஒரு மாபெரும் மாந்தோப்பாகும். ஒட்டு மாம்பழ மரங்கள்—பெரும்பாலும் அல்போன்சும் பெர்ரியும்தான். வீட்டுமனைகள் முதன்மையாகவும் முக்கியமாகவும் வெள்ளையர்க்கே விற்கப்பட்டு, அந்த வட்டாரமே கிட்டத்தட்ட 'வெள்ளையர் மட்டும்' நகரமாக ஆகிப்போனது. பங்களாக்கள் எல்லாமே காலனியாதிக்கத் தோற்றங்கொண்ட மாடியில்லாத விசாலமான அழகிய மாளிகைகள்தான். ஓடு வேய்ந்த கூரைகள். சிறப்பாக பராமரிக்கப்பட்ட புல்வெளியும் பூச்செடிகளும் வெளிகளை அலங்கரித்தன. இன்னும் சொன்னால் வீட்டில் மூன்றில் இரண்டு பகுதி திறந்த வெளியாகவும் ஒரு பகுதி மட்டுமே கட்டிடமாகவும் இருக்கவேண்டும் என்று மாநகராட்சி விதி ஒன்று சுதந்திரம்வரும் வரையும் அதன்பிறகும்கூட கொஞ்ச காலமும் இருந்தது. அந்நாளில் நல்ல சாலைகளோ, மின்வசதியோ, நகராட்சியின் சுகாதார சேவையோ கிடையாது. குறைந்த அளவான, நிச்சயமற்ற குடிநீர் வசதிமட்டும் உண்டு. அப்பகுதியில் குறிப்பிடத்தக்க அடையாளப் பகுதி பெடிட் பார்சி அநாதை இல்லம் (இப்போது அவாபாய் பெடிட் மகளிர் மேல்நிலைப்பள்ளி) ஆகும். நல்லவேளையாக இந்த இடம் அப்போது திரைப்பட நட்சத்திரங்கள் கண்களில் படவில்லை.

மலையில் சரிவான பகுதியான கோல்ப் மைதானம் முதல் கார்ட்டர் சாலைவரை—வயல்களும் கோல்ப் திடலும் முடியும் பகுதி—கர்வண்டா, பேர், பாபுல், ஈச்சமரம், அடர்நிழல்தரும் புளிய மரம், ஆலமரம் முதலிய தென்கொங்கணத்திற்கே உரிய தருக்கள் நிறைந்த சாயாவனமாக இருந்தது. பறவைகளை ரசிக்க உன்னதமான உலகம். 1924இல் பாலிஹில்லில் வசித்தபோதுதான் ஒரு குறிப்பிட்ட நோக்கத்துக்கான பெரும்பான்மையான சேகரிப்பும் ஆய்வும் நடத்தினேன். 'பம்பாய்ப் பறவைகளும் சால்செட்டிப் பறவைகளும்' என்ற தலைப்பில் ஒரு ஆய்வுக்கட்டுரை எழுதுவதுதான் அந்த நோக்கம். 'பம்பாய்ப் பாம்புகளும் சால்செட்டி பாம்புகளும்' என்ற மிக உதவிகரமான, பிராடரின் நூலுக்கு தொடர்நூலாக இதை திட்டமிட்டிருந்தேன். அது அப்போதுதான் மும்பை இயற்கை வரலாற்றுக் கழக வெளியீடாக வந்திருந்தது. என் கட்டுரை பல ஆண்டுகளுக்குப் பின்பு கழகத்தின் பத்திரிகையில் ஹுமாயூன் அப்துலாலியும் நானும் உருவாக்கிய கூட்டுப்படைப்பாக வெளியாயிற்று. புனித சேவியர் கல்லூரியில் பட்டப்படிப்பு படித்துக் கொண்டிருந்தபோது ஹுமாயூனும் நிறைய விஷயங்கள் சேகரித் திருந்தான். அப்போது கல்லூரியில் உயிரியல் இயக்குநராயிருந்த சேசு சபைப் பாதிரியாரும் ஸ்பானிஷ்காரருமான மறைத்திரு

பலாசியோஸ் கொடுத்த ஊக்கம் அவனுக்கு உரமாயிருந்தது. பந்த்ராவுக்கும் சர்ச் கேட்டுக்குமிடையே அலுவலகத்துக்கு ஆன பயணம் நீராவிப் புகைவண்டிகளில் நடந்துகொண்டிருந்த காலம் அது. அப்போதுதான் மின்சார ரயில் போக்குவரத்தை ஆரம்பித்தார்கள். மேற்பகுதியில் இரும்பு மின்கம்பிகளும் காக்கைக் கூடுகளும் உரசி அடிக்கடி மின்சாரம் தடைபட்டு வண்டி நின்று போகும், தடைபடும். பிறகு காக்கைகக்கூடுகள் பாதிக்காத வகையில் மின் ஏற்பாடுகள் மாற்றப்படும் வரை இதே தொல்லைதான். கார்கள் குறைவு. சாலைகளும் தார்போடாத புழுதிச் சாலைகள்தான். பாலிஹில் பகுதி தவிர, சால்செட்டியில் என் பறவை சேகரிப்பு, போவாய், துல்சி ஏரி, விஹார் ஏரி, டிராம்பே குன்று, முலுண்ட், விக்ரோலி, பாண்டுப், கோரட்பந்தர், பைண்டிர் போன்ற வனப் பகுதிகளில் நடந்து வந்தது. ஞாயிற்றுக்கிழமைகளிலும் பிற விடுமுறைகளிலும் பிராடர், மாக்கேன், வேல்ஸ் இளவரசர் அருங்காட்சியக செயலர் ஜேக்கப்ஸ் ஆகியோரும் இந்தத் தேடலிலும் சேகரிப்பிலும் அடிக்கடி பங்கேற்று வந்தனர். பல எதிர்பாராத பறவைகள் கிடைத்தன. மலபார் ட்ரோகான், மூன்று விரல் மீன்கொத்தி இரண்டும் இப்போதும் நினைவிருக்கிறது. இப்போது கோத்ரெஜ் குழுமம் உள்ள இடத்தின் பின்புலமாக இருக்கிற முலுண்ட் குன்றுகள் உள்ள விக்ரோலி பகுதி அடர்ந்த காடாக இருந்தது. ஏரிகளின் நீர் பிடிப்புப் பகுதிகளும், இன்றைய ஆரே பால்பண்ணை, போரிவில் தேசியப்பூங்கா ஆகியவை உள்ள பகுதிகளும் ஒரே தொடர்பரப்பாக அடர்ந்த காடாக இருந்தன. பனந்தோப்புகளும் இருந்தன. பன்றிகளும் குரைக்கும் மான்களும் சாம்பர் மான்களும் ஓடிக்கொண்டிருக்கும். சிறுத்தைகள் அடிக்கடி வரும், போகும். கடைசி புலி 1929இல் விஹார் ஏரியருகே சுடப்பட்டது.

காமு குழந்தைகளுடன் ஜப்பான்போய் பாலி மாளிகை வாடகைக்கு விடப்பட்டதும் நாங்கள் என் மாமனார் டி.ஏ. லத்தீப் அவர்களின் 'லத்தீபா'வுக்கு குடியேறினோம். அந்த அடுக்குக் குடியிருப்பு வீட்டின் மேல்மாடியில் நாங்கள் வசித்தோம். சௌபாத்தியில் வில்சன் கல்லூரிக்குப் பின்புறம் ஹார்வி சாலையில் லத்தீபா அமைந்திருந்தது. பம்பாய் மாகாண மகளிர் சங்கச் செயலராக தெஹ்மினாவுக்கு பகுதிநேர வேலை கிடைத்தது. நகராட்சி மண்டபத்து தென்பகுதியில் அவர்கள் அலுவலகம் அமைந்திருந்தது. அப்போது இந்திய விலங்கியல் சங்கம் (Zoological sung) ஒரு பறவை இயலாளர் வேலைக்கு விளம்பரம் செய்யவே நானும் மனுப் போட்டேன். மறைத்திரு பிளாட்டர் பாதிரியாரையும்

முனைவர் ஸ்ட்ரெஸ்மான், அவர்களையும் மும்பை இயற்கை வரலாற்றுக் கழகத்தையும் என்னைப் பற்றித் தெரிந்தவர்கள் என்றும் குறிப்பிட்டேன். ஆனால் முதுநிலைப்பட்டதாரிகளுக்கும் முனைவர் களுக்கும் நடுவே பட்டதாரியே அல்லாத எனக்கு வாய்ப்பேது? எம்எல்ஜுன்வால் என்பவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர் 1965இல் ஓய்வு பெறும்போது அந்த சங்கத்தின் நெறியாளர் பதவியிலிருந்தார். சுந்தர்லால் ஹோராவை அடுத்த நெறியாளர் இவர்தான். அந்த சமயத்தில் இந்த வேலை கிடைக்காததால் நான் மிகவும் மனமுடைந்து போனேன். ஏனென்றால் ஒரு பறவையியலாளனுக்கு ஏற்றவேலை இந்தியாவைப் பொறுத்தமட்டில் பிறகு எங்கே எப்போது வரும் என்று எப்படி சொல்லமுடியும்? அரசுப் பணிக்கு ஆசைப்படும் இளைஞர்களுக்கு என் அறிவுரை: ஒரு பட்டதாரியாகிக்கொள்ள ஒருபோதும் மறந்துவிடாதீர்கள். அதற்கு மரியாதை எவ்வளவு (குறைவு) என்றாலும் சரி! எது எப்படியாயினும் அந்த வேலை கிடைக்காததை இப்போது பின்னோக்கிக் காண்கையில் உறைந்துபோன அதிகார வர்க்கத்தினனாக ஆகிவிடாமல் பிழைத்தோம் என்று மகிழ்ச்சிதான்! எனக்கு நேர்ந்திருக்கக்கூடிய எதையும்விட நற்பேறு அதுதான்!

'பூரோச்சில் பார்சி மகளிர் பள்ளியில் 1917இல் காமு ஆசிரியப் பணிபுரிந்தபோது திருமதி டிராக்கப் என்ற மூதாட்டி பம்பாய் மாகாண பள்ளிக் கண்காணிப்பாளராக இருந்தார். காமுவுக்கு இவர் மிகவும் நெருக்கம். ஓய்வுபெற்றபின், (1925-26) மாநில அரசில் செயலாளராக இருந்த மகனுடன் அவர் வசித்து வந்தார். அது ஒரு அழகிய ஆங்கிலநாட்டு 'வில்லா' மாதிரி வீடு. செம்பூரில் பம்பாய் வளர்ச்சிவாரியம் கட்டத் திட்டமிட்டிருந்த பொன்நகரத்திற்காக மாதிரியாக கட்டப்பட்ட வீடு. பிறகு பொன்னகரத்திட்டம் கைவிடப்பட்டு விட்டது. அரசு அந்த மாளிகையை விற்கும் முயற்சியிலிருந்தது. என் மாமனார் கம்ருதீன் என் மனைவிக்காக அதை வாங்க ஆவலாயிருந்தார். திருமதி டிராக்கப் நாங்கள் அந்த வீட்டைப் பார்ப்பதற்கு வசியாக எங்கள் மூவரையும் ஒருநாள் தேநீர் விருந்துக்கு அழைத்தார். சௌபாத்தி குடியிருப்பை விட்டுவிட்டு, நாங்கள் தோட்டம் போட்டு எங்களுக்கான கறிகாய்களையும் மலர்களையும் பயிர்செய்துகொள்ள வசதியாக புறநகர்ப்பகுதியில் குடியேறலாமே என்பது எண்ணம். என் துணைவி அதற்காக ஏங்கிக் கொண்டிருந்தார்—நான் திறந்த வெளிகளுக்கும், பறவைகளுக்காக திரிவதற்கும் ஏங்கிக் கொண்டிருந்தாற்போல!

அந்த பவனம் மிகக் கவர்ச்சிகரமான சூழலில் இருந்தது. நன்கு

அலங்கரிக்கப்பட்டு, அழகாக பராமரிக்கப்பட்டு வந்தது. சுற்றிலும் பச்சைப்புல்வெளிகளும் தாவரங்களும் ஒழுங்காக வளர்க்கப் பட்டிருந்தன. மூவருக்குமே அதைக் கண்டதும் காதல்தான். எவ்வளவு சொக்கிப்போனோம் என்றால், மிக நிதானமானவரும், கூர்மதியாளரும் திறம்வாய்ந்த வணிகருமான கம்ருதீன் மாமா மறுநாளே அதை வாங்க அரசுடன் பேச்சு வார்த்தை துவங்கி விட்டார்! பேரங்கள் விரைவாக நடந்து கொண்டிருந்தன. முடிந்த மாதிரிதான். எங்கள் இருவருக்கும் பொறுமையேயில்லை. ஒரே பரபரப்புதான். திரைகளும் படுதாக்களும் எப்படி இருக்க வேண்டும், எவ்வித அலங்கரிப்புகள் வேண்டும், அதுஇது என்று தெஹ்மினா அப்போதே திட்டமிட ஆரம்பித்துவிட்டார். எனக்கும் பலகாலமாகக் கற்பனை செய்துவந்த பறவைக்கூண்டு பரிசோதனைகள் பற்றிய கனவுகள்தான். அந்நாட்களில் போதிய பேருந்துகள் இன்மையால், தினம் செம்பூருக்கும் நகரத்துக்கும் பயணம் செய்வது இருவர்க்குமே மிகவும் களைப்பாகவும் சிரமமாகவும் இருக்குமென்பதையும், புகைவண்டிநிலையம் மூன்று மைல்தூரம், புகைவண்டி வசதியும் சொல்லிக்கொள்ளக்கூடியதாக இல்லை என்பதையும் நாங்கள் உணர்ந்திருந்தாலும் ஒட்டுமொத்தக் கவர்ச்சி அவ்வளவு அதிகமாக இருந்ததால் அந்த சிரமங்களை எண்ணி நாங்கள் அதிகம் கவலைப் படவில்லை.

ஆனால் விதியின் நினைப்பு வேறாக இருந்தது. மாமாவின் பேரத்தை அரசு ஏற்றுக்கொண்ட அதே சமயம் அவர் காலமானார். அவர் இறந்த மறுநாள் அரசின் ஒப்புதல் கடிதம் வந்து சேர்ந்தது. ஒரு புதுக்குடித்தனத்தை மாமாவின் உதவியின்றி எங்கள் வருமானத்தைக் கொண்டு மட்டுமே சமாளிப்பது என்பது அப்போது முடியாத காரியமாயிருந்ததால் துயரத்துடன் அதைத் தொடர்ந்து நடவடிக்கை எடுக்காமல் விட்டுவிட்டோம். இவ்விதமாக ஒரு கனவு கலைந்து போனது.

மும்பை இயற்கை வரலாற்றுக் கழகத்தில் எனக்கு வேலை கிடைத்தபிறகும் நாங்கள் மாமனாரின் 'லத்தீபா' இல்லத்திலேயே தொடர்ந்து வசித்து வந்தோம். செய்ஃப், பத்ரு இருவரும் புறவீட்டில் பணம்செலுத்தும் விருந்தினராகத் தங்கியிருந்தனர். செய்ஃப் சட்டக்கல்லூரியிலும், பத்ரு புனித சேவியரிலும் படிப்பைத் தொடர வேண்டி மும்பையிலே தங்க நேரிட்டிருந்தது. அவர்களின் பெற்றோர் பெய்ஸ், தலீமா இருவரும் கராச்சி போய்விட்டனர். பெய்ஸ் சிந்து மாகாண நீதிபதியாக பொறுப்பபேற்க அங்குபோக வேண்டிய தாயிற்று. 1927 பிப்ரவரியில் மாமனார் காலமானதும் நாங்கள்

தனிவீடு பார்க்க நேர்ந்து, பைகுல்ல ரெப்ஸ்க் வீதியிலிருந்த 'ஒற்றுமையரங்கம்' என்ற பெயர்கொண்ட, மிக நன்கு பராமரிக்கப் பட்டு வந்த ஒரு கட்டிடத்தில் இரு படுக்கையறை கொண்ட வசதியான ஒரு சிறு குடியிருப்புக்கு மாறினோம். இரண்டு கட்டிடங்களுக்கப்பால் இருந்ததும், கிறித்தவ இளைஞர் மன்ற கிரிக்கெட் மைதானமுமான திடலைப் பார்த்தவாறு அக்கட்டிடம் அமைந்திருந்தது. அப்போது அது இனிமையான, அமைதி நிலவுகிற கவுரவமான குடியிருப்புப் பகுதியாயிருந்தது. இப்போது பேர்கெட்ட அசுத்தமான மக்கள் முட்டிமோதிக் கொண்டு வாழ்கிற குப்பமாக மாறிவிட்டது. இன்றைய தோற்றத்தை வைத்து அதைப்புரிந்துகொண்டுவிடக்கூடாது. கீழ்மத்திய மக்களின் சாவடி வீடுகளில் மைதானம்தான் காணாமல் போய்விட்டதே!

நாங்கள் அங்கு சென்றபின் ஜப்பானிலிருந்த காமுவுக்கு என் துணைவி 23.6.27 எழுதிய மடலில் கூறுவதைப் பாருங்கள்...

> "அருமையான சிறுவீடு. என்னைக் காணவரும் எல்லாரும் மயங்கிப்போகிறார்கள். அவ்வளவு அருமையான பகுதியில் முதல்மாடியில் இருக்கிறது. முன்னால் ஒரு மைதானம். ஆகவே நாங்கள் சிறைப்பட்டதுபோன்ற உணர்வின்றி இருக் கிறோம். தோட்டம் இல்லைதான். அந்தக் குறையை இது சரிசெய்கிறது. முகப்பில் ஒரு பெரிய அறை இருக்கிறது. அதை திரைபோட்டு உணவுக்கூடம், வரவேற்பறை என இரண்டாகப் பிரித்துள்ளோம். இதைத்தவிர இரு சிறிய அறைகளும், அழகிய குளியலறையும் உள்ளன. அறைகளில் ஒன்று படுக்கையறை. மற்றது சலீமின் 'குகை'. தானே அமைத்துக்கொண்ட துப்பாக்கி அலமாரி, அவரது மேசை, எங்கள் புத்தக அலமாரிகள், சில வசதியான ஆசனங்கள் ஆகியவற்றை அங்கே வைத்துள்ளோம். அவருக்கு அங்கே போய்விட்டால் பரமானந்தம்தான். தொந்தரவு செய்தால் பிடிக்காது! அப்பா சொத்தில் என் பங்காக கிடைத்துள்ள சில பாத்திரங்களும் வேறுசில சாமான்களும் வீட்டின் அழகிய தோற்றத்தை அதிகரிக்கின்றன. சில மேசை, நாற்காலிகள் வாங்கியிருக்கிறோம். சில நாங்களே சொல்லி செய்திருக்கிறோம். ஜாகப் காலத்து நாகரிகத்தை சேர்ந்தவை. நானே சொல்லக்கூடாதுதான். ஆனாலும் மிக அழகானவை. உணவருந்தும் மேசைக்கு மேலே துணி ஏதும் போடவில்லை. மெல்லிய பாய்களும் மெல்லிய விரிப்புகளும்தான். அருமையாக மெருகூட்டப்பட்ட முட்டை வடிவ மேசை

மிக அழகாக இருக்கிறது. நேற்றிரவு பத்மாவும் திருமதி நாயுடுவும் சாப்பிட வந்திருந்தார்கள். அருமையாக பொழுது போயிற்று. அவர்கள் இருவரும் மிகவும் அருமையான தோற்றப் பொலிவு கொண்டவர்கள் மட்டுமல்ல, அழகாகப் பேசவும் வல்லவர்கள். அவர்களின் சுவையான பேச்சில் சிரித்து சிரித்து வயிற்றுவலியே வந்துவிட்டது."

பள்ளி நாட்களில் என் வகுப்புத் தோழனாயிருந்த உஸ்மான் சேபானி இந்த மூன்றுமாடிக் கட்டிடத்தின் மேல்மாடியில் வசிப்பதைத் தற்செயலாகக் கண்டுபிடித்தேன். ஒத்துழையாமை, கிலாபத் ஆகிய இயக்கங்களில் தன் அண்ணன் உமர் அளவுக்கு உஸ்மான் நேரடியாக ஈடுபடவில்லையெனினும், திருமதி சரோஜினி நாயுடு, ஷௌகத்அலி குரேஷி உள்ளிட்ட அன்றைய முக்கிய தேசியத் தலைவர்கள் பலரடங்கிய உயர் உள்வட்டத்தலைகளுடன் இவனுக்கும் உறவிருந்தது. நளினமான தரமாக அலங்கரிக்கப்பட்ட இவனது இல்லத்துக்கு அவர்கள் அடிக்கடி வருவார்கள். (திருமணமாகாததால் இவன் தனியாகவே வாழ்ந்துவந்தான்). இதனால் அரசியல் வட்டாரத்தினுள்ளும் நாங்கள் பழகுவது தவிர்க்க இயலாததாயிற்று. ஆனால் 'எதிரணி'யிலும் எங்களுக்கு நண்பர்கள் இருந்தனர். அவர்களில் வெள்ளையரும் உண்டு. அந்த நட்பிலும் எங்களுக்கு ஆழ்ந்த ஈடுபாடு. எனவே அரசியலில் நாங்கள் வெளிவிளிம்பிலேயே நின்றுகொண்டோம். அதோடு, இயற்கை வரலாறு, பறவைகள் என்ற என் முன்னுரிமை ஈடுபாடுகளிலிருந்து என்னைத் திருப்பக்கூடிய எதிலும் ஈடுபட நான் விரும்பவில்லை.

அவை வெவ்வேறு உலகங்கள். ஆக நாங்கள் இருவேறு உலகத்தியற்கையிலிருந்தும் நன்மை பெற்றோம்! காங்கிரஸ் செயற்குழுக் கூட்டம் என்றால் உடனடியாக சேர்ந்துகொள்ள வசதியாக சரோஜினிநாயுடு மும்பை தாஜ் ஓட்டலில் தங்கியிருந்தார். என் ஞாபகம் சரியாயிருந்தால், அவர்தான் அப்போது அதன் தலைவர். இல்லாவிட்டாலும் அவர் காந்திஜியின் நெருங்கிய சகாக்களில் ஒருவர். நம்பிக்கைக்குரியவர். அதுவே அரசியல் சரியான சூடு பிடித்திருந்த நேரம். அறிவுக்கூர்மையும் நகைச்சுவையும் அவரது ஆயுதங்கள். இன்று போலவே அன்றும் அரசியல் வாதிகளிடம் நகைச்சுவை உணர்வு அரிதாகவே அமைந்திருந்தது. சீர்கேடான நிலைகளில் உணர்வுகளைத் தூண்டிவிடவும் அவரால் முடியும். பல்வேறு குழுவினரின் உட்சண்டைகளைத் தவிர்த்து

இணைத்துச் செல்லவும் முடியும். மகிழ்ச்சிக்குரிய நகைச்சுவை உணர்வு என்பது மட்டுமல்ல. தன்னையும் தன் இயல்புகளையும் பார்த்தே சிரிக்கக்கூடிய அரிய பெருந்தன்மையான நகைச்சுவை அவருடையது. தான் பெரிய தலைவர் என்று நினைத்து அதனால் பாதிப்படைவதில்லை. அப்படிப்பட்டோர் அரசியலில் அரிது. காந்தியாரையே கேலியும் கிண்டலும் செய்யக்கூடிய தலைவர் உள்மட்டத்திலேகூட அவரைத் தவிர யாரும் இருக்கவில்லை. சும்மா சொல்லக்கூடாது, காந்தியடிகளும் தன்னைப் பற்றிய கிண்டல்களையும் ரசித்து, சுவைத்து மகிழ்கிறவர்தான். இயல்பாய் பழகுகிற தனிப்பட்ட நண்பர் குழாம்களில் அம்மையார் காந்தியாரை 'மிக்கி மௌஸ்' என்று குறிப்பிடுவதும் அவரும் லேசான மனதுடன் எளிய சிரிப்போடு அதை ஏற்றுக் கொள்வதும் வழக்கம்தான். அரசியலுக்கு வராத நாட்களிலேயே சரோஜினிக்கு தியாப்ஜி குடும்பத்துடன் இனிய நல்லுறவு இருந்து வந்தது. அதிலும் குறிப்பாக என் தாய்மாமன் அப்பாஸ் தலைவராயிருந்த பரோடா கிளையினருடன் நெருக்கம் அதிகம். பின்னாளில் பர்தோலாய் அறப்போரிலும், உப்புச் சத்தியாக்கிரகப் போராட்டத்திலும் (1930) இருவரும் சகபோராளிகளாயிருந்தனர். ஒருநாள் உஸ்மானைப் பார்க்க வரும்போது நானும் தெஹ்மீனாவும்கூட அதே கட்டிடத்தில் குடியிருப்பதை அறிந்த பின்பு மேலே போகும்போதோ திரும்பும் போதோ அவர் எங்கள் வீட்டுக்கும் அடிக்கடி வரலானார். எந்தவித சடங்கு மரியாதைகளுமின்றி அவர் வருகைகள் இருபாலாருக்கும் உவகை தருவனவாயிருக்கும். அவருடன் உரையாடுவதே சுகானுபவமாகும். சுவையான நிகழ்ச்சிகள் ஏராளமாகச் சொல்வார். மற்றவர்கள் போல பேசிக்காட்டுவார். உண்மைக்கதைகள் சொல்வார். அவரது புத்தம் புதிய கவிதைகளை சொல்லி மகிழ் வூட்டுவார். பழையனவும் புதியனவுமாய்ப் பலவிந்தை நிகழ்ச்சிகளைக் கூறிச் சிரிப்பூட்டுவார். மறக்கமுடியாத நினைவுகளைப் பகிர்ந்து கொள்வார். இத்தனையிலும் அவரது தனி முத்திரையுடன் கூடிய நகைச்சுவை இழை தொடர்ந்து வரும். சமகால அரசியல்வாதிகளின், குறைகள், விசித்திரப் பண்புகள் பற்றிய அவரது கணிப்புகள் மிகவும் கூர்மையாகவும் இருக்கும், கேட்கச் சுவையாகவும் இருக்கும்.

ஒருநாள் வழக்கப்படி திடீரென்று வந்தபோதுதான் அவர் அழைத்து வந்து இருவரை அறிமுகப்படுத்தினார். ஒருவர் அன்றைய கிலாபத் இயக்கத்தின் மும்பைத் தலைவர், வேகமாக மூச்சுவிடும் படபடப்பான மௌலானா ஷௌகத் அலி. மற்றவர் அவரது சக தொண்டர் குரேஷி. அழகும், நேசிக்கத்தக்க குணமும் கொண்ட

குரேஷி மிக விரைவில் எங்கள் நெருங்கிய நண்பராகவும், அடிக்கடி வரும் விருந்தினராகவும் ஆகிப்போனார். அவருக்கு இருந்த ஆழமான வெண்கலக் குரலில் கவிஞர் இக்பாலின் நெகிழ்வூட்டும் தேசியப் பாடல்களையும் இசுலாமிய கீதங்களையும் பாடி மகிழ்விப்பார். கவிஞரென்ற முறையிலும் சரி இசுலாமியர் என்ற வகையிலும் சரி இக்பாலிடம் குரேஷிக்கு மிக அபாரமான ஈடுபாடு இருந்தது. அவற்றில் ஒரு அழகிய பாடல் இப்போதும் என் செவிகளில் கணீரென ஒலித்துக் கொண்டிருக்கிறது. ஒரு காலத்தில் ஐரோப்பாவில் இசுலாமின் கோட்டையாக விளங்கிய சிசிலித்தீவின் ஏற்றமும் இறக்கமும் பற்றிய ஒரு போற்றிப்பாடல் அது. குரேஷி ஒரு துருக்கி நேசன், துருக்கியின் சீர்திருத்தத் தந்தை அன்வர் பாஷாவின் தாசன்! பால்கன்போரில் (1912) டாக்டர் அன்சாரி தலைமையில் சென்ற மருத்துவக் குழுத் தொண்டர்களில் குரேஷியும் இருந்தார். போர் நடந்து கொண்டிருக்கையிலேயே களத்தில் காயம் பட்டவர்களை மீட்பதில் குரேஷி காட்டிய வீரசாகசம் வியந்து பாராட்டப்பட்டது.

இந்தியாவில் 1927இல் குளிர்சாதனப்பெட்டி ஒரு புதுமை. நாங்கள்தான் எங்கள் குடும்பத்தினரிடையில் முதன்முதலில் வாங்கியவர்கள். மாம்பழ காலத்தில் கெல்வினேட்டர் மகா மகிழ்வூட்டியாக அமைந்தது. குளிர்பதனமான அல்போன்சாவின் சுவையே அலாதிதான். ஒரு நண்பர் இருந்தார். அவரது தோட்டம் அதன் மாங்கனிகளாலேயே பெயர் பெற்றது. அவை அவ்வளவு அருமையானவை. ஒருநாள் அவர் எட்டு மாங்கனிகள் அனுப்பி வைத்தார். அதுவும் நல்லதாக பார்த்து தெரிவுசெய்து அனுப்பி யிருந்தார். சிறிது நேரத்தில் கதவு தட்டப்பட்டது. தட்டியவர் 'மகா கனம்' (!) மௌலானா! உஸ்மான் வீட்டுக்குப் போய்க்கொண் டிருந்தவர் வழியிலே இப்படி ஒரு பார்வை. விருந்தோம்பலில் குறை வரக்கூடாது என்ற நல்ல மனதில் தெஹ்மினா செய்ததுதான் தவறு ஆகிப்போயிற்று. ஒரு குளிர்ந்த மாங்கனி சாப்பிடுங்களேன் என்று கேட்டார். இந்தத் தப்பை பிறகு ஒருபோதும் செய்யவில்லை என்பது வேறு. குளிரூட்டப்பட்ட பழம் தான் இதுவரை சாப்பிடாத ஒன்று என்று கூறிய திருவாளர் அந்த வேண்டுகோளை ஏற்றுக் கொண்டார். அப்போதுதான் தெஹ்மினா அந்தத் தவறு செய்தார். திருத்திக் கொள்ள நேரமில்லை. ஒன்றுமில்லை, பாத்திரத்தை அப்படியே அவர் முன்பு வைத்துவிட்டார். பசித்திருந்த நல்விருந்தாளி, அதுவும் என்ன ஒரு பெரிய உடல்! ஒவ்வொன்றாக சாப்பிட்டார். ஒரு பழம் முடிந்ததும் சில பாராட்டுகள். உடனே அடுத்தது! கடைசியில்

பாத்திரம் இருந்தது. பாத்திரத்தில்தான் ஒன்றுமில்லை! எங்கள் உணர்ச்சிகளை வெளிக்காட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கையில் ஒன்றையடுத்து ஒன்றாக, பிரமிக்கவைக்கிற வேகத்தில் எட்டு கனிகளும் அந்தப் பரந்த வயிற்றினுள் பதுங்கிவிட்டன. ஒரு அருமையான பாடத்தை உண்மையிலேயே ஒழுங்காகக் கற்றுக் கொள்ள அவை விலையாயின.

ஒரு காலத்தில் காந்தியராக தேசியவாதியாக காங்கிரஸ் காரனாக இருந்த உஸ்மான் முழுதும் தலைகீழாகி ஏதோ காரணத்தால் நூற்றுக்குநூறு காங்கிரஸ் எதிரியாகி, ஜின்னா பக்தனாகி பாகிஸ்தான்வாதியானது துரதிருஷ்டவசமானது. போபால் சமஸ்தானம் இந்தியாவில் சேர்ந்ததால், போபால் நவாபிடம் அமைச்சராக இருந்ததை விட்டுவிட்டு பாகிஸ்தான்போய் இறுதியாக பாகிஸ்தான் மத்திய அரசில் அமைச்சராகவும் ஆனார்.

மாமனார் காலமானதும் தனிக்குடித்தனம் போனதும் நாங்கள் செய்த முதல் வேலைகளில் கார் வாங்கியதும் ஒன்று. ஏழு குதிரைத் திறன் (எச்.பி) பேபி ஆஸ்டின் ஒன்று வாங்கினோம். அந்த சிறிய காரின் விலை ரூ. 1700/- புத்தம்புதிதாக, அதிர்வு தாங்கிகள், கண்ணாடியில் மழையைத் துடைக்கும் கருவிகள் எல்லாம் சேர்த்து. ஷெல், பர்மாஆயில் என்ற இரு குழுமங்களுக்கிடையிலான கடுமையான போட்டியால் பெட்ரோல் விலை காலனுக்கு பதினோரு அணா. ஒரு காலனுக்கு 45மைல் கொடுத்தது. சாலை யோரத்து பெட்ரோல் நிலையங்கள் மிகக்குறைவு. அவையும் ஒன்றுக் கொன்று அருகில் இருக்காது. இரண்டு காலன் டின்களில்தான் பெட்ரோல் கிடைக்கும். ஷெல்கம்பெனியின் டின் சிவப்பு; பர்மாஆயில் பச்சை. கசங்கிப்போன பழைய குறிப்பேடு ஒன்றில் காணப்படுவதுபோல, புனாவுக்கும் அப்பால் இருந்த லுனான்ட் என்ற இடத்துக்கு வேட்டைக்காக போய்த் திரும்ப மொத்தம் 300 மைலுக்கும் அதிகம்—பெட்ரோல் செலவு பதின்மூன்றரை ரூபாய்!

கோட்டை பகுதிக்கு இருவரும் ஒன்றாகவே போவோம். தெஹ்மினாவை அவரது பணிமனையான மகளிர் கழகத்தில் இறக்கிவிட்டுவிட்டு நான் வேல்ஸ் இளவரசர் கண்காட்சியகத்துக்குப் போவேன். மகளிர் கழகம் நகரமன்றத்தின் மேற்குப் புறத்தில் இருந்தது. தனக்குப் பிடித்த ஆங்கில நாவலாசிரியை ஜேன் ஆஸ்டென் நினைவாக எங்கள் ஆஸ்டினுக்கு தெஹ்மினாவைத்த பெயர் 'ஜேன்'. சரிவான பகுதிகள் இணைகோடுகள் போல் அமைந்த சாலையில் ஓட்டிச் சென்று அப்போது இயற்கை வரலாற்றுக் கண்காட்சி இருந்த கட்டிடத்து உயரமான திறந்தவெளி வராந்தாவில்

அதை நிறுத்திவைப்பேன். ஞாயிறு உள்ளிட்ட விடுமுறைநாட்களை ஜேன் உல்லாசமாக்கியது. இன்பப் பயணங்கள், பறவை சேகரிப்பு மட்டுமின்றி வேட்டைக்குப் போவதுமுண்டு. வேட்டை என்றால் புறநகர்ப்பகுதிகள், சால்செட்டி நகருக்குள், வெளியே நெடுந்தொலைவு இப்படி எங்கெங்கோ போவோம். நிதானமாக அனுபவித்து நெடும்பயணங்கள் சென்ற விடுமுறைகளும் உண்டு. மும்பையிலிருந்து சுமார் 200 மைல்வரை—புனே, ஔரங்காபாத், நாசிக் ஆகிய இடங்களுக்குப்போவோம். சாலைகள் தார்பாவப்படாத குண்டும் குழியுமான புழுதிச் சாலைகள்தான். அதனால் இன்னும் அதிக தொலைவு போவது தடைபட்டது. ஜேன் மாதிரி ஒரு சின்னஞ்சிறு வண்டி வைத்திருப்பவன் சாலைகளை நிதானமாகவும் சிந்தித்தும் தேர்ந்தெடுக்கவேண்டியிருந்தது. ட்ரக் முதலிய கனரக வண்டிகளால் எப்போதும் ஒரு தொந்தரவு இருந்தது. அவை ஜேனைத் தாண்டிப் போகும்போது கிளப்பும் புழுதியில் நம்மை ஒரேயடியாக மூழ்கடித்துவிடும். நதிகளுக்கும் சாக்கடைகளுக்கும் பஞ்சமில்லாத குறை மழைக்காலத்தில் அவற்றைக் கடக்க முடியாமல் செய்திடும். ஒருமுறை புனே—ஔரங்கபாத் பெருஞ் சாலையில் பாலமில்லாத பீமா நதியின் மணல்படுகையில் சிக்கிக் கொண்டது நினைவு வருகிறது. அரைவழியில் பாதி வண்டி நீருக்குள் இருக்கையில் இஞ்சின் நின்றுபோய் வயலில் உழுது திரும்பியஒரு இணை காளைகள் காரை சிரமமின்றி சாதாரணமாக இழுத்துக் கரையேற்றின! ஜேன் எடைக்குறைவாக இருந்ததால் விளைந்த இன்னொரு பயன் எங்காவது பாதிவழியில் நகருக்குள்ளே பெட்ரோல் தீர்ந்துவிட்டால், அடுத்த பெட்ரோல் நிலையத்துக்கு தனியாளாகவே இழுத்துச் செல்வது மிக எளிது!

புனே தாண்டி, ஷோலாப்பூர், அல்லது அதையும் கடந்து சென்றால் கருப்பு மான்கள் அதிகம். சாலையிலிருந்து பார்த்தாலே இருபுறமும் காணப்படும். சாலையின் குறுக்கும் நெடுக்கும் வந்து கொண்டேயிருக்கும். எங்குவேண்டுமானாலும் காரை நிறுத்தி—துப்பாக்கி உரிமம் வேண்டியதில்லை—வேட்டையாடி, வாரமுடிவில் வேட்டையாடிய 'அதிகப்படி மான்களை' தாஜ் போன்ற பெரிய உணவு விடுதிகளுக்கு 'இறந்தமான்' என்று புகைவண்டியில் அனுப்பி, 'பெறுபவர் பணம் செலுத்த' என்ற முறையில் அனுப்புகிறவர்கள் பலர். முன்னறிவிப்பின்றியே இதைச் செய்யலாம் என்ற நிலை நிலவி வந்தது. விடுதி நன்றியுடன் இதைப்பெற்றுக்கொண்டு மானுக்கு ஐந்து ரூபாய் வீதம் அனுப்பியவருக்கு பணம் அனுப்பிவிடும். சுடுவது அனுமதிக்கப்படும் பருவங்களில் இப்படி பல புகைவண்டிப்

பார்சல்கள் முறையான வேட்டைக்காரர்கள் என்று சொல்லிக் கொண்டவர்களால்கூட அனுப்பப்படும். நாள்தோறும் பல விடுதிகள் அவற்றை வாங்குவதும் அவர்களின் உணவுப் பட்டியலில் 'மான்கறி' என்று சர்வசாதாரணமாக விளம்பரம் செய்வதும் வழக்கம். இப்படிப்பட்ட மோசமான சூழலில் மழைகாலத்தில் மான்கள் நிலை அதோகதிதான். கனத்த சேறு ஓட்டத்தின் விரைவை சிதைத்துவிடும். தொழில்முறை வேட்டையர்க்கு அதன் முழுப்பலனும் லாபமாகி விடும். நான்கு சக்கர ஜீப்கள், சக்திவாய்ந்த சுழல் விளக்குகள், எளிதில் புழங்கப்பட்ட துப்பாக்கி உரிமங்கள் ('பயிர் பாதுகாப்பு' என்ற பொய்மூலம்!) இரண்டாம் உலகப்போருக்குப்பின், அதிலும் குறிப்பாக விடுதலைக்குப் பின் சட்டம் ஒழுங்கு நிலையில் ஏற்பட்ட மெத்தனம் எல்லாமாக சேர்ந்து இத்தகைய வணிகநோக்கு உயிர்ப் பலிகளை எளிதாக்கியும் வளர்த்தும் விட்டதால் இந்தப் பகுதியில் அந்தவகை மானினமே முற்றுமுழுதாக ஒழிந்துபோனதில் வியப்பதற்கு எதுவுமேயில்லை.

ஒற்றுமை மன்றம் (யூனிடி ஹால்) என்ற பெயர்கொண்ட கட்டிடத்தில் ஒரு பகுதியில் அமைந்த இவ்வீட்டில் வாழும்போது சரோஜினிதேவியும் அவர் மகள் பத்மஜாவும் அடிக்கடி வருவார்கள். தங்கியிருந்து உள்ளதை சாப்பிட்டுக் கிளம்புவதும், நாங்கள் ஜேன் ஆஸ்டினில் அவர்களை ஓட்டலில் கொண்டுவிட்டு வருவதும் வழக்கம். சின்னஞ்சிறிசாக உருவம் படைத்த ஜேனில் நான்கு வளர்ந்த மனிதர்கள் போவது ஒரு நெரிசலே. ஆனால், குறிப்பிட்ட ஒரு சம்பவத்தில் நெரிசலை உணர்ந்ததுபோல இப்பயணங்களில் உணர்ந்ததில்லை. ஆம்! மௌலானா ஷௌவுகத் அலி தன் பருத்த உடலை ஓட்டுநரை அடுத்த முன்னிருக்கையில் நுழைத்திக்கொள்ள சரோஜினிதேவியும் தெஹ்மினாவுமாக பின்னிருக்கைகளில் அமர்ந்திட நேரிட்ட அந்த நாள் மறக்க முடியாதநாள். இவ்விதம் சுமை ஏற்றப்பட்ட வண்டி பார்க்க மௌலானாவை முதன்மைப் படுத்திய ஒரு கண்கொள்ளாக்காட்சியாயிற்று. ஆனால், ஆஸ்டின் காரர்களை அது நிச்சயம் மகிழ்வுறச் செய்திருக்கும். ஏனென்றால், ஒரு தட்டலில் ஆஸ்டின் குள்ளன் எவ்வளவு சாதிக்கும் என அந்நிகழ்ச்சி உறுதி செய்ததே!

7

# பணிகள் (1923-29)
# ஜெர்மனி (1929-30)

வேலைதேடுவதில் வெற்றிகிட்டாமல் அந்த வேட்டையைத் தொடர்ந்தபடி, ஏதாவது மனதுக்கேற்ற இயற்கை வரலாறு தொடர்பான பணி கிட்டாதா என்று நாளை எண்ணிக் கொண் டிருந்தபோதுதான் என் ஒன்றுவிட்ட சகோதரர்கள் கருணை கொண்டு தங்கள் பருத்தி ஏற்றுமதி நிலையமான என். புட்டே ஹலி அண்ட் கம்பெனியில் ஒரு வேலைபோட்டுக் கொடுத்தனர். அது ஒரு தற்காலிக எழுத்தர்பணி. ஆனால் நான் அதற்கு சூட்டிக் கொண்ட பெயரோ—'இடைக்கால கூடுதல் உதவி கீழ்நிலைத் துணைத் தலைமை எழுத்தர்!' சம்பளம் என்று சொல்லாமல் 'ஈட்டுப்படி' என்ற பெயரில் மொத்தமாகப் பெற்றதொகை ரூ.150/. அதுவும் விரைவில் நூறாக இறங்கிவிட்டது. ஒரு முக்கியமான பருத்தி ஆலை வாடிக்கையாளரின் தவறினால் ஜப்பானில் ஏற்பட்ட பெரிய இழப்பின் விளைவே இந்த இறக்கம்.

சந்தர்ப்பங்களின் கட்டாயத்தினால் நான் நன்றியோடு இந்தப் பணியை ஏற்றுக்கொண்டேனே தவிர, ஆர்வத்துடன் அல்ல. இருந்தும் பணிமனை நிர்வாகத்தில் ஏற்கெனவே இருந்த பயிற்சியினாலே இரக்க மனம் படைத்த என் முதலாளிகளின் நிறுவனத்தில் இருந்த குளறல்களை சரிசெய்து ஏறத்தாழ ஒரு ஒழுங்கை நிலைநிறுத்திவிட முடியும் என்று ஒரு நம்பிக்கையுடன் பணியாற்றினேன். கிட்டத்தட்ட 1870இல் உருவான இந்தப் புராதன நிறுவனம் தன் வணிகச் செயல்பாடுகளில் எந்தவிதமான சிரமைப்பும் இல்லாமலே, அதுபற்றிய சிறு அக்கறைகூட இல்லாமலே இடைப் பட்ட காலங்களின் வலிய தாக்குதல்களையும் மீறி தப்பித்து செயல்பட்டும் வந்தது எனக்கு ஒரு அற்புதமாகவே பட்டது. எனது தாக்கம் மிகமிக வலிவற்றதாக இருந்தது மிக வெளிப்படையாகத்

தெரிந்ததாலும், கவலையற்றதாக நிலவிவந்த சூழலில் மாற்றங்களுக்கான அவர்கள் ஒத்துழைப்பும் மிகமிக அரைமனதாக இருந்ததாலும், ஆரம்ப சூரத்தனத்தோடும் முதல் முயற்சிகளுடனும் நம்பிக்கையுடனுமே மாறுதல் ஏற்படுத்தும் எனது முயற்சிகளை முடித்துக்கொண்டதை வருத்தத்துடன் ஒப்புக் கொள்கிறேன். பங்காளிகளாயிருந்த ஐந்து சகோதரர்களும் எந்தக் காலத்திலும் பேணிக்காத்த ஒற்றுமையும், பாராட்டுக்குரிய விட்டுக் கொடுக்கும் உணர்வுமே அந்த நிறுவனம் ஏராளமான சிக்கல்களிலும் நிமிர்ந்து நிற்கக் காரணமாயிருந்தது.

இந்த காலகட்டத்தில் ஏடனில் தமது நிறுவனத்துக்கு ஒருகிளை ஆரம்பித்த இன்னொரு உறவினர் எனக்கு வேலை தருகிறேன் என்றார். அப்போதிருந்த வேலையில்லா நிலையில் பணத்தைப் பொறுத்தவரை அது கவர்ச்சிகரமாகவே இருந்தது. ஆனால் ஆசைக்கு அடிபணிந்துவிடாது, அதை மறுத்ததற்கு நான் மகிழ்வுறுகிறேன். ஏனெனில், அவர் ஒரு வெற்றிகரமான வணிகர். அவரது முந்தைய தொழில் நடவடிக்கைகளைப் பார்த்தால், போலியான புனிதர் கோலத்தையும் பார்த்தால், என்னையும் அவரைப்போல் நடந்து கொள்ளச் செய்வாரென்பது திண்ணம். ஆனால் அவை எனக்கு மகிழ்வளிக்கும் செயல்களல்ல, என் மனசாட்சி அந்த அளவு தடிப்பானதல்ல.

நல்லவேளையாக, நீண்டகால கருத்துப் பரிமாற்றங்களுக்குப் பிறகு வேல்ஸ் இளவரசர் அருங்காட்சியகத்தில் புதிதாய்த் துவக்கப் பட்டிருந்த இயற்கை வரலாற்றுப் பிரிவில் ஒரு வழிகாட்டி விரிவுரையாளர் பதவிக்கு நிதி ஒதுக்கீடு செய்யவேண்டுமென்ற தன் வலியுறுத்தலுக்கு மும்பை இயற்கை வரலாற்றுக் கழகம் மும்பை அரசின் ஒப்புதலைப் பெறுவதில் அப்போதுதான் வெற்றிபெற்றது. மறைத்திரு பிளாட்டர் அடிகளார் தேர்வுக்குழுத் தலைவராயிருந்து என் பெயரை வலுவாகப் பரிந்துரைத்தார். எனது நியமனத்துக்கு அவரும், விரிவுரையாளர் யாருக்குக் கீழே பணியாற்ற வேண்டுமோ அந்த காப்பாளர் பொறுப்பிலிருந்த பிராட்டர் அவர்களுமே பொறுப்பு. என் பெரிய மைத்துனர் ஷம்சும் நானும் ஹைதராபாத் அரசினைச் சேர்ந்த அடிலாபாத் மாவட்டம் உத்னூரின் காடுகளில் வேட்டையாடத் திட்டமிட்டிருந்த வாரங்களில் தேர்வுக்குழு கூட வேண்டுமென ஊழ்வினை முடிவு செய்திருந்தது. தீபகற்பப் பகுதியின் மிகச் சிறந்த புலி வாழிடங்களில் அந்தக் காடும் ஒன்று. இந்தத் திட்டத்திலிருந்து வருத்தத்துடன் நான் பின்னடைய நேரிட்டது. நான் இங்கே வேலைக்கு மனுப்போட்டிருந்தேனே, என்ன செய்வது.

ஆனால் அந்த வேட்டைத்திட்டம் துரதிருஷ்டவசமானதென பின்பு புலப்பட்டது. புதிய வேலையில் பணியாற்றத் துவங்கிய சில நாட்களில் அந்த சோகச் செய்தி வந்தது. தாம் காயப்படுத்திவிட்ட புலியை போதிய எச்சரிக்கையின்றி தொடர்ந்து சென்ற ஷம்ஸ் அதன் கொடிய தாக்குதலுக்குள்ளாகி அதில் தம் உயிரையே இழந்து விட்டார். அவருடன் கூடச்சென்ற பருத்த இளைஞர் அசீமும் மோசமாக அடிபட்டு கீறல்களுக்குள்ளானாலும், புலியை வீழ்த்தி விட்டார். அதிருஷ்டவசமாக அவரையாவது உரிய மருத்துவ சிகிச்சைக்கு மும்பை கொண்டு வர முடிந்தது. உச்சமான கவலைக் கிடமான நிலையில் வாரக்கணக்கில் கிடந்து ஒருவழியாகத் தேறினார்.

என் அக்காக்கள் அனைவரிலும் மூத்தவரான அஷ்ரப் அக்காவின் கணவர் ஷம்ஸ். அவரே தன்னளவில் ஒரு குறிப்பிடத் தக்க மனிதர். விசித்திரமான சில முரண்களிலிருந்தாலும் நேசத்துக் குரியவர். நற்பண்பும் திறமையும் கொண்டவர். குடும்பப் பொறுப்பு களையும் தொழிற்கடமைகளையும் பாதிக்காதவகையில் எவற்றில் எல்லாம் அவருக்கு ஆர்வம் இருந்ததோ அவை அனைத்திலும் சராசரிக்கு மேலான திறமையாளர். உதாரணமாக அஞ்சல்தலை சேகரிப்பு, நாடகத்துறை, கிரிக்கெட்டில் தொடர்ந்து நடுவராக இருத்தல், பொழுதுபோக்கு சங்கங்களில் தொடர்பு இவற்றில் ஏராளமான நேரத்தையும் உழைப்பையும் செலவிடுவார். அனைத்தையும்விட அவர் நெஞ்சுக்கு இனியது வேட்டையாடுதல்; ஆனால் விசித்திரம் என்னவென்றால் அதில் அவர் வெற்றிபெற்றார் என்று சொல்ல முடியாது. அவருடைய மிகப்பெரிய ஆசை ஒரு புலியை சுட வேண்டும் என்பது. அதற்காகவே வாழ்ந்து அதனாலேயே மறைந்தார். சிலர் அவரை நவாப் ஹர்தம் ஷிகார் ஜய் என்று வேடிக்கையாக பெயர்வைத்த அளவுக்கு அவருக்கு வேட்டையில் ஒரு வெறியே இருந்தது. ஒவ்வொரு அணுவிலும் வேட்டைக்கார நவாப் என்பது இதன்பொருள்.

இயற்கை அறிவியல் துறையின் பணிகளை உருவாக்குவதும் அதற்கான பாடத்திட்டத்தை திட்டமிடுவதும் மிகவும் சுவையாகவே இருந்தன. பங்கேற்ற பள்ளிகளின் ஆசிரியர், மாணவர் இரு பாலாரிடையும் இயற்கை வரலாற்றில் ஒரு அறிவார்ந்த ஈடுபாடு அதிகரித்தது உண்மை. அதேபோல் சாதாரண பொதுமக்களிடை யிலும் அருங்காட்சியகத்தின் இயற்கை வரலாற்றுப் பிரிவின்மீதான ஆர்வமும் அதிகரித்ததும் கண்கூடு. துவக்கத்தில் வெகுசில பள்ளிகளே தெரிவு செய்யப்பட்டன. அவற்றின் மாணவர்கள்

முன்னேற்பாடு செய்யப்பட்ட நேரப்படி ஒருவரிசையில் வகுப்புகளுக்கு வரலாயினர். எளிய முறையில் பொதுவாக விலங்குகளின் வாழ்வு பற்றிய சிற்றுரைகள் நிகழ்த்தப்பட்டன. விளக்கங்களுக்கு ஸ்லைடுகள், மாதிரிகள், அருங்காட்சியகத்திலிருந்த உயிரினங்கள் பயன்பட்டன. பார்வையற்றோர் பள்ளி மாணவர்களுக்கு வகுப்பெடுப்பது எனக்கு மிக விருப்பமாக இருந்தது. அவர்கள் காட்டிய ஆர்வம் உயிரோட்டமுள்ளது. அவர்களுக்காகவே தயாரிக்கப்பட்ட மண்டைஓடுகள் எலும்புக்கூடுகள் ஆகியவற்றைத் தொட்டுப் பார்த்தே விலங்குகளின் உடலமைப்பை அவர்கள் மிகத்துல்லியமாக உணர்ந்து கொண்டதை நான் பிரமிப்போடு பாராட்டாத நாளேயில்லை. அது ஒருமாயம்தான். கழகத்தின் இந்த இயற்கைக் கல்வித்திட்டத்தின் வெற்றியும் நற்பயன்களும் எவ்வளவு திருப்தி தந்தன என நினைத்துப் பார்த்தால், அதுவும் இதற்கான செலவு மிக சொற்பமென்பதையும் சேர்த்துப் பார்த்தால், மாநில அரசு வெறும் மூன்றாண்டு சோதனை ஓட்டத்துடன் இதற்கு மானியம் அளிப்பதை நிறுத்தியது. அதுவும் நிதிப் பற்றாக்குறையைக் காரணம்கூறி நிறுத்தியது கேவலமான செயலாகும். அதனால் விடுதலைக்குப் பிறகு எவ்வளவு விரைவில் முடிந்ததோ அவ்வளவு விரைவில் ஒரு இணக்கமான முதல்வராக பி.ஜி.கேர் இருந்த காலத்தில், அருங்காட்சியகக் காப்பாளர் என்ற முறையில் பிராட்டரும் கழகத்தின் செயலரென்ற முறையில் நானும் அவரிடம் சென்று பேசி, அவரை ஏற்கச் செய்து இத்திட்டத்துக்கு மறுவாழ்வளிப்பதில் வெற்றிபெற்றோம். எம்.ஆர். ரவுத் அமைப்பாளராக்கப்பட்டு, திட்டம் தொடர்ந்தது. அதன் உள்ளீடும் நடவடிக்கையும் விரிவாக்கப்பட்டு 1949ம் ஆண்டுமுதல் மிகச் சிறப்பாக அது இயங்கி வருகிறது. அண்மைக்காலத்தில் மகாராஷ்டிராவில் பொது மக்களிடையே, குறிப்பாக இளைஞர்களிடையே, வனஉயிர்கள் பற்றியும் சுற்றுச்சூழல் பாதுகாப்புப் பற்றியும் அறிவும் ஆர்வமும் வளர்ந்திருப்பது வெளிப்படையாகத் தெரிகிறது. அதற்கான பாராட்டு ஒரு பகுதியாவது இந்த நிறுவனத்தைச் சேரவேண்டும் என்பதில் ஐயமில்லை.

இந்த விளக்கவுரைப் பணியும் இரண்டு ஆண்டுகளில் அலுத்து விட்டது. எனது வலுவும் திறனும் பறவையியல்தான் என்று உணர்ந்தேன். முழுநேரப் பணியாக அந்தத் துறையில் நிலை நிறுத்திக் கொள்ளும் முன்பு வெளிக்களப் பறவையியலில் முறையான பயிற்சி பெற முடிவு செய்தேன். அதன் பிறகு வறுமையில் சிக்காமல் வாழ்க்கை நடத்தப்போவதெப்படி என்பது பற்றி நான் அப்போது

கவலைப்படவில்லை. இந்தியாவில் உயிரியல் கல்வியைப் பொறுத்த வரை பறவையியல் கவனம் பெறாத ஒன்றாகவே இருந்துவருகிறது. நான் விரும்பிய பயிற்சியை அளிக்க ஒரு பல்கலைக்கழகத்திலும், ஒரு நிறுவனத்திலும் அதற்குரிய படிப்பு இல்லை. எனவே பிரிட்டிஷ் அருங்காட்சியக இயற்கை வரலாறு பிரிவுக்கும், பெர்லின் பல்கலைக்கழக உயிரியல் அருங்காட்சியகத்துக்கும் அவர்களிடம் இருக்கக்கூடிய வசதிகள் பற்றிக் கேட்டு எழுதியிருந்தேன். அப்போது இந்தோ-பிரிட்டிஷ் அரசியல் சூழ்நிலை மோசமாக இருந்தது. வெறுப்பும் கசப்பும் மிதமிஞ்சிய நிலை (1929). 'ஒரு அரை நிர்வாணப் பக்கிரி மாட்சிமைக்குரிய பேரரசரின் பிரதிநிதியுடன் சமமாக அமர்ந்து பேச்சுவார்த்தை நடத்துவதா, என்ன ஆணவம்!' என்று சர்ச்சில் பொருமிக் கொண்டிருந்த வேளை. அதற்கேற்ப லண்டனிலிருந்து ஒரு ஆர்வமற்ற, ஆர்வத்தைக் குறைக்கிற வகையிலான பதில் வந்தது. அதிலிருந்தே, அங்கு பணிசெய்வது சுகமாக இராது என்று உணர்ந்தேன். ஆனால் பேராசிரியர் எர்வின் ஸ்ட்ரெஸ்மான் எனக்குத் தெரிந்தவர் அல்ல என்றாலும் ஜெர்மனியிலிருந்து வந்த பதில் என்னை உற்சாகப்படுத்துவதாகவும், மனதார எழுதப் பட்டதாகவும் காணப்பட்டது. பெர்லின் போக முடிவுசெய்தேன்.

நடைமுறைப் பயிற்சியின் ஒரு பகுதியாக இந்தியப் பறவைகளின் சேமிப்பு ஒன்றைக் கொண்டுவருமாறும், அங்கு தன் வழிகாட்டலில் நான் அதை ஆராயலாம் என்றும் அவர் குறிப்பிட்டிருந்தார். பர்மாவிலிருந்து அப்போதுதான் இருநூறு பறவைகளின் மாதிரிகள் வந்திருந்தன. 'இந்திய அரசுப் பணியை (ICS) சேர்ந்த ஜே.கேஸ்டான் போர்ட் இயற்கை வரலாற்றுக்கழக உறுப்பினர். பறவை இயலில் ஆர்வம் கொண்டவர். அவருடைய முயற்சியில், கழகத்தின் தோலுரிப்புக் கலைஞர் ஈ.ஹென்ரிக்ஸ் உதவியுடன் சேகரிக்கப் பட்டவை அவை. ஹென்செடா மாவட்டப் பறவைகள் என்று எண்ணுகிறேன். ஸ்டான்போர்ட்டை செய்யத் தூண்டியவர் முனைவர் கிளா டைசர்ஸ்ட் ஆவார். தாமே இதை ஆராய எண்ணியிருந்த அவரால் யாரோ ஒரு இந்தியச் சிறுவன், அதுவும் ஒரு ஜெர்மானியக் குறும்புக்காரருடன் சேர்ந்து ஆய்வு நடத்துவதைப் பொறுத்துக்கொள்ள இயலவில்லை. ஜெர்மன் கெய்சரின் போர் அப்போதுதான் முடிந்திருந்தது. அவர் ஒரு வேலை செய்தார். சிரமப்பட்டு சேகரம் செய்திருந்த ஸ்டான்போர்ட் இந்த அவமதிப்பை ஏற்கமாட்டார் என்று ஒரு அசிங்கமான எதிர்ப்புக் கடிதத்தை எனக்குத் தெரியாமல் கழகத்துக்கு எழுதியனுப்பினார்.

ஆனால் பிராட்டர், அப்போது செயலாளராக இருந்த சர். ரெஜினால்ட் ஸ்பென்ஸ் இருவரும் எனது திறமையில் நம்பிக்கை காட்டி ஸ்ட்ரெஸ்மன் உதவியும் வழிகாட்டலும் நற்பயனையே தரும் என்று ஏற்றுக் கொண்டனர். ஸ்டான்போர்ட் இது குறித்து உண்மையிலேயே ஏதும் வருத்தங்கொண்டாரா அல்லது டைசர்ஸ்ட் தான் தாமே தம் கற்பனையில் அந்த வருத்தத்தை உருவாக்கினாரா என்பதற்கு வரலாற்று ஆதாரமேதுமில்லை. அப்போதோ, பிறகோ, வெளிப்படையாகவோ, அதிகாரபூர்வமாகவோ ஸ்டான்போர்ட் வருத்தமேதும் தெரிவிக்கவில்லை. அனைத்துலகப் பறவையாளர் மாநாடு 1950இல் ஸ்வீடனில் உப்சாலாவில் நடைபெற்றபோது நாங்கள் முதன்முதலாக சந்தித்துக் கொண்டபோதும் அவரது நடவடிக்கைகளில் மனமார்ந்த நேசபாவம் தவிர, எதையும் நான் காணவில்லை. பிறகு நேர்ந்த சந்திப்புகள், கடிதங்கள் எல்லாமே அவரை ஒரு அன்புடை நெஞ்சனாகவே காட்டின.

பறவையியலை முழு நேரப் பணியாக ஏற்பது பற்றிய ஒரு குழப்பமான நிலையில், ஜெர்மானிய அனுபவங்களே நல்ல திசையில் ஓர் திருப்புமுனையாக அமைந்தன என்பதில் ஐயமேயில்லை. அன்றைய நிலையில் நான் அறியப்படாத ஓர் இளம் கலைஞன்தான் என்பதையும் எண்ணிப்பார்த்தால், அதுவும் அவரும் என்னை முன்பின் அறியாதவர் என்பதோடு சேர்த்துப் பார்த்தால், என்னை வரவேற்ற அந்த மனமார்ந்த உறவும், முதல்நாள் தொட்டே வழிகாட்டுவதிலும் உதவுவதிலும் அவர் எடுத்துக் கொண்ட சிரத்தையும் நெஞ்சைத் தொடுவனவாகும். என் பயிற்சி முழுவதும் அவர் உதவி எனக்குக் கிடைத்துக் கொண்டேயிருந்தது. எளிமையும் பணிவும் அலட்டிக்கொள்ளாத ஆழ்ந்த ஞானமும், உல்லாசமான, இளம்பிள்ளைபோன்ற நகைச்சுவையும் விஞ்ஞான அறிவின் விரிவும் என்னில் ஒரு தெளிவான சித்திரமாகிவிட்டன. தனிமனிதர், அறிவியல்ஞானி, நண்பரும், உருவாக்கியவரும் என்று அத்தனை கோணத்திலும் என் பாராட்டுக்குரியவரானார். அவ்வியப்பும் பாராட்டும் காலம் செல்ல செல்ல ஆழம் அதிகரித்து நிலையாக நின்றுவிட்டது. இறுதிவரை அவரை என் குருநாதரென்றே கருதுகிறேன். பறவையைப் பற்றியோ, சூழல் பற்றியோ, உயிரியல் பூகோளத்திலோ எத்தகைய சிக்கலான புதிராயினும் அறிவுரை கேட்டு உதவி என்று அணுகினால், விரைவான விரிவான பதில் எழுதுவதில் அவர் தவறியதேயில்லை. பெரும்பாலும் கடிதங்கள் ஒருதாளில் குறுக்குக் கோடுகளாக சிரமப்படுத்தும் கையெழுத்தில் அமைந்திருக்கும். கையெழுத்தை கவனமூன்றிப் புரிந்துகொண்ட

போதெல்லாம் ஒவ்வொரு முறையும் அவரது பதில்கள் அதற்கான காரணங்களுடனும் பகுத்தறிவு பூர்வமாகவும் தெள்ளத்தெளிவாகவும் ஆதாரங்களோடும் காணப்பெறும். உலகெங்கும் பரவிய அவரது சிடர்கள் பலரில் நானும் ஒருவன்; அவ்வளவுதான் என்பதை எண்ணிப் பார்க்கும்பொழுது அவர் எப்படி தன் கடிதத் தொடர்பு களில் தொய்வில்லாமல் பார்த்துக் கொண்டார்; அதேசமயம் அறிவியலில் அன்றைய நடப்புகள் வரை தெரிந்துவைத்திருந்தார்; அத்துடன் தன் ஆராய்ச்சிப் பணிகளையும் இடைவிடாது நடத்தி வந்தார்; இத்தனையும் பறவைஇயலில் உலகிலேயே ஒரு பெரிய அறிவாளியாக இருந்ததால் ஏற்பட்டுப்போன வேறுபல பொறுப்பு களுக்கான கடமைகளிலும் சிறிதும் தவறிவிடாமல்—என்பது எனக்கு என்றென்றும் மலைப்பாகவே இருக்கிறது.

மும்பை இயற்கை வரலாற்றுக்கழக அருங்காட்சியகக் காப்பாளராக இருந்துகொண்டு என் இளம்பருவத்தில் துவக்ககால பறவையியல் ஆர்வத்தை உற்சாகப்படுத்திய கின்னியர், காந்தி யுகத்தின் இந்தோ-பிரிட்டிஷ் உறவுக் குலைவினாலும், பிரிட்டிஷ் அருங்காட்சியகக் கவர்ச்சியாலும் பின்னாளில் ஆளே வேற்று மனிதராக மாறிப்போனார். முதல் உலகப்போருக்கு முன்பே பெர்லினில் வாழவந்து போர் முடிந்தபின்பு அங்கே வாழ்ந்து வந்த இந்தியப் பிரமுகர் ஒருவரை 1929 ஆகஸ்டில் அறிந்தேன். அவர்தான் செண்பகராமன் பிள்ளை ஆவார். 'தற்காலிக இந்திய அரசாங்கம்' என்று அழைத்துக்கொண்ட புரட்சிக்குழு ஒன்றின் உறுப்பினர் அவர். அவர்களுக்கு ஜெர்மன் கெய்சரும் ஏதோ ஒருவித அங்கீகாரம் கொடுத்திருந்தார். அவர்களின் தலைவர் ராஜா மகேந்திர பிரதாப் ஒரு விநோதமான மனிதர். முழுக்க முழுக்க தன் இயக்கத்துக்கு தன்னை ஒப்புக் கொடுத்தவர். தீர்க்கதரிசி. உத்தரப்பிரதேசத்தில் தாலுக்தாராயிருந்த இவரை ஆங்கிலேயர் நிராகரித்துவிட்டனர். இவர்களைச் சேர்ந்த எம்.என். ராய் மாஸ்கோ போய்விட்டாரென எண்ணுகிறேன். நான் அவரை சந்தித்ததில்லை. செண்பகராமன் புகலிடம் தேடி ஜெர்மனி வந்து அங்கு வசித்து வந்தார். மகேந்திர பிரதாப் போலவே இவரும் ஆழ்ந்த பிடிப்பு கொண்டவர். ஆனால் தலைவரைப்போல அல்லாது நடைமுறை வாதியாக உலகம் புரிந்தவராக இருந்தார். கெய்சரை அடிக்கடி சந்தித்து ஐரோப்பாவில் போர் நடந்துகொண்டிருக்கையில் தம்முடைய குழுவினரின் ஆங்கிலேய எதிர்ப்பு சதிகள் பற்றி கெய்சருக்கு அவ்வப்போது கூறிவந்தார். போரில் ஜெர்மனி தோற்றது. பிரிட்டிஷ் அரசு செண்பகராமன், மகேந்திர பிரதாப் இருவர்

தலைக்கும் விலை வைத்தது. அந்த நிலையில் ஜெர்மனியிலேயே தங்கி விடுவதே உத்தமம் என இருவரும் தீர்மானித்தனர். செண்பகராமன் சமையற்கலையில் மன்னன் என அறிந்தோம். அவ்வப்போது சுவையான இந்திய உணவு படைத்தளிப்பார். தூக்கலாக வாசனைப்பொருட்கள் விரவியிருக்கும். மிகப்பல ஆண்டுகள் வெளிநாட்டில் ஒதுங்கியிருந்துவிட்டு இந்தியா விடுதலையடைந்ததும் தன் தாய்மண்ணான கேரளத்துக்குச் சென்றார் பிள்ளை; ஆனால் மீண்டும் ஜெர்மனி திரும்பியவர் காலமாகும்வரை அங்கேயே வாழ்ந்தார். ராஜா மகேந்திர பிரதாப்பும் ஜப்பானிலிருந்து தாயகம் திரும்பி, டேராடூனில் வசிக்கத் துவங்கினார். அன்றைய நேரு அரசு அவரை நடத்திய விதத்தில் விரக்தியுற்று மக்கள் தந்த மரியாதையும் அப்படியே இருந்ததில் விரக்தி அதிகரித்தது. அவரது நேர்மை, பொறுப்பு, தியாகம் ஆகியவை அனைவருக்கும் தெரியும். ஆனாலும் அவரை நன்கு அறிந்தோர்க்கு எதிலும் வியப்பில்லை.

பெர்லின் பல்கலைக்கழக உயிரியல் அருங்காட்சியகத்தில் பணியாற்றி வரும்போதுதான் முதன்முதலில் பெர்னார்ட் ரென்ச் எனக்குப் பழக்கமானார். அவர் ஒரு பிரமாதமான இளம் உயிரியலறிஞர். பறவைகள், பிற உயிரிகள் சேகரிப்பில் திட்டமிட்டு இயங்கிக் கொண்டிருந்தவர். சன்டா தீவில் அவர் கவனம் செலுத்தி வந்தார். உயிரினங்களின் தோற்றம் வளர்ச்சி ஆகியவற்றில் வானிலை மாற்றங்கள் ஏற்படுத்தும் நிலஇயல் மாற்றங்கள் உருவாக்கும் பிரச்சினைகள் பற்றி அவர் சிறப்பாக ஆராய்ச்சி செய்துவந்தார். முதுகெலும்பற்ற ஒரு உயிரினம் பற்றிய துறையில் அருங்காட்சி யகத்தில் அவர் அப்போதுதான் நியமிக்கப்பட்டிருந்தார். பறவை இயலில் வேலை காலி இல்லாததால் இன்னொரு சிறப்புப் பிரிவான அதில் அவரை எடுத்துக்கொண்டனர். எங்கள் இருவருக்கும் முதல் சந்திப்பிலேயே பிடித்துப்போயிற்று. அவரது அழகிய அன்பு மனைவிக்கும் தெஹ்மினாவுக்கும் இடையிலும் அதேபோல் நட்பு ஏற்பட்டுவிட்டது. போரும் அமைதியும் மாறிமாறி வந்த அந்த இனக் கலவரங்களில் அவர்கள் என் நெருங்கிய அயல்நாட்டு நண்பர்களாக இருந்தனர். அவர் கற்றுத்தேறிய உயிரியல் துறையில் பல உயர் பதவிகள் வகித்தார். ஹிட்லர் செக் நாட்டை 'விடுவித்த' பிறகு பிராக் அங்கும்கூட அருங்காட்சியகக் காப்பாளராகப் பணி யாற்றினார். இறுதியாக முன்ஸ்ட்டர் பல்கலைக்கழக உயிரியல் நிறுவன நெறியாளராக இருந்து ஓய்வுபெற்றார். ஒரு உயிரியல் மேதை என்ற அளவிலும் மெல்லிய உணர்வுகளும் கலையார்வமும் பண்பாடும் உள்ளவர் என்று தனிப்பட்ட அளவிலும் அவர்மீது

எனக்கு அளவற்ற மரியாதை உண்டு.

அருங்காட்சியகத்தின் பறவைகள் பகுதியில்தான் எர்னஸ்ட் மேயருடனான என் முதல் சந்திப்பும் நடந்தது. அவர் ஸ்ட்ரெஸ் மானின் அறிவாளியாக வளரும் மாணவர்களில் மற்றொருவ ராவார். நியூகினிப் பகுதியில் பறவை சேகரிப்பு நடத்திவிட்டு அப்போதுதான் அவர் திரும்பியிருந்தார். இரண்டாம் உலகப் போருக்குப் பிறகுதான் மீண்டும் அவரை சந்தித்தேன். அந்த சந்திப்பு அமெரிக்காவில் நடந்தது. போர் துவங்க சிலகாலம் முன்புதான் ஜெர்மனியிலிருந்து குடிபெயர்ந்து அமெரிக்கா வந்திருந்தார். நியூயார்க்கில் மிக சிறப்பாக அமெரிக்க இயற்கை வரலாற்று அருங்காட்சியகத்தில் டாக்சானமியில் பணிபுரிந்து வந்தார். அவர்கள் அப்போதுதான் ரோத்ஷீல்ட் பறவைத் தொகுதியை வாங்கி யிருந்தனர். இப்போது மேயர் ஹார்வர்ட் பல்கலைக்கழகத்தில் உயிரியல் துறையில் கௌரவ பேராசிரியராக உள்ளார். உலகிலேயே தலையாய உயிரியல் நிபுணர்களில் ஒருவர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. துரதிருஷ்டவசமாக தனது குருநாதர் ஸ்ட்ரெஸ் மானுடைய பகட்டற்ற எளிமைக்கு நேர்மாறான பண்பினை இவர் கொண்டிருந்தார். எதைப்பற்றியும் 'எனக்கு முன்பே தெரியுமே' என்று காட்டிக்கொள்ளும் போக்கு தூக்கலாக இருக்கும்.

உல்லாசமான இயல்பும் உயரிய உயிரியல் அறிவும்கொண்ட ஆஸ்கார் ரெயின்ஹாத், அவரது துணைவியார் ஆகியோரையும் இங்குதான் முதன்முதலில் சந்திக்கும் பேறும் பெருமையும் பெற்றேன். பிறகு பெர்லின் உயிரியல் பூங்கா, மீன்காப்பகம் ஆகியவற்றில் அவர் நெறியாளராயிருந்த காலத்தில் அடிக்கடி அவரை சந்தித்ததுண்டு. திருமதி மகதலேனா ரெயின்ஹாத் குறிப்பிடத்தக்க பெண்மணி யாவார். பறவைகளின் வாழ்முறை பற்றிய கல்வியில் இவர்கள் இருவரும் தெளிவான முன்னோடிகளாய் இருந்தனர். அந்த அறிவியல் துறை நவீனத்துவம் வாய்ந்த ஒரு இயக்கமாக அப்போதுதான் பிறந்திருந்தது. உயிரினங்களின் வாழ்வியல் நெறிகள் பற்றிய கல்வியின் தந்தை இவர்தான் என்றால் மிகையல்ல. பழைய கொள்கைகளில் புரட்சிகரமான மாறுதல்களை அது கொண்டுவந்தது. உடற்கூறு, அமைப்பியல் இவற்றை மட்டுமே வைத்து பறவைகளின் மரபணு தொடர்பான உறவுகளை நிர்ணயிக்கும் முறையை இது உடைத்தது. உயிரியலுக்கும் ஒழுங்குபூர்வ அணுகுமுறைக்கும் இருந்த பெரிய இடைவெளியை இணைத்தது. அதுகாறும் அரிதாக கவனிக்கப்பட்டு வந்த பல பிரச்சினைகளையும் கூறுகளையும் பற்றி சிந்திக்க, இவரது வாழும் பறவையினங்கள் பற்றிய ஆய்வுகளே என்

கண்களைத் திறந்தன. பின்னாளில் விமர்சகர்களின் பாராட்டுகளை எனக்குப் பெற்றுத்தந்த இந்தியப் பறவைகள் பற்றிய பணிகளுக் கெல்லாம் ஒரு இலக்கையும் சுற்றுச்சூழல் அடித்தளத்தையும் அமைத்துத் தந்தவையும் அவைதான்!

திரு. ஸ்ட்ரெஸ்மான் வழிகாட்டலில் மும்பையிலிருந்து நான் கொண்டுவந்திருந்த பர்மியப் பறவைகள் பற்றிய ஆய்வானது, அத்துறையில் நுட்பங்களையும் நடைமுறைகளையும் உணர்த்திய துடன், அந்த நுட்பங்கள் நடைமுறைகள் ஆகியவற்றின் குறை களையும் உணர்த்தியது. எடுத்துக்காட்டாக, 'நம்பிக்கைக் கண்ணோட்டம்' என்ற கோட்பாட்டின் இழைபோன்ற அடிப் படையில் முடிவு காணுதல், அவசர முடிவாக அமையும் அபாயத்தை அதில் அறிந்தேன். அருங்காட்சியகப் பணி மட்டுமல்லாது எனது கல்வி விடுமுறை ஜெர்மனியில் மேலும் இரு அரிய வாய்ப்புகளையும் தந்தது. ஸ்ட்ரெஸ்மானுடன் ஹெலி கோலண்ட் தீவுக்குப்போனது, அங்கு ஆர்வமிக்க அறிஞர் முனைவர் ருடால்ப் தி ராஸ்ட் நெறிப்படுத்திய புலம்பெயர் பறவைகள் பற்றிய ஆய்வுகளில் பங்கெடுத்தது ஆகியவையே அவை.

ஹெலிகோலண்ட் ஒரு வெற்றுப்பாறை. எல்பே—வெஸ்ஸர் என்ற ஆறுகளின் தலைவாயிலில் வடகடலில் சம்பந்தமின்றி அமைந்த முனைத்தீவு. ஜெர்மனியின் முக்கிய பகுதியிலிருந்து 30 மைலில் வடதிசைப் பறவைகளின் புலம்பெயர் பாதையில் அமைந்த இடம் அது. 200 அடி உயரப்பாறைகள் கொண்ட முக்கோணத் தீவு. தீவின் சிகரம்—ஓபர்லாண்ட் பகுதி—அலைகள் மோதும் ஒரு உயர்நிலமாகும். பச்சைக் கம்பளம் போல் தாவரங்கள்! ஆனால் இடையறாத சூறைக் காற்று அடிப்பதால் மரங்களே கிடையாது. அதனால் பறவைகளைக் கவர்வதற்காக கீழ்மட்டத்தில் ஒரு தோட்டம் உருவாக்கப்பட்டிருந்தது. 120 மீட்டர் நீளமும் 15 மீட்டர் அகலமும் கொண்ட அப்பகுதி சிகரத்தின் வடபகுதியில் அமைந்திருந்தது. செடிகொடிகள் அடர்த்தியாக பயிர்செய்யப்பட்டு, புதர்களும் சிறிய நீர்த்தேக்கங்களும் உருவாக்கப்பட்டிருந்தன. அவற்றில் பறவைகளுக்காக சுத்தமான நீர் தேக்கி வைக்கப் பட்டிருந்தது. கம்பி வலைகளைத் திறமையாக ஒளித்து வைக்கவும் இப்புதர்கள் உதவியாயிருந்தன. அவை (வலைகள்) கண்ணாடி முகப்புள்ள பெட்டிகளுக்கு இட்டுச் செல்லும். அப்பெட்டிகளுக்குள் சாமர்த்தியமாக செலுத்தப்பட்டுவிட்ட பறவைகளைப் பிடித்து எடுத்துச் செல்வது எளிது. 2½ மீட்டர் உயர சுவர் ஒன்று தோட்டத்தின் தளத்தைச் சுற்றி எழுப்பப்பட்டிருந்தது. அது

கடுங்காற்றிலிருந்து புதர்ப்பகுதிகளை காப்பாற்றியது. இப்போது பிரபலமாக, பரவலாக, வெற்றிகரமாக மும்பை கழகத்தால் பல திட்டங்களிலும் பின்பற்றப்பட்டுவரும் முறையான இந்த 'ரிங்கிங்' நுட்பத்தினை முதன்முதலில் செயல்முறையில் நான் கண்டது ஹெலிகோலண்ட் தீவில்தான்.

செயற்கைத்தோட்டம் தவிர இத்தீவில் ஒரு கலங்கரை விளக்கமும் இருந்தது. 42,000 மெழுகுவர்த்தி சக்தி படைத்த அதன் ஒளிக்கற்றைகள் இலையுதிர் காலத்திலும் வசந்த காலத்திலும் முகில் கவிழ்ந்த இரவுகளில் பறவைகளைக் கவர்ந்து அவை இப்பக்கம் திரும்பவைத்தன. பதினாயிரக்கணக்கான புலம்பெயர் பறவைகளை அது ஒரு காந்தமாய் இருந்து ஈர்த்தது. பறவைகள் பறந்துவந்து உச்சியிலுள்ள கண்ணாடிகளில் மோதி கீழே தாழ்வாரங்களில் விழும். அவற்றை சாக்குப் பைகளில் சேகரித்து எடுத்துச்செல்வர். இப்படி ஏராளமான பறவைகள் பிடிபடும். இப்படி கலங்கரை விளக்கத்தில் மோதி விழுவது போலவேதான் மேகாலயாவில் உள்ள ஜதிங்கா கிராமத்திலும் நடக்கிறது. முகில் கவிழ்ந்த விண்மீன்கள் இரவுகளில் நடக்கும் இந்த நிகழ்வைத்தான் பறவைகளின் 'கூட்டுத் தற்கொலை' என நமது நாளேடுகள் சில பரபரப்பாக சித்திரித்தன! வசந்தகால, இலையுதிர்கால பறவை வருகை காலங்களில் ஹெலிகோலண்டா ஜெர்மானியர் மட்டுமின்றி பல்வேறு ஐரோப்பிய நாடுகளையும் சேர்ந்த பல்கலைக்கழக மாணவர்களும் பறவைகளைக் காண்போருமாக நிறைந்திருக்கும். நிபுணர்களுக்கும் குறை இருக்காது. அத்தகைய இரவுகளில் சாக்குப் பைகளில் பறவைகளை நிரப்பிய வண்ணம் ஆர்வத்தோடு மக்கள் திரிந்த வண்ணமிருப்பர். சுழல் மாடிப்படிகள் போகும் ஒரு மாடியில் அதன் காவலனும் குடும்பத்துடன் குடியிருந்தான். அவன் மனைவி ஒரு சண்டைக்காரி. தனது தூக்கத்தைக் கெடுத்து விட்டதாக பொதுமக்கள்மீது பாய்ந்து குதறும் அவள் யார்க்கும் ஒரு சிம்ம சொப்பனம்தான்! பெரிய பெரிய முரட்டு ஆண்களெல்லாம் அவள் கூச்சல் முன் ஒடுங்கி, ஒடுங்கி மாடியில் மேலும் கீழும் ஓசைப்படாமல் ஓடுவது மிக வேடிக்கையானதோர் காட்சியாகும். ஆனால் ஒன்று, அத்தகைய பரபரப்பான சந்தடி மிக்க இரவொன்றில் அந்த இடத்தின் நடவடிக்கைகளை நேரில் காணும் யாவருமே அந்தப் பெண்மணிக்கு ஏற்படும் தொந்தரவு குறித்தும் அனுதாபம் கொள்ளவே செய்வர்.

வானிலை சரியாக இருந்தால் சுமார் 1200க்குக் குறையாத பறவைகள் கிடைக்கும் உள்ளூர்க்காரர்கள் பிடிக்கும் நூற்றுக் கணக்கான பறவைகள் தனி. அவர்களும் ஏராளமானோர் இதில்

ஈடுபடுவர். தூணின் அடிமட்டத்தை சுற்றி வெகுதூரம் களைத்த பறவைகளும், விழுந்துவிட்ட பறவைகள், விளக்கில் மோதி செத்துக் கொண்டிருக்கும் பறவைகள் என காணக்கிடைக்கும். காட்டுப் பூனைக்கும்பலின் படையெடுப்பு, நிலைமையை இன்னும் மோசமாக்கும். புராதன கால கான்ஸ்ட்டான்டி நோபிலில் தெருநாய்கள் அலைவதுபோல இங்கு காட்டுப்பூனைகள். இதில் இந்தியாவில் பசு புனிதமாகக் கருதப்படுவதுபோல் உள்ளூர் மக்களுக்கு இவற்றிடம் பாசம், பக்தி வேறு! இவையெல்லாம் இரண்டாம் உலகப்போருக்கு முன்பு. இப்போது உலகெங்கும், இப்படி தூணில் மோதி மடியும் பறவைகளைக் காக்க மெல்லிய வலைகள் கட்டப்படவேண்டும் என்ற சர்வதேச நியதிகள் காரணமாக நிலைமை சீரடைந்திருக்கும்.

# 8

# ஹைதராபாத் மாநில பறவையியல் கணக்கீடு

1930 துவக்கத்தில் ஜெர்மனியிலிருந்து இந்தியா திரும்பி, வேலையின்றி, வேலைதேடும் முயற்சியிலும் வெற்றியின்றி கிஹீம் பகுதியில் சரணடைந்திருந்த காலத்தில், அயல்நாடு சென்று சம்பாதித்திருந்த அனுபவம் கொண்டு என்னதான் செய்யலாம் என்ற சிந்தனையில் மூழ்கியிருந்த காலத்தில்தான் வட்டார பறவையியல் கணக்கீடு என் மனதில் உதித்தது. இந்தியத்துணைக் கண்டத்தில் பெரும் நிலப்பரப்புகள்—குறிப்பாக மன்னராட்சிப் பகுதிகளில்—பறவைகள் பற்றி ஆராயப்படாமலே இருந்துவந்தன. அந்தப்பகுதிகளின் பறவை வாழ்க்கை பற்றி ஒரு கணக்கீடு நடத்த நான் தயாராக இருப்பதாக மும்பை இயற்கை வரலாற்றுக் கழகத்துக்கு எழுதினேன். அதில் வரக்கூடிய செலவுகள், போக்கு வரத்து ஆகியவற்றுக்கான நிதியும், முகாம் வசதிகளும், மாநில வனத்துறை அதிகாரிகள் உள்ளிட்ட அதிகாரிகள் உதவி, கழகத்தின் பணியாட்களில் இரண்டொருவரின் சேவை ஆகியவற்றுக்கு கழகம் பொறுப்பெடுத்துக் கொண்டால் நான் ஊதியமின்றி அதனைச் செய்கிறேன் என்று குறிப்பிட்டேன். ஹைதராபாத் ராஜ்யம் பற்றி எவ்விபரமும் இன்றி இருந்தது. எனவே அதுவே முதல் தேர்வாகப் பட்டது. அதுவும் அண்டைப் பகுதியான கிழக்குத் தொடர்ச்சி மலைப்பகுதிகளில் வர்னே அறிவியல் கணக்கீடு ஈட்டித்தந்த முக்கியமான செய்திகளின் வெளிச்சத்தில் அது முக்கியமென்று பட்டது. அப்போது நிஜாம் அரசின் முக்கிய பதவிகளில் எல்லாம் இந்திய அரசின் ஐசி.எஸ்காரார்களும் அரசியல்துறை அதிகாரிகளும் இருந்தனர். அவர்கள் பணி அரசு மட்டத்தில் இரவல் தரப்பட் டிருந்தது. பெரும்பாலோர் இயற்கை வரலாற்றிலும் விளையாட்டுத் துறையிலும் ஆர்வம் உள்ளவர்கள். மும்பை இயற்கை வரலாற்றுக்

கழக உறுப்பினர்கள் பறவையியல் ஆர்வலர்கள். எனவே கழகம் கேட்டுக் கொண்டதற்கு இணக்கமான பதில் தெரிவித்தனர். நிதியமைச்சர் சர். அக்பர் ஹைதர் தூரத்து உறவினர். வேறு சில புள்ளிகளுக்கும் என் கடந்தகாலப் பணிபற்றித் தெரிந்திருந்தது. இவர்கள் கழகத்தின் வேண்டுகோளுக்கு ஆதரவு தெரிவித்தனர். இப்படியாக நிஜாம் அரசுடனான நீண்ட கடிதப் பரிமாற்றங் களுக்குப் பிறகு மூன்றுமாத களப்பணிக்காக மூன்றாயிரம் ரூபாய் அனுமதிக்கப்பட்டு விரைவில் பணியும் துவங்கியது. மூன்று மாதத்தில் முழு மாநிலமும் கவனிக்கப்பட முடியாததால் அரசு இன்னும் இரண்டு மாதகாலம் நீட்டிப்புத் தந்தது. நிதி உதவியும் நீடித்தது. இப்படிப் பிறந்ததுதான் ஹைதராபாத் மாநில பறவைஇயல் கணக்கீடு.

ஈ.சி.ஸ்டுவர்ட்டைப் போலவே ஹ்யூவிஸ்லரும் பிரிட்டிஷ் சாம்ராஜ்ய காவல்துறை சேவையைச் சேர்ந்தவர்தான். தன் காலத்தில் விஸ்லர்தான் இந்தியப் பறவைகளைப்பற்றி யாரினும் அதிகம் கற்ற ஆங்கிலேயராக இருந்தார். தன்விருப்ப ஓய்வு பெற்றுச் செல்லும் வரை சுமார் 16 ஆண்டுகள் பணிபுரிந்த விஸ்லர் பணிக்காலம் முழுதையும் பஞ்சாபில் கழித்தவர். இந்தியாவில் இருந்த காலம் முழுவதும் பறவைகளைச் சேகரிப்பதும் கற்பதும் அவர் வேலையாயிற்று! இது அவரது காவல்துறைப்பணிகளின் தேர்ச்சி பற்றி அறியாதவர்கள் காவல்துறையில் ஏதோ பேருக்கு பகுதிநேரப் பணியாற்றியதாக நினைப்பதற்கு வாய்ப்பாக இருந்தது! தன் தாயகம் திரும்புகையில் அவர் பெற்றிருந்த அறிவு எவ்வளவு ஆழமும் பரப்பும் கொண்டிருந்ததென்றால், பஞ்சாப் மட்டுமல்ல அண்டை மாநில மான கஷ்மீர், வடமேற்கு எல்லை மாகாணம்—ஏன் அன்றைய பிரிட்டிஷ் இந்தியா முழுவதிலுமான பறவையியலில் நிபுணராகிப் போனார். இங்கிலாந்தின் சசெக்ஸ் பகுதியில் பாட்டில் என்ற இடத்தில் வசிக்கச் சென்றபின்பும் பறவைகளில் அவர் ஈடுபாடு தொடர்ந்தது. பாலியார்க்டிக் பறவைகள், இந்தியப்பறவைகள் ஆகிய வற்றில் அவர் கவர்ச்சி குறையவில்லை. ஆனால் களப்பணிகளை குறைத்துக்கொண்டு தொகைப்படுத்தலில் கவனம் செலுத்தலானார்.

அதென்னவோ, மிகப்பல ஆங்கிலேய நண்பர்களுடன் என் உறவு விவகாரம் பிடித்ததாகவும் தகராறாகவும்தான் ஆரம்பித்திருக் கிறது. விஸ்லர் விஷயத்திலும் அப்படியே. மும்பை கழகத்தின் வெளியீட்டில் இவர் 1928இல் ஒரு கட்டுரைத்தொடர் எழுதி வந்தார். இந்தியப்பறவைகள் பற்றிய ஆய்வு என்ற அத்தொடர் அருமையான தாயினும் அதில் ராக்கெட் வால் டிரோங்கோவின் நீண்டவால்

இறகுகளின் அமைப்பு பற்றி எழுதியிருந்ததை நான் மறுத்தேன். அப்போது நேரிடையான ஒரு தொடர்புமிருப்பதாக அறிந்திருக்க மாட்டார்! வெளிப்படையான ஒரு மறுப்பு வந்து அவருக்கு எரிச்சலைத் தந்தது. ஆசிரியர்களான எஸ். எச். பிராட்டர், சர். ரெஜினால்ட் ஸ்பென்ஸ் அகியோருக்கு கடிதம் எழுதிவிட்டார். ஆனால் பிறகு தம் விபரங்களை சரிபார்த்தபின் நான் எழுதியதை ஏற்று அடுத்த ஒரு இதழில் குறிப்பும் வெளியிட்டது. நெருக்கமாக, வெற்றிகரமாக என் பல கணக்கீடுகளில் ஒத்துழைத்தபிறகு நான் அவருக்கு அனுப்பிய சில பறவைத் தோல்களுக்கு நன்றிகூறி (24-10-58ல்) எழுதிய கடிதத்தில் அவர் இந்நிகழ்ச்சியைப்பற்றி கீழ்க் கண்டவாறு நினைவுகூர்ந்தார்: இப்போது நான் உங்களுக்கு முறையாகவும் மனமார்ந்த முறையிலும் உங்களிடம் நான்பெற்று வரும் உதவிக்கும் அன்புக்கும் மற்றும் ஒரு சிறு அடையாளமான இவ்வுதவிக்கு நன்றிகூற விரும்புகிறேன். நம் ஒத்துழைப்பு எனக்கு மிகமிக நன்மை பயப்பதாக அமைந்துவிட்டது. டிராங்கோவின் வால் சிறகுகள் பற்றிய என் பிழையை நீங்கள் குறிப்பிட்டு திருத்தினீர்கள். அந்தப் பிழையே எனக்கு மிகமிக நல்லதோர் திருப்பத்தை ஏற்படுத்தியது!

அதுவரை நான் முறையான பறவைக்கணக்கீடு செய்ததில்லை. எனவே நான் விஸ்லரின் அறிவுரையை நாடினேன்; யோசனை கேட்டேன். அதேசமயம் இந்தப் பணியில் தொகைப்படுத்தும் பணியை அவர் செய்துதரமுடியுமா என்றும் கேட்டிருந்தேன். அவர் அப்போதுதான் முடித்திருந்த வர்னே கணக்கீட்டு தொகைப் படுத்தலின் அடுத்த அங்கமாக அமையும் என்பதையும் குறிப்பிட்டுக் கூறியிருந்தேன். உடனே அவர் இத்தகைய கணக்கீடு எப்படி செய்யப்பட வேண்டுமென்று மிக விரிவான ஆலோசனை களைப் பற்றி ஒரு பதிலை எழுதினார். அந்தக் கருத்துரைகளும் எனது குருநாதர் ஸ்ட்ரெஸ்மான் அவ்வப்போது கொடுத்த அறிவுரைகளும் ஹைதராபாத் கணக்கீட்டில் மட்டுமின்றி, என் பிற்கால கணக்கீடுகள் அனைத்திலும் உதவிகரமாக விளங்கின. விஸ்லரின் கருத்துகளின் பலமும் பயனும் கருதி அவற்றை இந்நூலில் ஒரு பிற்சேர்க்கையாக இணைத்துள்ளேன். ஒரு சுயசரிதை நூல் அவற்றை வெளியிட ஒரு சரியான இடமா என்ற கேள்வியும் நியாயமாயிருக்கலாம். ஆனால், அவரது கருத்துகள் அவ்வளவு சிறப்பானவை என்பதால் பொருத்தமா, இல்லையா என்று நான் அலட்டிக் கொள்ளவில்லை. அத்தகைய பணிகளில் எதிர்காலத்தில் வட்டாரக் கணக்கீடுகளின் பாராட்டும் போற்றுதலும்

பெற்றனவென்றால் அதற்கான முக்கியப்பங்கு இவரது கருத்து களையும் செய்த பணிகளையுமே சாரும். ஹைதராபாத் கணக்கீட்டு காலத்தில் கடிதங்கள் மூலமாக அவரே பங்கெடுத்துப் பணி செய்தார் என்று கூறலாம். இவ்வுதவி எல்லா கணக்கீடுகளிலும்—1944இல் அவர்காலமாகும் வரை—தொடர்ந்தது.

பனி வலைகள் என்றழைக்கப்படும் வலைகள் அப்போது இல்லை. அதற்கு பின்னால் பல காலம் ஆயிற்று. ஆனால் அவற்றைப் பார்த்தபின், அவற்றைப் பயன்படுத்தாத எந்தப் பணியும் நிறைவான பலன்தர முடியாதென்பது எனக்குத் தெளிவாய்த் தெரிகிறது. சுடுவதும் கண்ணால் கண்டறிவதும் இதனால்தான் முழுமையுற முடியும். கூச்ச சுபாவமுள்ள, மறைந்து வாழ்கிற பற்பல புதர்ப் பறவைகள்—குறிப்பாக கிழக்கு இமாலய அடிவாரப் பகுதிகள் போன்ற இடத்துப் பறவைகள்—இத்தகைய வலைகளில் மட்டுமே பிடிபடும். அதிகாலை, அந்திமாலை, இரவு ஆகிய நேரங்களில் வலைகளில் விழும். இல்லாவிடில் அவற்றைப் பற்றி நமக்குத் தெரியாமலேயே போய்விடும். ஜப்பானியப் பனிவலைகள் இந்தியாவில் 1959இல் உலக சுகாதார நிறுவனமும் மும்பை இயற்கை வரலாற்றுக் கழகமும் சேர்ந்து நடத்திய திட்டத்தின் கீழ்தான் அறிமுகமாயின. அதன்பின்பு, நான் ஏற்கெனவே சேகரித்திருந்த பறவைகளின் முழுமை பற்றிய என் நம்பிக்கை ஆட்டங்கண்டு விட்டது. அதுவரை தெரியாத பல பறவையினங்களை இந்த வலைகள் அறிமுகப்படுத்தின. பழைய கணக்கீடுகளின் பட்டியல் களுக்கு புதிய சேர்க்கைகள் நேர்ந்தன. இன்னும் புதிய பறவைகளும் கண்டறியப்படும் வாய்ப்பு இருக்கிறது.

அழகிய கையெழுத்தை நான் எப்போதும் போற்றி வந்திருக் கிறேன். அதைத் தெளிவான மனதின் அடையாளம் என்று நான் கருதுகிறேன். ஒரு முழுமையைத் தேடும் அணுகுமுறை, விபரங்களைத் தேடல் ஆகியவற்றுக்கும் அது அடையாளமாகும். இப்படி பொதுவாக முடிவுகட்டுவது அறிவுபூர்வமானதல்லதான். இதற்கு எக்கச்சக்கமான விலக்குகள் உள்ளன. எடுத்துக்காட்டாக, ஸ்ட்ரெஸ்மான், ராய் ஹாகின்ஸ் முதலிய பலரைக் கூறலாம். ஆனால் விஸ்லர் இந்த விதிக்கு ஒரு எடுத்துக்காட்டு—விதி விலக்குக்கு அல்ல. அளவு, பட்டியல்கள், விளக்கங்கள், விரிவுரைகள் முதலிய உட்பட எல்லா கடிதங்களையும் அவர் கையால்தான் எழுதிவந்தார். அச்சான, வலுவான, அழகான கையெழுத்து. எழுதும் முறைகள்கூட கெட்டுப்போன காலமிது. அழகாக வேண்டாம், தெளிவாக எழுதுவதே அரிதாகிப்போயிற்று,

அதெல்லாம் பத்தாம் பசலித்தனம் என்று ஆகிப்போனது. அப்படிப்பட்ட இக்காலத்தில் அவரது கடிதங்களைக் காண்பதே சுகானுபவம். நகலெடுத்ததாகத் தெரியவில்லை. அவர் எப்படித்தான் தான் எழுதியவற்றை நினைவு வைத்திருப்பாரோ? ஆனால் ஒரு போதும் அவர் எழுத்தில் கூறியது கூறல் கிடையாது.

ஹைதராபாத் அரசாங்கத்தில் நான் தேர்ந்தெடுத்த பல பகுதிகள் செய்தித் தொடர்பைப் பொறுத்தவரை பத்தாம்பசலியான இடங்கள் (அக்டோபர்-டிசம்பர் 1931 மார்ச்-ஏப்ரல் 1932) ஆகும். அங்குதான் என் சேகரிப்பு வேலை முழுதும். ஒதுக்குப்புறமாக இருந்ததே ஒரு வகையில் நான் அவற்றை தேர்ந்தெடுத்த காரணம் ஆகும். நடந்தோ மாட்டுவண்டியிலோதான் அங்கு போகமுடியும். அந்த வண்டிகளை 'கச்சார்' என்பார்கள். சாலைகளோ புழுதி நிறைந்த, சுவடுபடிந்த, மேடுபள்ளமான கிராமச்சாலைகள் அல்லது வனப்புற கச்சா சாலைகள். வனப்புற சாலைகளில் பாறை களிடையே பாலமற்ற வாய்க்கால்கள். நல்ல வேளையாக நான் போயிருந்த பருவத்தில் அவற்றில் தண்ணீர் இல்லை. வேறுவிதமாகச் சொன்னால் இந்தக் காலத்தில் நாகரிகமாக ஜீப் போகும் சாலை என்று சொல்கிற வகைதான். ஆனால் அது ஜீப்பே பிறக்காத காலம்! அந்தக் கால்வாய்களை வண்டி ஒரு கரை தொட்டு மறுகரைக்கு ஒரே பாய்ச்சலில் தாவிக்கடக்கும். வண்டிக்காரர்கள் மாடுகளின் வாலைத் திருகியும் கம்பை ஓங்கியும், காட்டுக் கூச்சலெழுப்பியும் மாடுகளை அப்படிப் பாய வைத்து விடுவார்கள். நானும் தெஹ்மினாவும் நிழலிருந்தால் பயணத்தின் பகுதிகளை வண்டியின் பின் நடந்தே கழிப்பது வழக்கம். வெப்பமில்லாவிட்டாலும் வண்டியின் மர அச்சுக்கள் சமயத்தில் இத்தகைய சாகசங்களுக்கு ஈடு நிற்க முடியாமல் உடைந்து விடும். ஆனால் அப்படிப் பழுதாகும் நேரம் தவிர மற்றபடி பயணத்தில் தடைகளில்லை. ஏனெனில் வண்டிக்காரர்களே இத்தகைய சிறு விபத்துகளுக்கு ஈடு கொடுக்குமளவுக்கு தச்சுவேலை தெரிந்தவர் களாயும் இருந்தனர். விறுவிறுவென்று காட்டுக்குள் போக வேண்டியது, எப்போதும் கைவசமுள்ள கோடாலியால் ஏதோ மரத்தை வெட்ட வேண்டியது, தட்டி வெட்டி அச்சு ஒன்றை செய்து மாட்ட வேண்டியது. அப்புறமென்ன, மீண்டும் பயணம் தான். ஒரு நாள் பௌர்ணமிக்கு அண்மையான நாள். வெப்பத்தை தவிர்ப்பதற்காக பின்மாலைப்பொழுதில் நடையும் வண்டியுமாக கிளம்பினோம். இரவு ஏழு-எட்டு மணிக்குள் அடுத்த சிற்றூரை அடைந்து விடுவது என்று திட்டம். வழியில் அச்சுமுறிவும் வேறு

சில காரணங்களும் தாமதப் படுத்திவிட்டன. நள்ளிரவு ஒரு மணிக்கு பசியும் களைப்புமாக போய்ச்சேர்ந்தோம். நல்லவேளை, வழிநெடுகிலும் நிலவொளி இருந்தது. காலையில் சாப்பிட்டுக் கொள்ளலாம் படுத்துவிடுவோம் என்று முடிவுசெய்தோம். எங்கள் சமையல்காரர் ரகீம் சமையல் சாமான் தேடி வேலை துவங்க நேரமாகுமே. விடுதலைக்கு முந்தைய உ. பியின் சிறந்த சமையல் காரர்களில் ஒரு ஆள் ரகீம். ஆனால் அவருக்கு அதுவே அவமரியாதையாகப் பட்டதால் அதெல்லாம் முடியாது, சமைத்து விடலாம் என்றார். சாப்பிடாமல் படுப்பதாவது? குறைந்தபட்ச சாமான்களைப் பிரித்தெடுத்து, காட்டுத் தீ மூட்டி வேலையைத் துவங்கி விட்டார். வழிப்பயணத்தில் நான் சுட்டுவீழ்த்திய சின்காராவின் சிறுநீரகமும் ஈரலும் கறியாயிற்று. அவர் தமக்காக வைத்திருந்த பழைய சப்பாத்திகளுடன் சாப்பாடு. சுமாரான அளவுதான். ஆனால் அதன்பின்தான் அவர் எங்களைப் படுக்க அனுமதித்தார். அப்படி பணிவும் கருணையும் உள்ள சேவகர்கள் பழங்கதையாய்ப் போய்விட்டனர். பார்வையிலே சேவகனாய் பண்பிலே பலவுமாய் அமைந்த அத்தகு ஆட்களை இனிக் காண முடியாது. இது ஒரு பரிதாபம்தான்.

தொலைவிலும் மிகக்குறைந்த எண்ணிக்கையிலுமான பேருந்து நிறுத்தங்களும் இத்தகைய இடங்களுக்கு அண்மையில் நிஜாம் நாட்டில் பொழுதுப்போக்கு வரவும் போதிய அளவு வளரவில்லை. சிற்றூர்களிலும் உள்ளடங்கிய பகுதிகளிலும் தனியார் போக்கு வரத்தும் அக்கறை காட்டவில்லை. பொதுவாக பழைய போர்ட் அல்லது செவர்லேகார்களை இங்கு தட்டி அங்குவெட்டி எலும்பை முறிக்கும் வண்டிகள் தயாரிக்கப்படும்.! பிளைவுட் அல்லது உருக்கிய இரும்புத்தகடுகள் வேய்ந்திருக்கும். பயணிகளின் எண்ணிக்கைக்கு வரையறையில்லை! இவற்றை வாடகைக்கு வாங்குவதற்கே அவர்களைக் கெஞ்சிக்கூத்தாடவேண்டும். அல்லது உள்ளூர் காவல்துறை கண்காணிப்பாளர்கள் அல்லது பிற அதிகாரிகள் மூலம் கட்டாயப்படுத்த வேண்டும். இந்தக் கணக் கிட்டுப்பணிக்கு ஆவன செய்யவேண்டுமென்ற அரசாணை உள்ளூர் அதிகாரிகள் வரை கீழேயும் வந்திருந்தது. தனியார் போக்குவரத்து சுயேச்சையாக இயங்கியதென்பது அவற்றின் முதலாளி-ஓட்டுனர் களின் முரட்டு நடவடிக்கைகளிலேயே தெளிவு. நேரத்துக்கு வரவேண்டும் என்று ஆயிரம் தரம் சொல்லியிருப்போம்; அவர்களும் ஆறுமணிக்கு வருவதாக மிக உறுதியாய் சொல்லிச் செல்வார்கள். ஆறு-ஏழு-எட்டு. அவர்கள் வருவதற்கான எந்த அறிகுறியும் தெரியாது.

சாமான்களைக் குவித்துப் போட்டு உட்கார்ந்துகொண்டு சபித்துக் கொண்டிருக்கவேண்டியதுதான். அங்குமிங்கும் நடந்துகொண்டே யிருக்க வேண்டியதுதான். காரணம் என்னவோ எப்போதும் ஒரேமாதிரி: ஓட்டுநர் தேநீர் குடித்துக்கொண்டிருந்தார்–சாப்பிட்டுக் கொண்டிருந்தார், இதேதான். நீண்ட விவாதங்களும் சூடான உரையாடல்களும் தொடரும். பிறகு சாமான்களை இங்கிருந்து அங்குமாற்றி இதைப்பிரித்து அதில் சேர்த்து, இப்படிவைத்து அப்படிவைத்து என்று ஒருவழியாக வண்டியிலும் கூரையிலுமாக அடுக்குதல்—பறவைகள் பெட்டி, அரிக்கேன் விளக்குகள், இரும்பு வாளிகள், அரிசி மூட்டை, கோதுமைமாவு மூட்டை, நெய், மண்ணெண்ணெய் மற்றுமுள்ள தட்டுமுட்டு சாமான்களுக்கு பஞ்சமில்லை. பொதுவாக வண்டியின் கூரையில் கூண்டு வடிவக்கூடை ஒன்று இருக்கும். அந்தப்பெரிய மூங்கில் கூடையில் கோழிகள் இருக்கும். பயணம் போகப்போக அவை சமையல் கூடத்திற்கு மாற்றப்பட்டு நம் வயிற்றுக்குப் போய்விடும். ஒருவழியாக சாமான்களை ஏற்றவும் திடீரென்று பெட்ரோல் போதாதே என்பது ஓட்டுநருக்கு நினைவு வரவும் சரியாக இருக்கும். உடனே வண்டி அந்தத் திசையில் போக ஆரம்பிக்கும். மின்சாதனங்கள் இல்லாத இடமாதலால் கையால் இயக்கித்தான் பெட்ரோல் நிரப்பிக் கொள்ள வேண்டும். அந்த அளவில் அங்கும் நேர விரயம். இப்படியான தொந்தரவுகள் சிலவோ, பலவோ, எல்லாம் சேர்ந்து ஒருவழியாக சாலையை அடைய ஒன்பது மணி ஆகிவிடும். வெப்பம் சூடு பிடித்துவிடும். சேரவேண்டிய இடத்தை சென்றடைவது வேறுபல கட்டிலடங்காத எதிர்பாராத காரணங்களால் தடைபடும்—சாலையின் நிலை, ஆஸ்த்மா நோயாளிபோல் செருமும் எஞ்சின், பலமுறை பழுதுபார்த்த, பரிதாபமாகக் காட்சிதரும் டயர்களின் நிலைமை இவை அவற்றில் சில! தங்குமிடங்கள் பொதுப்பணித் துறையின் விருந்தினர் மாளிகை, வனத்துறையின் ஓய்வில்லம், காலிசெய்யப்பட்ட விடுதி, மாற்றம் செய்யப்பட்ட மாட்டுக் கொட்டகை எதுவாகவும் இருக்கலாம். பொதுப்பணித்துறை அல்லது வனத்துறை இல்லங்களில், அதுவும் உள்ளடங்கிய பகுதிகளில், யாருமே அதிகம் வராத இடங்களில் இருப்பவற்றில், அந்த நாட்களில்–அதாவது விடுதலைக்கு முன்பு–வசதிகள் மிகக்குறைவு. அந்த மாதிரி விடுதிகளுக்காகவே உள்ள இரண்டு இரும்புக் கட்டில்கள். (பாய் தலையணை ஏதும் இராது) சில மர நாற்காலிகள் மேசைகள் இவை பொதுவாக அங்கிருக்கக் கூடியவை. எனவே நாமாக எடுத்துச்செல்லும் சாமான்களிலேயே படுக்கை, துண்டுகள்,

விரிப்புகள், வாளிகள், பாத்திரங்கள், விளக்குகள், சோப்பு முதலியவை, பிற சமையலறை சாதனங்கள் எல்லாம் இருக்க வேண்டும். இவ்வளவையும் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்துக்கு எடுத்துச் செல்வது வேறு. தொழுவத்தில் தங்கினாலோ மடக்குக் கட்டில்கள் வேறு. புழக்கம் நிறுத்தப்பட்ட இடைவழி விடுதிகளைக் கூட—அதிக நாள் தங்க நேரிடும்போது—அழகுசெய்வது வசதியான, வசிக்கக்கூடிய வீடுபோல் உணரக்கூடிய உறைவிடமாக மாற்றுவது தெஹ்மினாவுக்கு கைவந்த கலை. ஒரு இடத்துக்குப் போனதும், நாங்கள் யாவரும் சேகரிப்பு வேலைக்கு கிளம்பினால் அவர் தன் வேலையை ஆரம்பித்துவிடுவது வழக்கம். கூட்டி, பெருக்கி சுத்தம் செய்து வண்ணத்திரைகள், தட்டிகள், பூச்செடிகள் முதலியவற்றை வைத்து அலங்கரித்து ஆகிவிடும். தன்னோடு இவற்றையும் எடுத்து வரவேண்டும் என்பது எப்போதுமே தெஹ்மினாவின் நிபந்தனை யாகும்! இத்தகைய பெண்மைசார்ந்த பணிகள் ஒரு மந்திரம்போல் மாற்றத்தை ஏற்படுத்திவந்தன.

கார் வசதியற்றபோது இரண்டு தங்கிடங்களுக்கு இடையே தொலைவு குறைவாக இருக்குமாறு பார்த்துக்கொள்வோம். ஏனெனில் சாமான்களை மாட்டு வண்டியிலோ, தாமே தூக்கிக்கொண்டோ இடமாற்றம் செய்யவேண்டியிருக்கும். எட்டுமைல் பத்துமைலுக்கு மேல் தொலைவிராது. கார் இருந்தாலும் நாற்பதைம்பது மைல் களுக்கு மேல் போவதில்லை. பறவைப்பெட்டியைத் திறத்தல், மேசை நாற்காலிகளை ஒழுங்கு செய்தல் ஆகியவற்றில் இரண்டு மணிநேரம் கழித்துவிடும். ஆக பொதுவாக நாங்கள் கிளம்ப பிற்பகலாகிவிடும். அனுபவமும் சூழ்நிலைகளும் காரணமாக சமீபத்திய என் தொழிலனுகுமுறை என்னவென்றால், சாதாரண மான பொதுவான பறவைகளைப் பிடிப்பதை என் உதவியாளருக்கு அறிவுரைகள் கூறி அவர் பணி என்று விட்டுவிடுவேன். அண்மைப் பகுதிகளில் அவர் பணி அமையும். எனது பிற்கால கணக்கிட்டுப் பணிகளில் மும்பை கழகம் அனுப்பும் உதவியாளராக ஜான் கேப்ரியல் என்ற கிழக்கிந்திய இளைஞர் வருவார். சாதாரண கோவாவாசிகளிடமிருந்து வேறுபடுத்தி அவரை கௌரவப்படுத்த இப்படித்தான் அவரைப்பற்றிக் குறிப்பிடவேண்டுமென்று கூறப்பட்டிருந்தது. அது கோவா போர்த்துகீசியர் ஆட்சியிலிருந்த காலம். கேப்ரியல் அமைதியான, நம்பகமான தொழில்நிபுணர். அவரைப்போல் மிக விரைவாக பறவைகளைத் தோலுரிப்பவர் அரிது. அந்தத் தோல்களும் அருமையாக இருக்கும். பூக்கொத்தி லீப் வார்ப் போன்ற சின்னஞ் சிறு பறவைகள் சுடப்படும்போதே தோலுரிப்பது



முதலில் பிறந்த ஐவரில் இருவரும் 'அடுத்துவந்த நால்வரும்', 1902 சாலிம் அலி வலப்புற ஸ்டூலில் (புகைப்படம்: ஷம்சுதீன் லுக்மான்ஜி)



மும்பை, கேத்வாடியிலுள்ள குடும்ப வீடு அமீர் மன்சில், 1912. வலப்புறம் மேல்மாடிப் பலகணிதான் மகப்பேறு இல்லம்! 5 சகோதரர்கள், நான்கு சகோதரிகள்—ஆக நாங்கள் அத்தனை பேரும் இங்குதான் பிறந்தோம். 1878லிருந்து 1896 வரை



கேத்வாடியில் சகோதரர் ஹமீது, சகோதரி காமுவுடன், 1905.



லண்டனில் தன் சகோதரன் சர்ஹானுடன் தெஹ்மினா, 1905 அல்லது 1906. (புகைப்படம்: டபிள்யூ விட்லி லிமிடெட்)



அமீருத்தின் தியாப்ஜி (அப்பா/மாமா), ஆகஸ்ட் 1910. (படம் ஷம்சுதீன் லுக்மான்ஜி)



ஹைதராபாத் ஹஷுபாய் இல்லத்தில் சாலிம் அலி, 1910.




தெஹ்மினா, ஜபீர், காமு, சாலிம் அலி, சாத், சஃபியா, தவாய், 1920.



என்றும் மாறா
நம்பிக்கைவாதி
பி. ரிப்பன் ட்ராப்,
தவாய், 1922.



தெஹ்மினா, ஜேன், இறந்த மானோடு, சோலாபூர், 1928.



என் குருநாதர்
பேராசிரியர் எர்வின்
ஸ்ட்ரெஸ்மான்
ஹெலிகோலாண்ட்,
அக்டோபர், 1929.



பிரமுகர்கள் பெட்டி, கொச்சின் பாரஸ்ட் டிராம்வே, 1935.



அல்மோரா மாவட்டம், சோசாவில் நாராயணசாமியோடு அவரது ஆசிரமத்தில், 1945.



நாற்பதாண்டுகள் நானும் உடனுறைந்த, 46, பாலிஹில் என்ற முகவரியிலமைந்த ஹசன் அலியின் வீடு. (படம்: ஷாஹித் அலி)



இந்தியக் குடியரசுத் தலைவர் பத்ம விபூஷன் விருதளித்துப் பெருமைப்படுத்துதல், 3.4.1976.



விருது பெற்றவுடன் திருமதி இந்திரா காந்தியுடன். (படம்: புகைப்படப் பத்திரிகையாளர் ஆனந்த் எஸ். தேசாய்)

சிரமமாகி விடும். அவற்றைத் தோலுரித்து ஆய்வுக்குரிய மாதிரியாக மட்டுமல்லாது துணை இன அடையாளங்களுக்கு மிக இன்றி யமையாத மென்சிறகுகள் பற்றிய மிக நுண்ணிய விபரங்களையும் காட்டக்கூடிய வகையில் அவற்றைப் பாடம் செய்ய முயன்றவர் களுக்கு மட்டுமே அது எவ்வளவு சிரமம் என்பது புரியும். மிகவும் சிக்கலான, பொறுமை தேவைப்படுகிற, நிறைய நேரம் பிடிக்கிற வேலை. ஆனால் காலை வேளை சேகரிப்புக்குப் பின்பு உட்காரும் கேப்ரியல் பகல் சாப்பாட்டுக்குள் இருபத்தைந்துக்கும் மேற்பட்ட பறவைகளை தோலுரித்துவிடுவார். அதுவும் சுத்தமாக, நேர்த்தியாக சிறு பறவைகளுடன் மத்திய அளவு பறவைகளும் இருக்கும். எந்தப் பறவைகள் வேண்டுமென அவரிடம் கூறப்பட்டதோ அவற்றை அடையாளம் காண்பதில் அவர் தவறியதேயில்லை. எல்லா வகையிலும் வேலையை நிறைவளிப்பதாகச் செய்துவிடும் கலை அது. முற்பகல் தோறும் காலை வேட்டையை முடித்து வந்தவுடன், சடங்குபோல தினம் கேட்கும் கேள்வி: இன்றென்ன கிடைத்தது? அவரும் பெரும்பாலும் கூறும் பதில்: "நானும் நல்ல நல்ல பறவை கிடைக்குமா என்று தேடித்தேடிப் பார்த்தேன். ஆனால் கிட்டிய தென்னவோ இதுதான்" என்பதுதான். இதைத் தனக்கே உரிய முறையில் கூறி ஏமாற்றத்துடன் ஒரு மைனாவையோ வேறேதோ ஒரு குருவியையோ காட்டுவார், நானும் "இதையே எடுத்துக் கொள்வோம்" என்பேன். நல்ல பறவை கிட்டாதபோது நானும் இதே எளிய கொள்கையைத்தான் பின்பற்றுவேன் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். துணை இனப் பிரிவுகளைத் தீர்மானிப்பதில் சாதாரணப் பறவைகளுக்கும் ஒரு முக்கியத்துவம் உண்டு. மனப்பான்மையாலும் நடத்தையாலும் கேப்ரியல் தொழிலில் உதவியிலும் உடனுறை வாழ்விலும் ஒரு இலட்சிய சகாவாக விளங்கினார். அவரது பெரிய குறை—சாப்பிடும் முறை. ஒவ்வொரு வாய் சாப்பிடும் போதும் அவரது பற்களில் கரண்டி இடித்து ஒலியெழுப்பும். இது சாதரணமாகவே மற்றவர்களுக்கு நிச்சயம் எரிச்சலூட்டும். அதுவும் சற்று மென்மையான உணர்வுக் காரர்களுக்கு பைத்தியமே பிடித்துவிடும்!

சர்வே ஆப் இந்தியாவின் (இந்திய நில அளவைத்துறை) பெரிய அளவு உள்ளூர் வரைபடங்களை ஆராய்வோம். அதில் சுற்றுப்பட்ட ஊர்களின் இயற்கை வேறுபாடுகள் புரியும். வனத்துறை அலுவலர்கள், உள்ளூர் வேட்டைக்காரர்கள் ஆகியோருடன் விவாதித்து பத்து மைல் வட்டாரத்துக்கு காலார நடந்தே பணி முடிக்கக்கூடிய விதமாக இடங்களைத் தெரிவுசெய்வோம். இத்தகு பொதுப்படையான

திட்டமிடல் எனது பிற பிற்காலப் பணிகளிலும் பொதுவாக பயனளித்தது. விடுபட்ட பகுதிகளோ, சேகரிக்கப் படாமல் போன பறவைகளோ, பதிவு செய்யப்படாதவையோ மிக அரிது. அதாவது அப்படித்தான் நம்பிக்கையோடு நான் அப்போது கற்பிதம் செய்து கொண்டேன். ஆனால் பிற்பாடு காலப்போக்கில் பணி வலைகள் பழக்கத்துக்கு வந்தபோதுதான் எவ்வளவு இராப்பறவைகளும், திரியும் பழக்கமில்லாத பறவைகளும் விடுபட்டுப் போயிருக்கும் என உணரமுடிந்தது.

மாநிலக் கணக்கீடுகளில் முதலாவதாக நடத்தப்பட்டது 1931இன் ஹைதராபாத் கணக்கீடு என்று முன்பே சொன்னேன். அதில் முதல்முதலில் வேலை துவங்கிய இடம் மெஹபூப் நகர் மாவட்டத்தில் ஒரு வட்டத்தலைநகரமான மனனூர் ஆகும். இது பரவலாக அமைந்த ஒரு சிற்றூர் ஆகும். அம்ராபாத் பீடபூமியில் 2000 அடி உயரத்தில் நல்லமலைக்குன்றுகளில் இது அமைந்திருந்தது. அதைச் சுற்றிலும் இருந்த ரிசர்வ் காடுகள் அருமையான வனப் பகுதியாகும். ஈரப்பத உதிர்காட்டு மரங்களின் பலவகைகளை அங்கு காணலாம். தேக்கும் நல்லமட்டியும் ஏராளமாக இருந்தன (நல்ல மட்டியின் தாவரஇயல்பெயர் டெர்மின்லியா டொமென் போசா). நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் பின்னாளில் இத்தகைய சொர்க்கம் போன்ற வனாந்தரங்களில் பணிபுரிந்திருக்கிறேன். ஆனால் இதுதான் முதல்அனுபவம். அதன் வனவுயிர்ச் செல்வத்தினாலும் இவ்வூர் என்மனதில் நிலைத்து நின்றுவிட்டது. அதுவரை எத்தனை புலிகள் பார்த்திருப்பேனோ அவற்றிலும் அங்கு பார்த்த புலிகளின் எண்ணிக்கை அதிகம். காட்டுப்பாதைகளிலும் புலி, சிறுத்தை, கரடி முதலிய காட்டுவிலங்குகளின் காலடித்தடத்தை அவை சென்ற சிறிதுநேரத்தில் அதே பாதையில் செல்ல நேர்வதால் ஒவ்வொரு காலையிலும் பார்ப்பதில் பரபரப்பான மகிழ்ச்சி இருந்தது. இதைவிட, சில வேளைகளில் அம்மிருகங்களையே காலைசேகரிப்புக்குச் செல்கையில் சந்தித்துவிட நேர்ந்த வேளைகளில் ஏற்படும் உணர்ச்சி இன்னும் தீவிரமானது. இரண்டாவது தங்குமிடம் மனனூரை அடுத்து பராஹாபாத். இது மனனூரிலிருந்து 12 மைல் தென்திசையில் உள்ள ஊர், உயரம் 2800 அடி. ஒரு மலை வாழ்விடமாக இதைமாற்ற அரசிடம் ஒரு திட்டம் இருந்தது. அந்த எண்ணம் கருத்தளவிலேயே நின்றுவிட்டது. செஞ்சுக்கள் என்ற ஆதிவாசி இனத்தினர் இங்கு வாழ்ந்து வந்தனர். இது அவர்களின் தாயகம். இவர்களைப்பற்றி ப்யூரர் ஹெய்மன்ட்ராப் என்ற மனித இயல் அறிஞர் விரிவாக எழுதியுள்ளார். மலைமேலிருந்த ஓய்வில்லம்

சென்றடைய சரியான சாலையில்லை. ஒற்றையடிப் பாதைதான். சாமான்களெல்லாம் தலைச்சுமையாகத்தான் போயாகவேண்டும். செஞ்சு மக்கள் ஆண், பெண், குழந்தை எல்லாரும் இதற்கு வருவர். 'பெகர்' எனப்படும் இப்படிப்பட்ட கட்டாய உழைப்பு முறையை ஏற்படுத்தியவர் உள்ளூர் தாசில்தார் என்றுதான் நினைக்கிறேன். தலைக்கு ஒரு கிலோ கம்பு (தானியம்)தான் நிர்ணயிக்கப்பட்ட கூலி. நம்பமுடியாத நிலைமைகள். செஞ்சு மக்கள் அப்போதும் (1930இல்)கூட நாகரிகத்திலிருந்து அவ்வளவு தூரத்தில் இருந்ததால் பணத்துக்கு அவர்களிடையே மதிப்பில்லை சாமானாகவே கூலிபெற விரும்பினர். (இப்படித்தான் எங்களுக்கு சொல்லப்பட்டது). இந்த நோக்கத்துக்காக நாங்கள் வரும்போதே சமவெளிப் பகுதியிலிருந்து வேண்டியஅளவு தானியம் வாங்கிக் கொள்வது வழக்கம். ரூபாய்க்கு பன்னிரண்டு கிலோ! ஏகமலிவு. எனவே பணம் ஒதுக்குவதில் சிரமமில்லை.

'பெகர்' வேலைமுறை, சொல்லப்போனால், அநியாயமான ஒரு வித அடிமை முறைதான். சட்டத்தின் மூலம் நாட்டின் பிறபகுதிகளில் தடைசெய்யப்பெற்று நெடுங்காலத்துக்குப்பின்பும் நிஜாம் அரசில் அது வழக்கில் இருந்துவந்தது. அரசுப்பணிகளுக்கு தேவைப்படும் போதெல்லாம் பணியாள் ஏற்பாடு செய்யவேண்டியது படேல் என்றழைக்கப்பட்ட கிராமத்தலைவரின் கடமை. அதனால் உடல் வலுவுள்ள எல்லாரையும் படேல் தேவை வரும்போது கட்டாயப் பணிக்குக் கட்டளையிட்டு விடுவார். அவர்கள் அப்போது என்ன செய்து கொண்டிருக்கிறார்கள், ஏதுசெய்துகொண்டிருக்கிறார்கள் என்பதைப்பற்றி அவருக்கு கவலையில்லை. அவர்களின் தலைக்கு நாளைக்கு 1 கிலோ என்ற கூலியை அரசு நிர்ணயித்திருந்தது. ஒரு சமயம் என் குழுவினர் உள்ளடங்கிய ஒரு காட்டுச்சிற்றூரை சென்றடைந்தபோது அங்கு எங்களுக்கு மாறிமாறிப் பணிசெய்ய ஒரு கூலியாள் குழுவே தேவைப்பட்டது. பொழுதுவிடிந்து வெகு நேரமாகி விட்டபடியால் ஆண்கள் யாவரும் வேலைக்கு சென்று' விட்டிருந்தனர். படேல் ஒவ்வொரு குடிசையாகப் புகுந்து அலங் கோலம் பண்ணி எதிலும் யாரும் இல்லாமல் ஒரேஒரு குடிசையில் ஒரு சிறுகுழுவினர் களைத்துப்போய்த் தூங்கிக்கொண்டிருக்கக் கண்டு அவர்களை எழுப்பி எங்களுக்கு மூட்டை தூக்க இழுத்து வந்தான். தாங்கள் தொழில்முறையில் பாட்டுப் பாடுகிறவர்களென்றும் ஒரு திருமணத்தில் பாட தொலைதூரத்திலிருந்து இந்த ஊருக்குவந்து இரவெல்லாம் பாடிக்களைத்து உறங்கிக்கொண்டிருப்பதாயும் கூறிய மறுப்புகளையெல்லாம் அவன் பொருட்படுத்தவேயில்லை. எல்லாம்

செவிடன் காதில் ஊதிய சங்குதான். தாசில்தார் ஆணையிட்டு விட்டார். படேல் ஏற்பாடு செய்துவிடவேண்டும், அவ்வளவுதான். எனவே அவர்கள் இழுத்துவரப்பட்டு, தலையில்சுமை ஏற்றப்பட்டு, எங்களைப் பின்தொடருமாறு பணிக்கப்பட்டுவிட்டனர். அவர்களது நல்லகாலம் ஐந்தேமைல் தொலைவில் அடுத்த ஊரில், இன்னொரு குழுவினர் கிடைத்தனர். அந்தப் பாடகர்களை விடுவித்து, மீண்டும் இளைப்பாற அனுப்ப முடிந்தது எனக்கு மகிழ்ச்சியளித்தது.

இன்னொரு தாசில்தார் எனக்கு அதிகாரபூர்வமான அச்சிட்ட விகிதங்களைத் தந்தார். அரசு ஊழியர்கள் பணிநிமித்தம் வரும்போது அவர்களுக்கு சாமான்கள் விற்கப்படவேண்டிய விலை விகிதம். அது சில ஆண்டுகள் முன்பு நிஜாம் அரசால் நிர்ணயிக்கப்பட்ட விகித மாகும். அதன்படி ஆடு ரூபாய்க்கு ஒன்று, கோழிக்குஞ்சு ரூபாய்க்கு எட்டு. முட்டை சும்மாவே என்று சொல்லிவிடலாம்! மற்றவையும் இதேமாதிரிதான். இதனை ஹைதராபாத் நாணயத்தில் (ஹாலி) தர வேண்டும். இரண்டு இந்திய ரூபாய்க்கு மூன்று ஹாலி. 1931இல் நிர்ணயிக்கப்பட்டு சில ஆண்டுகள் ஆகிவிட்ட நிலையில் எல்லாம் அப்படியே நடைமுறையில் இருந்ததாகச் சொல்லமுடியாவிட்டாலும் நிஜாம் அரசு எங்களுக்குக் கொடுத்த மானியத்தொகைக்குள்ளேயே எங்கள் வரவு-செலவை அடைத்துக்கொள்கிற அளவுக்கு மலிவுதான். அதனால் கணக்கிட்டுப்பணி சிரமமின்றி நடந்தது.

போர்கம்பாடியிலிருந்து சிலமைல் தொலைவில், கோதாவரிக் கரையில், சிதைவடைந்த உறைவிடங்களின் தொகுதியாக அமைந்த நெலிப்பாக்கா கிராமத்தில் ஊருக்கு வெளியே யாரும் பயன் படுத்தாத ஓர் மாட்டுக் கொட்டகையில் தங்கினோம். மூங்கில் தட்டி களாலான சுவர் ஓரளவு சூரியவெப்பத்திலிருந்து காத்தது. மும்பை யிலிருந்து சில விசித்திரமான ஆட்கள் அந்த வட்டாரத்தில் கிடைக்கும் எல்லாப் பறவைகளையும் சுட்டுக்கொன்று ருசிபார்ப்பதற் கென்றே வந்திறங்கியிருப்பதாக ஊருக்குள் ஒரு தகவல் பரவி நாங்கள் வந்து சேர்ந்த சிறிது நேரத்திலேயே விடலைப் பையன்களும் மற்றவர் களுமாக பலதரப்பட்ட கும்பல் கூடிவிட்டது. சிலர் தங்ளை உள்ளூர் வேட்டைக்காரர்களாக அறிமுகப்படுத்திக்கொண்டனர். அவர்களில் பெரும்பாலோர் கள்ள வேட்டைக்காரர்கள். ஊரறிந்த திருடர்கள். கரையோரமாக கொஞ்சதூரம் போனால் ஆற்றில் ஒரு தீவு இருப்பதாயும், ஒரு முதலை தினமும் வெயில்காய அங்கு வருவதாயும் என்னிடம் கூறினார்கள். எனக்கு அதைச்சுடும் விருப்பமிருந்தால் அடுத்தமுறை அப்படி வரும்போது சொல்கிறோம் என்றும் சொன்னார்கள். மெய்யாகவே அப்போது எனக்கு

அத்தகைய ஆசை இருந்தது. இரண்டு நாட்களுக்குப்பின் காலை சேகரிப்பை முடித்துக் கொண்டு நண்பகல் அளவில் திரும்பியபோது ஒரு மணிநேரம் முன்பு முதலையைக் கண்டதாகவும் அங்கே என்னை அழைத்துச் செல்வதாகவும் சொல்லிக்கொண்டு எனக்காக ஒரு ஆள் காத்திருந்தான். ஆனால் எதிர்பார்க்கக்கூடிய விதமாக நான் அந்த இடத்துக்குப் போனபோது முதலையுமில்லை, ஒன்றுமில்லை. ஆனால் தொலைநோக்கி வழியே சுற்றிலும் நோட்டமிட்டதில் கொஞ்சதொலைவில் நீரில் கரையோர நாணல்களிடையே பாதிமறைந்து கறுப்பாக ஏதோ ஒன்று திட்டாகத் தெரியக் கண்டேன். 200மீட்டர் தொலைவில் தெரிந்த அது பாதி நீரில் மூழ்கிய ஒரு முதலையின் தலையாக இருப்பதும் இயலக்கூடியதே. கூர்ந்து நுணுகிப்பார்த்தால் வீங்கிப்போன ஒரு மனித உடல்! சில நாள் முன்பு மருமகளிடம் சண்டைபோட்டுக்கொண்டு கோபித்துக் கொண்டு போய்விட்ட பிறகு கண்ணிலேயே தட்டுப்படாத ஒரு மாமியாரென்று பிறகு அடையாளம் தெரிந்தது! அந்த இடத்துக்கு நேர் கீழேயிருந்ததுதான் குடிக்கவும் புழங்கவும் நீர் வந்தது என்று அறிந்து அதிர்ந்துபோனேன். ஆக, இந்தக்கிழவியின் சவத்தின் வழியே சலிக்கப்பட்ட தண்ணீரில்தான் நாங்கள் பாட்டுக்கு புழங்கிக்கொண்டிருக்கிறோம். கூக்குரலிட்டபடி உறவினர்கள் அந்த மணம் வீசும் உடலை கரைசேர்த்தனர். ஆனால் அதை அடக்கம் செய்யுமுன்பு காவல்துறை விசாரணையும், அனுமதியும் பெறவேண்டி காத்திருக்க வேண்டியதாயிற்று. அவசரத்தை முன்னிட்டும் உடல் நீலம்பாரித்துக் கொண்டே வந்ததை எண்ணியும் எரிக்கும் வெயிலில் அவர்கள் ஒன்பது மைல் தொலைவிலிருந்த காவல்நிலையத்துக்கு நடந்தே சென்றனர். அதைவிட அருகே வேறு காவல் நிலையமில்லை. ஆனால் காவல் நிலையப்பொறுப்பாளரான துணை ஆய்வாளர் "மிகவும் நேரமாகி விட்டதால்" "சிரமப்பட" விரும்பவில்லை. மறுநாள் காலை சுமார் ஏழரை மணிக்கு தான் வந்திறங்கினர்.

அவர் இது கடவுளே தந்த வரப்பிரசாதம் என்று உணர்ந்தார். எவ்வளவு கடுமையாக இருக்கமுடியுமோ அவ்வளவு கடுமையாக இருப்பதையும் பொருட்படுத்தவில்லை. சவப்பரிசோதனையும், விரிவான விசாரணையும் நடத்தவேண்டியது கட்டாயக் கடமை என்றார். அதற்குப்பிறகே சவ அடக்கத்துக்கு உடலைக்கொடுக்க முடியுமென்றார். அவரது அடாவடித்தனமான உறுதியைப் பார்த்தால் உடல் இன்னொரு 24 மணிநேரம் அங்கேயே கிடந்து சுற்றுச்சூழலை நாசப்படுத்தப்போகிறது என்று தோன்றியது. இது சட்டத்தின் கட்டாயத்தேவை என்பது அவர் கட்சி. எழுத்தளவில்

சட்டத்தை நிலைநிறுத்துவதில் அவரது பிடிவாதத்தையும் என் வேண்டுகோளுக்கு பயனில்லாததையும் பார்த்துவிட்டு நானும் என் வேலையைப் பார்க்கக் கிளம்பிவிட்டேன். மூன்றுமணி நேரம் கழித்து திரும்பிவந்து பார்த்தால் அந்த உடலையும் காணோம், அதிகாரி யையும் காணோம். கிராமத்தில் எல்லாமே அமைதியான சகஜ நிலையில் இருந்தது. என் தலைமறைந்ததும் இறந்த கிழவியின் மகன் காவல்துறைக்காரருக்கு நியாயத்தை உணர்த்திவிட்டான்—ஒரு ஐம்பது ரூபாய்மூலம்! உறவினர்கள் அதைச்சுரண்டி இதைச்சுரண்டி எப்படியோ தேற்றிய பணம். உடனே எல்லாருக்கும் நிம்மதியாக வழக்கு அங்கேயே முடிவாக்கப்பட்டுவிட்டது. "சம்பளம் குறைவு; ஆனால் நல்ல வரும்படி" என்று மும்பை மாநகராட்சி பால் கண் காணிப்பாளர் ஒருவர் தன் நண்பர் கேட்டபோது சொன்ன பதிலை இச்சம்பவம் நினைவூட்டியது. அந்த நாட்களில் மாட்சிமைக்குரிய மன்னர் பிரான் நிஜாமின் நாட்டில் அலுவலர்களின் பொதுவான நிர்வாகப்போக்கு இப்படியாகத்தான் இருந்தது. ஒருவேளை அங்கு மட்டும் அல்ல; அப்போது மட்டுமல்ல என்றும் தோன்றுகிறது.

பதினைந்து நாட்களுக்கோர்முறை அல்லது சற்றுமுன் பின்னாக நகர்ப்புறத்திலிருந்து எவ்வளவுதூரம் உள்ளே இருக்கிறோம் என்பதைக் கணக்கிட காட்டிலிருந்து நாட்டுக்குள் தலையைக் காட்டுவோம். ஹைதராபாத் நகர் வந்து வனாந்திரத்தில் கிடைத்தாத பொருட்களையெல்லாம் வாங்கிப்போட்டுக்கொண்டு மீண்டும் எங்களைத் தயார்ப் படுத்திக்கொள்வோம். சாஹ்பாபாத்திலிருந்த ஹஷம் அண்ணன் வீட்டில் அவரோடும் அவரது குடும்பத் தோடும்தான் இந்த இடைவேளைகளில் தங்குவது வழக்கம். ஹஷம் தான் எனது பெரியண்ணா. பதினெட்டு வயது மூத்தவர். கேத்வாடி காலத்தில் என்னோடு பறவை பிடிக்கும் கூட்டாளி சுலைமானுடைய தந்தை. மும்பையில் சட்டம் படித்துக்கொண்டிருக்குபோதே சுமார் 19 வயதிலேயே, பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டபடி அவருக்கும் ஹைதராபாத்திலிருந்த பணக்கார குடும்பநண்பர் ஒருவரின் ஒரே மகளுக்கும் திருமணம் ஆகிவிட்டது. அண்ணி பெயர் தில்பர் உன்னிசா. சட்டப் படிப்பு முடிந்ததுமே ஹைதராபாத் குடியேறி வழக்கறிஞராக ஏதோ ஒருவிதமாக தொழில் நடத்த ஆரம்பித்தார். கேத்வாடி குடும்பத்தோடு தொடர்பு குறைந்தது. இரண்டாண்டுகளில், அதாவது ஹஷம்பாய் தொழிலில் நன்கு காலூன்றும் முன்பே, சுலைமான் பிறந்துவிட்டான். ஆக அவன் பள்ளி செல்லும் வயது வந்ததும் அவனை மும்பைக்கு அமீருதின் மாமா—ஹமீதாபேகம் மாமி வீட்டுக்கு அனுப்பி விட்டார்கள். இவர்கள்தான் ஹஷம்

அண்ணாவையே தமது சொந்தக் குழந்தைபோல் வளர்த்தவர்கள். அண்ணா ஒரு சமயச்சார்பான மனிதர்—அதாவது, அதன் சரியான அர்த்தத்தில்: அவர் உபதேசிப்பதேயில்லை. உதாரணமாக வாழ்ந்தே காட்டிவிடுவார். ஹைதராபாத் ஆளும் வர்க்கத்தில் அவர் பெயர் நியாயம், நேர்மை இவற்றுக்கு மறு பெயராக விளங்கியது. முக்கியமான அரசு அலுவலர் இல்லங்களில் அவர்களது போட்டியாளர்களும், பதவிநேயர்களும் வேலைக்காரர்களாக தமது ஒற்றர்களை இருத்திவைப்பது அன்று சாதாரணமாக இருந்தது. சுவர்களுக்கு அப்படிப்பட்ட காதுகள் இருந்தும், அவர் மாவட்ட நீதிபதியாயிருந்தபோதும் சரி, உயர்நீதிமன்ற நடுவராகப் பணியாற்றியபோதும் சரி, அவரது நல்ல பெயருக்கு ஒரு நாளும் இழுக்கு ஏற்படாதிருந்ததே அவர் பெருமையை பறைசாற்றும். அவர் ஒதுங்கிச்செல்லும் கூச்சஇயல்பினர் அல்லர். ஆனாலும் தன் நெருக்கத்தை குடும்பத்துடனேயே வைத்துக் கொண்டார். கட்டாயமான அலுவல் நிமித்தமின்றி அந்நியரோடு நெருக்கம் வைத்துக்கொண்டதில்லை. அவரைப்பொறுத்தவரை அதுதான் சரி. ஹைதராபாத்தின் அன்றைய சூழலில் வதந்தித் தொழிற்சாலைகள் அவ்வளவு தீவிரமாக இயங்கின. நடுவர் என்கிற முறையில் அணுகமுடியாதவர் என்பதும், நடுநிலைமை, நேர்மை, நியாய உணர்வு ஆகிய உன்னதமான பண்புகளும் அவரது வாழ்நாளிலேயே அவருக்கு நிஜாம் மாட்சிமைக்குரிய உஸ்மான் அலிகான் அவர்களால் 'நவாப் ஹஷாம் யார் ஜங்' என்ற விருதையும், அவர் காலமானபோது நிஜாமால் புனையப்பெற்ற பாமாலையையும் ஈட்டித்தந்தன. இவ்விரு சிறப்புகளும் மிக மிக அரிதான அரசு மரியாதைகள் ஆகும். அந்த அளவு அவரது நற்குணம் அறியப்பட்டிருந்தது; பாராட்டப்பெற்றது. ஒழுக்கமும் நேர்மையும் பெருமைப் படுத்தப்பட்டிருந்தன. ஹைதராபாத்தின் அரசியல் சூழலில், அவர் கொண்டிருந்த சமூகத்தில் அரிதான நற்பண்புகளை வைத்துக் கொண்டு வழக்கறிஞர் தொழிலில் பொருளாதார கோணத்தில் வெற்றி பெற்றிருப்பது இயலவே இயலாது. அந்த நல்ல மனிதரின் நல்லகாலம், தொழிலில் திணறிக்கொண்டிருந்த ஆரம்பகாலத்திலேயே நீதித்துறைப்பதவி அவரை இழுத்துக்கொண்டது.

எங்கள் இருவருக்கும் இருந்த வயது வித்தியாசத்தாலும் அவர் மும்பைக் குடும்பத்திலிருந்து மிக விரைவாகப் பிரிக்கப்பட்டு ஹைதராபாத் வந்து விட்டதாலும், மற்ற சகோதர சகோதரிகளுடன் இருந்த அளவு அவரோடு எனக்கு நெருக்கமில்லாது போயிற்று. பள்ளி விடுமுறைகளில் ஹைதராபாத் போகும்போது

சுலைமானுடனும் அவரது இரு சகோதர்களுடனும் நான்கு சகோதரிகளுடனும் சிறுவர்களில் ஒருவனாக அவரை அறிந்தது தவிர அந்தச்சிறுவயதில் அவரை நான் அறிந்திருக்கவில்லை. ஆனால் அப்போதும், பிறகு வளர்ந்த பிறகும் அவரைப்பற்றி நிறையவே அறியும் வாய்ப்புகள் நிறைய ஏற்பட்டன. ஹஷீபாய் (அப்படித்தான் அவரை நாங்கள் அன்போடு அழைப்போம்) மெய்யாகவே கடவுள் படைத்த ஒரு தூய மனிதர். மனப்போக்குகள், நம்பிக்கைகள் வாழ்வுபற்றிய கருத்துக்கள் ஆகியவற்றில் அவரிடமிருந்து கிட்டத்தட்ட முற்றிலுமே நான் வேறுபட்டவனாக இருந்தாலும் எனக்கு அவரிடம் ஆழ்ந்த அன்பும், உயர்வான மரியாதையும் மதிப்பும் இருந்தன.

ஹைதராபாத் கணக்கீடு நடந்துகொண்டிருந்த சமயம், 1931இல் மும்பை இயற்கை வரலாற்றுக்கழகம் இந்தியப்பேரரசில் வனவுயிர்ப் பாதுகாப்பு என்ற தலைப்பில் தனது பத்திரிகையில் ஒரு தொடர் வெளியிட்டுவந்தது. ஒவ்வொரு மாகாணம், மன்னராட்சிப் பகுதிகள் பற்றியும் கட்டுரைகள் வந்தன. நான் அந்தப்பகுதியிலேயே இருந்த தாலும் நேரடியாக தகவல்களும் விபரங்களும் கிடைக்கும் வசதி வாய்ப்புகள் இருந்ததாலும் என்னை ஹைதராபாத்தைப்பற்றி எழுதுமாறு வேண்டினார்கள். 1897 வரை புலிவேட்டை குறித்தோ வேறு எந்த வேட்டைகுறித்துமோ கட்டுப்பாடுகள் ஏதும் இருக்க வில்லை போலும். 1914இல்தான் வேட்டைக் கட்டுப்பாடுகள் அறிமுகப்படுத்தப்பட்டன. அதன்படி அங்கு அரசு அனுமதியின்றி யாரும் எவ்வித வேட்டையிலும் ஈடுபடுவது தடைசெய்யப்பெற்றது. பெய்கா பிரபுக்கள், ஜாகிர்தார்கள், நிஜாம், நிஜாமின் குடும்பத்தார் ஆகியோருக்கு மட்டும் இதிலிருந்து விலக்களிக்கப்பட்டிருந்தது. ஆனால் 1933 வரை ஆயுதச்சட்டம் ஏதும் கிடையாது. எனவே நிஜாமின் நாட்டில் சகலவித துப்பாக்கிகளும் நடமாடிக்கொண் டிருந்தன. பெரும்பாலும் தோளில் சுமக்கும் வகைதான். ஆனால் நீர்நிலைகளில் உயிர்களைக்கொல்ல அவை போதும். சட்டவிரோத வேட்டைக்காரர்களின் நடைமுறை அதுதான். மரங்களில் காணப் படும் சாரங்களும் நீர்நிலைகள் முடியுமிடத்தில் நிலத்தில் காணும் குழிகளும் இதைக்காட்டும். எங்கெல்லாம் குளம் குட்டை உண்டோ அங்கெல்லாம் இதே நிலைதான். 'இந்தியக் காடுகளில் துப்பாக்கியும் வசீகரமும்' என்ற 1905இல் வெளியான கேப்டன் ஏ.ஐ.ஆர். கிளாஸ்பர்ட் எழுதிய நூலில் அந்தக் காலத்திலேயே அனுமதி யில்லாத இந்த வகை ஆயுதங்களின் கட்டுப்பாடில்லா பிரயோகம் தக்காணத்தின் வனவுயிர் வாழ்வில் ஏற்படுத்திய நாசகார

விளைவுகள்பற்றி எழுதப்பட்டிருந்தது அப்போது (1931இல்) எனக்கு நினைவு வந்தது. எனது இளம்பருவ வேட்டைக்காரவாழ்வில் மிகவும் விருப்பமான விறுவிறுப்பான நூலாக இந்நூல் இருந்தது. எனவே மிகவும் காலங்கடந்த நிலையில் அறிமுகப்படுத்தப்பட்ட கட்டுப் பாடுகளை மீறி, பருவம், வயது, பாலினம் எதையும் நினையாது விலங்குகளை வேட்டையாடும் சட்டவிரோத வேட்டைக்காரர்களால் பெரிய விலங்கினங்கள் விரைவாக மறைந்தொழியலாயின. தீவினைப் பயனாக, இரண்டாம் உலகப்போருக்குப்பின் புழக்கத்தில் பெருகிய ஜீப்புகளின் வருகை, பிரபுத்துவ அமைப்பை விலக்கி மக்களாட்சி வந்தது, அதன்விளைவாக பலவகையிலும் ஆயுதங்கள் காடுகள் ஆகியவை மீதான கட்டுப்பாடுகள் தளர்ந்தது போன்ற பல மாற்றங்களும் இத்துறையில் நிலைமையை மேலும் மோசமாகவே ஆக்கின.

பெரும்பாலான வனத்துறைக்காவலரும் அரச வனங்களில் வேட்டை சம்பந்தமான கண்காணிப்பாளர்களும் ஊழல் கறைபடிந்த நோய்மனப்பாங்காளராகவே இருந்தனர் என்பதையும் எனது ஆய்வில் காணமுடிந்தது. உள்ளூர் நிலைமைகள் பற்றியும் வனவுயிர்கள் பற்றியும் அவர்களுடைய தகவல்கள் கூடியவரை நம்பற்குரியவனவாக இருந்ததில்லை. மேல்தட்டு கீழ்தட்டு என்று எந்த வகை அரசு ஊழியர்களென்றாலும் தமது கண்டும் காணாத போக்கினாலோ, அல்லது தெரிந்தும்கூட வேண்டுமென்றே நடந்து கொண்ட செயல்பாடுகளாலோ அவர்கள் எல்லாருமே சட்டவிரோத வேட்டைகாரர்களுக்கு வசதியாகவே நடந்துகொண்டர். அவர்களே சட்டத்தை மீறிய வேட்டைக்காரர்களாக இருந்ததும் உண்டு. பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் புலிவாழிடங்களும் வேறு பல பெரும்விலங்குகளின் தாயகமுமாக விளங்கிய நிஜாம் ராஜ்யம் நூறே ஆண்டுகளில் இப்படி ஒரு வருந்தத்தக்க நிலையை அடைந்ததில் வியப்பேயில்லை. மிகப் பெரும்பாமையான அரசு அலுவலர்கள் தாமும் ஒரு புலியை சுடுவதையே சமூக அடை யாளமாகக்கருதி அதை சாதித்திருந்தனர். 2-3 புலிகளுக்கு மேல் வேட்டையாடியவர்களும் உண்டு. வட்டாட்சித் தலைவர்முதல் கீழ்மட்ட காவல்துறை, வருவாய்த்துறை ஊழியர்வரை, மாவட்ட நீதிமன்றங்களில் அலையும் வழக்கறிஞர்கள், உள்ளூர் வணிகர்கள், வசதியான கடைக்காரர்கள் எல்லாரும் அப்படித்தான். வனத்துறை அலுவலர்களிலும் இத்தகையோர் மிகுதியாக இருந்தனர். வெறும் வீராப்பு, பொய்யான சுயபுராணம் ஆகியவையும் இருக்கும் என்றாலும் கூட, நாற்பதே ஆண்டுகள் முன்பு எடுக்கப்பட்ட புலிகள்

கணக்கை இன்றைய நிலையுடன் ஒப்பிட்டுப்பார்ப்பதே வேதனையளிக்கப் போதுமானதாகும். மாட்சிமைக்குரிய நிஜாம்தான் வேட்டையாடுவதில்லையே தவிர அவரது மூத்த குமாரர்கள் இருவரும் சரியான வேட்டைவெறியர்கள். பாக்கலிலும் முலுங்கிலும் பிற இடங்களிலும் இருந்த வேட்டைப் பகுதிகள் அப்போது வட்டத்து இளவரசாக இருந்த ஆஸம் ஜா பகதூரும் அவர்தம் குழுவினரும் தமது 33 நாள் வேட்டையில் 35 புலிகளையும் எண்ணற்ற கரடிகள், சாம்பர் முதலிய பிற இனங்களையும் கொன்றனர். இதற்காக மரங்களில் இவர்கள் அமைத்த ஆடம்பரமான கேளிக்கை பரண்களில் வீடுபோன்ற வசதிகள் பலவும் ஏற்படுத்தப்பட்டிருந்தன. நிமிடத்துக்கு நிமிடம் ஒரு புலிபடும் வேதனையை எடுத்துரைக்க தொலைபேசிகள் கூட இருந்தன என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! இதெல்லாம் என் கணக்கீட்டுப் பணி நிறைவுபெற்ற சிறிது காலத்தில் (1931 மே மாத வாக்கில்) இருந்த நிலைமைகளாகும்.

9

# இடையே நீலகிரியில்

ஹைதராபாத் கணக்கீடு 1932 ஏப்ரலில் நிறைவடைந்தது. மும்பை கழகத்துக்கும் திருவாங்கூர் கொச்சி அரசுக்குமிடையே பறவைக் கணக்கீடு பற்றிய பேச்சுவார்த்தைகள் நடந்துகொண்டிருந்தன. இடையில் ஓய்வுவெடுக்க எங்களுக்கென்று ஓர் இல்லம் இல்லாத நிலையில் குடும்ப நண்பரான திருமதி நந்தி – ஹைதராபாத்காரர்– நீலகிரி மலைத்தொடரில் கோத்தகிரியில் ஒரு மலையின்மீது அமைந்திருந்த அமைதியான ஓய்வில்லமான 'மோன் ஆப்ரி'யில் வந்து தங்குமாறு எங்களை அழைத்தது மிகவும் அதிர்ஷடவசமான நிகழ்வாகும். தென்னிந்தியாவின் விடாமழையும் சோலைக் காடுகளும் அதுவரை நான் அறியாதவை. அதுவும் திருவாங்கூர் கணக்கீட்டுக்கு ஒரு பயிற்சி ஒத்திகைபோல நீலகிரியில் சில மாதங்கள் வாழ்வது இரட்டைப்பேறாக அமைந்தது. இந்த அமைதியான இடைவேளை ஹைதராபாத் ஆய்வின் அறிக்கையை உருவாக்கவும் உதவியது. அந்த அறிக்கையும் இன்னும் அறியப்படாத பகுதிகளில் கணக்கீடு நடத்துவதற்கான ஆர்வத்தை வளர்த்தது. ஐம்பதாண்டுகள் முன்பு கோத்தகிரி எழிலார்ந்த, அதேசமயம் உறக்கத்தில் இருந்த சிறிய மலை வாழிடமாகும். பல வகையான கிறிஸ்தவத் துறவிகளும் அவர்தம் மடங்களில் விரும்பிவந்து வசித்து வந்தனர். 'செவன்த் டே அட்வென்டிஸ்ட்', 'ஒன் பை ஒன் பாண்ட்' போன்ற அவர்களின் கிறித்துவ மதக் குழுக்களின் பெயர்களைக்கூட முன்பின் கேட்டதில்லை. காலையில் நடைபயில்கையில் நாம் பார்க்கும் நாகரிக மனிதர்கள் பெரும்பாலும்—ஆணாயினும் பெண்ணாயினும்— இத்தகைய கிறித்துவத் துறவிகள்தாம். பெரும்பாலும் தள்ளாத வயதானவர்கள்தான். வசதியாக இருப்பதெற்கென்றே இங்கு வந்தவர்களென்று தோன்றும். வானிலையும் சூழ்நிலையுமாக வண்ணமிகு இயற்கை கவர்ந்து இழுக்கும் அமைதிப்பூங்காவாக இருந்தாலும், இளைஞர்களுக்கு அது ஒரு நல்ல தூங்குமூஞ்சி

ஊர்தான். ஏதோ சில நாள் விடுமுறைக்கு வரலாம். வெளியுலக வெயில் கொடுமையிலிருந்தும் தூசியிலிருந்தும் தப்பி கொஞ்சநாள் இருக்கலாம்.

அறிவார்ந்த சிந்தனையைத் தூண்டும் தொடர்புகளில்லாமல் வாழ்வது இரண்டாம் மாத முடிவிலேயே உறுத்த ஆரம்பித்தது. ஏதோ சிறு கோளாறுக்காக அரசு மருத்துவமனைக்குப் போனது ஒரு அதிர்ஷ்டமான வாய்ப்பாக மாறியது. அங்கு பொறுப்பேற்றிருந்த இனிய இயல்புள்ள இளைஞர் கேஎம். ஆனந்தன் என்ற மருத்துவர் அறிமுகமானார். முதல் உலகப்போரில் மெசபடோமியாவில் பணி யாற்ற முன்வந்திருந்த ஒரு மலையாளி. போர்முடிந்ததும் இராணுவ மருத்துவ சேவையிலிருந்து ஓய்வுபெற்று அன்றைய மதராஸ் மாகாண அரசில் மருத்துவராக சேர்ந்திருந்தார். கேளிக்கையூட்டும் ஆனந்தனும் அவரது சுறுசுறுப்பான அழகிய இளம் மனைவியும் எங்களைப் போலவே குழந்தையற்ற தம்பதி. அவர்கள் மிக விரைவில் எங்கள் இணை பிரியாத நண்பர்களாயினர். அதன்பிறகு நாங்கள் ஒன்றாக அனுபவிக்காத நடவடிக்கைகள், கேளிக்கைகள் எதுவுமே இல்லை என்று சொல்லலாம். காட்டுக்குள் உலவப்போவது, பறவைகளை கவனிப்பது, கேளிக்கை சுற்றுலா, கார்வலம், வீட்டு விளையாட்டுகள் என எல்லாவித கேளிக்கைகளையும் ஒன்றாகச் சுவைத்தோம். மாதாமாதம் இறுதியில் சம்பளம் வாங்க ஆனந்தன் இருபது கிலோமீட்டர் தொலைவிலுள்ள ஊட்டிக்குப் போவார். அவரிடமிருந்த சிறிய மோரிஸ் ஆக்ஸ்போர்ட் வண்டியில் இரண்டு இருக்கைகளும், ஒரு பின்பக்க இருக்கையும் உண்டு. எல்லாருமாக நெருக்கியடித்து அமர்ந்து கொள்வோம். உதகை செல்லும் மலைப் பாதையில் வழிநிறைய சரிவுகள் உண்டு. அவற்றை சமாளிப்பது அந்த சின்னஞ்சிறு வண்டிக்கு ஒருசிரமமான அனுபவம். மிகவும் தாஜாசெய்துகொண்டு போக வேண்டும், சில சமயம் தள்ளவும் வேண்டும்! ஊட்டியில் உள்ள தாவரஇயல் பூங்காவிலும் அதைச்சுற்றிய பகுதிகளிலும் பறவை வேடிக்கை பார்க்கலாம். இன்பச் சுற்றுலாவாகவும் இந்த வாய்ப்பை நாங்கள் பயன்படுத்திக் கொள்வோம். சொல்ல சொல்லக் குறையாத விசித்திர அனுபவக் கதைகள் ஆனந்தனிடம் அனந்தம். அவற்றை ரசிப்பதும் இந்தப் பயணங்களின் விருந்துகளில் ஒன்று. ஆனாலும் திருவாங்கூர் அரசு தன் நாட்டில் பறவைக்கணக்கீட்டுக்கு ஒப்புதல் தந்துவிட்டது, எப்போது துவங்கலாம் என்றுகேட்டு மும்பை கழகம் தகவல் அனுப்பியபோது எனக்கு வருத்தமே இல்லை.

திரு ரால்ப் மோரிஸ் என்ற காபித்தோட்ட அதிகாரியை நான்

முதன்முதலில் சந்தித்ததும் கோத்தகிரியில் இருக்கும்போதுதான். அன்றைய மைசூர் தேசத்தில் பிலிகிரிரங்கா மலைத்தொடரில் அவரது காபித்தோட்டம் இருந்தது. அவர் ஒரு முதல்தர இயற்கை விஞ்ஞானி, நல்ல வேட்டைக்காரர். பின்னாட்களில் வனவுயிர் பாதுகாப்புக்கு தன்னை அர்ப்பணித்துக்கொண்டவர். 1920க்கும் 40க்கும் இடைப்பட்ட காலத்தில் மும்பை இயற்கை வரலாற்றுக் கழக இதழ்களில் வெளிவந்த தென்னிந்திய மலைப்பகுதிகளில் அவரது வேட்டை அனுபவம், இயற்கை விஞ்ஞானம் ஆகியவை பற்றிய கட்டுரைகள் விரிவாகவும், விறுவிறுப்பாகவும் அமைந்து பலரது பாராட்டுகளையும் பெற்றவையாகும். அவர் மனைவி ஹீத்தர் அழகானவர். வெளித்தோற்றத்தில் முரடானவர். பல திறமைகள் வாய்ந்தவர். இருவரும் அடிக்கடி கோத்தகிரி வருவர். ஹீத்தரின் தாயார் அங்கிருந்தார், தந்தை உயிருடனில்லை. அந்த அம்மையார் பெயர் கின்லாக். அவரது வீடு மிக அழகானது. லாங்வுட் சோலை எல்லையில் அது அமைந்திருந்தது. எங்கள் முதல் சந்திப்பிலேயே நாங்களும் மோரிஸ் தம்பதியும் நெருக்கமாகிவிட்டோம். மரணம் பிரிக்கும் வரை அவர்கள் எங்கள் மிகநெருங்கிய நண்பர்களாயும், எங்களுக்கு ஒரு அருள் சொத்தாகவும் விளங்கினர். என் துணைவி 1939லும், மோரிஸ் 77லும், ஹீத்தர் அதற்கு 2–3 ஆண்டுகள் பின்னரும் காலமாயினர்

ரால்பும் நானும் ஒருவர் மற்றவரது ஆர்வங்களையும் நடவடிக்கைகளையும் கடிதங்கள் மூலமும் மும்பைக் கழக வெளியீடு வழியும் அறிந்திருந்தோம். திருவாங்கூர் கணக்கீடுபற்றி அறியவந்ததும் அவர்கள் இருவரும் பணியைத் துவங்கும்முன்பு தங்கள் காபி எஸ்டேட்டில் விருந்தினராக சில நாட்கள் தங்க வேண்டுமென்று மனதார அழைத்தனர். கோத்தகிரியிலிருந்து போக வர திருவாங்கூரைச் சேர்ந்த மறையூர்தான் சரியான இடம் என்று அவர் கூறினார். ஒருவாரம் பத்துநாள் அங்கே தங்கியிருந்ததால் தென்னிந்தியக்காடுகள் பற்றிய அவரது விரிவான அறிவு காரணமாக நான் ஒரு தெளிவான பயனுள்ள நிகழ்ச்சி நிரலும் விரிவான திட்டமும் அமைத்துக்கொள்ள உதவியது. ராஜ்யத்தின் புவியியல் ரீதியான அம்சங்கள் அனைத்தையும் கணக்கிலெடுத்ததாய் சிறப்பானதாய் அந்தத் திட்டம் அமைந்தது கணக்கீட்டுக்கு மிகவும் உதவியாக இருந்தது. அவர்களோடு யானைகளும் புலிகளும் சாதாரணமாக வாழும் ஒரு பகுதியின் மையத்தில் இருந்த அந்த வீட்டில் வாழ்ந்த நாட்கள் நினைத்து நினைத்து அசைபோட இனிமையானவை. தென்னகத்தில் காப்பித்தோட்டம் வைத்திருந்த

ஒரு நாகரிகமான ஆங்கிலேயர் வாழ்க்கை முறையை நெருக்கத்தில் பார்க்க முடிந்த வகையிலும் அந்த நாட்கள் முக்கியமானவை. முன்னோடிகளின் காலமான அந்த நாட்களில் மகிழ்வான வசதியான வாழ்வை அமைத்துக்கொள்வது எளிதாயில்லை. உடல்வலு, சலிக்காத கடும் உழைப்பு, வசதிகளிலிருந்தும் வசதியான சமூகத்திலிருந்தும் விலகிய ஒரு வாழ்வில் நிறைவைக் காணுதல், தச்சுவேலை, கொல்லர்வேலை, கொத்துவேலை, குழாய் சீரமைப்பு, மின்சாரவேலை, மோட்டார்வேலை உதிரிக்கையாள் என்று பலவேலை தெரிந்த ஒரு பல்சுவைத் தொழிலாளியாக இருக்க வேண்டிய கட்டாயம்–இவை எல்லாம் அன்று தவிர்க்கவொண்ணாத தேவையாயிருந்தன. இதோடு முடிந்ததா? மோரிசைப் பொறுத்த வரை நடைமுறை தாவரஇயல், தாவரங்களின் நோய்கள், பூச்சி மருந்துகள் இவைபற்றியும் குறைந்தது அடிப்படை அறிவாவது கொண்ட தோட்டக்கலையாளராக அவர் இருக்க நேர்ந்தது. உள்ளூர் மக்களின் மொழி தெரிந்திருந்தது. தொழிலாளர்களை புத்திசாலித்தனமாக நடத்தி மகிழ்ச்சியோடு வைத்து வேலைகள் தொடர்ந்து நடை பெறுவதையும் உறுதிசெய்து கொள்ளவேண்டும். ஹீத்தருக்கும் ஒரு காபி எஸ்டேட் எஜமானிக்கான எல்லா குணங்களும் இருந்தன. வலிமை, அழகாக அலங்கரிக்கப்பட்ட வசதியான வீடுபற்றிய பெருமை, வீட்டுவைத்தியம், குழந்தை வளர்ப்பு, பசுவளர்ப்பு, தோட்டக் கலை, கறிகாய்த்தோட்டம் முதலிய சகலவித வீட்டு வேலைகளிலும் அவருக்கு தேர்ச்சி இருந்தது. தொழிலாளர் அவர்களின் குடும்ப நலம் ஆகியவற்றில் மெய்யான அக்கறை இருந்தது. கணவரைப்போலவே அமைதியான, கவலையில்லாத (அப்படித்தான் அவர் கூறுவார்!) அவ்வாழ்வை அவரும் நேசித்தார். ஒரு காலத்தில் ஆர்வமும் பிரமாத திறனுமுள்ள வேட்டைக் காரராகவும் இருந்திருக்கிறார். பிலிகிரி ரங்காவும் அதைச் சார்ந்த மற்ற மலைகளும் வேட்டைக்குப் பெயர் பெற்றவையாக விளங்கின.

ரால்ப் மோரிஸ் பற்றி நினைக்கையில் பின்னாளில் அவர் வாழ்வில் நடந்த ஒரு விளக்கமுடியாத மர்ம நிகழ்ச்சியும் நினைவு வருகிறது. டச்சிகாம் சரணாலயத்திலும் (அந்தக்காலத்தில் வேட்டைக் காடுகள் என்றே அழைக்கப்பட்டு வந்தன) அதுபோன்ற வேறுசில சரணாலயங்களிலும் வனவுயிர்கள் நிலைபற்றி ஆராய 2-3 பேர் கொண்ட ஒரு சூழல் காப்பியல் அறிஞர் குழுவை அனுப்பி உதவ முடியுமா என ஜம்மு–காஷ்மீர் அரசு 1953இல் மும்பை கழகத்தைக் கேட்டிருந்தது. நிர்வாகம் பற்றிய அறிவுரைகளையும் இக்குழுவிடம்

மாநில அரசு எதிர்பார்த்தது. மோரிசைவிட வேறு தகுதியானவர் யார்? ஆனால் அப்போது அடிக்கடி மோசமான முதுகுத்தண்டு வலியால் அவர் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தாலும் அந்தப் பகுதி நிலைமைகளைக்காணும் ஆசையால் அவரும் ஒப்புக்கொண்டார். ஒரு நாள் காலை ஸ்ரீநகர் முகாமிலிருந்து மட்டக்குதிரைகளில் நாங்கள் கிளம்பும்போதே அவருக்கு லேசாகவலி இருந்தது. மேடுபள்ளமான சாலையில் நெடிய பயணத்தை அவரால் தாங்கமுடியுமா என்று எனக்கு ஒரு அச்சம் இருந்தது. இருவரும் இணையாக போய்க்கொண்டிருந்தோம். அந்தக்குதிரை ஒரு எலிவளையில் காலை வைக்க, கால் நொடிக்க, ரால்ப் அதன் தலையால் மோதப்பட்டு தூக்கி எறியப்பட்டார். அதுவும் கட்டாந்தரையில் மல்லாக்க விழுந்துவிட்டார். அவர் முதுகு முறிந்து விட்டது: கணக்கிடு அவ்வளவுதான். எல்லாம் முடிந்தது என்று எண்ணினேன். விந்தையிலும் விந்தை ரால்ப் எழுந்தார். ஆடிப்போயிருந்தார்தான், ஆனால் முதுகுவலி ஒரேயடியாகப் போய் விட்டது. மறுபடி வாழ்நாள் முழுவதும் தொல்லை இல்லை! 36694/5829723

என் சம்பந்தப்பட்ட பறவைக் கணக்கிடுகளிலேயே களத்தில் செய்த பணி, பிறகு அறிக்கையை எழுதும்பணி இரண்டிலுமே வேறெந்தக் கணக்கீட்டையும் விட அதிக நிறைவு தந்தது திருவாங்கூர் கொச்சி பணிதான். எனது பணிக்காலத்திலேயே 1930–50க்கிடையே எடுத்துக்கொண்ட கணக்கிடுகள்தான் மிக அதிக பயன்தரும் பணி என்பது போலவே அவற்றுள் நிறைவளித்தது திருவாங்கூர் கொச்சி கணக்கீடு என்பதும் உண்மையாகும். கேரளப்பறவைகள் என்று பின்னாளில் நான் எழுதிய நூலுக்கும் அதுவே அடிப்படை. சஹ்யாத்ரி அல்லது மேற்குத்தொடர்ச்சி மலைகளின் இறுதியில் உள்ள தென்னிந்தியக் குன்றுகளின் இணையற்ற அழகு, என்றும் பசுமை வகையினதான காடுகளில் வனப்பு-செழிப்பு, இவை தவிர இப்பகுதியின் தாவரங்களிலும், விலங்குகள் பறவைகள் ஆகியவற்றிலும் இருந்த ஏதோ ஒரு சிறப்பு இந்தப்பகுதியை தென்னிந்தியாவின் பிறபகுதிகளிலிருந்தும் கூட தனியே உயர்த்திக் காட்டுகிறது. மேற்குத்தொடர்ச்சி மலைகளின் தென்முனையான கேரளாவின் உயர்ந்த குன்றுகளில் (பழனி, நீலகிரி) உள்ள தாவரங்கள் பிற உயிரினங்களுக்கும் கிழக்கு இமயமலை, மேற்குசீனா, பர்மா, மலேசியா ஆகிய பகுதிகளின் தாவரங்கள்–உயிரினங்களுக்கும் இடையிலான ஒற்றுமை மிகவும் விசித்திரமாயிருக்கிறது. இதனை முந்தைய இயற்கை விஞ்ஞானிகளும் கூறியுள்ளனர். இரண்டு முனைகளும் 2000 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளன. இது

விளக்குவதற்கு அரிய விந்தையாயுள்ளது. இவ்விரு பகுதிகளிலும் ஆறுகளிலும் மலையருவிகளிலும் உள்ள மீன்கள் ஒரே விதமாய் இருப்பதும், இருபகுதிகளுக்கும் இடைப்பட்ட பகுதியில் எங்கும் அவை காணப்படாததும் இன்னும் விசித்திரம். ஏனென்றால் மீன்கள் நீர்வழி இணைப்புகள் இன்றிப் பரவ இயலாது என்பது தெளிவு. இவ்வகை மீனினங்கள், இப்பகுதிகளின் பிற உயிரினங்கள், தாவரங்கள், நிலஇயல், உயிரினநிலஇயல், வானிலை ஆகிய அம்சங்களில் தென்னிந்தியா பற்றி விமர்சனபூர்வமான ஆராய்ச்சி களின் முடிவாக பிரபல உயிரியியல் மேதை முனைவர் சுந்தர்லால் ஹோரா 'சாத்பூரா கொள்கை'யில் கூறுவதுதான் கிட்டத்தட்ட சரியான விளக்கம் என்று எனக்குப்படுகிறது. கிழக்கு இமயத்துக்கும் தென்மேற்கு இந்தியாவுக்கும் ராஜ்மஹால் குன்றுகளின் இடை வெளி, சாத்பூரா மலைகள் வழியே அங்கிருந்து இலங்கைக்கும் முன்பு ஒரு காலத்தில் இணைப்பு இருந்தது; அது இலங்கை-இந்திய நிலப்பகுதியிலிருந்து பிரிபடுவதற்கும் முன்பு. இதுதான் அவர் கொள்கை. இணைந்த பகுதிகள் காலப்போக்கில் வளமிழந்தது போயின. அதனால் நீண்ட நெடிய இப்பரப்பில் அப்போது குடியிருந்த இனத்தவர் (இப்போதைய தென்னிந்தியர்களின் முன்னோர்) தெற்கே ஒதுங்கினர் என்பார் அவர். இக்கொள்கை கேரளப்பகுதி கணக்கீட்டில் எனது ஆர்வத்தை அதிகப்படுத்தியது.

மும்பை கழக பத்திரிகையில் கட்டுரைகளாக வெளிவந்த எனது கணக்கீடுகளின் அறிக்கைகள், பிற அறிவியல் ஏடுகளிலும், நான் பெரிதும் மதித்துவந்த அறிவியல் ஏடுகளிலும், அறிவியல் அறிஞர்கள் இடையேயும் பாராட்டுக்களையும், சிறப்பான விமர்சனத்தையும் பெற்றன. 'தி இபிஸ்' உங்கள் அற்புதமான திருவாங்கூர் பணிகளைப் பாராட்டியிருப்பது கண்டு மகிழ்கிறேன். டைசர்ஸ்ட் ஒரு கடுமையான விமர்சனப்பார்வை கொண்ட ஆசிரியர்; அவரே பாராட்டுவது என்றால், அந்தப் பாராட்டு பெறற்கரியதும் பெறுதற்கு உரியதும் ஆகும் என்று ஹியூ விஸ்லர் (8-1-1936) எழுதினார். எனது சுயகௌரவத்துக்கும் டைசர்ஸ்ட் எழுதிய விமர்சனத்தின் பாராட்டுகள் மிகவும் நிறைவளித்தன. ஏனெனில் 1929 ஸ்ட்ரெஸ்மான் ஸ்பின் போர்டு பர்மா சேகரிப்பு நிகழ்ச்சிக்குப்பிறகு அவர் வெளிப்படையாக எனக்கு ஆதரவாக ஏதும் சொன்னதில்லை. நியூயார்க் இயற்கை வரலாற்று அருங் காட்சியகத்தில் அப்போது பறவைகள் துறை காப்பாளராக இருந்த எர்னஸ்ட் மெய்ர் "உங்கள் அறிக்கையின் மிக முக்கியமான பகுதி, பார்த்து ஆராய்ந்த பறவைகளின் வாழ்க்கைச் சரிதம் பற்றியும்

சுற்றுப்புறஇயல் பற்றியும் தரப்பட்டுள்ள குறிப்புகள்தான். அருமையாக இந்த ஆய்வைக் கையாண்டுள்ள முறையை பாராட்ட விழைகிறேன். இது போன்ற பிற்கால ஆய்வுகளுக்கு இது ஒரு தரநிர்ணய அளவுகோளாக விளங்கும் என்பது எனது நம்பிக்கை என்று எழுதினார் (27-1-1936). இந்திய அரசின் அளவையியல் துறையின் முன்னாள் தலைவரும் அப்போது ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழக நில இயல் துறையில் பணியாற்றி வந்தவருமான பேராசிரியர் கென்னத் மேசனுக்கு திரு. விஸ்லர் எனது கொச்சி கணக்கிடு அறிக்கை அறிமுகத்தை அனுப்பியிருந்தார். அதைப் பார்த்து விட்டு அவர் பின்வருமாறு எழுதினார்:

> "நிலஇயல் கோணத்தில் இது என் ஆர்வத்தை அதிகப் படுத்தியது. ஏனெனில் ஆசிரியர் தன் பணியிலிருந்தும் வெளியே வந்து பறவைகளின் வாழ்வியலை நிர்ணயிக்கும் நிலஇயலின் அடிப்படையில் தனது முடிவுகளை அமைக்கிறார். தென்னிந்திய நில இயலை நான் அறிந்த மட்டில், இவர் முக்கியமான அம்சங்கள் அனைத்தையும் கணக்கில் கொண்டுள்ளார். அவற்றை முழுக்க முழுக்க சரியாக பயன்படுத்தியும் உள்ளார். இங்கு ஒரு சிறுவிஷயம் கூற விரும்புகிறேன். இன்றைய நிலவியலாளர்கள் பழைய நீர்வழியின் சிகரம் இன்றைய தென்னிந்தியாவின் மேற்குப்பகுதியில் அமைந் திருந்தது என்று ஊகிக்கின்றனர். இப்போது லட்சத்தீவுகள் உள்ள பகுதியை அடுத்ததாக இருக்கலாம். மேற்குத் தொடர்ச்சி மலைகள் அந்த சிகரங்களின் முழு வரிசையின் பகுதிகளாயிருக்கலாம். இன்றைய தீபகற்பத்தென்னிந்தியா "கிழக்குப்பாதி" என்பதிலும் சிறிதாயிருக்கும். இன்றைய நீர்ப்பிரிப்பு பழைய நீர்ப்பரப்பின் கிழக்குப்பகுதியாக இருக்கும். இந்தக் கொள்கை சாலீம் அலியின் முடிவுகளை பாதிக்காது. சொல்லப்போனால், அதற்கு உரமூட்டும்."




இந்தச் செய்தியை நான் இங்கு குறிப்பதன் நோக்கம் தென்னிந்திய நிலைமைகளை ஆராயும் பலருக்கும் எனக்கு

இருந்ததைப்போலவே இது புதுமையாயிருக்கும் என்பதுதான்.

பிரிட்டிஷ் பறவைஇயலாளர் சங்கத்தின் அன்றைய செயலாளரும், 'பிரிட்டிஷ் இந்திய உயிரினங்கள்' வரிசையில் பறவைகள் பற்றிய தொகுதியின் இரண்டாம் பதிப்பின் ஆசிரியருமான ஈ.சி. சூரத்பேக்கருக்கு எனது நூலை அனுப்பியிருந்தேன். "திருவாங்கூர் பறவைகள் பற்றிய உங்கள் நூலின் பிரதிகள் கிடைத்தன. பறவைகள் பற்றிய எனது நூலில் 'எனக்கே' (பேக்கருக்கு) உரிய பிழைகள் இருக்கின்றன என்று நீங்கள் (அலி) ஒரு சிறுகுறிப்பு எழுதியிருப்பது எனக்கு மிகவும் வருத்தமளித்தது. விஸ்லரும் டைசர்ஸ்ட்டும் எனக்கு எதிரான தங்கள் சொந்த வெறுப்பினை உங்களுக்கும் தந்துவிட்டார்கள் என அஞ்சுகிறேன். பன்னிரெண்டு ஆண்டுகளில் எட்டு நூல்கள் எழுதினேன். ஆனால், அதற்காக நாள்தோறும் பத்துப்பன்னிரன்டு மணிநேரம் உழைத்தேன்" என்று அவர் எழுதினார். அவரது சாதனைகளைப் பாராட்டி என் பதிலில் எழுதினேன். அவை உண்மையான பாராட்டுகள், வெறும் புகழ்ச்சியில்லை. அவருக்குத் துயரமளிக்க நேர்ந்தமைக்கும் எனது வருத்தத்தைத் தெரிவித்தேன். என்நோக்கம் வருத்தப்படுத்துவதல்ல என்றும் தெளிவுசெய்துவிட்டு, எனது விமர்சனம் மற்றவர்களால் உருவாக்கப் பட்டதல்ல, என் சொந்தக்கருத்து; நேர்மையான சிந்தனையின் பாரபட்சமற்ற வெளிப்பாடு என்றும் விளக்கினேன். "(நூல்களின்) விமர்சனம் இல்லாவிட்டால் விஞ்ஞான மேம்பாடு சாத்தியமில்லை" என்றும் கூறினேன். பறவை இயலாளர்களும் மனிதர்கள்தான் என்பதையே இது காட்டுகிறது.

திருவாங்கூர் திட்டத்தில் மிகசாதாரணமாக நான் கொண்டை–ஹாக்–பருந்து என்று ஒருபறவையை தவறாக அடையாளம் கண்டுவிட்டேன். முதல்பார்வையில் ஜெர்டோனின்பாஸா என்று விஸ்லர் கருதினார். கடைசியில் லண்டன் அருங்காட்சியகத்தில் நுணுகிப் பார்த்ததில் விரலில் சிறகுள்ள ஹாக் பருந்து (Spizaetus Nipalensis Relaarti) என்று தெரியவந்தது. இது அரிதிலும் அரிய சேகரிப் பாகும் என்றார் விஸ்லர். "இது எனக்கு முற்றிலும் புதியது. பாஸா எல்லாம் இதன் சிறு வடிவம்தான்" என்றார் அவர். அது எனக்குக் கிடைத்ததே அதிருஷ்டவசமாகத்தான். கொச்சி வனத்துறை டிராம் நிறுவனத்தில் மலைநிலையமான பரம்பிக்குளத்தில் ஃபயர்மேன் (Fire Man) ஒருவரது கோழிக்குஞ்சுகளை இரையாக்கி விட்டதென்று அவர் எஞ்சினில் எரிப்பதற்காக இருந்த மரக்கட்டைகளில் ஒன்றாலேயே தாக்கிக் கொன்றுவிட்டார். அங்கிருந்து சிலமைல்களே தொலைவில் இருந்த குறியார்குட்டியில் நாங்கள் முகாம் இட்டிருந்தோம். நாங்கள்

ஏதோ பறவை ஆராய்ச்சிக்காரர்கள் என அறிந்திருந்தால் அவர் முகாமுக்கு அண்மையில் வண்டியை நிறுத்தி இதை என்னிடம் தந்துவிட்டுச் சென்றார். பெரிய பறவைகளுக்கு என்னிடம் இடம் இல்லாததாலும், அதுஒரு சாதாரண கொண்டைப் பருந்து என்றே நான் அப்போது நினைத்ததாலும் அப்போது நான் அதை ஒரு பொருட்டாக எண்ணவில்லை என்பதை சொல்லித்தான் ஆகவேண்டும். ஆனாலும் அன்றைய கண்ணோட்டத்திலேகூட அது ஒரு மிக நல்ல 'மாதிரி' என்பதாலும், அந்தவகைப் பறவைகள் அதிகம் இல்லாததாலும், அதற்கும் ஒரு வகையான ஏற்பாடு செய்து கொண்டேன். ஆனால் உள்ளூற ஒரு லேசான எரிச்சல் உண்டு, ஏனெனில் ஒவ்வொரு முகாமிலும் அதைப்பெட்டியில் வைப்பதும் எடுப்பதும் மிக எரிச்சலூட்டியது. இதனால் அது உண்மையில் எவ்வளவு அரிய பறவை என்று தெரிந்த போது அது தன் பெருமையை நிலைநாட்டிக்கொண்டது என்று மகிழ்ந்தேன்.

பறவைவளம், ஏராளமான விதங்கள் இவற்றைப்பொறுத்த வரை, என் கணிப்பில் கேரளத்துக்கே முதலிடம்—குறைந்தபட்சம் அந்த கணக்கீடு நடந்த கால கட்டத்திலாவது—தருவேன். அதுவும் குறிப்பிட்ட சில பகுதிகளைக் குறிப்பிட்டு சொல்லவேண்டும். வட திருவாங்கூரில் பெரியாறு பகுதியில் தட்டக்காடு என் நினைவில் இன்றும் தீபகற்ப இந்தியாவின் முதலிடம் பெறும் பறவையில்லமாக விளங்குகிறது. கிழக்கு இமாலயப் பகுதியைவிட்டால் இதற்கு ஈடாக ஏதுமில்லை. கணக்கீட்டுக்குப்பிறகு, அதுவும் இந்திய விடுதலைக்குப் பிறகு நானும் சில ஆண்டுகளுக்கு ஒருமுறையாவது கேரளத்துக்கு போய்வந்து கொண்டுதான் இருக்கிறேன். ஒவ்வொரு முறையும் மன வேதனையும் ஆற்றாமையுடன் கோபமும் வளர்ந்து வருகின்றன. தொடர்ந்து வந்த ஒவ்வொரு மாநில அரசும், குறுக்கு மதிகொண்ட அரசியல்வாதிகளும், குடிபெயர்ந்தவர்களை குடியேற்றவும் நீர் மின்சாரத்திட்டங்களுக்கான அணைகளால் முன்னேற்றம் என்று சொல்லிக்கொண்டும் நிரந்தரப்பசுமைக்காடு சூழ்ந்த பகுதிகளுக்கு கேடுசூழச் செய்துவிட்டனர். மரம் தொடர்பான தொழில்கள் வளர்ச்சியும் இந்த ஊறுசெய்தலுக்கு உரமாக விளங்கி வருகிறது. இன்றைய தட்டக்காடு அன்றைய தட்டக்காட்டை கேலிசெய்கிறது. உன்னதமான இயற்கைக்காடுகள் பெரும்பாலும் ஒழிக்கப்பட்டு விட்டன. தொழில்வளர்ச்சிக்கான ஒரேவகை மரங்கள் அங்கு நிற்கின்றன. பெரியாறு நதியின் குறுக்கே அணைகட்டி நீர்த்தேக்கம் ஏற்படுத்தியதும் இந்த அழிவுக்கு துணையாகிவிட்டது. யூகலிப்ட்ஸ், ரப்பர், எண்ணெய்ப்பனை ஆகியவை ஆண்டுதோறும் 1500

ஹெக்டேர் நிலத்தில் இயற்கையான காட்டுமரங்களின் இடத்தைக் கைப்பற்றுகின்றன. 'முதன்மை நிரந்தரப் பசுமைக்'காடுகளும், 'அரையீர'க் கலப்புக்காடுகளுமாக இருந்த பரம்பிக்குளம், அதன் மறக்கமுடியாத வனப்பகுதி டிராம்கள் எல்லாம் போய் விட்டன. ஒன்று அந்த இடம் நீர்ப்பரப்பாகிவிட்டது அல்லது தேக்கு மரக் காடாகிவிட்டது. சூழல் காப்புப் போராளிகளுக்கும் கேரள அரசுக்குமான சண்டை, சைலண்ட் வேலி (அமைதிப் பள்ளத்தாக்கு) பகுதிக்கும் அதே விதி நேர்ந்து அழிவு ஏற்படுவதைத் தள்ளிப் போட்டு வருகிறது.

தட்டுமுட்டு சாமான்களிலிருந்து எடுக்கப்பட்ட எனது துணைவியாரின் வீட்டுச்செலவுக் கணக்கு காட்டுகிறபடி திருவாங்கூர் கொச்சி கணக்கிடு செலவுகள் அதில் விபரமாக உள்ளன. ஆச்சரியமான நம்பமுடியாத செய்தி—ஐந்துமாத ஆராய்ச்சிக்கும் மொத்தச்செலவு ரூ.2458தான் என்பதாகும்! எங்கள் இருவருக்கும் பணியாளுக்குமான பம்பாய்க்கான இரண்டு பயணச்செலவு, எக்கச் சக்கமான சாமான்களுக்கான கட்டணம் எல்லாம் அடக்கம். அதோடு நால்வர் உணவு, பணியாள் ஊதியம், முகாம் மாறும் போதெல்லாம் பேருந்து செலவு, வேட்டையாட்கள், வழிகாட்டிகள், கூலி, இனம் தெரியாத மற்ற செலவுகள் யாவும் இதில் அடக்கம். தோல் உரிப்பவர் சம்பளம், வெளிவேலைப்படி, பயணச்செலவு (ஒருவகை துப்பாக்கி ரவைகளுக்கு நூற்றுக்கு ஒன்பது ரூபாய், மற்றொரு வகைக்கு பத்தரைரூபாய் என்ற வகையில்) துப்பாக்கி மருந்து செலவு, தோல்பாதுகாப்பு சாதனங்கள், பறவைமாதிரிகளை அனுப்ப அஞ்சல் செலவு ஆகியவற்றை மும்பை இயற்கை வரலாற்றுக் கழகம் ஏற்றது. மாநில அரசுகள் ரூ.4500/ அளித்ததில் சுமார் இரண்டாயிரம் ரூபாயை மிச்சப்படுத்தமுடிந்தது. அந்நாட் களில் இவ்வளவு குறைந்த செலவில் எவ்வளவு சாதிக்கமுடிந்தது என்பது இன்று நம்பமுடியாததாகிவிட்டது. என் பணி இலவசமாகக் கிடைத்த அந்நாட்களிலே, அவசரமில்லாத சூழலில், அதுவரை தொடப்படாத ஆரம்பப் பணிகள் அந்தக்கால மாநில கணக்கிடு களில் சாதிக்கப்பட்டதை இந்தியப்பறவையியலின் நல்லகாலம் என்று சொல்லவேண்டும். களப்பணி ஆய்வாளர்களின் இன்றைய சம்பளம், பொருட்களின் விலையும் சேவைகளின் கூலியும் விண்ணைத் தொடும் நிலை ஆகியவற்றைப் பார்த்தால் அது போன்ற நிதானமான ஆழமான பணிகள் எண்ணிப்பார்க்கவே முடியாதவை. -அதுவும் மும்பை கழகம் போன்ற பணசவசதியற்ற ஒரு நிலையத்தின் சக்திக்கு முற்றிலும் அப்பாற்பட்டவையாகும்.

10

# டேராடூன்–பகவல்பூர் 1934 -39

ஜெர்மனியிலிருந்து திரும்பி நான்காண்டுகள் ஆகியிருந்தன. நிலையான வேலையுமில்லை, வீடுமில்லை. நாடோடிகள்போல வாழ்வதையும், உறவினர் மீதும் நண்பர்கள்மீதும் எங்களை சுமத்துவதையும் விட்டு மும்பையைவிட அமைதியான மகிழ்வான, மலிவான அதேசமயம் அறிவுஜீவிகளிடமிருந்து விலகிவிடாத ஓரிடத்துக்கு குடிபோகலாமென நினைத்தோம். ஹமீத் அண்ணா இந்திய அரசுப்பணித்துறை(ஐ.சி.எஸ்.)யிலிருந்து ஓய்வுபெற்று வாழ்ந்துவந்தார். இமயத்தின் அடிவாரத்தில் இருந்த டேராடூனில் வசிக்கலாம் அது சரியான இடம் என்று அவர் சொன்னதை உற்சாகமாக உடனே ஏற்றுக்கொண்டோம். நான் ஏற்கெனவே கொண்டிருந்த கனவுகள் நினைவாவதோடு ஹமீதண்ணாவுக்கருகில் என்பது இன்னொரு ஆசையாயிற்று. அவரே என் லட்சிய மனிதருமாவார். பகுத்தறிவாளர், பொருள்முதல்வாதி என்பதால் அவரிடம் எனக்கு மிக மரியாதை.

சிறுவனாகியிருந்த காலம் தொட்டு—இமயத்தைப் பார்ப்பதற்கு நெடுங்காலம் முன்பே—இமாலயத்தில் எனக்கு அளவற்ற கவர்ச்சி உண்டு. பிற்காலத்தில் என் வாழிடத்தைத் தேர்ந்தெடுக்கும் உரிமை கிடைத்தால் எங்காவது அதன் அடிவாரத்தில் வாழவேண்டும் என்றெண்ணியதுண்டு. அங்கே என் வாசலிலேயே அழகிய வனங்கள், உன்னதமான இயற்கைக்காட்சிகள், பறவைகளைப் பார்த்தே காலம் போக்குதல், மலையில் நடத்தல், வேட்டையாடவும் இயற்கை வயப்படவும் ஆயிரம் வாய்ப்புகள் என்று எனக்குப் பிடித்த எல்லாமே கிடைக்குமென்று கனவுகண்டதுண்டு. இதற்கு மேல் என்ன வேண்டும்? முதன்முதலாக 1925இல் அப்போது நான் பணியாற்றி வந்த தீப்பெட்டித் தொழிற்சாலைப்பணி நிமித்தம் அங்கே தீப்பெட்டித் தொழிலுக்கான மரங்கள் கிடைக்குமா என்றறிய இமாலயப் பகுதிக்குச் சென்றதுண்டு. அப்போதும் என்கனவுகளை

இன்னும் வலுவாகப் புதுப்பித்துக்கொண்டு வந்ததுதான். கடைசியாக விதி குலுக்கல் முறையில் என் கனவை நனவாக்கி விட்டது-குறைந்தது ஓரளவுக்காவது. நானும் துணைவியும் எங்கள் வாழ்வின் உச்சகட்ட மகிழ்வான ஐந்தாண்டுகளை டேராடூனில் கழித்தோம். நேசமிகு நண்பர்களும், அறிவுக்கு உணவூட்டும் அறிவுஜீவிகளும் மயக்கும் இயற்கைச் சூழலும்! என்னளவிலும் அங்கு ஒரு நிறைவு இருந்தது. எல்லாம் ஒரு மகத்தான சோகத்தால் பாதியில் கலைந்துபோயின. ஒரு ஆபத்தில்லாத அறுவை சிகிச்சைக்குப்பின் தெஹ்மினாவின் ரத்தத்தில் நஞ்சு கலந்து 1939 ஜூலையில் அவள் என்னைத் தனியே விட்டு காலமானாள். அவளில்லாமல் இங்கேயே இருப்பதா, ஊரை விட்டுச் செல்வதா என்ற கடுமையான ஒரு கேள்வி எழுந்தது. என்னை விட இரண்டே வயது மூத்த சின்னக்கா கம்ருன்னிசா (காமு)வும் மைத்துனர் ஹாசனும் நான் தனிமையில் வாழக்கூடாது என்று பரிவுடன் வலியுறுத்தினர். பந்த்ரா, பாலிஹில் பகுதியிலிருந்த தங்கள் வீட்டுக்கு வருமாறு வருந்தியழைத்தனர். ஹசன் என் பெரியப்பா பயசுல் ஹசனுடைய மகனுமாவார். அப்போது கூட பாலிஹில் பகுதி அமைதியும் பசுமையும் கொண்ட புறநகர்ப் பகுதியாகவே இருந்தது.

நகரவாழ்க்கையில் எனக்கு ஒருக்காலும் ஈர்ப்பு கிடையாது. டேராடூனின் கவித்துவமான வாழ்வைத் தொடர்ந்து மும்பைக்கு நானாகவே திரும்புவதில் ஆர்வமில்லை. ஆனால் மனைவியின் மறைவுக்குப்பின் டேராடூன் வாழ்வு என்பதும் பழையபடி இல்லை ஒருக்காலும் பழையபடி இருக்கப்போவதுமில்லை. என் விதியை இரண்டு அம்சங்கள் முடிவுசெய்தன. முதலாவதாக சொல்ல வேண்டியது, காமுவும் கணவரும் நீட்டிய பாசமிக்க அழைப்பு. அவர்கள் இருவரும் என்னிடமும் தெஹ்மினாவிடமும் மிகமிக அன்பு கொண்டிருந்தனர். அடுத்தது இயற்கை வரலாற்றுக் கழகம் மும்பையில் இருந்தமை. அதன் அருமையான பறவை சேகரம், நூலகம், உதவும் மனங்கொண்ட சகாக்கள், என் பணியைத்தொடர உதவும் பிறவசதிகள் எல்லாமே அங்கிருந்தன. டேராடூனிலிருந்து கிளம்புவது பெரிய வேதனையாக இருந்தது. ஆனால், இப்போது பின்னோக்கிப் பார்த்தால் அதுதான் சரியான முடிவு என்றுபடுகிறது. அதன்பிறகு எனக்குக்கிடைத்த எல்லா வெற்றிகளுக்குமே அந்த முடிவுதான் காரணம். காமு வீட்டில் கிடைத்த இனிமையான சிக்கல்களற்ற சூழலும், வீட்டுநிர்வாகம் அதுசார்ந்த பணிகள் என்ற எந்தவிதத் தலைவலியும் இல்லாத நிலையும் பறவையியலில் முழுமூச்சாக நான் பணிபுரிய உதவின. காமு–ஹசன் ஆகியோரின்

பரிவும் சகிப்புத்தன்மையும் தவறாமல் எனக்கு கிட்டிவந்தன. அதற்கு நான் எவ்வளவு நன்றி சொன்னாலும் போதாது. அதனால் எனக்கும் குடும்பத்துக்கும் நாட்டுக்கும் கிட்டிய சமூக அங்கீகாரத்தை எளியதோர் ஈடாகவும் எனது நன்றியின் சின்னமாகவும் அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பது என் நம்பிக்கை.

டேராடுனில் இருந்தபோது 1934 ஆகஸ்டில் நான் அரசுக்கு ஒரு திட்டநகல் கொடுத்தேன். அது பறவையியல் பொருளாதாரம் தொடர்பான எளிய திட்டம். நமது இரு அடிப்படைத் தொழில் களான வேளாண்மை, வனவளர்ச்சி ஆகியவற்றுக்கும் பறவைகளின் உணவு, உணவுமுறைகள் ஆகியவற்றுக்கும் இடையேயான தொடர்பு என்பது ஆராய்ச்சிக்கான வாய்ப்புகளும் விஷயங்களும் அடங்கிய துறை என்பது நெடுங்காலமாகவே என் மனதிலிருந்த ஒரு கருத்து. அமெரிக்காவின் உயிரியல் கணக்கிட்டு மையத்தைச் சேர்ந்த போர்ப்ஸ், மெக்காத்தி, காத்தம், பிரிட்டனில் கால்ரிங், ஜெர்மனி, ஜப்பான் உள்ளிட்ட மற்ற பல்வேறு நாடுகளில் இத்துறையில் பங்களிப்பு செய்துவருபவர்கள் பலரது ஏடுகளும், அவர்களுடன் எனக்கிருந்த கடிதத்தொடர்பும் இக்கருத்துக்கு வலுசேர்த்தன. மும்பை மாகாண வேளாண்மை இயக்குநர் முனைவர் டபிள்யூ பர்ன்ஸ் வழியாக அன்றைய சாம்ராஜ்ய வேளாண்மை ஆராய்ச்சிக் கழகத்துக்கு (ஐசிஏஆர்-இப்போது இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக் கழகம்) அனுப்பினேன்.

வேளாண்மை, தாவரவளர்ச்சி, வனஇயல் ஆகிய துறைகளில் பறவைகளின் பங்களிப்பு உயர் முக்கியத்துவம் வாய்ந்தது. ஆனால் நம் நாட்டில் அது உணரப்படவேயில்லை. அப்புறமல்லவா அது பற்றி ஆராய்வது! அவற்றின் தாக்கம் இருமுனைப்பட்டது: தானியச் செடிகளையும், பழமரங்களையும் பொறுத்தவரை பறவைகள் தாக்கி அவற்றுக்கு ஊறு செய்கின்றன. ஆனால், அதேநேரத்தில் பயிர்களை அழிக்கக்கூடிய புழுபூச்சி போன்ற உயிரினங்கள், எலி, பெருச்சாளி போன்ற கொறித்துத்தின்னும் உயிரினங்கள் ஆகியவற்றால் ஏற்படக் கூடிய இழப்பைக் குறைக்கின்றன. எவ்வாறெனில், பறவைகளில் பல இவற்றையும் உண்பவை. சில பறவைகளுக்கு (உணவு என்பதே) இவையன்றி வேறில்லை! நம் இந்தியா போன்ற வேளாண்மையும் வனஇயலும் அடிப்டைத்தொழில்களாய் உள்ள நாடுகளில் பறவைகளினால் ஏற்படும் இந்த பாதிப்பு மிக மிக முக்கியம். ஒரே பறவையின் தாக்கமே அழிவுசக்தியாகவும் இருக்க முடியும். ஆக்கசக்தியாகவும் இருக்கமுடியும்—பருவகாலத்தைப் பொறுத்தோ, குஞ்சுப்பறவை - வளர்ந்தபறவை இந்த வேறுபாட்டாலோ. எனவே

ஒரு பறவையின் பொருளாதார அந்தஸ்தை அறிய அதன் முழு வாழ்க்கை வரலாறும் ஆராயப்படவேண்டும். குறிப்பாக தாவர உணவு, ஊன்உணவு இரண்டும் சாப்பிடும் பறவைகள் பற்றி. இது இன்றும் அவசியம். அவை உட்கொள்ளும் உணவின் வகையும் அளவும் தவிர அதன் உணவுப் பழக்கங்கள், உணவு விருப்பங்கள், நடவடிக்கைகள், அதன் எண்ணிக்கை (இனப் பெருக்க) அம்சங்கள் ஆகியவை பற்றியும் ஒரு முறையான ஆய்வு நடத்த வேண்டும். இந்தக் கருத்துகள் அனைத்தையும் நான் ஐசி.ஏ.ஆருக்கு அனுப்பிய திட்ட நகலின் முன்னுரையில் குறிப்பிட்டிருந்தேன். ஒரு பறவையின் உணவுஅளவு–வகை இவைபற்றி ஆய்வுச் சாலையில் அதன் இரைப்பையை ஆய்வதன்மூலம் கண்டறியலாம். இம்முறை எப்போதுமே பயன்தரும் என்று சொல்ல முடியாவிட்டாலும் பொதுவாக பயன்தரக்கூடியதே என்றும் குறிப்பிட்டிருந்தேன்.

மெல்லிய உடல்கொண்ட புழுக்களை பறவைகள் உண்ணும் போது பறவைகளின் இரைப்பையில் அவை அடையாளம் பிரிக்க முடியாதவாறு கூழ்கூழாய் ஆகிவிடும். பறவைகளின் உணவுப்பழக்கங் களையும் அவற்றின் இரை என்ன என்பதையும் களத்திலேயே ஆய்வதன்மூலம் இந்தச் சிக்கலைத் தீர்க்கலாம். அதேபோல்தான் தேன் உண்ணும் பறவைகள். இவை தம் சிறகுகளில் ஒட்டிக் கொள்ளும் மகரந்தத்துகள்களை எடுத்துச்சென்று வேறு ஒரு பூவில் சேர்ப்பதன் மூலம் அயல் மகரந்தச் சேர்க்கைக்கு ஊடகமாக அமைந்து தாவரங்களின் உயிர்ப்பெருக்கத்துக்கு வகை செய்கின்றன. இவற்றின் இரைப்பையை ஆராய்ந்து ஒரு முடிவும் செய்ய முடியாது. வெறும் நிறமற்ற திரவம்தான் கிடைக்கும். இவற்றையும் நேரடியாக களத்திலேயே கண்காணிப்பதன்மூலமே, எந்தப்பறவை எந்தப் பூக்களை நாடுகிறது என்று காணமுடியும். ஒரு குறிப்பிட்ட பகுதியில் ஒரு குறிப்பிட்ட பறவையினத்தின் பெருளாதாரத்தாக்கத்தை அறிய அதன் எண்ணிக்கைக் கணக்கீடு குறிப்பிட்ட கால இடைவெளிகளில் நடத்தப்படுவதும், சுற்றுச்சூழல் விபரங்களை நுட்பமாக அறிவதும் இனப்பெருக்கம் பற்றி அறிவதும், அதன் உடலைமைப்பு பற்றி அறிவதும் மிகவும் தேவையாகும்.

இதெற்கெல்லாம் தேர்ந்த பயிற்சியுள்ள பறவைஇயல்நிபுணர், அனுபவமுள்ள ஒரு ஆய்வுநிலைய உதவியாளர், விதைகள், தாவர வகைகள் இவற்றைப் பிரித்துணரக்கூடிய அளவு ஞானமுள்ள ஓர் தாவர இயலாளர் ஆகியோருடன் இணைந்து நடத்தவேண்டிய ஒரு ஒருங்கிணைந்த, விரிவான பறவை வரலாற்று ஆய்வு நடத்த வேண்டியது தேவைப்படுகிறது. இதற்கு கிட்டத்தட்ட அந்த நிலப்

பகுதியைச்சேர்ந்த எல்லா விதைகளுமடங்கிய ஒரு விதைசேகரிப்பு இன்னும் இது போன்ற ஒப்பியல் விபரங்கள் முன்தேவைகளாக அமைகின்றன. பிரிட்டனிலும், பிற ஐரோப்பிய நாடுகளிலும் இத்தகைய விரிவான ஆய்வுகள் நடத்தப்பட்டுள்ளன. இப்போதும் நடக்கின்றன. அமெரிக்காவில் அமெரிக்க உணவுத்துறையின் ஒரு பகுதியாக அமைந்திருந்த உயிரியல் கணக்கீட்டுமையம் இத்துறையில் ஏராளமான விபரங்களை சேகரித்து வைத்துச்சென்றுள்ளது. அவை வேளாண்மைத்துறைக்கும் வன இயலிலும் அறிவியல் ஆராய்ச்சிக்கு மட்டுமின்றி நடைமுறை அணுகுமுறையிலும் மிக மிக முக்கிய மானவை. அந்த கணக்கீட்டின் தலைமை உயிரியலாளர் மெக்காத்தி யிடம் எனது திட்டநகல் பற்றி கருத்து கேட்கப்பட்டது. அதனை அவர் 'மிகச்சிறப்பாக உருவாக்கப்பட்டது' என்று கூறியதுடன் நில்லாது தானும் பயனுள்ள சில கருத்துகளைத் தந்தார். பறவைகள் குறிப்பிட்ட பூச்சியினத்தைக் கட்டுப்படுத்துவதை ஆய்வுக்குரியதாக கொள்வதில் திட்டவட்டமான முடிவுகள் பெறுவது சிரமம். அதிலொன்றும் பிரமாத முடிவுகள் கிடைத்து விடுவதுமில்லை; அதைவிட பறவைகளின் உணவு உட்கொள்ளும் பழக்கங்களை அடித்தளமாகக்கொண்டு, அவற்றுக்கும் பிற உயிரினங்களுக்கும் உள்ள உறவைக்கொண்டும் பயிர்பாதுகாப்பு, பொருளாதாரம் பற்றிய முடிவுகள் உருவாக்கப்படவேண்டும் என்பது அவர் கருத்துக்களில் முக்கியமான ஒன்றாகும்.

நான் வெகுளித்தனமான ஒரு நம்பிக்கையுடன் திட்டம் விரைவில் ஆரம்பித்துவிடும் என்று நம்பிக் கொண்டிருந்தேன். முடிவே இல்லாததுபோல் தோன்றிய இரண்டாண்டுகள் நீடித்த கடிதப் போக்குவரத்துகளும், குழுக்கள் முன்பும் அதிகாரிகள் முன்பும் அளித்த அறிக்கைகளும், விளக்கங்களும் கடைசியாக இத்திட்டம் நிராகரிக்கப்பட்டதில் முடிவடைந்த போதுதான் புரிந்தது நான் எவ்வளவு வெகுளி என்பது. அதுவும் முனைவர் பர்ன்ஸ் உள்ளிட்ட மும்பை மாகாண வேளாண்மை ஆராய்ச்சிக்குழுவின் சக்திவாய்ந்த உறுப்பினர்களின் பரிந்துரை, இயற்கை வரலாற்றுக் கழகத்தின் வலுவான ஆதரவு எல்லாம் இருந்தும்! அந்தக் காலத்தில் (எனக்குத் தெரிந்தமட்டில் இப்போதும் அப்படியேதான் இருக்கும்) காக்காய் பிடிப்பதுதான் காரியம் ஆவதற்கான 'முறையாக' இருந்தது. நாகரிகமான முறையில் குதிரைவணிகம் நடந்தது. பல மாகாணங் களும் தத்தம் வளர்ச்சித்திட்டங்கள், ஆய்வுகள் ஆகியவற்றுக்கான நிதிகேட்டு, நகல்களை மைய அமைப்பான ஐ.சி.ஏ.ஆர் பார்வைக்கு அனுப்பும். பல மாகாணங்களின் பிரதிநிதிகளும் 'நிபுணர்களும்'

அடங்கிய அறிவுரைக்குழு அவற்றை ஆராயும். இங்கேதான் 'உன் முதுகை நான் சொறிந்தால் என் முதுகை நீ சொறிதல்' ஆரம்பிக்கும். பஞ்சாபின் திட்டத்துக்கு பம்பாய் மாகாணக்காரர் ஆதரவளித்தால், அவர் பதிலுக்கு..! இதுதான் பொதுவான நடைமுறைத்திட்டம்! எனது திட்டம் பலவித சாக்குகளால் இருமுறை தள்ளப்பட்டு, பிறகு 'கொள்கையளவில்' ஏற்கப்பட்டது. ஆனால், முக்கியத்துவ வரிசையில் பதினேழாவது இடம்தான். திட்டம் பிறந்ததிலிருந்து ஆர்வத்துடன் ஆதரவளித்தவரும், இதற்காக எல்லா கட்டங்களிலும் உழைத்தவருமான பர்ன்ஸ், தன் முந்தைய கசப்பான பட்டறிவினால், இத்தகைய சூழ்நிலையில், இதற்கு நிதிகிடைத்தால்கூட, எப்போது கிடைக்கும் என்று கூறு முடியாததால் நான் இதை மறந்துவிடுவதே நலம். வேறு எங்காவது காவடி எடுக்கலாம். என்று கூறிவிட்டார்! போனபோக்கைப் பார்த்தால் இது எதிர்பாராத முடிவுஅல்லதான்; ஆனாலும் ஒரு சோகமான ஏமாற்றம் ஏற்பட்டது. தேசிய நலன்களும், அறிவியலும் சம்பந்தப்பட்ட முயற்சிகளில்கூட பொதுவாழ்வில் எவ்வளவு 'அரசியல்' விளையாடுகிறது என்ற முக்கியமான பாடத்தை இவ்வனுபவம் எனக்களித்தது. இத்தகைய நல்ல திட்டங்கள் எப்படி, சித்திரவதை செய்யும் அதிகார மாளிகை களையும், சட்டத்தின் சிக்கல்களையும், தவறாமல் நேர்படும் 'எதிர்ப்புகளை'யும், ஒவ்வொரு படியிலும் சிக்கல் விழுந்த சிவப்பு நாடாவின் நூல்கண்டுதனமான சிடுக்குகளையும் சமாளித்து அவ்வப்போது நடைமுறைக்கு வந்தே விடுகின்றன என்பது ஒரு அதிசயம்தான்.

ஜோத்பூர் மாகாணத்தில் 1933இல் மும்பை கழக களப்பணி ஆய்வாளர் வீஎஸ். லாப்பர்சன் செய்திருந்த நிறைவான சேகரிப்பின் தொடர்ச்சியாக ராஜபுதனப் பாலைவெளி முழுவதையும் தழுவி ஒரு விரிவான ஆய்வு நடத்த வேண்டுமென்று நானும் விஸ்லரும் மிகவும் ஆர்வமாக இருந்தோம். அந்தப் பகுதியின் பறவைகள் வாழ்வு முழுதாக அறியப்பட்டிருக்கவில்லை. அடுத்த இலக்காக என் கண்கள் பகவல்பூர் ராஜ்யத்தில் பதிந்திருந்தன. சிந்து மாகாணத்தில் பள்ளிப்பருவ விடுமுறை நாட்களில் ஹமிதண்ணாவுடன் அவரது அலுவலகச் சுற்றுப் பயணங்களில் கூடப்போன நினைவுகளில், பாலைவனத்துடன் தொடர்புகளைப் புதுப்பித்துக் கொள்வதிலும் நாட்டம் கொண்டிருந்தேன். ராஜபுதன மாகாணத்துக்கான பிரிட்டிஷ் பிரதிநிதி, ஓய்வுபெற்ற பிரிட்டிஷ் காவல்துறை அதிகாரியும் அமீர் அரசில் அப்போது 'வேட்டை அதிகாரி'யாக இருந்தவருமான அட்கின்ஸன் இருவரும் மும்பை கழகத்தின் வலுவான

ஆதரவாளர்கள். இவ்விருவரின் தனிப்பட்ட ஆர்வத்தால்தான் பகவல்பூர் ராஜ்ய கணக்கீடு 1939இல் சாத்தியமாயிற்று. என் துணைவி தெஹ்மினா கலந்துகொண்ட கடைசி கணக்கீடு அதுதான். அது முடிந்து சில மாதங்களிலேயே தெஹ்மினா காலமானார்.

தடித்த உடல்கொண்ட இளம் அமீர் (மன்னர்) ஒரு தேறிய மன்மதன் என்று பெயரெடுத்திருந்தார். சுதேச மன்னர்களைப் பொறுத்தவரை இதற்கு என்னென்ன அர்த்தங்களோ அவ்வளவும் பொருந்தும். அதற்கு சில ஆண்டுகள் முன்புதான் பட்டத்து இளவரசாக அவர் பிரிட்டனில் பயணம் செய்து திரும்பியிருந்தார். வந்ததும், பிரிட்டனில் அவரது கவனத்தை மிகவும் கவர்ந்தது எது என்ற வினாவுக்கு 'நடிகையரின் கால்கள்' என்று பதில் சொன்னதாகக் கேள்வி! அவரது ராஜசபையினரில் சிலரும், ஆமாம்சாமிகளும், அவரது கீழ்த்தர ஆசைகளை நிறைவு செய்வதற்கான ஏற்பாடுகளை செய்வதற்காகவே அவரோடிருந்ததாகத் தோன்றுகிறது. ஆபாச இலக்கியத்துறைக்குப் பொறுப்பேற்றிருந்த ஒருவர் முகலாய சிற்றோவியங்களில் எனக்கு ஈடுபாடு என்றறிந்து (எனக்கு அதில் ஈடுபாடு உண்டு, குறிப்பாக விலங்குகளின் சித்திரங்கள்) தனியே அழைத்துச் சென்று ஒரு சிறப்பு விருந்தினருக்கான சிறப்புச் சலுகையாக பூட்டி வைக்கப்பட்டிருந்த சில முகலாய சிற்றோவியங்களையும், சில ராஜபுதனச் சிற்றோவியங்களையும் காட்டினார். அவை மன்னருக்கு மிகவும் பிடித்தமானவை என்றும் கூறினார். ஓவியங்கள் என்ற அளவில் அவை உன்னதமாக படைக்கப்பட்ட சிரான படைப்புகள் தான். ஆனால் அவை அனைத்துமே அரைகுறையாடை அணிந்த அரசிளங்குமரர்களும் (ஆனால் தலையில்மட்டும் மணிகள் பதித்த மகுடங்களுக்குக் குறைவில்லை!) அதேவிதமாக ஆடையணிந்த மாதரசிகளும், விசித்திரமான, இயலக்கூடாத கோணங்களில் காட்சி தரும் ஓவியங்கள். கஜுராஹோ சிற்பங்களையே ஒன்றுமில்லை என்று ஆக்கும் சித்திரங்கள்.

முன்னறிவிப்போடு வருகை தருபவர்களை மூன்று நாட்கள் அரசு விருந்தினர்களாக நடத்துவது பகவல்பூர் அரசின் விருந்தோம்பல் கொள்கையாகும். அதன்பிறகு அவர்கள் விருந்தினர் இல்ல விகிதங்களின்படி கட்டணம் செலுத்த வேண்டும். ஒரு விசித்திர வழக்கமும் இருந்தது: விருந்தினர்களை இரண்டு வகுப்பாகப் பிரிப்பதுதான் அது. அடுத்தநாள் காலை உங்கள் சாப்பாட்டு மேசைக்கு என்ன வருகிறது என்று பார்க்கும்வரை உங்களுக்கு அது ஒரு மர்மமாகவே இருக்கும். சாப்பாட்டு மேசைக்கு எதிர்ப்புற சுவரில் பார்வையில் படும்விதமாக காணப்பட்ட அறிவிப்புதான்

இரண்டு வகுப்புகள் பற்றிய விபரம் கூறும். முதல் வகுப்பினர்க்கு என்ன உணவு, கீழ்வகுப்பினர் உணவு எது என்று அதில் குறிப்பிட்டிருப்பார்கள். முதல் வகுப்புக்கு: 2 முட்டை; இரண்டாம் வகுப்பினர்: 1 முட்டைதான்! 2 ரொட்டி-1 ரொட்டி... இப்படி! உங்களை அரசு எங்கே வைத்திருக்கிறது என்று தெள்ளத்தெளிய ஆனால் முரட்டுத் தனமாக அது கூறிவிடும்! மறுநாள் காலை எங்கள் மேசையில் ஆளுக்கு இரண்டு முட்டைகள் இருக்கக் கண்டதும் நிம்மதி!

பாலைவன விலங்குகளின் மறைப்புத்திறன்கொண்ட வண்ணங் களில் எனக்கு எப்போதுமே ஒரு மயக்கம் உண்டு. அதனை இன்னும் அண்மையில் ஆராயும் வாய்ப்பை இந்த ஆய்வு அளித்தது. மெயினர்ட்சகன் என்பவர் ஆசிய-ஆப்பிரிக்கப் பாலைநிலப் பறவைகள், அவற்றின் வாழ்வு ஆகியவை பற்றியே ஒரு தனி ஆய்வு நடத்தியிருந்தார். காற்றில் ஈரப்பதத்தின் அடர்த்தி, பூமிக்கும் உயிர் களுக்கும் வரும் புறஊதா (அல்ட்ரா வயலெட்) கதிர்வீச்சைக் கட்டுப்படுத்துகிறது என்ற ஒரு கொள்கையை வலிய ஆதாரங்களோடு குறிப்பிட்டிருந்தார். பாலைவனப் பகுதியில் ஈரப்பதம் மிகமிகக் குறைவாக இருப்பதால், புறஊதாக்கதிர்கள் அதிக அளவில் காற்று வெளியிடை ஊடுருவுகின்றன, பிற இடங்களில் இவ்வூடுருவல் இடர்ப்படுகிறது. இந்த ஊடுருவல் எவ்வளவு அதிகமாக இருக்கிறதோ அந்த அளவு வெளுப்பு அதிகமாயிருக்கும் (பாலைவன மணலும், அங்கு வாழும் உயிர்களும் வெளுத்திருப்பது இதனால்தான்). இதன் மறுதலையாக புறஊதாக்கதிர் ஊடுருவல் குறைவாயுள்ள பகுதிகளில் நிலமும் சரி அதில் வாழ் உயிர்களும் சரி, கறுப்பாயிருக்கும். பாலை மணலை வெளுப்பாக்கும் காரணி(கள்) எதுவோ (எவையோ) அதே (அவையே) பாலைவாழ் உயிர்கள் வெளுப்புக்கும் காரணமாகிறது என்று தோன்றுகிறது. அதனால் பின்புல நிறமே கொண்டிருப்பதால், இவ்வுயிர்கள் பிறர் பார்வையில் எளிதில் சிக்கிவிடாமல் தப்பிவிட முடிகிறது. சந்தர்ப்பவசமாக பெய்த ஒரு மழையின்போது நனைந்து கொண்டே காணநேர்ந்த ஒரு காட்சியில் பாலைவன வானம்பாடி களும் (Desert Finch-Lark) பாலைக் குதிரைகளும் அவை வாழும் கொதிமணல் எந்த அளவுக்கு பழுப்புநிறமாக உள்ளதோ அதே அளவுக்கு பழுப்புநிறமாக இருப்பதைக் கண்டேன். வெளுத்த உலர் பாலையின் அந்த மண்போலவே நிறங்கொண்டிருப்பது எப்படி அங்குள்ள பறவைகள் தம் இருப்பை மறைத்துக் கொள்ள உதவுகிறதோ, அதே விதமாக, மண் மழையால் நனைந்து நிறம்மாறிய சூழலில் அதே மண் நிறம்பெற்று அதே நன்மையை அடைகின்றன.

பாலைநில மண்ணின் நிறமும் பறவைகள் நிறமும் ஒன்றுபோல் இருப்பதற்குக் காரணம், மண்ணின் நிறம் அமைய எவை காரணிகளோ, அவையே பறவைகளின் நிறத்துக்கும் காரணிகளாய் அமைந்திருப்பதுதான் என்ற அவரது கருத்துக்கு இது வலுவூட்டுகிறது. எனது பகவல்பூர் அறிக்கையைப் படித்துவிட்டு அவர் "பறவையின் இறகுகளில் மழையின் பாதிப்பு பற்றிய உங்கள் கருத்து எனக்கு ஆர்வமூட்டுகின்றது. எப்படி இதுபோன்ற சாதாரண விஷயங்கள் கவனிக்காமல் விடப்படுகின்றன என்பதுதான் விசித்திரம்; நீங்கள் கூறுவதில் நிறையப்பொருள் இருக்கிறது என்றே கருதுகிறேன். எனது மொராக்கோ அறிக்கையில் உங்கள் கருத்தையும் எடுத்தாள அனுமதிப்பீர்களென நம்புகிறேன்" என்று எழுதிய போது எனக்கு மிகவும் மனநிறைவு ஏற்பட்டது.

## 11

# ஆப்கானிஸ்தான்

எனது பறவையியல் நண்பர் ஹியூ விஸ்லர் 1935இல் இங்கிலாந்தி லிருந்து எழுதிய கடிதத்தில், பிரபல நிபுணர் கர்னல் ஆர்.மெய்னர்ட் சகன் ஒரு சேகரிப்புப் பயணமாக ஆப்கானிஸ்தான் போகத் திட்டமிட்டு வருவதாயும், அதில் பறவைகளை இனங்காண ஒரு சகாவைத் தேடுவதாயும் கூறி என் விருப்பம் கேட்டு எழுதினார். எனக்கு மெத்த மகிழ்ச்சி என பதிலனுப்பினேன். ஆப்கானிஸ்தான் அண்டை நாடுகளில் ஒன்று—ஆயினும் இத்துறையில் போதிய கவனம் பெறாத நாடு என்பது என் எண்ணம். ஆனாலும்கூட எனது முக்கிய ஆர்வம் சுற்றுச்சூழலியல்; நாள்முழுதும் பறவைகளைத் தோலுரித்துக் கொண்டிருக்க என்னால் இயலாது. எனவே இன்னொருவரையும் அழைத்துச் செல்வது நலம் என்றும் எழுதினேன். “அவர் (கர்னல்) ஒரு முழுமைவாதி. எதையும் செய்வன திருந்தச்செய் என்பவர். அது நியாயமும்கூட. எனவே, அந்த இன்னொரு உதவியாளரின் பணியை நீங்கள் கண்காணித்து வர வேண்டியிருக்கும்” என்று விஸ்லர் எச்சரித்தார். கர்னல் 1936இல் கென்யாவில் தீவிரமாக இருந்ததால் ஆப்கன் பயணம் 1937இல் தான் நனவானது.

கர்னல் ரிச்சர்ட் மெய்னர்ட்சகன் பறவையியல் மூலம் எனக்கு அறிமுகமான மாந்தர்களிலேயே மிகமிக சுவையான, தனித்துவம் கொண்ட, விரும்பத்தக்க மனிதர்களில் ஒருவராவார். பிரிட்டிஷ் ராணுவத்தில் பணியாற்றியபோது அவர் தன் பணிக்காலத்தின் பெரும்பகுதியை கிழக்கு ஆப்பிரிக்காவிலேயே கழித்திருந்தார். காலனி ஆதிக்க நாடுகளான கென்யா, தங்கன்யிகா ஆகியவை பற்றி வேறு பல நூல்களிலும் ‘கென்ய நாட்குறிப்பு’ என்ற நூலிலும் படைவீரர் என்ற முறையிலும், வேட்டைக்காரராகவும், பறவை இயலாளராகவும் அவர் மேற்கொண்ட அனுபவங்களை மிகமிக சுவைபட எழுதியுள்ளார். இந்தியாவுடன் அவருடைய் தொடர்பு

தொட்டும் தொடாமலும் இருந்தது. மிகக் குறுகிய காலம்தான் இங்கு பணியாற்றியிருந்தார். முதல் உலகப் போரின்போது சிலகாலம் ஓய்வுக்காக வந்து இருந்திருக்கிறார். இந்தியாவிலிருந்த காலத்தில் ஏதும் இந்திச் சொற்களோ உருதுச் சொற்களோ தெரிந்து கொண்டீர்களா? என்றால் "சுவர் கா பச்சா என்ற பயனுள்ள தொடரைக் கற்றுக்கொண்டேன்" என்றார். 'பன்றியின் மகனே' என்பது இதன் பொருளாகும்! இதை அவர் சுருக்கி ஆங்கிலத்தில் எஸ்.கே.பி (சு.கா.ப) என்று தன் தனிப்பட்ட உரையாடல்களில் 'எதிரிகளை'க் குறிப்பிட பயன்படுத்தி வந்தார். உணர்ச்சி வசப்படுவது என்பது சுத்தமாக இல்லாத மனிதர். தனக்கே ஆபத்து என்ற சிந்தனைக்கு இடம் தராதவர். மெய்வருத்தம்பாரார் என்ற வகையினர்.

இப்படித்தான் ஆப்பிரிக்காவில் ஆரம்பகால அதிகாரியாகப் பணியாற்றும்போது 'நந்தி' என்ற இனத்துப் புரட்சிக்காரர்களை ஆறு உள்ளூர் சிப்பாய்கள் மட்டுமே துணையாக எதிர் கொள்ள நேர்ந்தபோது ஓர் இரவு அவர்களின் தலைவனின் சிற்றூருக்குள் ஊர்ந்துசென்று அத்தலைவனையே பிடித்துவிட்டார். பிடித்து தம்முடன் கொண்டுசெல்ல முனைந்தபோது பெருங்கூட்டம் முற்றுகையிட்டுவிட்டது. உடனே அவர்கள் திரும்பிச் செல்லா விட்டால் அவர்கள் தலைவரை சுடநேரும் என்று எச்சரித்தார். அவர்கள் தளராமல் முன்னேறினார்கள். இவரையும் இவரது ஆறு துணைவர்களையும் அவர்கள் முறியடிக்கும் அபாயம் மிகத் தெளிவாக இருந்த அச்சுறுத்தும் நிலைமையில் சாவகாசமாக துப்பாக்கியை எடுத்தார். குறிவைத்தார். கொன்றேவிட்டார்! இதற்காக அவருக்கு வீர விருது கிடைத்தது. நந்தி இனம் நிபந்தனையின்றி சரணடையும் நிலைக்கும் இந்நிகழ்ச்சி இட்டுச்சென்றது.

இன்னொரு வீரசாகசம்—முதல் உலகப்போரின்போது மத்திய கிழக்குப் பகுதியில் பணிபுரியும்போது நடந்திருக்கிறது. ஒரு துருக்கியர் முகாமில் பலவீனமான ஒரு பிரிட்டிஷ் தளத்தை கடுமை யாகத் தாக்க முன்பணிகள் நடந்துகொண்டிருக்கின்றன. பிரிட்டிஷ் தளம் வீழ்ச்சி காண்பது உறுதிதான். தன்னந்தனியாக ஒரு திட்டத்தோடு எதிரி முகாமுக்குள் செல்கிறார் கர்னல். கையில் ஒரு அஞ்சல். அதில் வேறு ஒரு குறிப்பிட்ட முகாமை பிரிட்டிஷார் தாக்கப்போவதாக ஒரு பொய்யான திட்டம். இவர் உள்ளே நுழைந்ததும் அங்குள்ள காவலர்கள் எச்சரிக்கையடைந்து தாக்க வருகிறார்கள். சுற்றியடித்து ஒரே பாய்ச்சலில் திரும்பிவிடுகிறார் கர்னல். துப்பாக்கி குண்டுகளும் குதிரைப்பாய்ச்சல்களும் புகையும் புழுதியும் கிளப்ப தப்பிவிடுகிறவர், தவறிப்போய்விட்டதுபோல

தன் 'அஞ்சலை' அங்கேயே விட்டுவந்து விடுகிறார். ஆகா, பிரிட்டிஷ் ரகசியம் சிக்கியது என்று எதிரியின் உளவுத்துறையும் தலைமையும் அந்த பொய்யான தாக்குதலுக்கான மையத்துக்கு விரைய இவர் திட்டம் வெற்றியடைகிறது. தனது தளத்தை இவர் தாக்குதலில்லாமல் செய்து தற்காத்து தக்கவைத்துக் கொள்கிறார். இல்லையேல் அது சுத்தமாக அழிந்து போயிருக்க வேண்டியதுதான்.

ஒருமுறை மத்தியக் கிழக்கில் மெசபடோமிய கிராமங்கள் மீது பறந்து உள்ளூர் மக்களின் நசுக்கப்படும் வாழ்வை துருக்கிய ஆள்வோரிடமிருந்து காத்து ரட்சிக்க எப்படி பிரிட்டன் போரிடுகிறது என்ற பிரச்சார பிரசுரங்களை மேலிருந்துபோடும் பணி இவருக்கு. கூட ஒரே ஒரு விமானி. விமானமோ மிக பலவீனத் தோற்றங் கொண்ட ஒற்றை எஞ்சினும் இரு இருக்கையும் கொண்டது. சிறகுகள் லினன் சிறகுகள். விமான தளத்தில் இளம் அதிகாரி கட்டுக்கட்டாக பிரசுரங்களை விமானத்தில் ஏற்றிக் கொண்டே இருக்கிறார். கர்னலுக்கு சஞ்சலமேற்பட்டு, அது ஒரு கட்டத்தில் அதிகரித்து அதுவரை மவுனமாகவே இருந்தவர் விமான ஓட்டியிடம் 'விமானத்தில் எவ்வளவு சுமை ஏற்றிச் செல்லவேண்டும்' என்று கேட்டே விடுகிறார். உல்லாசமாக அந்த அதிகாரி செல்கிறார். "அது நம்மீது அவர்கள் நடத்தும் விசாரணையின்போதுதான் தெரியும்"— சொல்லிவிட்டு அதற்குமேல் ஏற்ற முடியாது என்ற அளவுவரை மேலும் சுமையேற்றுகிறார்.

ஆபத்தைப் பற்றி மட்டுமல்ல வலிகளைப் பற்றியும் அவர் கவலைப்படுவதில்லை. காபூல் அருகே கோரைகள் அடர்ந்த ஒரு சதுப்பு நிலப்பகுதியில் எங்கள் சேகரிப்பு நடந்துகொண்டிருக்கிறது. அம்புமுனை போன்ற ஒரு கோரைத்தண்டில் கால்வைத்து ஏறுகிறார். காக்கி கால்சட்டையில் கால்கள் மூடப்படாதநிலை. அது சடாரென்று முறிந்து முக்கால் அங்குல அளவு இவர் சதைக்குள் தைத்து விட்டது. குருதி தண்ணீர் போல் ஓடுகிறது. மனிதர் அலட்டிக் கொள்ளாமல் ஈரத்தரையில் தொடர்கிறார். கடைசியாக கட்டாயத்தின்பேரில் திரும்புகிறார். முள்முனையை தூதராலய மருத்துவர் மூலம் அகற்றிவிடுவதற்காக வண்டியிலேறி வருகிறவர்—ஒரு தாடிக் கழுகைப் பார்க்கிறார். அது நாங்கள்தேடும் ஒரு பறவைதான். ஆனால் வேறு ஒரு திசையில் 300 கெஜ தூரத்தில் அதைப் பார்த்தவர் கொட்டும் ரத்தம், குத்தும் முள் எல்லாவற்றையும் மறந்து நொண்டியபடி ஓடி அதை சுட்டு விட்டுத்தான் வண்டியிலேறினார்.

மிக விரிவாக நாட்குறிப்பு எழுதுபவர் அவர். தன் மரணத்துக்கு

சிறிது காலம் முன்பு "விளைவுகளுக்கு நீயே பொறுப்பு(!)" என்றபடி அதைப் படிக்க என்னை அனுமதித்தார். எங்களது ஆட்டங்காணும் அறிமுகநிலை தாண்டி அப்போது ஆழ்ந்த நட்பு முகிழ்த்துவிட்ட நேரம். மும்பையில் 17.2.37இல் அவர் வந்து சேர்ந்து என்னை முதல் முறை சந்தித்த அந்த சந்திப்பு பற்றிய குறிப்பு: "பிறகு நான் பம்பாய் இயற்கை வரலாற்றுக் கழகத்துக்குப் போனேன். அங்கு பிராட்டரையும் சலீம் அலியையும் சந்தித்தேன். சலீமினால் கவரப் பட்டேன். பார்வைக்கு அவர் எப்படி இருந்தார் என்பதும் பிடித் திருந்தது. அடுத்த சில மாதங்கள் சலீமுடன் பயணம் செய்ய வேண்டியிருந்தாலும் சரிதான். அறிவாளிபோல் காணப்பட்டார். தோற்றம்தான் அருவருப்பானது. காந்திக்கும் சலீமுக்கும் பெரிய வேறுபாடில்லை."

பறவைகளைத் தோலுரிப்பதில் உதவி செய்ய என்.ஜி. பிள்ளையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். 1933–34 திருவாங்கூர் ஆய்வின்போது அவ்வூர் அருங்காட்சியகம் இவரைத்தான் எனக்குத் துணைவராக அளித்து உதவியது. இவர் ஒரு தகுதிவாய்ந்த உயிரியலாளர். நல்ல உழைப்பாளி. எல்லாவற்றிலும் மேலாக இன்மொழியாளர். நளினமான பழகுமுறை கொண்ட மனிதர். நிர்ணயிக்க முடியாத ஒரு கதம்பமான கும்பலில் இணைந்து வேலை செய்ய முடிந்தவர் என்பது என் கணிப்பு. ஒரே குறை—இந்த ஆப்கன் சூழலில் ஒவ்வாத மென்மையும் பணிவும் கொண்டவர். இதனால் அவர் சிலசமயம் சில சில்லறை அவமானங்களை ஏற்க நேர்ந்தது. இவரைத் தவிர டேராடூனைச் சேர்ந்த டைசன் என்ற தோல்உரிக்கும் உள்ளூர்க் கிறிஸ்தவரை நான் அமர்த்தியிருந்தேன். அவனொரு உதவாக்கரை அயோக்கியன். முன்னரே பல ஆய்வுகளில் டைசனை நான் நன்கறிந்தேன். வேலைசெய்யாது ஏய்ப்பதில் பிறவிக்கலைஞன். உடல்நலமில்லை என்று சாக்கு சொல்லியே ஏமாற்றுபவன். ஆனால், வாலைப்பிடித்து திருகிக் கொண்டேயிருந்தால்–நல்ல பணியாள். அலுப்பூட்டும் வேலைகளைக்கூட செவ்வனே செய்வான். கர்னலால் அதுவும் முடியும். அதற்கு மேலும் முடியும் என்பதால் இவனைச் சேர்த்தேன். இவர்களுடன் ஒரு கட்டுடல் கொண்ட அழகிய பட்டாணியன் ஒருவனை போகிறபோக்கில் பெஷாவரில் இழுத்துப் போட்டுக் கொண்டோம். அவன்தான் 'பரிமாறி'. வெளிநாட்டின ரோடு வேலைசெய்து, அவர்களை அறிந்தவன். தேர்ந்த பணியாள் (மேல்நாட்டார் பழக்கவழக்கங்கள் பற்றி கவலைப்படாத போக்கை வெளிப்படையாகவே காட்டிக்கொள்பவன்). தாவரஇயல் தெரிந்தவர் ஒருவரும் வேண்டுமென்று கர்னல் சொல்லியிருந்தார்.

லக்னோ பல்கலைக்கழகத்தில் அப்போதைய தாவரஇயல் பேராசிரியரும் என் நண்பரும், பிரிட்டிஷ் அரச சபை உறுப்பினரு மான பீர்பல் சாஹ்னி, கே.என். கவுல் என்ற திறம்வாய்ந்த ஒரு இளம் மாணவரைப் பரிந்துரை செய்திருந்தார். கர்னல் கவுலை பேட்டி கண்டார். நிறைவுற்றதாகவும் தோன்றியது. ஆனால் கடைசியில் திருப்பி அனுப்பிவிட்டார். ஏனென்று எனக்குப் புரியவில்லை. ஆனால் இப்போது அந்தக் காரணம் தெரியும். நாட்குறிப்பில் இது பற்றிய பதிவைப் பாருங்கள்: லக்னோ 8.3.37. கைலாஷ்நாத் கவுல் என்ற இளம் இந்து, மண்ணியல் மாணவன் என்னோடு ஆப்கன் வர விரும்புகிறான். இளைஞன், நாகரிக மானவன், அறிவாளி. ஆனால் நான் ராஜத்துரோக எண்ணங்கள் உள்ள இருவரை மூன்றுமாதம் அல்லும்பகலும் எல்லா நாட்களும் சமாளிக்க முடியுமா என்பதுதான் கொஞ்சம் சந்தேகம். சாலீம் ஒரு தேர்ந்த ராஜதுரோக சிந்தையன். பொதுவுடமைவாதி. கவுலும் அப்படியே. (அதுவும் ஜவஹர்லால் நேருவின் மனைவியின் சகோதரன்) இது வினையாய் முடியலாம்."

காபூல் செல்ல பெஷாவரில் ஒரு திறந்த பழைய லொடலொடா செவர்லே ஒன்றை அமர்த்திக்கொண்டோம். கூடாரம், முகாம் சாமான்கள், மாதிரிப்பெட்டிகள், சாமான்கள், சொந்தசாமான்கள் எல்லாவற்றையும் அதில் திணித்தோம். சீக்கிய ஒட்டுநருடன் கர்னலும் நானும் முன்னால் அமர்ந்துகொண்டோம். பிள்ளை, டைசன், பட்டாணி, வண்டி கழுவுபவன், இரண்டொரு ஊர்சுற்றிகள் ஆகியோர் பின்னால் சாமான்களுடன் அமர்ந்தனர். அது ஒரு ஏப்ரல் துவக்கம். குளிர்காலப்பனி உருகத்துவங்கிய காலம். தாரிடாத பனிச்சேறு மெழுகிய மலைச்சாலை. ஏராளமான கொண்டை ஊசி வளைவுகள், நூற்றுக்கணக்கான மீட்டர் செங்குத்துச்சரிவுகள். சர்தார்ஜி ஒரு அருமையான ஓட்டுநர். முனைகளில் வேகமாகத் திரும்புவதில் சாகசமான ஆள், சறுக்கும் வளைவுகளிலும் வண்டியை சுழற்றி ஓட்டினார். எச்சரிக்கைகளை கண்டுகொள்ளவேயில்லை. நாங்கள் கையைப் பிசைந்துகொண்டு மயிர்க்கூச்செரிய அமர்ந் திருந்தோம். காபூல் போகுமுன்பே இருட்டிவிட்டது. நடுங்கிப் போயிருந்தாலும், ஒருவழியாக முடிந்தது என்ற நிம்மதி. கைபர் கணவாய் வழியே ஜலாலாபாத் போய் மேலே காபூல் போக இரண்டு நாளாயிற்று. காபூலில் பிரிட்டிஷ் அதிகாரி கர்னல் சர். கெர் ப்ரேசர் டைட்லரின் தயவில் ஆடம்பரமான லொகேஷன் மாளிகையில் தங்கினோம். (அது இந்திய அரசு செலவில் கட்டப்பட்ட ஒரு கட்டிடமாகும்) அந்தக் காலகட்டத்தில் உலகிலேயே கம்பீரமான

கட்டிடங்களில் அதுவும் ஒன்று. (எங்கள் சாம்ராஜ்யத்தின் பிடிப்பை எடுத்துக்காட்டித்தான், கேலிக்கை!) இன்னமும் அந்த நட்சத்திர சர்வதேச ஓட்டல் என்றாலும்கூட அது அலங்கோலப்பட்டிருந்தது. காபூலுக்கு வடபகுதியிலுள்ள ஆப்கன் பகுதி முழுவதிலுமாக எங்கள் வொர்த் ஆய்வு எட்டுமாதங்கள் பிடித்தது. ஓக்சஸ் நதியை இடைமறித்தது. அதுதான் சோவியத் ஆப்கன் எல்லை. அது நாதிர்ஷா காலம். அதாவது சீர்திருத்தவாதி அமானுல்லாவை அகற்றிவிட்டு அரசைப் பிடித்த பிரசித்தி பெற்ற பச்சா-ஏ-சக்கா என்ற கொள்ளைக்காரனை அகற்றிவிட்டு நாதிர்ஷா பொறுப்பேற்றிருந்தார். ஆப்கன் அரசு எங்களை விருந்தோம்பி ஒத்துழைப்பும் தந்தது. 'விருந்தோம்பி' என்று அலுவலர் ஒருவரையே நியமித்தது. அவர் செழித்த உடல் கொண்ட ஒரு உல்லாசி. எங்களுடனே இருந்தார். அரசு நடைமுறை சம்பந்தப்பட்ட, சம்பந்தப்படாத எல்லா சிக்கல் களையும் தீர்த்து வைப்பது அவர் கடமை. உள்ளூர் உதவி, தேவைகளை கவனித்தல், ஜொபட் பகுதிகளில் நாங்கள் சுதந்திரமாக நடமாட தடையற்ற உரிமை ஆகியவையும் அவர் பொறுப்பு. பிற்பாடு கர்னல் வெகு அழகாக சொன்னது: "இத்தனை கடமைகளையும் அந்த அதிகாரி சோம்பேறித்தனமான திறமையுடன் நிறை வேற்றினார்."

சாம்ராஜ்ய செருக்கு உச்சத்திலிருந்த நாட்களில் இருந்த சராசரி ஆங்கிலேயர் பற்றி என் அனுபவத்தைச் சொல்வதானால், ஒரே ஒருபடி மேலே இருப்பவன் என்றாலும் அவனை மிரட்டுமோ சண்டியர்கள் அவர்கள். பொதுவிதியாக இந்தியர் அனைவருமே பயந்தவர்கள், பணிந்தவர்கள்; மிரட்டலுக்கு தம்மை ஒப்புக் கொடுப்பவர்கள். பிரிட்டிஷாரின் ஒரு விசித்திர சுபாவம் என்னவென்றால் நீங்கள் அந்த சண்டியரை நேர்கொண்டு எதிர்த்துத் தட்டினால் உங்களை மதிப்பார்கள். எனக்கும் அப்படித்தான். கர்னலுக்கும் அதேதான். அவர் வரலாற்றை எழுதியவர்களில் ஒருவர் அவரை "உடல்பலமிக்கவர், வன்முறையாளர், இரக்கமற்றவர்" என்று குறிப்பிடுகிறார். நல்லவேளையாக இது உண்மையின் ஒரு பகுதிதான். எப்படியோ, பல நற்பண்புகளைக் கொண்டிருந்தபோதும், அவரது ஒரு பகுதியாக தெளிவான சண்டியர்தனம் இருக்கவே செய்தது. அறிவுக்கொவ்வாத அந்த முரட்டுத்தனம் சமயத்தில் மிருக வெறியாகவேகூட ஆவதுண்டு. பிள்ளை தனது எல்லையற்ற பணியும் தன்மையால் கர்னலுக்கு சரியான ஒரு எதிரீடாக இருந்தார். கர்னலிடம் வெளிப்படையான ஒரு நடுக்கம் அவருக்கு இருந்து கொண்டேயிருந்தது. ஏனெனில் கர்னலின் கருத்துப்படி

'பிள்ளையால் எதையுமே .சரியாக, எப்படி செய்யவேண்டுமோ அப்படி செய்யமுடியாது.' நிலைமை மோசமாகும்போது நான் குறுக்கிடுவது அடிக்கடி நிகழ்வாயிற்று. (கர்னலின் நாட்குறிப்பில், என்னைப் பற்றியும் அதே கணிப்புதான் என்று பிறகு அறிந்தேன்) கர்னல் தம்முடன் இரண்டு சிறு பச்சை கேன்வாஸ் கூடாரங்கள் கொண்டுவந்திருந்தார். நீர் புகாத அந்த வெல்ஸ்டன் கூடாரங்கள் பல ஆண்டுகள் கென்யாவில் அவர் பயன்படுத்தியவை; அவருக்குப் பிரியமானவை. அந்த கான்வாஸைக் கொண்டு கூடாரம் அமைக்கவோ, கூடாரத்தைப் பிரிக்கவோகூட அவர் வேறு யாரையும் அனுமதிக்கமாட்டார். அவற்றின்மீது அவ்வளவு பிரியம். ஒருநாள் கனத்த மழைக்குப்பிறகு பின்மாலைப் பொழுதில் வழுக்கும் சாலையில் பறக்கும் சர்தார் ஓட்டிவந்த நமது வண்டி சறுக்கி கவிழ்ந்துவிட காரின் மேலிருந்த சாமான்கள் அனைத்தும் அந்த வேகத்தில் சாலையோரக் கால்வாயில் விழுந்துவிட்டன. நாங்கள் ஒரு வழியாக சமாளித்து எழுந்ததும் அவற்றையெல்லாம் தண்ணீரிலிருந்து தேடி எடுக்க வேண்டியதாயிற்று. அவற்றில் இந்த கேன்வாஸ்களும் அடக்கம். அவை முழுக்க நனைந்துவிட்டன. முன்னிரவில் உதவிக்கு ஆள் கிடைக்காததால் அண்மையில் இருந்த புல்வெளியில் தற்காலிகமாக தங்குவதற்கு முடிவு செய்ய வேண்டியதாயிற்று. கான்வாஸ்களைக் கொண்டு கூடாரமும் அடித்தாயிற்று. இரவெல்லாம் தூறல் இருந்ததால் கான்வாஸ்கள் இன்னும் ஈரமாகிப்போயின. இரண்டு மைல் தொலைவிலிருந்த கிராமத்துக்குப்போய் ஆள்பிடித்து வருவதற்காக விடியலிலேயே கிளம்பிப்போன 'விருந்தோம்பி' அதிகாரி கொண்ர்ந்த ஆட்கள் காரை நிமிர்த்திவிட்டார்கள். அடுத்த விருந்தினர் மாளிகைக்கு நாங்கள் போனபோது காலையிளம் பரிதியின் கிரணங்கள் வீசும் 9 மணி. ஆக அவற்றை விரிக்கும் தேவை எழவில்லை. கர்னலும் நானும் இடத்தை சுற்றிப்பார்க்கவும், கிடைத்ததை பிடிக்கவும் உடனே கிளம்பிவிட்டோம். பிள்ளையும் பிறரும் கூடாரம் அமைக்க வேண்டியதென்று அவர்களை விட்டு விட்டோம். இரண்டுமணி நேரம் கழித்து நாங்கள் திரும்பியபோது கர்னல் தனது ஆசையான கான்வாஸ்கள் பிரிக்கப்பட்டு சாய்ந்து கொண்டிருப்பதைப் பார்த்தார். காலைவேளையில் கிடைத்த ஏமாற்றமோ, அவசரத்தில் செய்த காலை உணவு வயிற்றில் குறும்பு செய்ததா என்று என்னால் சொல்ல முடியாது—ஆனால் கூடாரத்தைப் பார்த்ததுதான் தாமதம்—மூர்க்கமானதொரு வெறி அவருள் மூண்டெழுந்தது.

பிள்ளையை அழைத்து காட்டுக்கத்தலாக கத்த ஆரம்பித்து

விட்டார் கர்னல். "என் கூடாரங்களை எடுத்து யார் இப்படி கன்னா பின்னா வேலை செய்யச் சொன்னது? நான் சொல்லாமல் யார் அதைத் தொடச்சொன்னது?" இன்னபிற, இன்னபிற! அசாதாரண மான, நியாயமற்ற இந்த சண்டியர் பாய்ச்சலை மௌனமான பார்வையாளனாகக் கண்டு கொண்டிருக்க என்னால் முடியவில்லை. அச்சத்தில் ஊமையாகி நடுங்கிய அப்பாவி பிள்ளைக்காக வாதாடுவது கடமை எனத் தோன்றியது. கர்னல் நடந்துகொள்வதில் கொஞ்சம்கூட அர்த்தமுமில்லை நியாயமுமில்லை என்றேன். பிள்ளையின் இடத்தில் நானோ வேறுயாரோ இருந்திருந்தாலும் அறிவுள்ளவன் பிள்ளை செய்ததுபோலன்றி பிறிதெதுவும் செய்திருக்க முடியாது என்று சொன்னேன். "ஈரம் சொட்டிய நிலையிலேயே இரண்டு கான்வாஸ்களையும் மடிக்க வேண்டியிருந்த அவசரம் அப்போது. இப்போது அவை உலர்வதற்கு ஏற்ப சூரிய வெயில். முகாமில் உட்கார்ந்துகொண்டு, அவற்றைக் காயப்போடுவோம் என்ற அறிவில்லாமல் பிள்ளை சும்மா உட்கார்ந்து இருந்திருந்தால் இப்படி செய்யாததற்காக பிள்ளைமீது கர்னல் பாய்ந்தால் அது அறிவுடைமையாகும்-நியாயமாகும். ஆக, பிள்ளயின் பிழை என்ன? அவரைப் பார்த்து கத்துவதில் என்ன நியாயம்?" என்றேன். என் குறுக்கீட்டுக்கும் கர்னல் உறுமினார், சீறினார். விரைவில் நிலைமையின் அசட்டுத்தனத்தை உணர்ந்து அமைதியானார்.

எங்கள் தினசரி வேலைத்திட்டம் காலை சுமார் ஏழரைக்கு நாங்கள் காலை உணவை முடித்ததும் தொடங்கும். நானும் கர்னலும் இருவேறு திசைகளில் உதவிக்கு ஆளுக்கொரு உள்ளூர் வேட்டைக் காரருடன் கிளம்புவோம். சேகரிப்பும் பறவைகளை கவனிப்பதும் நண்பகல்வரை போகும். திரும்பியதும் கொண்டு வந்தவற்றை இனம் பிரிப்போம். அவற்றில் உள்ள பேன் போன்ற சின்னஞ்சிறு பூச்சிகள் அகற்றப்படும். இந்த ஆராய்ச்சியில் கர்னலுக்கு பறவைகள் தவிர இன்னொரு ஆர்வமும் இருந்தது. அது சிறகுப் பேன்களை ஆராய்வதாகும். நாமறிந்துள்ள பேன் வகைகள்போல் இவை இரத்தம் குடிப்பதில்லை. அவை பறவைகளின் உடலிலேயே குடியிருந்து வீணாய்ப்போகும் சிறகுகளை இரையாகக் கொண்டு வாழும். அவற்றில் பல இனமுண்டு. மைனாவில் வாழும் இனம் மற்ற பறவைகளில் இராது. ஒவ்வொரு இனமும் அதற்கென்று ஒரு பறவை யினம் தவிர பிற பறவைகளை நாடாது. ஆக, ஒரேவித சிறகுப் பேன்கள் இருவிதப் பறவைகளில் காணப்பட்டால் அந்த இரு இனத்துக்குள்ளும் பிறப்புத் தொடர்பில் ஒரு ஒற்றுமை இருக்கும்.

இவ்விதம் பறவைகளை அறியவும் பறவையின ஆய்வுக்கும் இந்தச் சிறகுப் பேன்களும் ஒரு பேருதவிக் காரணிகளாகும்.

முகாமுக்குள் எங்கள் பணி பகலுணவுக்குப் பின் துவங்கி இருட்டிய பிறகும் தொடரும். ஒரு வெள்ளை மஸ்லின் துணியால் பறவையை சுற்றி, இறுக்க மூடக்கூடிய ஒரு பெட்டியில் போட்டு விடுவோம். கூடவே குளோரோபாமில் (மயக்கமருந்து) நனைத்த பஞ்சும் கொஞ்சம் போடுவோம். சில நிமிடங்கள் கழித்து பறவையை வெளியே எடுப்போம். லினன் துணியிலிருந்து சிறு பூச்சிகளை பறவை உடலிலிருந்து உதறுவோம். ஆல்கஹால் கொண்ட சின்னஞ்சிறு குப்பிகளில் அடைத்துவிடுவோம். இதுதான் சிறகுப்பேன் பொறுக்கும் விதம்! பிறகு குப்பிகளில் நாள், இடம், எந்தப் பறவையின் சிறகில் கிடைத்தது போன்ற விபரங்களை குப்பிகளில் எழுதி ஒட்டிவிடுவோம். இதில் கர்னல் ஈடுபட்டிருக்கையில், நான் பறவைகளின் எடை, உடல் உறுப்புகளின் வண்ணம், சிறகமைப்பு ஆகியவற்றைக் குறிப்பேன். தோலுரிக்கப்பட்ட பறவைகளை அறுத்து பாலினம், இரைப்பை, உணவுமிச்சம், உள்ளுறை சிற்றுயிர்கள் ஆகியவற்றை ஆராய்வேன். தன் பணி முடிந்ததும் கர்னல் தோல் உரிப்பவர்களுடன் சேர்ந்து கொள்வார். என் பணி முடிந்ததும் நான் அன்றைய ஆய்வு பற்றிய எனது குறிப்புகளை எழுதத் துவங்குவேன். கர்னலுக்கே உரிய தனிக் குணத்தைக்காட்டும் ஒரு சுவையான நிகழ்ச்சியை இங்கு குறிப்பிடவேண்டும். வேலை ஆரம்பிக்கும் முன்பு நான் கொண்டுவந்திருந்த கருவிகளையும் பிற உதவிப் பொருட்களையும் கொண்ட பட்டியலை கவனமாகப் படித்து விட்டு, இரண்டு பெட்ரோமாக்ஸ் விளக்குகள் என்று பார்த்ததும் அவர் நாற்பதாண்டுகளுக்கு மேலாக லாந்தர் விளக்கிலேயே வேலை செய்திருப்பதையும், இப்படியும் ஆட்கள் சொகுசுக்காரர்களாக இருக்கிறார்களே என்றும் கேலியாகப் பேசி நகைத்தார். உண்மையிலேயே அவை எனக்காகத்தான் என்றும் என்னால் வெளிச்சக்குறைவான சூழலில் அவையின்றி வேலை செய்ய முடியாதென்றும் கூறினேன். அதற்கும் அவர் கிண்டலாக பதில் சொன்னார். அத்தோடு அந்தப் பேச்சு முடிந்தது. எங்கள் முதல் முகாமில் வேலை துவங்கிய அன்று பெட்ரோமாக்ஸை ஏற்றினால், அதன் பிறகுதான் மாலை சேகரிப்பை முடிந்துவந்த நான் கண்ட அற்புதக்காட்சி என்ன தெரியுமா? இரண்டு பக்கமும் இரண்டு பெட்ரோமாக்ஸ் நிற்க, நடுவில் உட்கார்ந்து கொண்டு வேலைசெய்து கொண்டிருந்தது கர்னல்தான்! அவற்றின் ஒளி வெள்ளத்தை அவர் அனுபவித்துக் கொண்டுதான் இருந்தாரே தவிர, அவருக்குப்

பழகிப்போயிருந்த பழைய லாந்தர் விளக்குகள் இல்லாத குறை பாதித்ததாக தெரியவில்லை. அதுவே பின்னர் நடைமுறையாய் ஆகிப்போனது. ஆராய்ச்சி முடியும்வரை நான் இருட்டியபிறகு வேலை செய்வதென்றால் விளக்குக்குப் பக்கத்தில்போய் நெருக்கிக் கொண்டு உட்கார்ந்து கொள்ளவேண்டும். ஏனெனில், அவரும் விளக்குகளும்தான் பிரிக்க முடியாதவையாக ஆகிவிட்டனவே!

எங்கள் குழுவில் ஒருவர் இந்து, ஒருவர் சீக்கியர், இருவர் கிறித்தவர், மூவர் இஸ்லாமியர் (இஸ்லாமியர்களுக்குள்ளும் இரு பிரிவுகள்). பலபேர் நாங்கள் யாரும் உயிரோடு திரும்பமாட்டோம். அதிலும் முஸ்லீம் அல்லாதவர்கள் கட்டாயம் திரும்பமாட்டார்கள் என்று ஆருடம் சொல்லியிருந்தனர். ஆப்கானியர்கள் அவ்வளவு மதவெறி பிடித்தவர்களாம். அப்புறம் நாடு முழுவதும் ஒரே கொள்ளையர், கொலைகாரர்களின் ராஜ்யம்தானாம். எங்களைக் கொள்ளையடித்து விடுவார்கள், கொலை செய்துவிடுவார்கள் என்றெல்லாம் கணிப்புகள். ஆனால் அங்கிருந்த காலம் முழுவதிலும் ஒருமுறைகூட யாரும் எங்கள் மதம் என்ன என்று கேட்கவில்லை. அங்கு கிராமத்து மக்கள் மிகவும் நேசபாவத்தோடு விருந் தோம்பியதையே கண்டோம். எங்கள் களப்பணிகளின்போது வயலில் வேலைசெய்கிறவர்கள் ஓடோடிவந்து நீங்கள் எங்கள் அன்புக்குரிய விருந்தினர்கள். வீட்டுக்கு வந்து தேநீர் குடித்து விட்டுதான் போகவேண்டும் என்று வற்புறுத்துவது அடிக்கடி நிகழ்வாயிற்று. அத்தகைய நேரங்களில் எங்கள் திறந்த வண்டியை சொந்த சாமான்களுடனும், சமையல் சாமான்களோடும் ஆயுதத் தளவாடங்களுடனும் சாலை ஓரத்தில் நிறுத்தி வைத்திருப்போம். எதுவுமே காணாமல் போனதுமில்லை; ஈக்களைத் தவிர யாரும் எந்தத் தொந்தரவும் செய்ததுமில்லை! ஆருடம் கூறியவர்களையும் அவர்தம் ஆருடம் பற்றியும் என்ன சொல்வது? அந்த நலம் விரும்பிகள் ஒரு சமயம் எல்லைப்புறத்தில் வாழும் ஆதிவாசிகளை எண்ணிச் சொன்னார்களோ, என்னவோ?

பயணத்திலேயே காலம் மிகவும் செலவானது. காபூலிலிருந்து வடக்குநோக்கிச் சென்றோம். ஏழெட்டு இடங்களில் ஒவ்வொன்றிலும் 5-6 நாள். பமியான் நகரில் ஒரு ஆடம்பரமான விருந்தினர் மாளிகை இருந்தது. மற்றபடி சரியான விடுதிகள் இல்லாததால் முகாம்களிலும் அதைவிட அதிக சமயங்களில் கொட்டகைகளிலும் தங்கினோம். பமியான் ஒரு புராதன பௌத்த நாகரிக மையம். வரலாற்று முக்கியத் துவமும் தொல்பொருள் முக்கியத்துவமும் வாய்ந்த நகர். இயற்கையானதோர் மலையைக் குடைந்து உருவாக்கப்பட்ட

ஐம்பதடிக்குக் குறையாத உயரம்கொண்ட புத்தர்சிலை ஒன்று அங்குள்ளது. வெளி நாட்டு சுற்றுலாப் பயணிகள் வருகையும் அதிகம். தங்குமிடத்தைப் பொறுத்தவரை விருந்தோம்பிய அதிகாரி மிகவும் உதவியாயிருந்தார். தேவைப்பட்டால், அடுத்த ஊருக்கு முன்னதாகவே போய் எங்களுக்காக ஏற்பாடு செய்யவும் தவறுவதில்லை. இரண்டு முகாம்களுக்கிடையான தகவல் தொடர்பு காவல் நிலையத்தொலைபேசிகள், அவர்களது நகரெல்லைத் தொலைபேசிகள் அல்லது பிற அரசு அலுவலகத் தொலைபேசிகள் வழியே நடைபெற்றது. இந்த அலுவலகங்கள் யாவும் தம்முள்ளும் 'தொடர்பு மையமான' காபூலுடனும் மிகச் சிறப்பாக இணைக்கப் பட்டிருந்தன. எனவே அவர் முன்கூட்டியே தகவல் சொல்லி எங்கள் வசதிகளுக்கான ஏற்பாடுகளை எளிதில் செய்ய முடிந்தது.

வடக்கு ஆப்கானிஸ்தானில் தனகௌரி சமவெளியில்தான் ஃபெசன்ட் எனும் (மயில்போன்றதோர்) பறவையை முதன்முதலில் கண்டோம். மத்திய ஆசியாதான் அதன் தாயகம். எனவே அதை அதன் இயல்பான சூழலில் காண்பது இதுவே முதல்முறை. அதன் இயல்பான வாழிடம் சதுப்புநில நாணல் காடுகளாகவும், பறந்து அமர மரங்களே இல்லாத இடமாகவும் இருந்தது எனக்கு வியப் பளித்தது. ஸ்நோகாக், சீசிக்குயில் போன்ற, அதுவரை என் வாழ்வில் கண்டிராத பலவிதப் பறவைகளை அறிய முடிந்ததென்ற வகையில் ஆப்கன் ஆய்வு எனக்கு சிறப்பான முக்கியத்துவமுள்ளதாயிற்று. நாங்கள் ஆப்கானிஸ்தானில் இருந்த காலம் முழுதும் வடக்கு நோக்கிய வசந்தகால இடம்பெயர்வு நடந்து கொண்டேயிருந்தது தான் என்னைப் பொறுத்தவரை மிகமிகக் குறிப்பிடத்தக்கதா யிருந்தது. செங்கால் நாரைகள் (Falco Vespertinus), லெஸ்ஸர் கெஸ்ட்ரல் (Falco Naumanni) ஆகியவை ஆப்பிரிக்காவிலிருந்து கிழக் காசியாவுக்கும், இந்தியசமவெளிகளிலிருந்து நம்பமுடியாத எண்ணிக்கையில் ரோசி பாஸ்டர்கள் தம் கூடுகட்டி வாழுமிடமான துருக்கிஸ்தானுக்கும் புலம் பெயர்ந்தவண்ணம் இருந்தன. முக்கியமான புலம்பெயர்தலை தனகௌரியில் கண்டோம். ஆப்கனில் சாச்சி எனப்படும் இப்பறவைகள் பல்லாயிரக்கணக்கில் மே மாதம் 4 முதல் 10 வரை இங்கு இடைத்தங்கலாக இருந்து இரைதேடி இளைப்பாறின. தெற்கிலிருந்து பறவைகள் வந்தவண்ண மிருந்ததால் இவற்றின் எண்ணிக்கையும் அதிகரித்துக் கொண்டே இருந்தது. ஆறாம் தேதி மட்டும் 7 மணி நேரத்தில் 15,400 பறவைகள் வந்ததாக கர்னல் மதிப்பிட்டார். தனகௌரி சமவெளியில் மே முதல் வாரத்தில் 5 லட்சம் பாஸ்டர்கள் இருந்திருக்க வேண்டும்.

பெரும்பாலானவை சதுப்பு நாணல்களில் வசித்திருக்கும். அந்த சமயத்தில் பயிர்விளைச்சல் ஏதுமில்லாததால் வண்டுகளும் பிற பூச்சிகளுமே உணவாக இருந்திருக்க வேண்டும். வேறு 'சட்ட பூர்வ' மாமிச உணவு குறைவாக இருந்தால்கூட ஆப்கன் மக்கள் இப்பறவைகளுக்கு ஊறு விளைவிப்பதில்லை. ஏனெனில் சாச்சிகள் வேளாண்மைக்கு உதவுகின்றன என்று அவர்கள் அறிந்திருந்தனர். அங்கு ஏப்ரல் 24 அன்று சதுப்புநில ஹாரியர்கள் ஏராள எண்ணிக்கையில் வந்து சேர்ந்ததும் கண்கொள்ளாக்காட்சி விருந்தாகும் (Circus Aerugi Nosus). இவை அத்தனையும் ஆண் பறவைகள். மாலை 6 மணிக்கு சாரைசாரையாக தெற்கு, தென்கிழக்கு திசையிலிருந்து வரலாயின—அதாவது இந்திய துணைக்கண்டத்திலிருந்து. உழுது கிடந்த ஒரு வயலில் வந்து தரை யிறங்கி இளைப்பாறியதைப் பார்த்தால் ஏகமாக களைத்துப் போயிருந்தது புரிந்தது. அறுபத்தாறு வரை எண்ணினோம். அதற்குமேல் இருள் கண்ணை மறைக்கத் துவங்கிவிட்டது. இந்தியாவில் ஒரே நாளில் ஒன்று அல்லது இரண்டுதான் பார்க்க முடியும். எனவே ஒட்டுமொத்தமாக இத்தனை—அதுவும் அத்தனையும் ஆண் பறவைகள்—இடம் பெயர்வதைக் கண்டது மறக்க முடியாத பிரமிப்பான அனுபவமாகும். அதிகாலையிலே அவற்றைக் காணக்கிடைக்கவில்லை. வெள்ளி முளைக்குமுன்பே புறப் பட்டிருக்க வேண்டும். இரண்டாம் நாள் மாலையும் அதேநேரம் அதே திசையிலிருந்து அதே வயலில் சுமார் பத்து தரையிறங்கின. அதேபோல் விடியும்போது அவற்றின் அடையாளமேயில்லை.

இன்னும் இரண்டு சம்பவங்களைக் கூறி ஆப்கன் பயண விபரங்களை நிறைவு செய்யலாம். 'விருந்தோம்பி' ஏற்பாடு செய் திருந்த உதவியாளுடன் காலையில் வழக்கம்போல் கிளம்பினேன். செங்குத்தான மலைமுகப்பொன்றில் 'மலை நுதாட்ச்' பறவையின் கூடொன்று தென்பட்டது. அது எனக்குப் புதிது. புகைப்படம் எடுக்க வசதியான அளவு நெருங்கி கூட்டை படமெடுக்க ஏற்பாடு செய்து கொண்டு பொறுமையுடன் நெடுநேரம் காத்திருந்தேன். பறவை வந்த நேரத்தில் புகைப்படக் கருவிக்கு நேரே வந்து நின்றுகொண்டு இது தடைசெய்யப்பட்ட பகுதி; இங்கு படமெடுக்கக் கூடாது என்றான் அந்த ஆள். கோபத்தோடு அவனைத் தள்ளிவிட்டுவிட்டு படமெடுத்தே விட்டேன். ஆனாலும் அந்த ஆளின் நடவடிக்கை அசாதாரணமாகப் பட்டதால் விருந்தோம்பியிடம் புகார் செய்தேன். மௌனமாக கேட்டுக் கொண்டிருந்த அவரும் எரிச்சலடைந்தார். நான் உருதுவில் பேசியதால் பெர்ஷியன் மட்டுமே அறிந்திருந்த உதவியாள் எதுவும்

புரிந்துகொள்ளவில்லை. நான் சொல்லிமுடித்ததும் அதிகாரி தாளும் பென்சிலும் கேட்டார். ஏதும்பேசாது இரண்டுவரி எழுதி, அதை மடித்து, காவல் நிலையத்தில் கொண்டுபோய் கொடுக்குமாறு அந்த ஆளையே அனுப்பினார். அரைமணிநேரத்தில் அலறியடித்துக் கொண்டு திரும்பி வந்து அந்த ஆள் என் காலில் விழுந்து மன்னிப்பு கேட்டார். முதலில் எனக்கு ஒன்றுமே புரிபடவில்லை. "இந்த ஆள் நம் விருந்தினர்களை அவமதித்துவிட்டான். செம்மையாக மூன்று தரவும்" என்று 'விருந்தோம்பி' அதிகாரி சீட்டில் எழுதி அனுப்பி யிருந்தார் என்று பிறகு தெரிந்தபோதுதான் புரிந்தது. தேம்பியபடி மன்னிப்புக்கேட்ட அந்த மடையன் மசூதியின் புனிதம் கெடக் கூடாது என்றுதான் தான் காப்பாற்ற நினைத்ததாகச் சொன்னான். அந்தத் திக்கில் அரைமைலுக்கு அப்பால் ஒரு மசூதி இருந்தது போலிருக்கிறது. அது என் கண்ணில்படக்கூட இல்லை.

அப்புறம் ஒருநாள் ஹைபாக் நகரில் முழு விருந்தினர் இல்லமும் மிகமோசமாக நாற்றமெடுத்தது. எலிகள் செத்துக் கிடக்கிறதென்று நினைத்தோம். தரைவிரிப்புகளின் கீழேயும், அறை மூலைகளிலும், அலமாரிகளுக்குப் பின்னாலும் எலிகள் இருக்கவே முடியாத இடங்கள் உட்பட இல்லம் முழுவதும் தேடினோம். செத்த எலி ஒன்றுகூடக் காணோம். நாற்றமென்னவோ தாங்கமுடியவில்லை. அப்போதுதான் எனக்கு மூன்றுநான்கு நாள் முன்பு ஒரு பறவையின் மாதிரி அதிகப்படியாக ஆகிவிட்டதும் கம்பிலிருந்து அதை கர்னல் அவிழ்த்துவிட்டு தன் மேலாடையின் பைக்குள் போட்டுவைத்ததும் திடீரென்று நினைவு வந்தது. நான் அதை நினைவூட்ட, கர்னல் அலட்சியம் செய்துவிட்டார். வீடு முழுவதும் மீண்டும் தேடோ தேடென்று தேடல்தான்! இரண்டு நாள் கழித்து (நாங்கள் அடிக்கடி உடைமாற்றுவதில்லை) அந்தச் சட்டையை அணியும்பொழுது மார்புப்பக்கம் ஏதோ சொதசொத என்றிருந்தது. நீலக்கழுத்து குருவி சட்டைப்பையில் "பாடமாகி"க் கொண்டிருந்திருக்கிறது. இப்போது உச்சக்கட்டம். அசடு வழிய என்முன் வந்து "சலீம்! நீ சொன்னது சரிதான்! இதோ இருக்கிறது அது" என்று கூறி நாறிக் கொண்டிருந்த அந்தக் குருவியுடலை பையிலிருந்து எடுத்தார். அதுவரை இந்த மனிதர்தான் பொழுது முழுதும் காவல்காரனையும் மற்றமற்ற பணியாளர்களையும் மற்றும் அத்தனைபேரையும் திட்டிக்கொண்டும் சபித்துக்கொண்டும் வீட்டையே தலைகீழாக புரட்ட வைத்துக் கொண்டும் இருந்தவர்!

12

# கைலாஸ் மானசரோவர் நோக்கி ஒரு பறவையியல் யாத்திரை–1945

டேராடூனில் வாழ்ந்துகொண்டிருக்கையில் மேற்கு இமாலயப் பகுதிகளில் மலையேறும் வாய்ப்புகளை ஏராளமாக அனுபவித்தேன். குறிப்பாக கஷ்மீர், இமாசலப்பிரதேசம், கர்வால்-குமாவோன் பகுதிகளில் பெரும்பாலும் உற்சாகமூட்டும் ஆர்தர் புட் என்பவரது சகாவாக அவரது தலைமையில் சென்ற சமயங்கள் பலவாகும். திரு. புட், கார்ன்வால் பகுதியிலும் ஸ்விட்சர்லாந்தின் ஆல்ப்ஸ் மலைகளிலும் பலமுறை மலைநடைப்பயணம் சென்ற அனுபவமும், ஆர்வமும் மிக்கவர். டூன் பள்ளியின் முதல் தலைமையாசிரியராக இருந்தவர். எனவே பள்ளியின் கோடை விடுமுறைகளிலெல்லாம் இப்படிக் கிளம்பிவிடுவது வாடிக்கை. சிகரங்களுக்கு செல்வ தென்றால் எனக்கு தலைசுற்றும். எனவே நான் சென்ற உயர மெல்லாம், மலையேறும் பயணம் என்று சிறப்பாக சொல்லிக் கொள்ளும் சிறப்புக்குரியன அல்ல. பத்தாயிரம் பன்னீராயிரம் அடி உயரத்துக்கு மேல் நான் போனதில்லை. ஆனால் அதிலேயும் எனக்கு இமாலய சுற்றுப்புறச் சூழல்பற்றிய அடிப்படையான ஒரு ஞானம் கிடைத்தது.

மலையேறும் அனுபவத்தில் ஒரு இயற்கை மாணவனுக்கு மிகமிக விறுவிறுப்பான அம்சம், மேற்கு இமாலயப்பகுதியில் மேலேற மேலேற படிப்படியாக உயிரினங்களில் தோன்றும் விதவிதமான மாறுதல்கள்தான். உயரத்தைப் பொறுத்து மண்டலங்களாகப் பிரிக்கிறோம். இம்மண்டலங்களை வானிலை அம்சங்களைக்கொண்டு பிரித்தாலும் இவ்வாறே அமையும். நில இயல் பயில்வோர்க்கு இவை மிகவும் சுவையான கல்வியாகும். ஒவ்வொரு மண்டலமும் தனக்கென தனித்தாவரங்களும், தனிப்பறவைகள், மிருகங்களும் கொண்டிருக்கிறது. சில சமயங்களில் இம்மாறுதல் படிப்படியாக

இல்லாது உடனடியாக இருக்கும். காணப்படும் தாவரங்கள் பிற உயிர்கள் இவற்றைக் கொண்டே அளவுமானி இல்லாமலே கூர்மதி கொண்ட இயற்கையியல் மாணவன் இடத்தின் உயரத்தை துல்லியமாகக் கூறிவிட முடியும். கொஞ்சம் பயிற்சி தேவை அவ்வளவுதான். எனக்கு உண்மையில் மலையேறுவதில் உள்ள மகிழ்ச்சியில் இது ஒரு முக்கிய அம்சம். நேபாளம், சிக்கிம், பூடான், அருணாசலப்பிரதேசம் இவற்றுக்குக் கிழக்குப் பகுதியில் வானிலை மிகவும் ஈரக்காற்று கொண்டது. உயிரின மண்டலங்கள் ஒன்றை ஒன்று நெருக்கமாய்த் தொடர்ந்து தொலை நோக்குக்கண்ணாடியில் காண்பது போன்ற ஒரு அமைப்பு இங்கு காணப்படுகிறது. அடிவாரத்தில் அதிஉஷ்ணச் சூழலும் உச்சியிலே ஆர்க்டிக் குளிரும் இருக்கக் காணலாம். இமய மலைத்தொடரின் தென்பகுதியை அறிய அறிய இந்த மாபெரும் சுவரின் மறுபுறத்தைக்காணும் அவா அதிகரித்தது. ஹிட்லரின் சனியன்பிடித்த தடாலடி நடவடிக்கை களாலும், அதைத்தொடர்ந்து இரண்டாம் உலகப்போர் துவங்கி விட்டதாலும் 1939இல் திபெத் செல்வதாக இருந்ததைக் கைவிட நேரிட்டது. மாதங்களும் ஆண்டுகளும் உருண்டோடிய முறையில் அந்தப்போருக்கு முடிவே இருக்கப் போவதில்லையென்று தோன்றியது. எனவே போக்குவரத்திலும் பொருள்களைப் பெறுவதிலும் இருந்த சிரமங்களையும், போர் தன்னோடு கொணர்ந்த பிற சிக்கல்களையும் மீறி, இப்போதில்லையேல் எப்போதுமில்லை என்று எனக்குத் தோன்றலாயிற்று. அரசுத்துறை நண்பர்களும் உதவுவதாக் வாக்களிக்கவே மேற்கு திபெத் செல்ல ஒரு எளிய பயணத்திட்டம் வகுத்தேன். சட்டம் போன்ற தலைகொண்ட வாத்துகள், கருங்கழுத்து நாரைகள் போன்ற ஆர்வமூட்டும் பறவைகள் அப்பகுதிகளில் வாழ்வதாக் கவர்ச்சிகரமான செய்திகள் கிடைத்திருந்தன. இவையெல்லாம் இந்தியாவில் குளிர்காலத்தில் மட்டுமே காணப்படும். இவைபற்றியும் இவற்றின் சூழல்பற்றியும் நாம் அறிந்திருந்ததும் குறைவு. இவற்றில் குறிப்பிட்ட சில உயிரினங்களைப்பற்றி அறிய ஆவல் கொண்டிருந்தேன். நான் பிற்காலத்தில் குறிப்பிட்டதுபோல அது திருக்கைலாயகிரிக்கும் மானசரோவர் ஏரி தீர்த்தத்துக்குமானதோர் பறவையியல் புனித யாத்திரை என்று கூறுவது சரிதான்.

அல்மோரா வழியான பொதுவான புனிதயாத்திரை வழியையே நானும் தேர்ந்தெடுத்தேன். காரணம், அதுதான் லிபு ஏரிக்கணவாய்க்கு (16,750 அடி) அனைத்திலும் எளிய பாதை என்பதுமட்டுமல்ல, மே மாதத்தில் உறைபனி இல்லாத ஒரே பாதை

அதுதான் என்பதுமாகும். ஜூன் முடிவில் அல்லது ஜூலை மத்தியில்தான் ஆன்மீக யாத்திரை துவங்கும். சொல்லப்போனால் திரும்பும்போதும் லிபு ஏரியைக் கடந்துவரும் இதேவழிதான். ஏனெனில் ஜூலை துவக்கத்திலும் உறைபனிமூடாத வழி இவ்வழி ஒன்றுதான். சுமார் 5200அடி உயர அல்மோராவில் துவங்கும் சமயயாத்திரைப் பாதை மேலும் கீழுமாகப்போவது. சில சமயம் செங்குத்தாக மயங்கவைக்கும் வனாந்தரங்கள் தொடர்ந்து உயிரினக்கூட்டமைப்புகளைக் கொண்டு பனிப்படலங்கள் பார்வையில் மறைவில்லாமல் தெரிந்துகொண்டே இருக்கும் பகுதிகள். சராசரியாக ஒவ்வொன்றும் 13–14 கிலோமீட்டர் கொண்ட 15 பயணங்களின் பின் இந்தியப் பகுதியின் எல்லையான கர்பியாங் சிற்றூர் வரும். சுச்சா சிங் கேரா(ஐ.சி.எஸ்), மும்பை வழக்குரைஞரும் என் ஒன்றுவிட்ட சகோதரருமான சயீப் தயாப்ஜி, லோக்வான்தோ (இவரும் பறவையியலாளர்; உன்னதமான புகைப்படக்கலைஞர்; உலகப்போரில் ஜப்பான் ஆக்கிரமித்த ஷோனான் பகுதியிலிருந்து அகதியாக வந்துசேர்ந்திருந்த சிங்கப்பூர்காரர்) அமெரிக்காவிலிருந்து அப்போதுதான் திரும்பியிருந்த வான்-பௌதீக அறிஞரும் பறவை ஆர்வலருமான பிரீதம்சென் ஆக என்னைச்சேர்த்து குழுவில் ஐவர் இருந்தோம். திரு. கேர் பின்னாளில் 1965 அமைச்சரவைச் செயலாள ராக இருந்து ஓய்வுபெற்றார். சயீப் தியாப்ஜி தனக்கு உடலுறுதி என்று தானே செய்துகொண்ட சோதனை திருப்தியளிக்காமல் நின்று கொண்டார். கடைசிநேர வயிற்றுப்போக்கால் ஒதுங்கிக்கொண்டார். கேராவுக்கும் இப்படி ஏதோ தவிர்க்க முடியாத காரணம். ஆக, கடைசியில் பிரீதம்சென், நான் இருவர் மட்டும்தான் தேறினோம். அல்மோராவிலிருந்து 14.5.45 அன்று கிளம்பினோம். ஹிட்லரின் போரில் ஜெர்மனியின் முடிவான வீழ்ச்சியை பறைசாற்றுவதாக மலைப்புறம் முழுவதும் ஊரெல்லாம் சொக்கப்பனை கொளுத்தி இந்தச் செய்தியை கொண்டாடினார்கள். மகிழ்ச்சி வெள்ளத்தில் மக்கள் கொட்டி முழக்கி அதைக்கொண்டாட நாங்களும் பயணம் தொடர்ந்தோம். எங்கள் இருவருடன் ஏழு தோத்தியால்களும் ஒரு குமாவோன் கூலியாளும் வந்தனர். கூலியின் சுமையாக முகாமிட சாமான்கள், சொந்தப்பொருட்கள், உணவு (உணவென்றால் வறுத்தமாவு சாம்ப்பா எனப்படுவது). அப்புறம் பணியாட்களின் தலைவர், சமையல்காரர், உதவியாளர் எல்லாருமாக அல்மோராவில் அமர்த்திக்கொண்ட கேம் சிங் என்ற ஒரு இளம் குமாவோன் பகுதியின் ஆள். குமாவோன் கூலியாள் கேம்சிங்கின் கையாள். செம்மறியாட்டு மந்தையில் வெள்ளாடு தலைமை என்பதுபோல

இவர்தான் மற்ற கூலிகளுக்கு தலைவர்! இமயப் பகுதியில் மலையேறுவதில் இன்றிருக்கும் செலவு நிலையில் எனது நாட் குறிப்பின்படி ஒரு மணங்கு(40 கிலோ)க்கு மேல் சுமக்கும் ஒரு கூலியின் சம்பளம் மொத்தமாக நாளொன்றுக்கு மூன்றுரூபாய். இது நடக்கிற சமயத்துக்கு தங்கும்போது நாளைக்கு ரூபாய் இரண்டு. சாப்பாட்டு சாமான்களும் அதை சுமப்பதும் அவர் பொறுப்பு. இந்திய எல்லைச் சிற்றூரான 237 கிலோமீட்டர் தூரத்தை அடைய பதினைந்து நாள் பிடித்தது. கரணம் தப்பினால் மரணம் என்ற பல செங்குத்துச் சரிவுகள், ஆயிரம் அடி இருக்கும். தினம் இப்படி ஒரு சரிவு வழிநெடுக இருந்தது. சிறுபிள்ளையான நான் முட்டாள்தனமாக தேவையற்றவைகளையும் போட்டு நிரப்பி என் சாமான்களின் எடையைக் கூட்டிக்கொண்டேன். அதுவும் சேர்ந்து ஒவ்வொரு ஏற்றகத்தின்போதும் சிரமத்தை அதிகப்படுத்தியது.

ஒரு சம்பவம் தெள்ளத்தெளிய நினைவு வருகிறது. பாதையின் மிகக்கடுமையான பகுதிகளில் ஒன்று. தொடர்ந்து, பல நூறடி தூரம் செங்குத்தாக மேலே—பிறகு அதே அளவு அதே வகையில் கீழ்நோக்கி, மறுபடியும் மேலே பிறகு கீழே என்று அந்தப் பாதையானது போகும், போகும், முடிவேயில்லாமல் போகும். ரம்பத்தின் பற்கள் போன்ற இந்த அமைப்பில் அடிபாகம் ஒன்றில் முற்றிலும் களைத்துப் போய், அடுத்த ஏற்றத்துக்கு இடையில், சற்றே மூச்சுவிட்டுக்கொள்ள ஒரு பாறையில் தேவையற்ற என் சுமையை இறக்கி வைத்தேன். ஒரு ஆப்பிளை எடுத்தேன். என் பல்லாண்டுகால தோழனும் உணர்ச்சி பூர்வமானதோர் பாசத்துக்குரியதுமான நிக்கல் பிடிகொண்ட என் பேனாக்கத்தியை எடுத்து ஆப்பிளின் தோலை சீவ ஆரம்பத்தேன். சிறிது ஓய்வுக்குப்பின், பயணம் தொடர்ந்தது. கால்மைல் தூரம் சமதரை என்று சொல்லக்கூடிய மட்டத்தில் பாதை பிறகு மோசமான செங்குத்தான மேல்நோக்குச்சாலை சிகரத்தில் நின்று மூச்சுவிடக்கூட மறந்து உன்னதமான காட்சியின்பத்தை அனுப விக்கிறபோது தற்செயலாக பையில் கைவிட்டால் கத்தியைக் காணோம். சாமான்களையெல்லாம் கீழ்மேலாகப்பரட்டி சுத்தமாகத் தேடியும் கத்திதான் இல்லை. சரி, எங்கோ பாதையில் நழுவவிட்டு விட்டோம் என்று முடிவுசெய்துகொண்டு இழந்துவிட்ட 'நண்பனு'க் காக வருந்தினேன். ஆனால், திரும்பிப்போய்த் தேடுவதிலும் ஆர்வமில்லை. ஏதோ கொஞ்சம் ஓய்வெடுத்து விட்டு பயணத்தை தொடருமுன் மெல்ல என் கண்ணாடியை ஆப்பிள் சீவிய இடம் பக்கம் திருப்பினால் அரை மைல்தூரத்துக்கப்பால், நூறடி ஆழத்தில் அங்கே—ஓ என்ன சொல்வது! அந்த கத்தி அதே இடத்தில் காலைச்

சூரிய ஒளியிலே மின்னிக்கொண்டு கிடக்கக் கண்டேன்! காப்பாற்று காப்பாற்று என்று கூறுவதுபோலிருந்தது. அதற்கு ஆயிரம் சாபம் கொடுத்தேன். ஆனால், மனம்வந்து அதை அப்படியேகிட என்று விட்டுச்செல்லவும் மனம்கூடுதில்லையே; மோசமாக களைப்பூட்டும் சுவையற்ற "காப்பாற்றும்" முயற்சிதான். அன்றைய பயணத்தில் ஒரு மணிநேரத்துக்குமேல் தண்டமாகும். இருந்தும் கத்தியை எடுத்துக்கொன்டு வந்தே பயணம் தொடர்ந்தோம். அப்புறம் ஒரு 30 ஆண்டுகாலம் அது என்னுடனே இருந்தது. திருட்டுக்கு இரையாக வேண்டுமென்று அதற்கு விதி. அப்படித்தான் கடைசியாக நாங்கள் பிரிந்தோம்.

லாலா உக்ரசென் என்ற பழைய குடும்ப நண்பரின் மகன்தான் பிரீதம். டேராடூனில் உக்ரசென் பிரபல நிலக்கிழாரும் வணிகரும் ஆவார். உயர்கல்விக்காக அமெரிக்கா செல்லுமுன்பே பிரீதமை எனக்கு நெருக்கமாகத் தெரியும். பள்ளியிலும் கல்லூரியிலும் மதிநுட்பமும் நாகரிகமான பழக்கங்களும் கொண்ட இளைஞன். என்னுடன் சேர்ந்து டேராடூன், முசௌரி வட்டாரத்தில் பறவை களை கவனிப்பதில் அவன் காட்டியிருந்த திறமை குறிப்பிடத் தக்கது. எனவே என்னுடன் திபெத் பயணத்தில் உடன் வர அவன் விருப்பம் தெரிவித்தபோது நானும் மகிழ்ச்சியுடன் சம்மதித்தேன். அவன் துணையே ஒரு சொத்தென்று எண்ணினேன். முதல் சில நாட்கள் எல்லாம் நன்றாகத்தான் போயிற்று. ஆனால், போகப்போக அவன் நடவடிக்கைகளில் ஒரு வித்தியாசத்தை உணர்ந்தேன். முன்பெல்லாம் அந்த சூழ்நிலை அவனுள் எழுப்பிய உற்சாகம் இப்போது காணப் படவில்லை. அதில் ஒரு பெரும் சரிவு ஏற்பட்டுவிட்டது. அவன் இந்தப் பயணத்தை சுவைக்காதது போல பட்டது. கூலிகளின் பின்னே இந்தப்பக்கம் அந்தப்பக்கம் பார்க்காமல் இயந்திரம்போல் நடந்துவருவதை உணர்ந்தேன். நாடறிந்த இந்திக் கவிதாயினியான மகாதேவிவர்மாவின் கவிதை நூலொன்றிலேயே ஆழ்ந்து போகலானான். உயரத்தில் பயணம் செய்வது அவனில் ஒரு தளர்ச்சியை ஏற்படுத்தியிருக்குமோ என்றால் நாங்கள் ஏழாயிரம் எட்டாயிரம் அடி அளவிலேதான் போய்க்கொண்டிருந்தோம். பொதுவாக இவ்வளவு குறைந்த உயரம் யாருக்கும் மனச்சோர்வை ஏற்படுத்துவதில்லை. எப்படியோ, நிலைமை நாளுக்குநாள் மோசமாயிற்று. நாங்கள் 15,000 அடி உயரத்தில் பர்க்கா சமவெளியில் முகாமிட்டிருந்தபோது என்னால் தாங்கிக்கொள்ள முடியாமல் போயிற்று. அவன் சரியான சிடுமூஞ்சியானான். வேலைசெய்ய, சாப்பிட இரண்டுக்குமென மேசைபோல ஒரு

பெட்டியைப் பயன்படுத்திவந்தேன். சாப்பிடுவதற்காக எதிரெதிரே அமரும்போது கூட ஒரு வார்த்தையும் பேசாமல் இருப்பான். நான் எழுதிக் கொண்டோ, தாவரம் எதையேனும் பாடம் செய்து கொண்டோ அல்லது பறவையை பதம்பண்ணிக்கொண்டோ இருந்தால் அவன் பாட்டுக்கு தனக்கு உணவுக்கு சொல்லி, அதை அவசரமாக சாப்பிட்டுவிட்டு மூலையில் போய் உட்கார்ந்து கொள்வான் அல்லது புத்தகத்தைத் தூக்கிக்கொண்டு வெளியில் போய்விடுவான். மேலும் சில நாட்கள் இந்த சங்கடத்தைப் பொறுத்துக் கொண்டிருந்துவிட்டு கடைசியாக, அவனுக்கோ இதில் விருப்பமில்லை, கடனே என்று வருவதில் என் மகிழ்ச்சியும் பாதிக்கப்படுகிறது. அவன் மீண்டும் அல்மோராவுக்கே திரும்பி விடுவதும், என் வேலையை பார்த்துக்கொண்டு நான் மேலே தொடர்வதும் இருவருக்குமே நல்லது என்று சொல்லிவிட்டேன். அவன் இந்த யோசனையை கடுமையாக நிராகரித்துவிட்டதால், மேலும் சில நாட்கள் பொறுமையாகக் கழித்துவிட்டு, (கைலாய மலையை வலம் வந்ததும்) நிகழ்ச்சியை சுருக்கிக்கொண்டு திரும்பிவிடத் தீர்மானித்தேன். அந்தா-துரா, ஜெயந்தி-லா முதலிய பிற உயர்ந்த பகுதிகளெல்லாம் இப்போதும் உறைபனி மூடிய பகுதிகளாகவே இருந்தன. அவற்றில் ஒன்றின் வழியே திரும்பலாமென்று திட்டமிட்டதை செயல்படுத்த இயலவில்லை. ஆக போன வழியிலேயே திரும்பினோம். ஆனால், இடைப்பட்ட அந்த ஐந்து வாரங்களில் இந்தப் பகுதியில் பனி உருக ஆரம்பித்து விட்டிருந்தது. கோடைகாலம் துவங்கிவிட்டிருந்தது. இதனால், அந்தப்பகுதியே மாறிப்போய், ஏதோ புதியதோர் நாட்டில் புகுந்தமாதிரி இருந்தது. இதைப் பெரும்பேறு என்றே சொல்லலாம். எனது கடந்தகால சொந்த அனுபவமும் சரி, பிறர் அனுபவமும் சரி, ஒரு பாடத்தை வலியுறுத்துகின்றன. உயர்ந்த பகுதிகளில் பயணம் செய்ய சகபயணிகள் சரியானவர்களாக இருக்க வேண்டும். பலவித இயல்புடைய மாந்தர்களைக் கொண்ட குழு பொழுது விடிந்தது முதல் உறங்கும் வரை ஒன்றாகவே இருக்க வேண்டும். சில சமயம் வாரக்கணக்கில் கூட இந்நிலை நீடிக்கும். மனதில் கொலைகார எண்ணங்கள்கூட தோன்றியபடியே இருக்கும்! யாருக்கு எவ்வளவு உயரம் வரை மனநிலை பாதிக்காமல் இருக்கும் என்று அறிய சோதிடம் தெரிந்தால்தான் இயலும்! அதனால், தரை மட்டத்தில் கிளம்பும்போது சரியான துணைவர்களைத் தெரிந்தெடுப்பது எளிதல்ல.

திரும்புகையில் லிபு ஏரிக்கணவாயின் இந்தியப்பகுதியின்

பாதியில் நான்கு குஜராத்திகளைக் கொண்ட ஒரு புனிதப்பயணக் குழுவை சந்தித்தோம். ஒருவர்தான் ஆண். கைலாயமலையிலும் சரோவர் தீர்த்தத்திலும் முக்தி தேடிப் போய்க்கொண்டிருந்தார்கள். பரிதாபமான அவர்களுடன் டோத்தியால் கூலிகளும் இருந்தனர். படுக்கை, சேவுடா, கத்தியாஸ் போன்ற தின்பண்டங்கள் அடங்கிய மண்ணெண்ணெய் டின்கள் முதலியவற்றுக்காக அந்தக்கூலிகள் தேவைப்பட்டனர். ஜூலைமாதம் பிறந்துவிட்டது. ஆனால் கோடைகாலம் ஆரம்பிக்கவில்லை. முகில் சூழ்ந்த ஓர் காலை நேரம் ஊசிபோல் குத்தும் குளிர்காற்று வேகமாக வீசத் துவங்கிவிட்டது. மும்பை தலால் வீதி பங்குச்சந்தை வியாபாரி வேலை முடிந்து திரும்புவது போன்ற தோற்றங்கொண்டிருந்தார் அந்த குஜராத்தி. தொளதொளவென்று ஒரு வெள்ளைசட்டை-அதுவும் பருத்தித்துணியில். கையில்லாத ஒரு கம்பளிச்சட்டை. சாதாரண வேட்டி. அதையும் ஒருபக்கம் பஞ்சகச்சம்போல் கட்டியிருந்தார். முழங்காலுக்குமேலும் திறந்தபடி குளிருக்கு இரையாகிக்கொண்டிருந்தது. எலாஸ்டிக் போட்ட மிகமெல்லிய நைலான் சாக்ஸ் அணிந்திருந்தார். பங்குச்சந்தையினர் அணியும் கூர்முனைகொண்ட மிகமெல்லிய மஞ்சள் காலணிகள். அவரது களைப்புற்ற மனைவியும் மற்ற மாதர்களும் சாதாரண பருத்திப் புடவை கட்டியிருந்தனர். ஆனால் ஸ்வெட்டர் போட்டிருந்தனர். உள்ளாடையாக ஏதும் கம்பளி அணிந்திருந்தனரா என்பது தெரியவில்லை. பருத்தி காலுறைகளும் மெல்லிய திறந்த காலணி களும் அணிந்திருந்தனர். எதிர்த்திசையில் திரும்பி வந்துகொண் டிருந்த எங்களிடம், தெரியாமல் போய்விட்டது என்றும், குளிர் இவ்வளவு இருக்குமென்றோ பயணம் இத்தனை சிரமமானதென்றோ யாரும் சொல்லவில்லையே என்றும் நால்வரும் புலம்பத் துவங்கினர். பெண்கள் நிலை மிகமோசம். பெண்களையும் அழைத்துக் கொண்டு இப்படி ஒரு கடுமையான புனிதயாத்திரையை துவங்கு முன்பே மும்பையிலேயே சரியாக விசாரித்துக் கொள்ளாததும் முறையான போதிய ஏற்பாடுகளை செய்து கொள்ளாததும் சரியான முட்டாள்தனம் என்று, அனுதாப வார்த்தைகளுக்கு பதிலாக முகத்தில் அடித்தாற்போல் நான் பேசியதற்கு என்னை அவர்கள் இரக்கமற்ற பாவி என்று நினைத்திருக்கலாம். இருந்த சூழ்நிலையில், ஏதோ உதவிசெய்து அவர்கள் திரும்பிப்போவது ஒன்றுதான் நல்ல வழி; இல்லாவிடில் போதிய பாதுகாப்பு ஆடைகளும் படுக்கைகளும் இல்லாததால் அவர்கள் உயிரோடு திரும்புவது சந்தேகம் என்று அறிவுரையும் சொன்னேன். அப்புறம்

என்ன ஆயிற்றோ தெரியவில்லை. அந்த மாதர்கள் நிலை மிக மோசமாயிருந்தது. ஆனால் ஒரு குஜராத்தி வியாபாரி இவ்வளவு வெகுளியாக, அறியாதவராக இருப்ப தென்பதுதான் கற்பனை செய்து பார்க்கக்கூட கடினமாயிருக்கிறது.

பறவைகள் பற்றிய ஆய்வுக்குறிப்புகள் தவிர, நடைமுறை நிகழ்வுகள் குறித்தும் குறிப்பேடு எழுதிவைத்த அரியதோர் பயணம் இந்த திபெத் பயணம். இதற்கு முன்பும் சரி, பின்பும் சரி, அத்தகு செய்திகளுக்கு கூடவந்தவர்களின் கூற்றுகளே என் ஆதாரங்களாகும். லோக்வான் தோ ஆகட்டும், மெய்னர்ட்சகன் ஆகட்டும், தில்லன் ரிப்ளே ஆகட்டும், அவர்களெல்லாருமே என்னைவிட உழைத்தும் விபரமாகவும் நாட்குறிப்பு எழுதுவோர் ஆவர். இந்நூலின் ஒரு பகுதியாக எழுத முடியாத அளவுக்கு இந்த திபெத் பயணத்தில் சுவையும் விறுவிறுப்புமான புதுமை நிகழ்ச்சிகள் நிறைந்திருந்தன. ஆனாலும் இங்கொன்று அங்கொன்றாக சில சம்பவங்களைக் குறிப்பிட்டால் ஒரு சோறு பதமாக அந்தப்பயணத்தின் தன்மை புரியும். கீழ்வரும் குறிப்புகள் கூடியவரை என் நாட்குறிப்பில் அந்தந்த சமயத்தில் எழுதியபடி தரப்படுகின்றன. உங்களுக்கு புரிய வேண்டுமென்று சில இடங்களில் விளக்கங்கள் சேர்க்கப்பட்டுள்ளன.

> *25. வி 45:* இரவுத் தங்கலுக்கு கேலாவிலிருந்து சோசா (கர்பியாங்போகும் வழியில்) மறுநாள் திரு. நாராயண சாமியின் உபசாரமிக்க ஆசிரமம். 8300 அடி, 1936இல் ஆரம்பிக்கப்பட்டது. அன்பான வரவேற்பு, கட்டிடங்களை சுற்றிக்காட்டுகிறார்கள். பெரும்பாலும் கட்டிடவேலை முடிவுறாத பகுதிகள்தான். கூரை வீடுகளில் வாசம். சாதுக் களுக்கும், அவ்வளவு புனிதர்களல்லாத பிற யாத்ரீகர் களுக்கும் போகும் போதும் சரி வரும் போதும் சரி இவை தர்மசாலையாக உதவுகின்றன. நாராயணசாமி இளமை ததும்பும் முகமும் கருந்தாடியும், வளர்ந்தமுடியும் கொண்ட 35-40 வயதுமனிதர். சில குறிப்புகளிலிருந்து கேரளர் என்று தெரிகிறது. எடுத்துக்காட்டாக "எக்ஸ்" முட்டைகள் என்ற சொல்லை "யெக்ஸ்" என்று சொல்வதும், "கன்டின்யூவஸ்" என்று சொல்வது ஆகியவை. இவர் ரைஹானா (தியாப்ஜி)க்கு தெரிந்தவர்போலும். பரோடாவில் ஏதோ செல்வாக்கு இருக்கிறது. குளிர்காலம் வந்தால் பணம் சேகரிக்க அகமதாபாத்திலும் பிற இடங்களிமுள்ள பண மூட்டைகளைப் பார்க்க பயணம் கிளம்பி விடுகிறார். இப்போதைக்கு இரண்டே இரண்டு நிரந்தர

உதவியாளர்கள்தான். ஒருவர் வெள்ளை அங்கியும் கருத்த சுருள்முடியும் கொண்ட தாடிக்காரசாமியார். பார்க்க ஏதோ நொடிந்து போன கொள்ளைக்காரர் மாதிரி தோற்றம் (ஹூணராக இருக்கலாம்?) இன்னொருவர் இவ்வளவு புனிதம் கொண்டிராத ஒரு ஓய்வு பெற்ற தலைமை யாசிரியர். பக்கத்துக் கிராமத்தவர். ஆசிரமத்தின் உலகாயதமான நடவடிக்கைகளான கட்டிடப்பணி, தானியம் முதலியவை (முதல்தரமானவையாக) ஏற்பாடு செய்வது ஆகியவற்றுக்கான பொது மேலாளர். பணியாளர் களுக்கும் அன்றாட வேலையாட்களுக்கும் சம்பளம் தருவதும் இவர்தான். சுவாமிஜியின் கடந்தகாலவாழ்வு, எதிர்காலத்திட்டங்கள் எதைப்பற்றியும் ஏதும் தெரிந்து கொள்ள முடியவில்லை. உன்னதமான சிகரங்கள் நாம்பா கிளேசியர் பின்னணியில் ஒரு மருத்துவமனை கட்ட அருமையான இடமாகத்தான் எனக்குப்படுகிறதே தவிர ஆன்மீக நிலமாகவோ, எளிமைக்கு எடுத்துக்காட்டாகவோ தோன்றவில்லை. சுவாமி மிகவும் படித்தவராகவோ கற்றவராகவோ தோன்றவில்லை. ஒருவேளை திறம்பட அவற்றை மறைத்துவிடுகிறாரோ? பெரும்பாலும் எங்கள் பேச்சு கைலாச யாத்திரை பற்றி இல்லையேல் சாப்பாடு பற்றிதான். சுவாமி 13 முறை கைலாயம் சென்று வந்திருக் கிறேன் என்கிறார். அவர்கள் உணவு எளிமையானது. ஆனால் பால், நெய், தேன்-ஏன் மற்ற எல்லாமுமே முதல் தரமானதுதான். ஆக ஆசிரமம் உடலுக்கு சிறப்பான உணவும் ஓய்வும் தருகிறது. ஆனால் ஆன்மீக உணர்வு சம்பந்தமாக ஏதும் தென்படவில்லை—ஒரு விஷயம் தவிர. ஸ்வாமி தியானம் செய்ய மேல்மாடியில் ஒரு ஒற்றைத் தனியறை இருக்கிறது. தோட்டத்தைப்பார்த்துக்கொள்வது 'முன்னாள் கொள்ளைக்காரர்' பொறுப்பில் உள்ளது. போச்சா விதைகள் உதவியில் அவர் அதை சிறப்பாகவே செய்துள்ளார். தோட்டக்கலை நூல்வேறு. இன்டெக்ஸ் கெவான்சிஸ் புத்தகத்திலிருந்து சொல்கிறவர்போல பூக்களின் பெயர்களை பொலபொலவென உதிர்க்கிறார். அழகிய ரோஜாக்கள், பான்சி, பாப்பி, கேலன்டுலா, ஸ்நாப்ட் ராகன், பிங்க் முதலியவை பூத்துக்குலுங்குகின்றன. இப்போதுதான் பனிக்காலம் முடிந்திருக்கிறது. சில வாரங்களில் தோட்டம் அழகுக்களஞ்சியமாக ஆகிவிடும்.

ஒரு பெரிய பாம்பு பதினெட்டுங்குல மொத்தம் (கையால் காட்டுகிறார்) ஆசிரமத்துக்கு நேர் மேலே உள்ள செங்குத்தான மலைப் புறத்தில் ஒரு புற்றில் வசிக்கிறதாம். அதன் நெற்றியிலே மணி இருக்கிறதாம். அது நட்சத்திரம்போல் ஒளிர்கிறதாம். இருண்ட இரவுகளில் தன் கண்களாலேயே 400 கெஜ தொலைவில் பார்த்திருக்கிறதாக சாமியார் சொல்கிறார். உள்ளூர் ஆள் ஒருவன் ஒருமுறை அதைப்பார்த்துவிட்டு, ஆசிரமத்துக்கு ஓடிவந்து, இவர் காலில் விழுந்து அப்படியே உயிரையே விட்டு விட்டனாம். அச்சம் கொன்றுவிட்டது.

3 ஜூன் 1945: கர்பயாங். கடைசியாக ஒரு அழகிய விடியல். நாம்பா கிளேசியருக்கு பயணம். இங்கிருந்து 9 மைல். கெலாங் என்ற அச்சுறுத்தும் தோற்றமுள்ள உள்ளூராள் துணையுடன் கிளம்புதல். பயங்கரமான கொள்ளைக்காரன் போல் பேசிக்காட்டி நம்பவைக்கும் திறம் கொண்டிருந்த இந்த ஆள் உண்மையில் வாழ்வில் மிகவும் மென்மையானவன். நாம்பா நேபாளத்தில் இருந் தாலும் மேய்ச்சலுக்காக வெள்ளாடு, செம்மறியாடு, மற்ற கால்நடைகளை அங்கு அனுப்ப ஒரு ஒப்பந்தம் வகை செய்கிறது. இப்போது அந்த பருவகாலம் ஆரம்பம். மேய்ச்சல் நிலங்களான பெரும் பரப்புகள் இன்னும் பனிமூடிக்கின்றன. கொஞ்சம் நாளாக வேண்டும். ஆனாலும் சில ஆடுகள் பனி உருக உருக அங்குள்ள தாவரங்களை சாப்பிடுகின்றன! இப்போதுதான் பனி விலகிய சில சிறு குன்றுகளில் அசல்யாஸ் புதர்கள் பூத்துக் குலுங்கின்றன. நாலடிஉயரம். மங்கிய சிவப்பிலும் பழுப்பிலும் மலர்ச்சரங்கள். ரோடொன்டெரான் இலைகள் போல் இலைகள், பழுப்பு ஐரிஸ் கொத்தாகப்பூக்கும். இன்னொரு வகை பழுப்பு நிறப் பூ முதலிய மற்றும் பல மலர்களும் ஆங்காங்கே அடர்த்தியாக பரவிக்கிடந்தன. பத்துபதினைந்து நாட்களில் இந்த இடம் அத்தனையும் வண்ணக்களஞ்சியமாக ஆகிவிடும். கம்பீரமான பனியாலும் சுற்றிலும் பனி மூடிய சிகரங்களுமாக காணக்கிடைக்காத காட்சி.

*4 ஜூன் 45:* விபு ஏரிப்பகுதியைக் கடப்பதற்காக இறுதி ஏற்பாடுகள். தாகூர் நந்த்ராமைச் சென்று பார்த்தேன். நேற்று முதல் வானிலை தெளிவாகவும் சூரியன் காணக் கூடியதாகவும் இருப்பதால் பயணம் மேற்கொள்வது

இயலும். நேற்று நாம்பாவுக்கு இட்டுச்சென்ற கெலாங் இங்கும் வழிகாட்டியாகவும், மொழிபெயர்ப்பாளராகவும் கூட வருவது நல்லது. நம்பற்குரியன், நல்திறலாளன் என்று சொல்கிறார்கள். கூலிகள், முகாம் சாமான்கள், சுமை மிருகங்கள் இவற்றுக்கெல்லாம் ஏற்பாடு செய்யவேண்டியது வழிகாட்டியின் வேலையே. கர்பியாங்கிலிருந்து 15 சேர் வறுத்தமாவு எடுத்துச்செல்வோம். இனி உணவுக்கு வெவ்வேறு விதமாக இதையே சமைத்துகொள்வது என்று தீர்மானித்தாயிற்று! காற்று 11 மணி முதல் தொடர்ந்து கடுமையாக வீசுகிறது. காற்றின் வேகத்தை அளக்கும் பியூபோர்ட் ஸ்கேலில் வேகம் 6ஆம் நிலையைக் காட்டு கிறது. ஆறு மணிக்கு வேகம் படுபயங்கரமாக அதிகரித்து சுற்றியுள்ள மலைகளிலெல்லாம் ஒரு விசித்திரமான நீலநிற ஒளி பரவுகிறது. சரியாக ஆறரை மணிக்கு கடுமையான ஒரு நில அதிர்ச்சி ஏற்பட்டு எல்லாரும் கட்டிடத்திலிருந்து ஒரே ஓட்டமாக வெளியேறுகிறோம். ஏராளமான நிலச் சரிவுகளுக்கிடையே பனிப்பாறைகள் விழுந்த வண்ண மிருந்தன. பீரங்கியில் சுட்டதும் ஏற்படும் புகையும் புழுதியும்போல் செங்குத்துப் பாறைகள் மீதெல்லாம் தூசு மேகங்கள். கூடவே பெரும் கற்கள் உதிர்ந்தோடும் பேரொலி. இரட்டை மாடி வீடுகள் அளவுக்கு பெரும் கற்களான பெரும்பாறைகளே உருண்டு சரிந்து விழும் ஓசை.

*ஜூன் 5:* காலை 10 மணிக்கு நந்த்ராமை சென்று கண்டு கலந்தாலோசித்து திபெத்தின் முதல் கிராமமான தக்லகோட் போய்ச்சேர திட்டத்தை முடிவுசெய்தல். நாளைகாலை பயணத்துவக்கம். மொழிபெயர்ப்பாளர், வழிகாட்டி, பொது நாட்டாமை எல்லாம் கெலாங்தான். ஒரு நாளைக்கு மூன்று ரூபாய் (சாப்பாடில்லாமல்) ‘கயானிமா’ வரையில்; கோவேறு கழுதைகள் 6; தலைக்கு 50 சேர் சுமக்கும்; அதற்கு ஒரு கழுதைக்கு ரூ 10/- தக்லகோட்வரை. இரு பணியாளர்கட்கு தலைக்கு 4 ரூபாய். கயானிமா வரை சமையலறைக்கும் பணியாளருக்குமாக ஒரு கூடாரத்துக்காக ரூ 28/- தக்ல கோட்டிலிருந்து சுமைகளுக்கு யாக் எருமைகள். அதை ஏற்பாடு செய்வது கெலாங் பொறுப்பு. மானசரோவர், கைலாயம் எல்லாம் முடித்து கயானிமாவை ஜூலை 15 அளவில் அடைவதாகத் திட்டம்.

*ஜூன் 6:* கர்பியாங்கிலிருந்து காலாபானி 12000 அடி காலை 7மணிக்கு வெப்பநிலை 39 டிகிரி பாரன்ஹீட் இடியும் மின்னலுமாக கடுமையான மழை. ஒவ்வொரு இடி முழக்கத்தின்போதும் உயர் சிகரங்களிலிருந்து கற்களும் பாறைகளும் பெருத்த ஓசையுடன் உருண்டோடி இறங்கு கின்றன. சில இடங்களில் பாதையின் மொத்த அகலமே 36 அங்குலம்தான். அவ்வளவு சிறு வெளிகள். கொஞ்சம் அசந்தால், நூற்றுக்கணக்கான அடிகள் கீழே..! நம்மை அந்தப் பாதாளம் விழுங்கிவிடுமோ என்று எண்ணம் ஏற்படு கிறது. கொஞ்சம் மோசமான நிலைமைதான்! ஆனால், அப்படி நிகழ்ந்தால், என்னதான் செய்யமுடியும்?

*ஜூன் 7:* ஷாங்கிம். பனி இறுகி இருக்கும்போதே காலை 2 மணிக்கே லிபு கணவாய்க்கு கிளம்பவேண்டு மென்கிறான் கெலாங். சூரியோதயத்துக்கு முன்பு அவனால் மட்டக் குதிரைகளுக்கு ஏற்பாடு செய்துவிட முடியும் என்று நம்ப வேண்டியதுதான்! பொழுதுவிடியும் போதே உச்சிக்குப் போய்விட்டால், அந்தப்பக்கப் பாதையில் மட்டக் குதிரைகள் இருட்டில் தடுமாறாமல் பயணம் செய்யலாம் என்பதுதான் இதன் காரணகாரியத் தொடர்பு. ஆகக்கடைசியில் நாங்கள் உலகின் விளிம்புக்கு வந்து விட்டோம் போல் தோன்றுகிறது.

*ஜூன் 8:* காலை 2 மணிக்கு கிளம்புகின்றோம். முழு இருட்டில் ஒரு மெழுகுவர்த்தி, ஒரு டார்ச் விளக்கை எடுத்துக்கொண்டு—இவற்றை வைத்துக்கொண்டே முகாம் சாமான்களை ஒழுங்கு செய்துகொண்டு சுமைவிலங்குகள் மீது சுமைகளை ஏற்றிவிட்டோம். வானம் மூடியிருந்தது காலை 2.30 மணிக்கு கிளம்பினோம். லிபு போகும் வழி என்று பேர்சொல்ல பாதை ஏதும்கிடையாது. தரையெங்கும் அடர்ந்து பரவிக்கிடக்கின்றன, முன்சில நாட்களில் மேலிருந்து சரிந்து உருண்ட பாறாங்கற்களும் பாறைகளும். அவற்றின்மேலேயே தட்டுத்தடுமாறி போய்க்கொண்டே இருக்கவேண்டியதுதான். கும்மிருட்டில் போவது சுகானுபவ மல்ல. எப்படித்தான் மட்டக்குதிரைக்காரர்கள் அவற்றை வழிமாறாது நடத்திச்சென்றார்களோ? ஷாங்கிம்மிலிருந்து கணவாயின் முகப்பகுதிக்கு 3250 அடி ஏற வேண்டும். பொதி சுமந்த மிருகங்களின் பயணத்தை புதிதாய் பெய்து கொண்டிருந்த பனிமழை மேலும் சிரமமாக்கியது. சில

இடங்களில் அவை வயிறுவரை பனியில் புதைந்துபோக, சிரமப்பட்டு அவற்றை கிளப்பவேண்டியதாயிற்று. ஒருவர் தலைக்கயிற்றைப்பிடித்துக்கொள்ள இன்னொருவர் வாலைப் பிடித்து தூக்கவேண்டியதாயிற்று. சில பனிப் படலங்களில் நடுவே ஆழமான பள்ளங்கள் இருக்கும் அவற்றைத் தாண்டிக் குதிக்கவேண்டும். விலங்குகளுக்கும் சாமான்களுக்கும் ஆபத்துநேரும் வாய்ப்பு இருந்து கொண்டேதான் இருந்தது என்றுதான் சொல்லவேண்டும். பல சந்தர்ப்பங்களில் மோசமான இடங்களில் மிருகங்களின் சுமைகளை தளர்த்தி நாங்கள் சுமந்து சென்றதும் உண்டு. மந்தமான, அதே சமயம் பரபரப்பூட்டும் செயல்கள்; மட்டக் குதிரைக்காரர்களின் ஊக்கமும் துணிவும் முழுப்பாராட்டுக்குரியவை. காலை ஆறேகால் மணிக்கு லிபு ஏரியின் துவக்கப் பகுதியை அடைகையில் வெப்பநிலை 28° பாரன்ஹீட். சுற்றுப்புறம் முற்றிலும் புதிதாய்ப் பெய்த கனத்த பனிமழை போக்கு வரத்துக்கு கணவாயைத் திறந்து விடுவதைத் தாமதப் படுத்துகிறது. இத்தகைய சந்தர்ப்பங்களில் ஆடுகளே போக்குவரத்துக்கு சிறந்த ஒரேவழி! சுமை கூடைகள் மாட்டிய ஒருமந்தை விர்ரென்று சாதாரணமாக போய்க் கொண்டிருந்தது. நாங்களும் எங்கள் மட்டக்குதிரைகளும் தான் பனியில் நடுங்கித் தடுமாறிக் கொண்டிருந்தோம். உயரமும், ஆட்டுத்தோல் கோட்டின் கனமும், முட்டிக் கொண்டிருந்த சாமான்களின் சுமையும் (18 பவுண்டுக்கு மேல் எடை) ஒரு புறம் இருக்க—முந்தின இரண்டு இரவுகள் உறங்காமை ஒரு புறம் ஆக நான் மிகவும் உடைந்து போயிருந்தேன். பனியில் கடுங்காற்றில் பயணம் என்பது உடலை ஆடிப் போகச் செய்துவிடுகிறது. கணவாயைக் கடந்ததும் திடீரென்று நிலைமை மாறிப்போனது. இந்தியப் பகுதியில் காலியை அதன் தோற்றுவாய் வரை தொடர்ந்து சென்றபின் திபெத் பகுதியில் கர்னாலியின் தோற்றுவாயில் தொடங்கி கீழே பயணப்பட்டோம். அந்த (திபெத்) பக்கம் முதல் சிற்றூர் தக்லகோட் அங்கு முக்கியமான பெரிய மண்டி ஒன்று. இந்தோ-திபேத்தியன் பண்டமாற்று சந்தை. ஆனால் குளிர்காலமாதலால் திறக்கப்படவில்லை. யாக் எருமைகளை அமர்த்திக்கொண்டு மட்டக்குதிரைகளை ஷாங்கிம் நகருக்குத் திருப்பி அனுப்புவதற்காக பயணம் நிறுத்தப்படுதல். மண்டியில் கடைவைத்துள்ள தார்க்

குலாவைச் சேர்ந்த மோகன்சிங் உதவியில், லாக்பா என்ற பெரிய வில்லன்போல் தோற்றம் கொண்ட ஒரு ஆளைப் பிடிக்கிறோம். முழங்கால் வரை வரும் வண்ணக் காலணிகள், கசம்பிடித்த அங்கிபோன்ற மேலாடை, இடையில் கச்சை, பிசுக்கு பிடித்த நீண்டமுடியை குதிரை வால் கொண்டை போல் கட்டியிருந்தது, காதுகளில் வளை யங்கள். இதுதான் லாக்பா! அவனுடைய 4 காட்டெருமை களை அமர்த்திக் கொண்டோம். ஒவ்வொன்றும் இரண்டு கூடைகள் (160 பவுண்டு) சுமக்க என்று கணக்கு. தலைக்கு நாற்பது ரூபாய் என கயானிமா போகும்வரை 30 நாள் வாடகை. பிறகு 'லா(க்)பா'வுக்கு மாதத்துக்கு 30 ரூபாய். எரிபொருள், குச்சிகள், சாணம் (எரிபொருளாக) ஆகிய வற்றுக்கும் லாக்பா ஏற்பாடு செய்யவேண்டும். எதிர்புறக் குன்றின் உச்சியில் (துக்லகாட் சிற்றூருக்குமேலே) பௌத்த மடம். 'ராஜா' என்று அழைக்கப்படும் தலைமை லாமா சர்க்கரை பூசிய பருப்பும் உப்புப் போட்ட வெண்ணெய் மிதக்கும் தேநீரும் கொண்டு உபசரித்தார். (சும்மா சொல்லக்கூடாது, தேநீர் நன்றாகவே இருந்தது!) லாமா தன்னை வருத்திக்கொள்கிற வகையல்ல. நன்கு சாப்பிடுகிற, பளபளப்பான மனிதர்! இருந்த இடத்திலிருந்து எழத் தேவைப்படாத தொலைவில் கைக்கெட்டும்படி பல்வகைத் தின்பண்டங்கள். துறவறத்தில் துவக்கத்தில் உள்ள இளம் பிரம்மச்சாரிகளின் பணிவிடைகள். எதிரே திபெத்திய வெள்ளிக்கோப்பையில் தேநீர். மூலையில் கெட்டிலில் இன்னும் தேநீர். ஆக அவர் துறவியாகவோ படிப்பாளி யாகவோ தோற்றமளிக்கவில்லை இரண்டாகவும் இருந்து இன்னும் மேலேயும் இருக்கலாம். மடலாயம் ஓர் விசித்திரமான பல பட்டறைத்தொகுப்பு. தூக்கியெறியாமல் விடப்பட்ட தட்டுமுட்டுச் சாமான்கள், பழங்கால கலைப் பொருட்கள், மட்டமான முறையில் பாடம் செய்யப்பட்டு, பூச்சி அரித்து, தூசி படிந்து, புகைக்கரி படிந்த நிலையில் சில மிருகங்கள் (கரடி, சிறுத்தை, காட்டெருமை) அப்புறம் கறுப்புமான் கொம்புகள், ஸ்கோம்பர்க் மான் கொம்புகளும் அடுத்த அறைகூரையை அலங்கரித்து வந்தன. இவற்றுடன் கூடவே பிரார்த்தனை சக்கரங்களும் பிரார்த்தனைக் கொடிகளும் (கொடிகள் ஜப்பான் அன்பளிப்போ?) வர்ணப்பூச்சு கலவைகள், பளபளப்பான கண்டாமுண்டா

சாமான்களின் கலவை இதெல்லாம் என்னை உற்சாகப் படுத்தவில்லை. மதத்தின் பெயரால் இப்படி எத்தனை விந்தை மூடவழிபாடுகளும் மரணத்திற்குப் பின் முக்தியளிக்கும் என்று நாம் (ஏனோ?) கற்பித்துக்கொள்கிற விஷயங்களில் மனித இனம் ஏற்படுத்திக்கொள்கிற குருட்டு நம்பிக்கையும் எனக்கு அயர்வையே ஏற்படுத்தின. அங்குள்ள (கம்பி அச்சுகளில் சுழல்கிற என்று வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளுங்கள்) பிரார்த்தனை சக்கரங்கள் அனைத்தையும் விட அவர்களும், மடலாயத்தின் (பொதுக் கழிப்பறைபோல் பயன்படுகிற) சுற்றுப்புறங்களும் கொஞ்சமாவது சுத்தமாக இருந்தால் அதுவே சிறப்பாக இருக்கும்.

*10.6.45:* பின்னாலிருந்து அடித்தும் முன்னாலிருந்து இழுத்தும் மூன்று காட்டெருமைகள் பரிதாபமாகத் தோன்றிய இரு மரப்பாலங்களைக் கடக்காமல் சண்டித் தனம் செய்தன. துள்ளிக்குதித்ததில் பாதி சுமை கீழே சிதறி விழுந்ததுதான் மிச்சம். இரு இடங்களிலும் சுமைகளை இறக்கி தூக்கிக்கொண்டுபோய் அக்கரையில் மீண்டும் அவற்றின் மீது ஏற்றினோம். பனியாய் சில்லிட்ட நதிநீரில் இறங்கி காட்டெருமைகள் வேகமான நீரோட்டத்தில் நீந்தின. காட்டெருமைகளின் மந்தமான நடை எனக்குப்பிடிக்கிறது. எனக்கு மெதுவாக, வேடிக்கை பார்க்கவும், படமெடுக்கவும், நேரத்தைப்போக்கவும் இதுவே வசதி. மட்டக்குதிரையில் கறி விற்ற, ஒருவனிடம் ஒரு ரூபாய்க்கு ஆட்டுக்கால்கள் இரண்டு வாங்கினேன். இரண்டு பக்கத்துக்கும் லாபம்தான். சென்ற ஆண்டு இரண்டரை ரூபாய்க்கு முழு ஆடே கிடைத்தது என்கிறார்கள்! நடக்கும் போது எவ்வித உடை அணிவது என்பதுதான் பெரிய பிரச்சனை. வெயில் கொளுத்தும். நொடியில் (பறந்துவரும் மேகமந்தைக்குப்பின்) குளிர் உறையவே வைத்துவிடும்.

*செகாங் 11.6.45:* காற்று சுழன்றடிக்க ஆரம்பித்தபோது பிற்பகல் மூன்றுமணி. திபெத்துக்கு அவப்பெயர் வாங்கித் தருகிற இந்த இயற்கை விபரீதத்தை இப்போதுதான் நாங்கள் நேரடியாக அனுபவிக்கிறோம். கடந்த 3.30 மணி நேரமாக கூடாரம் அப்படியும் இப்படியும் அலைபாய்ந்து ஊசலாடுகிறது. தலைக்குமேலே பிய்த்துக்கொண்டு எந்தநேரமும் பறந்துவிடலாம். நல்லவேளையாக இத்தகைய

அவசரங்களுக்கு "இருவர்க்கான கொட்டில்" ஒன்று இருக்கிறது. அப்படி ஒரு நிலை வராதென்றே நம்புவோம். அது நம்மை உலுக்கிவிடும்! இரவில் 30 டிகிரி பாரன்ஹீட் முரட்டுத் துணியாலான தண்ணீர் வாளிகளே உறைந்து விடுகின்றன. கால்களும் ஏறத்தாழ உறைந்தமாதிரிதான்! முரட்டு கெலாங், காலைதோறும் உரக்க, நீளமாக செய்கிற பிரார்த்தனை, அதுவே அச்சத்தை அதிகப்படுத்த போதும்! மஞ்சளாய் பூக்கிற நெடிய தண்டுள்ள செடிகளின் புதர்கள் பறவைகளுக்கு சொர்க்கம்! என்னைப் போன்றவர் களுக்கும்தான்! 'களத்தில்' மகிழ்ச்சியாக ஒருவாரம் கழிக்கலாம். ஆனால் நல்ல நல்ல விஷயங்கள் இனிதான் இருக்கின்றன. எனவே மேலே போகவேண்டும். அடடா இப்போது வான்தோ மட்டும் இருந்தால்..! அவரது சக்திக்கும், ஆர்வத்துக்கும் இங்கே பறவை படப்பிடிப்பில் அற்புதங்களை நிகழ்த்தியிருப்போம்.

*13.6.45:* செகாங்கிலிருந்து நயசே. கணவாயின் உச்சத்தில் (குர்லா 16500 அடி) 200 சர்ச்சில் பீரங்கிகளை வரிசையாய் நிறுத்துமளவு அகலத்துக்கு சமதளம். ஒரே கற்குவியல். பேய்பிசாசுகளுக்கு அஞ்சுகிறவர்களும், சடங்கு களில் நம்பிக்கையுள்ளவர்களும் 'நேர்த்திக்கடன்' செய்த கற்கள். பிரதானமான குவியலில் எப்போதும் போல் ஒரு கம்பு. கந்தல், கசம்பிடித்த கம்பளிச்சுருள், காட்டெருமைக் கொம்பு, மண்டைஓடு என்று எல்லாவித அசுத்தங்களும் அதில் தொங்கிக்கொண்டிருந்தன. பேய், பிசாசு பயமுள்ள லாப்பாவின் வெற்றி கீதங்களான பிரார்த்தனை முழக்கம் எல்லாக் கல்லையும் குவித்து அதனுடன் தனது காணிக்கை யையும் சேர்த்துவிட்டான். கெலாங் இந்து. ஆனாலும் இவனது பேய்பிசாசு பயமும் ஒன்றும் குறைந்ததல்ல. அவனும் புனிதகீதங்களும் ஜெபமும் ஓங்கி ஒலித்ததில் இவனது ஜெபங்கள் சாத்தானுக்கே காதில் விழுந்திருக்கு மென நம்புகிறேன். இந்தப் பூலோக வாழ்விலும் பரலோக வாழ்விலும் எங்கள் நன்மை கருதி கணவாயின் உச்சியி லிருந்து 'ரெய்ட் ஷைடு' (வலப் புறம்!) மானசரோவர் பக்கம்தான் முதலில் பார்க்க வேண்டும். ராக்காஸ்தால் உள்ள 'லெப்ஷைடு' (இடப்புறம்) ஒருபோதும் பார்க்கக் கூடாது இதை மீறினால் நாசமாய்ப் போகவேண்டியதுதான் என்று கெம்சிங் செய்யும் எச்சரிக்கை வேறு. பின்னணியில்

கைலாசப்பனிமலை விளங்க, இரு ஏரிகளும் விழிகளுக்கு விருந்தாகும். நம்பமுடியாத அற்புதக் காட்சிகள் 'வெண்மை தழுவிய வானவில்'போல அசாதாரண வண்ணக்களஞ்சிய மாக ராக்காஸ் வண்ணம் மாறும். மானஸ்-ஆகா! நேரத்துக்கும் வானின்நிலைக்கும் ஏற்ப மானஸ் சுத்தப் பனிவெள்ளை, கரும்பச்சை, மரகதப் பச்சை, ஆழ்ந்த கடல்நீலம் பழுப்பு-கறுப்பு என்று படிப் படியாக மானஸ் காட்டும் வண்ணமாயம் எக்காலும் நினைவில் பதிக்க வேண்டிய காட்சிகள்! மானசரோவரின் உயரம் 14950 அடி சுற்றளவு 54 மைல். பிரணவானந்த அடிகள் கணக்குப்படி அதிகபட்ச ஆழம் முந்நூறு அடி. சுற்றிலும் மலைகள். இப்போது உச்சி மட்டுமே பனி மூடியிருக்கிறது.

பிரணவானந்த அடிகளை நான் முதன்முதலில் சந்திக்க நேர்ந்தது மானசரோவரின் தென்கரையில் உள்ள துகோல்ஹோ மடாலயம் அருகில். பகுத்தறிவும் அறிவியல் கண்ணோட்டமும் கொண்ட புனிதர். அந்த வட்டாரத்தை சுற்றியறிந்த நீண்ட அனுபவமுள்ளவர். முதல் சந்திப்பிலேயே இருவருக்கும் பிடித்துப் போயிற்று. நீண்டபல சுவையான உரையாடல்கள் எல்லாம் உலகவாழ்வு பற்றி எனக்குப் புரிகிற மொழியில்(!) அமைந்தவை என்பதால் குறிப்பிடத்தக்கவை. இந்த வட்டாரம் பற்றி நிறைய செய்திகளைக்கொண்ட இரண்டு நூல்களைப் பிற்காலத்தில் எழுதியுள்ளார். ஒன்று கைவல்யானந்த அடிகளார் வெளியீடான 'கைலாஸ்-மானசரோவர்' 1949, மற்றது 'திபெத்தை அறிந்து கொள்ளுதல்' (கல்கத்தா பல்கலைக்கழக வெளியீடு 1950). இந்த இரண்டாவது நூலுக்கு நான் எனது யாத்திரையில் எடுத்த பல பறவையியல் குறிப்புகளையும் படங்களையும் மனமுவந்து அளித்திருக்கிறேன். திபெத்தில் சந்தித்தபிறகு அடுத்த சந்திப்பு 31 ஆண்டுகள் கழித்து 1976ல்தான் நிகழ்ந்தது. அதுவும் எதிர்பாராதது தான். ஆனால் இரண்டாவது சந்திப்பு முற்றிலும் வேறுபட்ட சூழலில் புதுதில்லி குடியரசுத்தலைவர் மாளிகையில் நடந்தது. குடியரசுத்தலைவர் பக்ருதீன் அலி அகமதிடம் இருவரும் விருது பெறும் நிகழ்ச்சி. அவருக்கு பத்மபூஷன். எனக்கு அதன் அண்ணன். (பத்மபூஷன் விருதையே திரு சாலீம் அலி இப்படிக் குறிப்பிடுகிறார்! —மொழிபெயர்ப்பாளர்)

லாப்பாவை எனக்கு மேலும் மேலும் பிடித்துப்போகிறது. சிரித்த முகமும் வேலைசெய்யும் இயல்பும். ஆனால் இவனும்

கெலாங் போலவே சுத்தமாகவும் நீண்ட நேரமும் பிரார்த்தனை செய்வதுதான் சிரமம். தேவையில்லாமல் அதிகாலையிலேயே ஆரம்பித்துவிடுவான். சுமையேற்றிய காட்டெருமைகளை வழிநடத்திச் செல்லும்போதும், நிறுத்தாமல் எதையோ ஜெபித்துக்கொண்டும் பாடிக் கொண்டும் வருகிறான். ஏதோ புனிதப்பாடலாயிருக்கும். அவனது வேலையின் இயல்பை சேர்த்துப்பார்த்தால் வேறு விதமாகவும் இருக்கலாமென்று தோன்றுகிறது. முகாம் இடைவெளி வழியே தலையணையில் தலைவைத்து மல்லாந்து படுத்துக்கொண்டு பார்த்தால், ஆகா! வெளியே பல பிராமணி வாத்துக்களுடன் 16 சட்டத்தலை வாத்துகள் மாலைக்கதிரொளியில் முகாமுக்கு 50 கெஜதூரத்தில் எந்தக்கவலையுமின்றி மேய்ந்துகொண்டிருக்கும் காட்சி மிக ரம்யமாகத்தான் இருக்கிறது. ஆனால் ஒரு துப்பாக்கி இருந்தால்… நிரந்தரமாகிவிட்ட பருப்பும் சோறும் மாறி, வறுத்த வாத்துக்கறி மட்டும் கிடைத்தால்!

17.6.45 பர்க்கா: கைலாயத்தொடரின் அடிவாரத்தில் அமைந்த சமவேளி. மைல்கணக்காக நாலா புறமும் விரிந்த வெறும் நிலம். கூரைவேய்வதற்கான தாவரங்கள்போல் மெல்லிய செடிகள் பெரும்பகுதியை மூடியிருக்கிறது. மிக மெல்லிய இதழ்கள் கொண்ட புல் ஆங்காங்கே காணப் படுகிறது. ஒருமாதத்தில் இதே இடம் சரியான மேய்ச்சல் நிலமாக ஆகிவிடுமாம். மெய்யாகவே இது உலகத்தின் கூரைதான். தாமர்லேனையும் மற்ற அந்தக் காலத்துப் போர்வீரர்களையும் போர்க்களம் என்ற முறையில் இந்த இடம் மிகவும் மகிழ்வூட்டிருக்கும். புராதன காலத்துப் போர்கள் பலவும் ஒரே சமயத்தில் ஒரு குழப்பமின்றி இங்கே நடைபெற இயலும். நான் கொழுத்த வால் பல்லியை விரட்டிக்கொண்டுபோகையில் பௌத்த மதத்தின் ஒரு பிரிவைச் சேர்ந்தவனான லாப்பா அவர்களது நம்பிக்கைப் படி இந்தமாதிரி பல்லி ஒன்றைக் கொல்வது நூறுகொலை களுக்கு இணையான பாவம் என்று எச்சரித்தான். உண்பது, குடிப்பது, உல்லாசமாயிருப்பது எல்லாவற்றையும் விட்டு பாழ்நிலத்தில் வாழவந்து விட்டதால் இந்தப் பல்லியே ஒரு ஆன்மீகவாதி அல்லது துறவிக்கும் சமம். எனவே இப்படிப் பட்ட ஒரு பல்லியைக் கொல்வது ஒரு சாதுவைக் கொல்வது போலாகும். 1 சாது =100 சாமானியர்கள்.

ஆண்டவனின் கோபம் போல ஒரு சமயம் எலிகள் எல்லா தானியங்களையும் தின்றுவிட்டதோடு, எரிச்சலூட்டும் பிளேக் நோயையும் பரப்பி விட்டுவிட்டன. பிறகு ஒரு துறவி அதற்கு எதிர்ப்பு சக்தியாக பூனைகளை அறிமுகப்படுத்தி, எலிகளின் எண்ணிக்கைக்கும் பூனை எண்ணிக்கைக்கும் ஒரு விகிதத்தை ஏற்படுத்தினார். இன்று வரையில் எல்லாவித கோளாறுகளையும், கேடுகளையும் மீறி உலகெங்கும் அந்த விகிதம் மாறாதுள்ளது. ராக்காஸ் தல் (ஏரி) கரைகளில் மந்தை மந்தையாய் க்யாங் காணப்படுகிறது (ஒரு கூட்டத்தில் எழுதுபதுக்குமேல் இருக்கும்) மிக எச்சரிக்கையாக இருக்கின்றன. 200 கெஜ தூரத்துக்குள் கூடபோகமுடியவில்லை. உடனே எச்சரிக்கையாகி ஏகப்பட்ட புழுதியைக் கிளப்பியபடி வேறிடத்துக்கு மிக விரைவாக சென்றுவிடுகின்றன. இன்று பார்த்த 300 விலங்குகளில் குதிரை, கழுதை எதிலும், இளங்குட்டி ஒன்று கூட தென்படவில்லை. இது குட்டிபோடும் பருவமில்லையோ? காட்டுக்கழுதையின் வறண்ட சாணம் காட்டெருமைகளுக்கு இனிய சிற்றுண்டி காணும் இடத்தில் எல்லாம் வாய்நிறைய கவ்வி அசை போடத்தவறவில்லை. டர்ச்சான் 15,500 அடி உயரம். கைலாசத்தின் முறையான பிரயாணம் இங்கு துவங்குவதால், இங்கிருந்து புண்ணியம் சேர்ப்பது துவங்குகிறது. எனவே இங்கு எக்கச்சக்கமாக பிச்சைக்காரர்கள். நாளையிலிருந்து நாங்களும் புண்ணியம் சம்பாதிக்கத் துவங்குவோம். பரலோக வாழ்வுக்காக புண்ணியம் சேர்ப்பதில் மனிதனுக்கு உள்ள ஆர்வமும் பேராசையும் மிகப் பரிதாபமாகப்படுகிறது. எவ்வளவு மடமை. இருக்கும் ஒரே வாழ்வான இவ்வாழ்வில் புண்ணியம் சேகரிப்பதோடு நிறுத்திக்கொள்ளாமல் அடுத்த அடுத்த பிறவிக்காக எதற்காகக் கவலை என்று ஏன் மனிதன் இருக்கமாட்டேன் என்கிறான்? இந்த வாழ்வு நம் கையில் இருக்கிறது. 'மரணத்துக்குப்பின்' நம் கட்டுப்பாட்டில் இல்லையே. முறையான கைலாசப் புனிதப் பிரகாரத்தின் முதல் பாதம் (திராபுக் நோக்கி) ஆரம்பம். கரடு முரடான பாறைநிலமான முரட்டு ஒற்றையடிப்பாதை. ஆனால் நம்பிக்கைவாதிகளும் தர்ம சிந்தையாளர்களும் தடம் பதித்த பாதை. ஒருக்கால் வெற்றிகரமான கறுப்புச் சந்தைக் காரர்களின் பாதங்களும் பதிந்திருக்கும். கிழிசலான

கந்தலுடைகளில் பரிதாபமான இருவரை ஒரு மைல் சென்றதும் பார்த்தோம். திபேத்தியராகத்தான் இருக்கும். அங்கப்பிரதட்சணம் செய்து கொண்டிருந்தனர். எழுந்து நிற்கவேண்டியது, தலைக்கு மேல் கரங்களைத் தூக்கி கைதட்டவேண்டியது. குப்புறப் படுக்கவேண்டியது, கைகளை சரணாகதியாக முன்னால் நீட்ட வேண்டியது. திருப்பித் திருப்பித் திருப்பி இதேதான். பாவம்! மறுமுனையில் இவர்களுக்கு ஏதும் நடந்து விடக்கூடாது! வரட்டி ஒன்றே எரிபொருள். வழிநெடுக தன் திபேத்திய ஆடையில் கழுகுக் கண்ணனாக லாப்பா சிரத்தையாக அதை சேகரிக்கிறான். ஆனால் கூட்டிக் கழித்துப்பார்த்தால் இது ஒரு சுவையான தொழில் முறைப்பயணம்தான் என்பதே உண்மை. இந்தியாவின் மலைப்பறவைகள் என்ற என் நூலுக்கு முழுமை கொடுக்க இது உதவும். (திராப்புக்கில் தற்காலிக முகாம்) தலைக்குமேல் கைலாசம் உன்னதமாக இருக்கிறது. ஆனாலும், இங்கு அடிவாரத்திலிருந்து பார்ப்பதைக் காட்டிலும் தொலைவிலிருந்து பார்க்கும்போதுதான் அதன் கம்பீரம் இன்னும் அதிகமாயுள்ளது. (பரிக்கிரமம் இரண்டாம் கால்) எருமை வாகனத்தில் சென்று (கடவுளை) ஏமாற்றி விடலாம் என்றுதான் நானும் எவ்வளவோ முயன்றேன். (18500 அடி உயரம் அச்சுறுத்தும் டால்மா லா) ஆனால் காட்டெருமை கிடைக்கவில்லை. லாபாவும் கெலாங்கும் அப்படித்தான் சொன்னார்கள். இப்படி ஒரு மலிவான முறையில் நான் புண்ணியம் சேர்த்துவிட நினைத்தது இருவர்க்கும் மருட்சியை ஏற்படுத்தியிருக்கும். இப்படி ஒரு சாக்குச் சொல்கிற நினைப்பு ஏற்படுவதேகூட என் மனதின் சின்னத்தனமாகப் பட்டிருக்கலாம். இங்குள்ள பௌத்த மடலாயத்துக்கு செல்லுதல். (இந்தப் புனித வட்டாரத்தில் நான்கு மடங்கள் உள்ளன) நாற்றமும் அசிங்கமும் பிடித்த சுற்றுப்புறமும், விசித்திரங்களும், பகட்டும் குமட்டிக் கொண்டுவருகிறது. உண்மையில் இதெல்லாமா பௌத்தம்? இதையெல்லாம் சமயம் என்று சொல்வதா? ஆழ்ந்த மென் பனியின் ஊடே டால்மா லாவின் உச்சிக்கு செல்வது உயிர் போகும் பயணம். செத்தே போய்விட்டேன்! உச்சிக்குப் போனதும் ஒரு கஷ்டம்: 50 அடிகூட எடுத்துவைப்பதற்குள் 'காட்சியை வியப்பதற்கு' நின்றுவிடுவது! பொதிசுமந்த எருமைகள்

வயிறுவரை மென்பனியில் சிக்கிக்கொள்ள வேண்டியது! மாபெரும் பாறைகள். அடுத்த பக்கச்சரிவுகள் சரிந்திருக்கும் விகிதம் 1:2 அல்லது இன்னும் செங்குத்தாக உள்ளது. எது எப்படியோ யாக் (காட்டெருமை) மகிழ்ச்சியாயிருக்கிறது. அசாதாரணமான ஜீவன்கள்! அடுத்த தற்காலிக முகாம் (சுந்துபுக்) காலை மணி நான்கரை. ஏகமாக களைத்துப் போனநிலை. படுத்துக்கொண்டு தத்துவார்த்தமாக மாம்பழம் சாப்பிட்டுக்கொண்டு (இந்தியாவில் அது மாம்பழப்பருவம்) இருக்கவேண்டிய மகிழ்வான நாட்களில் இப்படிப் பயணப்படுகிற வக்கிர மனிதர்களையும் ஈரமற்ற மெல்லிய சுகமான பஞ்சணைகளில் படுத்துக்கொண்டு மாம்பழம் சாப்பிடுவதெப்படி, ஈரமான கட்டாந்தரையில் கூரிய கற்கள் உடலின் மோசமான பகுதிகளில் குத்த படுத்துக்கிடப்பது எப்படி? இப்படிப்பயணம் வருகிறவர் களெல்லாம் தண்டப்பிராணி!!

*25.vi.45 டிங் சோ:* 15,200 அடி. 6 மைல் சுற்றளவுள்ள சிறு ஏரி. மானசரோவருக்கு வடகிழக்கே மானசரோவர் உடல், இது தலை என்பது ஐதீகம். எனவே இதன் புனிதம் அதிகம். பறவைஇயல் கோணத்தில் கிழக்குக்கரை விறு விறுப்பானது. அகன்ற தடம். சில இடங்களில் கால்மைல் அகலம் கூட இருக்கும். நீர்தேங்கி, நசநசத்த பகுதி அல்லது குளிர்நில சதுப்பிடங்கள். தொடர்ச்சியாக, நசநசத்த வட்டமான சிறுகுன்றுகள். இடையில் ஆழ்ந்த கால்வாய்கள்— அதாவது குட்டிக் குட்டித்தீவுகள். பல 'குட்டித்தீவுகள்' மிதந்து கொண்டிருக்கும். அதுபுரியாமல் காலை வைத்து விட்டால், இட்ட அடி எடுத்து அடுத்ததில் வைப்பதற்குள் அவை நீருக்குள்ளே போய்விடும் ஆபத்து இருப்பதால் நீங்கள் நித்திய ஜாக்கிரதையோடு சுறுசுறுப்பாக இருக்க வேண்டும்! ஏமாற்றக் காத்திருக்கும் அபாயகரமான புதைகுழிகள். எனவே அதிகப்படி கவனம் தேவை. கூட்டுப் பறவைகட்கு பாதுகாப்பான இடம், அருமையான காப்பகம். நல்லபலன் தருமிடம். பெருங்கொண்டை நீர்ப்பறவை (Great Crested Grebe), பழுப்புத்தலையும் வலைப்பாதமும் கொண்ட பறவைகள் (Brown Headed Gulls), முப்பது கருங்கழுத்து நாரைகள் (ஜோடி ஜோடியாக) எல்லாம் ஏரியை சுற்றி காணக்கிடைக்கின்றன. ஏராளமாக இனம் பெருக்கும் உயிர்கள். நாரைகள் தவ்வுவதும் குதிப்பதும் சரஸ்

பறவைகளை நினைவூட்டுதல்-குரலும் கூவலும் கூட அப்படித்தான். கூவுவது கொஞ்சம் உரக்க. ஒரு முட்டையை எடுத்து பொரித்தோம். ஆகா! என்ன சுவை! வழக்கமான சோறு-பருப்பு இதிலிருந்து மகிழ்ச்சியாக தப்பித்தோம்!

ஒரு க்ரப் (Grebe) பறவையின் கூடு மிதந்து கொண் டிருக்க அதை எடுக்கும் முயற்சி ஆபத்தாய்ப் போயிற்று. ஏக சிரமம். புதைகுழியில் போயே போயிருக்க வேண்டியது. மிக ஆழமான பனிப்பாறை என்பது மிதக்கும் குன்றில் நேரம் கழித்துதான் தெரியவர, திடீரென்று புரிந்ததும் தொடைவரை சில்லிடும் நீருக்குள், இன்னும் கீழே, கீழே போகப்போகிற நிலையில் தாண்டித் தப்பிக்கும் தொலைவில் ஏதுமில்லை. ஏகமாக பயந்துபோனோம். சுற்றிச் சுழன்று ஏதோ ஒரு அடுத்த குன்றுக்கு தாவுவதற்குள் அது நகர ஆரம்பிக்க! எப்படியோ இழையில் தப்பித்தது ஏதோ நல்ல காலம். அவ்வளவுதான் கூறலாம். சரியான பாடம்: இனி, இதுவரை போலன்றி கெலாங் தரும் எச்சரிக்கைகளை ஒழுங்காக கடைப்பிடிப்பதே நலம்!

கெலாங் தோற்றத்துக்கும், மனவலிமைக்கும் சம்பந்தமே யில்லை. தன் வாழ்வு முடியுமுன் சாவதென்றால் என்ன ஒரு அச்சம்! காலையிலிருந்து எமபயம். ஒத்துழைப்பை இதற்குமேல் குறைக்கமுடியாது என்ற அளவில்தான் உதவு கிறான். கூடியவரை தூரத்திலிருந்துதான்! ஆபத்தான இந்த இடத்தில் (வாழ்வைச்) சூதாட அவன் விரும்பவில்லை. தானே கற்பனை செய்துகொண்டு பயப்பட ஒரு இழை ஆதாரம் (அல்லது அதுவுமில்லாமலே) வழிப்போக்கன் எவனை எதிர்கொண்டாலும் 'பொல்லாதவன்' என்றும் கொள்ளையன் என்றும் எண்ணிக்கொண்டு.....! நேற்று என்னை மைல் கணக்கில் (என்று தோன்றியது) சுற்று வழியில் இட்டுச்செல்கிறான். என்னடாவென்றால் எதிர் வருபவர்களைத் தவிர்க்க. என் குழுவில் மற்ற அனைவரும் எதிரில் வந்தவர்கள் அப்பாவி வழிப்போக்கர் என்றும், ஒரு நகத்துக்குக்கூட அவர்களால் ஆபத்து வரும் வாய்ப்பே இல்லை என்றும், இன்னும் சொன்னால் நாம் கொஞ்சம் சமர்த்தாயிருந்தால், அவர்களிடமும் ஆட்டுக்கறி கூட வாங்கியிருக்கலாம் என்றும் பிறகு சொன்னார்கள். அவன் நிரந்தரமாக கொள்ளையர் பயம் கொண்டிருப்பதற்கும்

நியாயமான காரணம் இருந்தது பின்னால்தான் தெரிந்தது. அந்த வட்டாரமே கொள்ளையர் நிறைந்ததுதான். கொஞ்ச நாள் முன்புதான் அவனுக்கு ஒரு மோசமான அனுபவம்- செம்மையாக உதைத்து வாயையும் அடைத்து, சாமான்களையும் திருடிக்கொண்டு சாலையோரத்தில் தூக்கிப் போட்டுவிட்டுப் போயிருக்கிறார்கள். இரண்டு நாள் கழித்து தற்செயலாய் சில வழிப்போக்கர்கள் அவனைக் காப்பாற்றியிருக்கிறார்கள்).

நான் திபெத் போனபோது, சீனர்கள் திபெத்துக்குள் நுழைவதற்கு முன்பு, அந்த சமயம் மானசரோவர் பகுதி ஆபத்தான, கொள்ளையர் நிறைந்த பகுதியாயிருந்தது. அப்பாவி இந்திய யாத்திரிகர்கள் வழிமறிக்கப்பட்டு கொள்ளையடிக்கப்படுவதும் தாக்கப்படுவதும் சாதாரணமாயிருந்தது. சில சமயம் கொள்ளைக் கும்பல்கள் கொலையும் செய்ததுண்டு. நிராயுதபாணியாக தனியே சுற்றுவது ஆபத்தென கெலாங் என்னைப் பலமுறை எச்சரித் திருந்தான். ஆனால், பயணத்தை இன்னும் விறுவிறுப்பாக்க அவனது பங்களிப்பு இது என்றே நான் எண்ணிவந்தேன். மஞ்சள்பூ புதரொன்றில் குருவிக்கூடுகளைத் தேடிக்கொண்டிருந்த ஒரு காலை, கெலாங் உதவிக்கு உடனிருந்தான். கொஞ்சம் முன்னால் ஏதோ அசைவு தெரிந்தது நான் பொருட்படுத்தவில்லை. அந்த இடத்தை நெருங்கியபோது, மறைவிலிருந்து ஒரு முரடன் முன்னால் வந்தான். கரடுமுரடான அச்சுறுத்தும் தோற்றம். பெல்ட்டில் ஒரு அசிங்கமான பிச்சுவாக்கத்தி. தோளில் வெடிமருந்து தொங்கியது. அச்சுறுத்தும் கடுமையோடு கையையும் காலையும் ஆட்டிக்கொண்டு அவன் கத்தத் துவங்கினான். எனக்கு ஒரு இழவும் புரியவில்லை. அந்தக் கொள்ளைக்காரனின் அறைகூவல் கேட்டு கெலாங் உடல் வெளுத்துப் போனாற்போல ஒரு மனிதன் வெளுத்துப்போய் நான் கண்டதேயில்லை. ஒரு தாள்மாதிரி வெளுத்துப்போனான் என்பது மிகையான வர்ணனையில்லை. அச்சத்தினால் அவன் நடுங்குவது தெளிவாய் தெரிந்தது. மீண்டும் மீண்டும் என்னைக் கையெடுத்து கும்பிட்டு இந்தப் பொல்லாத ஆளிடமிருந்து ஓடிவிடச்சொன்னான். குரலே பரிதாபமாயிருந்தது. அப்படி ஓடுவற்கு இப்போது அவகாச மில்லை என்று தெளிவாகவே உணர்ந்தேன். என் முன்னே திறந்த வெட்டவெளி-முப்பது மைல் வரை உதவிக்கு ஆளில்லை. எனவே ஓடுவதில் லாபமில்லை. கிரிக்கெட் நடுவர்கள் வைத்திருப்பார்களே, உட்கார வசயான ஒரு தடி அதுபோன்றதோர் தடி என்னிடமிருப்பது

நல்ல வேளையாக அப்போது நினைவு வந்தது. அதை கெலாங் வைத்திருந்தான். இங்கே கொஸ்டா அதை என்று உரக்கக் கத்தியபடி அதை வாங்கினேன். அது ஒரு துப்பாக்கி என்று நம்பும்படி நடிக்க ஆரம்பித்தேன். பையிலிருந்து குண்டுகளை அதில் போடுவதுபோல பாவனை செய்தேன். இந்த மாதிரி ஒன்று இருப்பதே அவனுக்குத் தெரியாது என்று கருதுகிறேன். உலோகப் பூண்களுடன் இப்படி ஒரு தடியைப் பார்த்ததும் அதுவும் நான் அதன் இருக்கைப் பகுதியை 'கிளிக் கிளிக்' என்று ஓசை எழ திறந்து திறந்து மூடியதையும் பிறகு கம்பீரமாக தோளில் சாத்தியதைக் கண்டதும் உண்மையான துப்பாக்கியைத்தான் தயார் செய்கிறேன் என்று பயந்துபோனது வெளிப்படையாகத் தென்பட்டது. இப்போது உணர்ச்சிகரமாக கத்துவது என்முறை! அதை அவன் புரிந்துகொள்ள முடியாததும் எனக்கு மகிழ்ச்சிதான். நல்லவேளையாக என் வெற்று மிரட்டல் பயனளித்தது. திருடனின் முரட்டுத்தனம் உடனே அடங்கியது. அவன் சலித்துத் திரும்பி நடையைக் கட்டினான். போலி வீரத்தோடு நான் முகாம் திரும்பினேன். வழிநெடுகிலும் மனதில் இரு உணர்வுகள்—ஒன்று பின்னாலிருந்து எந்த நேரம் துப்பாக்கி குண்டு ஏதாவது தாக்குமோ என்ற அச்சம், மற்றது ஒரு மோசமான இக்கட்டு நல்லவிதமாக முடிந்ததே என்ற நிம்மதி.

. . . கடந்த 3–4 நாளாக வானிலை, அசாதாரணமாக, விரும்பத் தக்கதாக இருந்தது. இந்தப் பயணத்திலேயே இம்மூன்று நான்கு நாள் வானிலை முற்றிலும் வித்தியாசமாயிருந்தது. சூழல் ரம்மியமானது. பறவைகளின் பின் செல்வதில் களைப்பே ஏற்படவில்லை. இரவு 9 மணி வரை வெளிச்சம். சூரியன் கொளுத்துகிறது. உடனேயே ஒரு மேகம் வந்து விடுவது மகிழ்வாய் இருக்கிறது. இந்தப் பயணத்தில் இது திருப்புமுனை. நாளை கயானிமா திரும்புவது துவங்குகிறது. திபெத்திய கோடை ஆரம்பித்துக் கொண்டிருக்கிறது.

*26 VI 45* கியாங்மா. நேற்றிரவு (டிங்சோ) பவுர்ணமி. கிரகணமும் கூட. லாப்பாவுக்கும் கெலாங்குக்கும் கொண்டாட்டம். அவரவர் கடவுளுக்கு இருவரும் நீண்ட ஒரு மணிநேர பிரார்த்தனை நடத்தினார்கள். நடுநடுவே சந்திரனை விழுங்க முயற்சிக்கும் 'கருப்பு' அதைவிட்டு ஓடிவிடவேண்டும் என்று ரத்தத்தை உறையவைக்கும் விதமாக காட்டுக் கூச்சலான மிரட்டல்கள் வேறு! ஏரிக்கு அந்தப்பக்கம் மலைப்பகுதியில் மூன்று மைல் தொலைவில்

இருந்த மடாலய புத்த பிட்சுக்களும் சந்திரன் இல்லாததால் பாதிக்கப்பட்டிருந்தார்கள். ஏகப்பட்ட சத்தமும் துப்பாக்கி வெடி ஓசையுமாக இருந்தது. தன் கூச்சலுக்கிடையே லாப்பா 'கருப்பை'ப் பார்த்து தன் கத்தியைக்காட்டி கட்டளையிட்டான். "கருப்பும் சந்திரனை விட்டுவிட்டது! சந்திரனை விடுவித்த சந்தோஷத்துடன் தூக்கம்!... 119 கியாங்குகளை எண்ணினேன். ஒரு 'ஜாங் பென்' வந்திருந்தார். ஜாங்பென் என்றால் ஆளுநர் மாதிரி என்று வைத்துக்கொள்ளலாம். லாசாவிலிருந்து கயானிமா போகிறார் (அங்கே பொறுப் பேற்றுக் கொள்ளத்தான் போகிறார்). கூடவே ஒரு அநாகரிகமான அடிவருடிக் கும்பல் ஒன்று. தூங்குவதற்கான பை மீதே உட்கார்ந்து கொள்கிறார்! திசைகாட்டி, வெப்பமானி, புகைப்படக்கருவி. அலுமினியக் குவளை, தட்டு முட்டுசாமான், காற்றழுத்தமானி, பைனாகுலர் என்று எங்களிடமிருந்த எல்லாவற்றையும் ஒன்றுவிடாமல் பார்க்கிறார். ஆர்வமாக ஒருவர் கைமாற்றி ஒருவராக அந்த ஆட்கள் எல்லாருமே பார்க்கிறார்கள். ஜாங்பென்கள் இருக் கிறார்களே, இந்த ஆட்களின் மதிநுட்பத்தை அனுமானிக்க முடியவில்லை. தாசில்தார் நிலை அதிகாரியோ? எப்படியோ, இவற்றில் பலவற்றை இப்போதுதான் முதல்முறையாகக் கண்டிருக்கவேண்டும். அப்படித்தான் தோன்றுகிறது, ஐயமேயில்லை! திசைகாட்டியை எப்படித் திருப்பினாலும் முள் கைலாயம் பக்கம் திரும்புவதின் பிரமிப்பிலிருந்து இந்த ஆளால் மீளவே முடியவில்லை. கூடவந்த கும்பலுக்கும் ஒரே உல்லாசம். இரண்டு விதமான பனிப்பறவைகள் (ஒன்று செங்கழுத்து-ஒன்று திபெத்தியன்) எலிப்பொந்தில் கூடுகட்டி வாழ்கின்றன. அங்குள்ள எலி-முயல்களுடன் இணக்கமாக வாழ்கின்றன. பனிமைனாவும், எலியும் ஒரே பொந்துக்குள் போவதைப் பார்க்கிறேன்! ஒரே கியாங் கூட்டம் (நூறுக்கு மேல் இருக்கும்). அவ்வப்போது அவை கூட்டமாகத் தங்கும் இடங்கள் தடம் பதியப்பெற்று காணப்படுகின்றன. பாம்பு ஊர்ந்த தடம் மாதிரி இன்னொரு விதமாக (அலையாடல் தடுக்கும் வகையில்) கழுத்தில் கட்டை கட்டப்பட்ட ஒரு பசு சென்ற தடம் போல் என்றும் கூறப்படலாம். இரண்டு இரண்டரை அங்குலம் அகலம். நீளம் பெரும்பாலும் முப்பதடிகூட இருக்கும். (ஒரு இடத்தில் 90 அடிக்கும் மேலேயே காணப்பட்டது.) நேர்கோடாக இருப்பதில்லை.

ஓரளவு அலைபோன்ற அமைப்பில் உள்ளூர்காரர்கள் ஒரு காலை இழுத்து இழுத்துச் செல்லும் கழுதையின் கால் தடம் என்கின்றனர். ஆனால், அந்தக் கழுதை ஏன் அப்படி ஒரு முட்டாளாக இருக்கிறது? இந்தத் தடங்களை முன்பே யாராவது கவனித்திருப்பார்களா? ஆராய்ந்திருப்பார்களா? எல்லையற்ற பர்க்கா சமவெளியில் எல்லாமே "இதோ இங்கே" தான்! ஆனால் எதோ எங்கே! மைல் கணக்கில் போனால், போனால் போனால், போய்க்கொண்டேதான் இருக்கிறது. களைப்பே ஏற்படுகிறது. தேநீரோடு சாப்பிட வெல்லமும் சாம்ப்பா மாவும் கொண்டு பிஸ்கெட் செய்யச் சொன்னேன். விளைவு: மிட்டாய் உலகிலேயே ஒரு போதும் கேள்விப்படாத கடினமான, நீர் புகமுடியாத இரட்டைக் காங்க்ரீட்! கலவையை சரியான விகிதத்தில் செய்யாதது கெம்சிங் தவறுதான். ஒரு துண்டை பாக்கு மெல்வதுபோல் அரைமணிநேரம் மென்றுவிட்டு விட்டுவிட்டேன். காடாபெல்ட்டில் ரவையாக பயன்படுத்த மிகச் சரியான பொருள்! காட்டெருமைகள் மடிப்பு மடிப்பாக தம் மேல் தோலின் முடிகளை உதிர்க்கின்றன. (நீளமுடி குளிர்காலத்தி லிருந்து குட்டை முடி கோடைக்கு) இது உடலின் ஒவ்வொரு பாகமாக நிகழ்கிறது. முதலில் கழுத்தும் முதுகும். கோடை வெப்பம் உச்சநிலையடையும். கடைசியாக கால்களும் வயிறும், வயிற்று முடி தானாக உதிர்வதில்லை. கத்தரித்து எடுத்து ஒருவித வித்தியாசமான தக்ளியில் நூற்கிறார்கள். சுமைதாங்கிய மிருகங்களை நடத்திச்செல்லும் போதே இந்த நூற்பு வேலையும் நடக்கிறது. முகாம் துணிக்கும் படுக்கைக் கம்பளமாகவும் இது பயன்படுகிறது. அழுக்கு தெரியாதென்பதால் வெள்ளையை விட கருப்பு விரும்பப்படுகிறது, இரு மடங்கு விலை கொடுத்து அதை வாங்குகின்றனர். ஒரு எருமை ஓராண்டில் ஒரு கிலோவுக்கு மேல் கொடுக்கிறது. நாட்டுக்காளைக்கும் பெண் யாக்குக்கும் பிறந்த கலப்புக் கன்றுகள் உயர்வகை கலப்பின மாகும். 'ஜிப்பு' என்றழைக்கப்படும் இவை சுத்தமான யாக் போல இரட்டை விலைக்குப் போகின்றன. தற்போதைய விலை எழுபது ரூபாயிலிருந்து நூற்று நாற்பது வரையாகும். அதிக வலிமை, அதிகபணிவு, மலைப்பயணத்துக்கு சரி செய்துகொள்ளுதல் இவையே 'ஜிப்பு' விரும்பப்படக் காரணங்களாகும். இவற்றை ஏரிலும் பூட்டலாம். ஜிப்புவின்

சிறப்பை எல்லாரும் ஒப்புக்கொண்டாலும், எல்லாரும் ஜிப்புவின் பெருக்கத்தை ஆதரிப்பதில்லை. இயற்கைக்குக்கு விரோதமானதென்றும் அதனால் அதர்மம் என்றும் கலப்பினக்கொள்கை கருதப்படுகிறது. இதனால் கேடு காலம் வரும் என நம்பிக்கை நிலவுகிறது. எனவே கெட்டவர்களே லாபமடைகின்றனர்! பாலத்துக்கு வரமாட்டேன் என்பது போலவே கொட்டிலுக்குள் நுழையவும் யாக் முரண்டு செய்கிறது. ஆண்டுக்கு ஒரு குட்டியே போடுகிறது. பேறு காலம் 9 மாதம். கன்றீனுவது வசந்தகாலத்தில்; வாழ்நாள் 18, 21 ஆண்டுகள். இதில் 4 ஆண்டுகள் உடலில் முழு வலிமை விளங்கும்... ஒவ்வொரு கணவாயின் தலைவாசலைக்காட்டும் கற்குவியல் வரும்போதும், மேய்ப்பர்கள் கீழே குதித்து மந்திரங்களை உச்சரிக்கிறார்கள். ஒரு இசை லயத்தோடு "சோ.... சோ... சோ" என்று வெறியோடு கூவுகிறார்கள். 'சோ' என்பது ஒரு தெய்வமாயிருக்க வேண்டும். சிறு கணவாய்களைத் தாண்டுகையில் ஏன் கூவுவதில்லை என்று கேட்டதற்கு சில்லறை தேவதைகளைப் பற்றி தான் கவலைப்படுவதில்லை, அவற்றுடன் சரிசமமாக சண்டை போட்டு வாதாடமுடியும் என்றான் லாப்பா! பெரிய கடவுள்களைத்தான் உரிய இடத்தில் வைத்துப் போற்றவேண்டும்; அவற்றையே அவன் மதிப்பான். (மெய்ப்படு கனவுகளே காண்கின்றவன்?) இப்பகுதி மக்கள் மதம் என்பதை உரிய மரியாதையோடு பார்க்கிறார்களா அல்லது அதுவும் ஒரு வேடிக்கையா என்று என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை. மூடநம்பிக்கைகளும் மந்திர வித்தைகளும், ஏராளமான வகைப்பட்ட சாத்தான் களும் இவர்களை அச்சத்தில் வைத்திருக்கின்றன. நிச்சயமாக நடுக்கம்தான். ஆனால் மற்றபடி...? தக்லகாட், கயானிமா, டார்ச்சூலா முதலான இடங்களில் உள்ள மண்டிகளில் துணி, சகலவிதமான ஒதுக்கப்பட்ட கம்பளிப்பொருட்கள், மின் டார்ச்சுகள், ராணுவச் செருப்புகள், மலிவான வகைக் காலணிகள் (காலணிகளில் புதியனவும் உண்டு பழையனவும் உண்டு) லாசாவிலிருந்தும் பெரிநாகிலிருந்தும் தேயிலை, சர்க்கரை (சீனா கற்கண்டு), அரிக்கேன் விளக்குகள், ஊக்கு இப்படியாக பலவிதப்பட்ட பொருட்கள். அசாதாரணமான கதம்பம். எதிர்பார்க்க முடியாத, சேகரிப்பதில் சிரமமும்,

சேகரிக்க சிறப்பான தேர்ச்சி தேவைப்படுவதுமான பொருட்களின் விசித்திரக்கூட்டு! பண்டமாற்று வணிகமும் நடைபெறுகிறது. ஆட்டுக் கம்பளி, முடியுடனான ஆட்டுத் தோல், முடி, போராக்ஸ் உப்பு ஆகியவற்றை பண்டமாற்றில் கடைக்காரர்கள் வாங்கிக் கொள்கிறார்கள். இரண்டு மூன்று பனிப்பூனை இனவிலங்கின் தோல்கள் பார்வைக்கு வந்தன. இயந்திர முறையில் வழவழப்பாக்கப்படாத மொடமொடவென்ற தோல்கள். பண்டமாற்று முறையில் கடைக்கு வந்தவை. டார்ச்சூலாவைச் சேர்ந்த ஜமன்சிங் ஒரு பெஷாவர் வணிகனுக்கு இவற்றை ஒன்று சுமார் 130 ரூபாய் என்ற விலையில் விற்கிறான்.

13

# லோக் வான் தோ

அளவிலும் மிகச்சிறியதான சிறு பத்திரிகை ஒன்று, இடம் மாறிச் செல்கின்ற படை வீரர்களுக்காக இரண்டாம் உலகப் போரின் போது பம்பாயிலிருந்து வெளியிடப்பட்டு வந்தது. 'வெற்றி' என்ற பெயரிட்ட அதில் 1942இல் 'அண்டங்காக்கையின் ஆறாத சினம்' என்றொரு கட்டுரை வந்தது. பிரம்போக்ஷயர் கடற்கரையில் (பின்னால் உலகப் புகழ் பெறப்போகிற ஒரு) இளம் புகைப்படப் பத்திரிகையாளர் ஒரு கடற்பாறையில் தான் கண்ட நாரைக்கூடு ஒன்றை புகைப்படமெடுக்க முயன்றபோது நடந்த நிகழ்ச்சியை எழுதியிருந்தார். நாரையின் கூட்டுக்கு அருகில் இரு அண்டங்காக்கைகளும் வசித்து வந்தன. ஆசிரியர் பெயர் வான் தோ லோக் என்றிருந்தது. டேராடூனில் டூன் பள்ளியில் ஆசிரியாராயிருந்த ஜே.டி.எம். கிப்சன் ராணுவ சேவைக்கு முன்வந்து பிரிட்டிஷ் கடற்படையில் லெப்டினட் கமாண்டராகி மும்பையில் தற்காலிகமாக பணிபுரிந்து கொண்டிருந்தார். லோக் என்ற பெயரைக் கண்டதும் இது தன்னிடம் ஸ்விஸ்நாட்டு ஆங்கிலப்பள்ளி ஒன்றில் சில ஆண்டுகள் முன் பணியாற்றியபோது தம்மிடம் பயின்ற சிறுவன் லோக் தானோ என்று ஐயம் தோன்றியது. 'வெற்றி' இதழாசிரியரின் மூலம் கட்டுரையாளரைத் தொடர்புகொண்டதில் அவனேதான் என்று உறுதியாயிற்று. லண்டன் பல்கலைக்கழகத்திலும் கேம்பிரிட்ஜிலும் படித்து முடித்து விட்டு—வயது 24 அல்லது ஒன்றிரண்டு குறைய, கூட இருக்கலாம்— சிங்கப்பூர் திரும்பியிருந்தார் லோக். அவரது தந்தையார் ஒரு பெரிய வணிகப்பேரரசையே நிறுவியிருந்தார். தந்தை காலமானபின் இவர் சிறுவனாயிருந்தபோதும், பயின்று கொண்டு இருந்தபோதும் இவரது திறமைமிக்க அறிவாளியான தாயார் அதை நடத்தி வந்தார். படிப்பை முடித்து தாயகம் திரும்பியதும் அந்தப்பொறுப்பை ஏற்றுக்கொள்ளத்தான். இன்னும் ஜப்பான் ஒரு பேரலையாய் எழுந்து மலேயாவை தோற்கடித்து சிங்கப்பூரை

ஷோனான் ஆக்கிவிடாத காலம். எப்படியும் அது தவிர்க்க முடியாதது என்று உணர்ந்து லோக், தாயார், தங்கை பெங் மூவரும் சிங்கப்பூரைவிட்டு இந்தியாவுக்கு ஓடிவந்து மும்பையில் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். ஒரு டச்சுக்கப்பலில் வந்தார்களென்று நினைக்கிறேன். அந்தப் பயணத்தில் நேர்கொண்ட பயங்கர அனுபவங்களில் லோக் அநேகமாக செத்தே போய் விட்டார் என்று சொல்லலாம். ஜப்பானிய விமானம் ஒன்று அக்கப்பலை குண்டு போட்டு மூழ்கடித்துவிட்டது. அப்போது கப்பல் எரிந்து போனதில் இவருக்குக் காலில் ஒரு பெரிய காயமேற்பட்டு விட்டது. ஆஸ்திரேலியக் குறும் போர்க்கப்பல் ஒன்று இவர்களைக் காப்பாற்றிக் கரையேற்றியது. ஜகார்த்தாவில் ஒரு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு விட்டவரது கண்பார்வை அங்கு பலவார தீவிர சிகிச்சையினால்தான் பிழைத்தது. கண்போயிற்று என்றே விபத்தின்போது முடிவு செய்திருந்தனர். ஏதாவது உதவி செய்யலாமே என்ற எண்ணத்தில் "வெளிநாட்டுத் தலைமறைவு வாழ்வில் எப்படிப் பொழுதைக் கழிப்பாய் எதில் உனக்கு ஆர்வம்" என்று கிப்ஸன் அவரிடம் கேட்டார். ஆங்கில இலக்கியம், எழுத்து இவை தவிர பறவைகள், அவற்றை படமெடுத்தல் ஆகியவையும் இந்த இளைஞரது ஆர்வங்கள் என அறியவந்ததும் கிப்ஸன் பறவையியல் ஆர்வமுள்ள ஒரு நண்பரை (அதாவது என்னை) அறிமுகம் செய்துவைப்பதாய்க் கூறியிருக்கிறார். சில நாட்களுக்குப் பிறகு கிப்ஸனுடைய கடற்படைக் குடியிருப்பு இல்லத்தில் இரவு உணவில் நிகழ்ந்த அந்த சந்திப்பு. விருந்தினராய் வந்த இருவருக்குமே மகத்தான ஒரு சந்திப்பாகவும் வாழ்வை நிர்ணயிப்பதாயும் அமைந்தது. மிகமிகத் தற்செயலான அந்த சந்திப்பு அசாதரணமானவரும் நேசத்துக்கு உயர்ந்தவருமான ஒரு நண்பரை எனக்கு காட்டித்தந்தது. அது ஒரு அரிய நட்பின் ஆரம்பம். ஒத்த சிந்தனைகளும் போக்குகளும் அதை மேன்மேலும் அண்மைப்படுத்தி, ஆழ்ந்ததாயும் சீரியதாயும் பல்லாண்டுகள் காத்தன. மரணம் 1964இல் ஒரு சோகமான விமான விபத்தின் மூலம் எங்களைப் பிரிக்கும் வரை அந்த நட்பு தொடர்ந்து வாழ்ந்தது. அவருக்கும் என்னை சந்தித்ததும் என் மூலம் மும்பை இயற்கை வரலாற்றுக் கழகத்தொடர்பு கிடைத்ததும் ஒரு பேறாகவே அமைந்தது. இந்தியாவில் கழிக்க நேர்ந்த கட்டாய ஓய்வை ஒரு அர்த்தத்தோடும் இனிமையாகவும் அனுபவிக்க அவருக்கான வழி வகைகளை அது திறந்து விட்டது. இல்லையேல் அந்த காலகட்டம் உயிரோட்டமற்ற, அலுப்பும் சலிப்புமான வாழ்வாக அமைந்து போயிருக்கும். தன் திறமைகளையும் வாய்ப்புகளையும் அதிக பட்சமாகப் பயன்படுத்திக்

கொள்ளவும், அதன் மூலம் உன்னதமான பறவையியலாளராக, உலகளவில் ஒரு பறவைப் புகைப்பட நிபுணராக உருவாகவும் அது உதவியது. அவரது வாழ்நாள் முழுவதும் நானும் மும்பை கழகமும் அவரது பரிவான உதவிகளால் பயனடைந்தோம். அவருக்குப் பின்பும் அவரது கருணைமிகு அன்னை திருமதி லோக் யூ, அன்புமிக்க அழகுத்தங்கை பெங் (ஒய். பி. மெக்னிஸ் சீமாட்டி) ஆகியோர் அவ்வுதவிகளைத் தொடர்ந்து செய்தனர். மதிப்பிற்குரிய இந்த நட்பின் 22 ஆண்டுகளில் அவர் நேரடியாகவோ, அன்பான நிதி உதவி மூலமோ, என்னோடு கலந்து கொள்ளாத பறவையியல் பயணமோ, சர்வதேச மாநாடோ, புகைப்படக் கலைக்காக விடுமுறையோ ஒன்றே ஒன்று கூட இருந்ததில்லை. தானே நேரில் கலந்து கொண்டது போன்ற இன்பத்தை மறைமுகமாகப் பெற்றதாக பின்னொருகால் அவர் குறிப்பிட்டார். வணிகத்துறை அவரது நேரத்தை கொள்ளை கொண்டதால் இதுதான் அவர்செய்யக்கூடிய அதிகபட்ச ஈடுபாடாயிற்று.

பறவைகளிலும் அவற்றைப் படமெடுப்பதிலும் அவருக்கிருந்த ஆர்வம் என்னைப் பெரிதும் கவர்ந்ததால், அப்போதுதான் நான் ஆயத்தங்கள் செய்துகொண்டிருந்த கட்ச் பகுதி பறவையியல் பயணத்தில் கூடவர விருப்பமுண்டா என்று அவரைக் கேட்டேன். அதற்காகவே காத்துக் கொண்டிருந்தவர்போல், உடனே சம்மதித்தார். அடுத்த நான்கு மாதங்கள் கட்ச் பகுதியில் எளிய வாழ்க்கைக்கு அவரால் எவ்வளவு சாதாரணமாக ஈடுகொடுக்க முடிந்தது என்பதை கண்டறிய ஏராள வாய்ப்புகள் கிடைத்தன. சிக்கனமான பறவையியல் ஆய்வுகள் கட்டாயமாக்கிவிடுகிற கடுமையான வாழ்க்கையை புன்முறுவலோடு எதிர்கொண்டார். முழுக்கமுழுக்க ஊருக்கு வெளியே வாழநேர்ந்தபோதும் சரி, மூட்டைப் பூச்சிகளும் மிக சத்தமாக வாய் கொப்பளிக்கும் யாத்ரிகர்கள் நிறைந்த சத்திரங்களிலும் சரி, மாட்டுக்கொட்டில் களிலும் சரி, பிரச்சினையேயில்லை. லாந்தர் விளக்கு வெளிச்சத்தில் பகலில் பருப்பும் சோறும் இரவில் சோறும் பருப்பும் என்பதுதான் உணவு அட்டவணை. ஹிட்லரின் போர் விதவிதமான பல புதுத் தொல்லைகளை ஏற்படுத்தியிருந்தது. அவரது தாயகமான சிங்கப்பூரில் அவர் நிலைமை என்ன, வசதிகளும் வாழ்முறையும் என்ன என்பதெல்லாம் அப்போது எனக்குத் தெரியாதென்றாலும், இந்த மாதிரி சிரமங்களுக்கு பழக்கப்பட்டவரல்ல என்பது வெளிப்படை பார்வைக்கு மகிழ்ச்சியோடும், நல்லவிதமாகவும் அவர் இவற்றை அனுசரித்துக் கொண்டது மிகவும் பாராட்டுக்குரியதாகும்.

ஏறத்தாழ இதே நிலையில் நாங்கள் கட்ச்சில் ஒன்றாய் வாழ்ந்த காலத்தில் ஒரே ஒரு முறை கூட அவர் சிணுங்கியதில்லை. வாய்த்த வாய்ப்புக் குறைவுபற்றி வாய் திறந்ததில்லை. ஜப்பானியர்களால் நாட்டைவிட்டு வெளியேற நேரும்வரை சிங்கப்பூரில் ராஜவாழ்வு நடத்தியதைப்பற்றி குறிப்பால் கூட உணர்த்தியதுமில்லை. இந்த சிரமமான சூழ்நிலையிலேயே பிறந்து வளர்ந்து வாழ்ந்தவர் போல் ஒரு இயல்பான மகிழ்ச்சியே காணக்கிடைக்கும். மோசமான வயிற்றுப்போக்குதான் ஒரே சிரமம். அதையும் முனகல், புகார் செய்தல் இன்றி காலம்முழுதும் சகித்துக்காண்டிருந்தார் என்பது உணர முடியாதது. நள்ளிரவில் புதரைத் தேடி திறந்தவெளியில் ஓடநேர்வது உல்லாச அனுபவமா என்ன?

கட்ச் பணி ஒரு சோதனை என்று வைத்துக்கொண்டால் அதில் அவருக்குக் கிடைத்தது மிகப்பெரிய வெற்றியாகும். எப்போதும் தன் முழு ஆதரவையும் தருகிற ஒரு சக ஊழியனாக, சகோதரனாக, கடமைப்பற்றாளனாக விளங்கிய அவரைக் கண்டு பிடித்தது எனக்கு மிகவும் மகிழ்வளிக்கிறது. அவரது கூரிய நகைச்சுவை, பண்பு தவறாமை, நடைபாவனைகள், நேசபாவம், அனைவருடனும் கலந்து பழகும் தன்மை, இனிய இயல்பினர் அல்லாத ஒரு தலைவனின் கீழும் சளைக்காமல் இன்முகத்தோடு பணி செய்த பண்பு ஆகியவை அவரை எங்கள் களப்பணிக்குழுவின் ஒரு முக்கிய அங்கத்தினராக ஆக்கின. எங்கள் இருவரது ஆர்வங்களும் சுவைகளும் கிட்டத்தட்ட முழு ஒற்றுமை கொண் டிருந்ததால் என் பிற்கால நண்பர்கள் எவரிலும் இவர் நட்பே நெருக்கமும் ஆழமும் உடையதாயிற்று. ஜப்பானியப் போர் நடந்து கொண்டிருந்தபோது அது காரணமாக அவர் நாடு துறந்து பாரதத்தில் வாழ நேரிட்டது. அதே சமயத்தில் இங்கே நாடுதழுவிய முறையில் வட்டாரப் பறவையியல் ஆய்வுகள் நிகழ்ந்ததால் இயற்கை வரலாறு, பறவையியல் ஆகியவற்றில் அவருக்கு இருந்த ஆர்வத்துக்கு இவை இனியாக அமைந்தது கடவுள் அருள் எனலாம். அவற்றுக் காகவும், பறவைகளைப் படமெடுப்பதற்கும் அவர் தம் நேரம், சக்தி இரண்டையும் செலவிட்டார். பறவைகளைப் படமெடுப்பதில் விற்பன்னர் என்றும் பெயர் பெற்றார்.

ஆங்கில இலக்கியத்தில் அவருக்கு ஆறாத காதலிருந்தது. ஒரு தேர்ந்த ரசிகருக்குரிய ரசனையும், விமர்சனத் தெளிவும் இருந்தது. இதுவே அவரை முகாமிலிருக்கும்போது எனக்கு கவர்கின்ற, ஆர்வத்தைத் தூண்டுகிற ஒரு சகாவாக ஆக்கியது. தினப்படி வேலைகள் முடிந்து, இரவு சாப்பிட்டபிறகு மங்கிய இரு லாந்தர்

விளக்குகளின் ஒளியில் படிக்க அமர்வது ஒரு சுகானுபவம். படிப்பதில் அவ்வப்போது தன்னைக் கவரும் பகுதிகளை ரசித்து, சத்தமாகப் படிப்பார்—அதற்குரிய பாவனைகள் வேறு! எளிய நடையில் நகைச்சுவை இழையோட அவரே எழுதும் ஆங்கிலம் அருமையாக இருக்கும். நாங்கள் சேர்ந்து சென்ற பல சேகரிப்புப் பயணங்களிலும் அன்றாட நடவடிக்கைகள் அனைத்தையும் விபரமாக தெளிவாக நாட்குறிப்புகளில் அவர் குறித்து வைத்தது நான் எப்போதோ மறந்து விட்ட பல சம்பவங்களை நினைவுகூர உதவியது. என்னுடைய குறிப்புகளில் உலர்ந்துபோன (சுவையற்ற) பறவைகளும் சுற்றுப்புற இயலும்தானே காணக்கிடைக்கும்!

ஹைதராபாத் கணக்கிட்டு சமயம் போலவேதான் பெரும் பாலான சமயங்களில் ஒரு முகாமிலிருந்து அடுத்ததற்கு போவ தெல்லாம் தனியார்க்கு சொந்தமான 'பேருந்தாக மாற்றப்பட்ட' வண்டிகளில்தான் நடைபெறும். பொதுவாக அவை ஏகமாக உழைத்த பழைய வண்டிகள். அதிகப்படியாக வேலைவாங்கப்பட்டவை. பெட்ரோல் கிடைப்பது அரிது. போர்க்காலத்தில், அதுவும் குறிப்பிட்ட அளவுக்கு மட்டுமே, வாங்குவதற்கு அனுமதி. எனவே அவை நிலக்கரி வாயுவில் ஓடிக்கொண்டிருந்தன. வண்டி தானே சமாளிக்க முடியாத செங்குத்து ஏற்றங்களில் பயணிகள் எல்லாரும் இறங்கித் தள்ள வேண்டியதுதான். இந்தக் கேளிக்கையில் வான் தோ எப்போதும் ஆர்வமாக ஈடுபடுபவர். ஆனால் ஒரு தரம், வழக்கத்தைவிட புழுக்கமான ஒரு வெயில் நாள் நண்பகலில் சக்திக்கு மீறிய சிரமத்துக்குப் பின், வண்டியிலேயே இருந்து கொண்டு "சலீம், கட்டாயம் இந்த மாதிரி வேலைக்கெல்லாம் நீங்கள் இதற்கேற்ற ஒரு பெரிய வண்டி சொந்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். இந்த மாதிரி சிரமமெல்லாம் அப்போது இராது. நினைத்த போது சாதனங்களையும் பிற சாமான்களையும் ஏற்றிக்கொண்டு நினைத்ததும் எங்கு வேண்டுமானாலும் போகமுடியும்" என்று சாதாரணமாக சொன்னார். அது ஒரு பிழையற்ற கருத்தாக பட்டது. முற்றிலும் ஒப்புக்கொண்டேன். ஆனால் அப்போதைய நிதி வசதியும் பிற நிலவரங்களும் இருந்த நிலையில் அதைப் பற்றி நினைத்துப் பார்ப்பதற்கின்றி அப்படியே விட்டுவிட்டேன். சில மாதங்களுக்குப் பிறகு ஒரு சுகமான சூழலில் அது நினைவூட்டப்பட்டது.

போரில் ஜப்பான் தோற்று, ஷோனன் மீண்டும் பழையபடி சிங்கப்பூராக ஆயிற்று. பரவிக்கிடந்த புலம்பெயர் மக்கள் விரைவில் ஒன்று சேர்க்கப்பட்டு சிங்கைத்தீவுக்கு அனுப்பப்படுவதில் ஆங்கில அரசு தீவீரமாயிற்று. சீர்குலைக்கப்பட்டிருந்த வணிகம், தொழில்

ஆகியவற்றை எவ்வளவு சீக்கிரம் இயலுமோ அவ்வளவு விரைவில் மறு உயிர்ப்பிக்க அரசு விழைந்தது. திரும்புவதற்கு தெரிந்தெடுக்கப் பட்ட முதல் அணியிலேயே வான் தோ இடம் பெற்றிருந்தார். தன் தொழில் முற்றிலும் நசித்துப்போயிருக்கும். மீண்டும் அடியைப்பிடி என்று ஆரம்பிக்கவேண்டியிருக்கும் என்று அஞ்சிக் கொண்டிருந்த அவர் ஆச்சரியப்படும் வகையில், அவரது மேலாளரான ஒரு சீனரின் திறமையினாலும் நுண்ணறிவாலும் ஜப்பானியர் ஆக்கிரமிப்பின் போதும்கூட மேலும் வளர்ந்திருந்தது. மறுபடியும் சிங்கப்பூரின் மிகப்பெரும் பணக்காரர்களில் ஒருவராக வான் தோ இருந்தார்! திரும்பியவுடன் எழுதிய கடிதங்களில் ஒன்றில் மகிழ்வுடன் இதை எனக்கு எழுதினார். அதிலேயே நான் சற்று முன் குறிப்பிட்ட மத்தியப் பிரதேசத்தில் நீண்டநேரம், நெடுந்தூரம் வண்டியை மேலே தள்ளிச் சென்ற நிகழ்வையும் குறிப்பிட்டு தான் 'தத்துவார்த்தமாக' என் பணிகளுக்கு ஒரு வண்டி வைத்துக்கொள்வதன் அவசியம் பற்றிக் கூறியதையும் நினைவூட்டி "இத்துடன் ஒரு காசோலை இணைத்துள்ளேன்; பொருத்தமான ஒரு வண்டியை நீங்களே வாங்கிக் கொள்ளவும். இது போதாவிடில், இந்தக் காசோலை எங்கிருந்து வருகிறதோ, அங்கே இன்னும் இருக்கிறது என்பதை நினைவில் இருத்தவும்" என்றும் எழுதியிருந்தார்.

சீனர்களுக்கே உரிய அழகை ஆராதிக்கும் தொல்மரபுக்கேற்ற அவரது ரசனை குறிப்பிடத்தக்கது. அழகிய மலைகள், இயற்கைக் காட்சிகள், வண்ணப்பூக்கள், பறவைகள், அழகிய படங்கள், அழகிய பீங்கான் பொருட்கள் என்று அழகான எல்லாவற்றையும் அவர் ரசித்தார். அழகிகளும் விதிவிலக்கல்ல. அந்த அம்சத்தில் அவர் ஒரு பரமரசிகர்! எப்போது எதிர்கொள்ள நேர்ந்தாலும், நாட்குறிப்பில் தவறாது இடம்பெறும் முக்கியத்துவம் அவர்களுக்கிருந்தது. அவரது முதல் மனைவி கிறிஸ்டினா பேரழகி. ஆனால் அந்தப்பெண்மணியே அதை மிகவும் அறிந்திருந்ததுதான் அவப்பேறு. தொடர்ந்து தன் மீது புகழ்மாரி பொழிந்து கொண்டேயிருக்கும்போது ஏற்படும் அளவு மகிழ்ச்சி வேறு எப்போதும் அவருக்கு ஏற்பட்டதில்லை. நான் பெண்களை மகிழ்வித்துப் பேசக் கற்றவன் அல்ல. இவ்வளவு வெளிப்படையாக அவரது பெருமையை அதிகப்படுத்த என்னால் முடிந்ததேயில்லை. எனவே அவருக்கு என்னைப் பிடிக்கவில்லை என்றே நினைக்கிறேன். தன் கணவருக்கு என்னிடமிருந்த நெருக்கம்கூட அவருக்கு ஒரு வகை எரிச்சலைக் கொடுத்திருந்தது என்பது என் ஐயம் (இது என் தன்னுணர்வாக இருக்கவும் கூடும்). அதுவும் குறிப்பாக, பன்னாட்டுப் பறவையியல் மாநாடுகளில்

மூவருமாக இருந்தது, ஐரோப்பாவிலும் வேறிடங்களிலும் படமெடுக்கவோ, உல்லாச கார்ப்பயணமாகவோ மூவருமாக சுற்றியது, அடிக்கடி சிங்கப்பூர் போனபோதெல்லாம் வான்தோவின் அழைப்பில் அவர்கள் விருந்தினராகத் தங்கியது ஆகிய சமயங்களில் இவ்வுணர்வு ஏற்பட்டிருக்கும் என்று நினைக்கிறேன். தன் கவர்ச்சியிலும் அழகிலும் இந்த அம்மணி இவ்வளவு முக்கியத்துவம் கண்டது பரிதாபம்தான். அதற்குத் தேவையேயில்லை. ஏனெனில், இன்னும் வலுவான ஆழமான பல நற்பண்புகளும் சிறப்புகளும் அவருக்கு இருந்தன. அவரையொத்த மக்களிடமிருந்து பிரித்து உயர்த்திக்காட்டும் வலு அவற்றுக்கிருந்தது. ஒரு துணையாகவும், விருந்தோம்பும் இல்லரசியாகவும் தமது இயல்புகளினாலே அவர் வெல்ல முடியாத சிறப்பினராக விளங்கியதுண்டு—அவர் விரும்பிய நேரங்களில். ஆனாலும் மனோ நிலைகளிலும் முக்கிய விஷயங் களிலும் இருவரும் வேறுவேறு துருவங்களாக விளங்கியதாக எனக்குப்பட்டது. ஆரம்பம் முதலே அது அப்படித்தான். நாங்கள் மூவருமாக—1950இல் அவர்கள் திருமணம் நடந்த இரு மாதங்களுக்கெல்லாம்—உல்லாசப்பயணமாக கஷ்மீர் போயிருந்த போதே இது எனக்கு தெளிவாயிற்று. அவர் அணுகுமுறை அமைதி யானது, அறிவார்ந்தது—அம்மையாரது அணுகுமுறை உல்லாசமும் பகட்டும் கொண்டது. இந்த உறவு நீடிக்காது என்று என்னுள் ஓர் அச்சம் பிறந்தது. 'கடும்புயலும் பொய்யான அமைதியும்' நிறைந்த சுமார் பத்தாண்டுகளுக்குப்பின் அது முடிவுக்கு வந்தது. வாழ்க்கைப் பணமாக 93000 டாலர்கள் கொடுத்து வான் தோ விடுதலை பெற்றார் (தொண்ணூற்று ஏழாயிரமோ?) அவர் நிம்மதிப் பெரு மூச்சுடன் சொன்னதுபோல 'அந்த அளவில் அது மலிவுதான்!'

1951 வசந்தத்திலும் கோடையிலுமாக இவர்களுடன் பறவை களைப் படமெடுக்க பயணமாக கஷ்மீர் சென்று வந்த சிறிது காலத்தில் பம்பாய் பல்கலைக்கழகம் மகளிர் விடுதியில் கஷ்மீர் பறவைகள் பற்றிய புகைப்பட உரை நிகழ்ச்சி ஒன்றுக்கு என்னை அழைத்திருந்தனர். அங்கு சுமார் 35 வயதான ஒரு பெண்பத்திரிகை யாளரைக் கண்டேன். கவர்ச்சிக் கன்னியாக இல்லாவிட்டாலும் இந்த மங்கை தம் நளினத்தாலும் மதிநுட்பத்தாலும், தெஹ்மினா மறைவுக்குப் பின் முதல்முறையாக என்னை வீழ்த்தினார். காமு-ஹசன் இருவரும் விடுமுறையில் ஜப்பான் சென்றிருந்தபோது, வார இறுதிநாட்களை 2 முறை பாலிஹில் 46ம் எண் வீட்டில் அவர் கழித்தார். பிற சகோதரியருடனும் மருமகள்களுடனும் என்னை இன்னும் ஒரு தரம் குடும்பத்தளையில் கட்டுவதற்கான

முயற்சிகளிலும், சக்திகளிலும், இறங்கியிருந்த என் இனிய தங்கை காமுவுக்கு இது பற்றிய வதந்திகள் முழுமை பெறாத நம்பிக்கையை ஏற்படுத்தின. ஏ.கே. (அவளை அப்படியே அழைப்போம்) மன்னரின் விருந்தினராக பரத்பூருக்கு பறவைகள் காண என்னோடும் வான்தோவோடும் வந்திருந்தபோது நாங்கள் ஒருவரை ஒருவர் மேலும் நன்கு அறியத் தலைப்பட்டோம். பின் தில்லியிலும் மும்பையிலும் அதிகம் சந்தித்தோம். மெல்லிய நினைவலைகளுடன் அவளை இப்போதும் சிலபோது நினைத்துப் பார்ப்பது உண்மைதான் என்றாலும் எங்களது கவர்ச்சி சிறிது காலம்தான் நீடித்தது என்பது மொத்தத்தில் எனக்கு நல்லதாகவே அமைந்தது. அவளுக்கும் அப்படியே என்பதும் சந்தேகமற்ற உண்மையாகும். காலப்போக்கில், ஒரு சுயேச்சையான பறவை இயலாளனுக்கு விதிக்கப்பட்ட கரடுமுரடான நாடோடி வாழ்வை சுவைக்கக் கூடியவளாக அவள் எனக்குத் தோன்றவில்லை. இரண்டு மூன்றாண்டுகளில் இந்த மாயை காற்றோடு போய்விட்டது. அதன்பின் அவளைப் பற்றி ஏதும் கேள்விப்படவுமில்லை. மிக விரிவாக வான்தோ அந்தக்காலகட்ட நாட்குறிப்பில் மறக்கமுடியாத அந்த பரத்பூரிலிருந்த வாரம் பற்றி எழுதியுள்ள கீழ்கண்ட பகுதியில் அவர் தன் 'அருமை நாட்குறிப்பில்' தன் உணர்வுகளைப் பதித்துள்ளார்:

> "அக்டோபர் 19: திருமதி. ஏ.கே தில்லியிலிருந்து வந்தாள். கறுப்புநிறம். மெல்லிய உடல். பொலிவான முகம். வாழ்வில் ஒரு லட்சியம் கொண்ட பெண்மணி. நகைச்சுவை உணர்வு குறைந்த அளவே. சைவ உணவாளி. கலைத்தன்மை. வயது 35 இருக்கலாம். ஐந்தே காலடி உயரம். எடை, இல்லையென்று சொல்லுமளவுக்குக் குறைவு. பொதுவுடமை அனுதாபி. அக்டோபர் 22: நெடுநேரம் (இரவு 11.20 வரை) மன்னர் மாளிகை மொட்டை மாடியில் இந்திய ஆடல் பாடல் கலைகளை விவாதித்துக்கொண்டு அமர்ந்திருந்தோம். முதலில் நான் அனுமானித்ததையும் விட இவள் அறிவாளியாகவும் ஆர்வத்தை தூண்டுபவளாகவும் இருக்கிறாள். சலீமின் வாழ்க்கையில் அகாலமாக வசந்தம் மீண்டும் குறுக்கிடுகிறது. சலீம் தவறாக எண்ணமாட்டார் என்று நம்புகிறேன்- ஆனால் அவரைப்பற்றி அச்சம் எழுகிறது.

அச்சத்துக்கு அவசியமே இருக்கவில்லை. எல்லாம் வந்த வேகத்திலேயே போயும் விட்டது!

கட்ச் சேகரிப்புப் பயணத்துக்கும், அவர் விடுவிக்கப்பட்ட சிங்கப்பூருக்கு திரும்புவதற்கும் இடையில் இருவருமாக பெரிய அளவில் முறையான வட்டாரக்கணக்கீடு எதுவும் செய்யவில்லை. ஆனால் சின்னச் சின்னப் பயணங்களாக நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் அடிக்கடி வேட்டைக்கும் சேகரிப்புக்கும் சென்று கொண்டிருந்தோம். இருவரும் 1945இல் திபெத் போகவேண்டும் என்று மிக ஆர்வம் கொண்டிருந்தோம். கவனமாக திட்டமிட்டோம். ஆனால், ஒரு சிறு அறுவை சிகிச்சைக்காக அவர் வருவதைக் கைவிடநேர்ந்தது. ஏற்பாடுகளின் கடைசி கட்டத்தில் இப்படி நேர்ந்ததில் இருவருக்கும் ஏமாற்றம்தான். பரத்பூர், கஷ்மீர், சிக்கிம் ஆகிய இடங்களுக்கு அவர் நிரந்தரமாக சிங்கப்பூரில் தம்மை நிலைப்படுத்திக்கொண்ட பிறகு போனோம். அவை அளவில் பெரியன. சேகரிப்பும் படமெடுத்தலும் அவற்றின் நோக்கமாயிருந்தது. முன் பயணங்களைவிட தொழிற்கருவிகள், உணவு முதலிய தேவைப் பொருட்கள் ஆகிய இரு வகைகளிலும் இப்பயணங்கள் வசதியாக இருந்தன. விடுமுறைப்பயணங்கள் என்றே சொல்லிவிடலாம். ஆனால் அறிவியல் பூர்வமாக அர்த்தமுள்ளவைகளாகவும் அமைந்திருந்தன.

"சிக்கிம் பறவைகள்" என்ற நூல் இப்படிப்பட்ட இரு பயணங்களின் பயனாக உருவானதுதான். மும்மூன்று மாதங்கள் எடுத்துக்கொண்ட இவ்விரு பயணங்களும் அவர் நிதியுதவியில் ஏற்பாடு செய்யப்பட்டவைதாம். ஒன்றில் அவரும் கலந்து கொண்டார். அவரது அந்த காலகட்டத்து நாட்குறிப்புகள் சுவையான, அதேசமயம் விடுபட்டுப் போயிருக்கக்கூடிய, நான் மறந்துவிட்ட, விறுவிறுப்பு மிக்க பல நிகழ்ச்சிகளை நினைவுபடுத்துகின்றன. பல சம்பவங்கள் அவற்றின் பக்கங்களில் விபரங்களைத்தாங்கி விவரிக்கப்பட்டுள்ளன. எல்லைப்புற சாலையமைப்பு நிறுவனமும் ஜனநாயகமும் சிக்கிமை "நவீனப்படுத்துவதற்கு" முந்தைய காலம். அநேகமாக 1955ம் ஆண்டு காங்டாக் நகருக்கு அப்பால் ஜீப் போகக்கூடிய அளவுக்குகூட சாலைகள் கிடையாது. முதுகிலும் கோவேறு கழுதை அல்லது கூலியாள் மூலமும் சாமான்களை எடுத்துக்கொண்டு நிதானமாக அனுபவித்து ரசித்த பயணங்கள். தலைநகர் காங்டாக் தாண்டினால் வாகனப் பிராப்தி கிடையாது.

கீ சிங்—பெமியாங்க் பகுதி சுவைபற்றி நாட்குறிப்பு சொல்வது:

> "சென்றடைவதை விட, சென்று கொண்டிருப்பதே இனிமை என்று எழுதியவன் நிச்சயமாக இமாலயப் பகுதியில் 1 மைல் கூட பயணம் செய்திருக்கமாட்டான்! ஒவ்வொருமுறை நடைப்பயணத்தைத் துவங்கும்போதும்,

சென்றடைந்தால் மகிழ்ச்சி என்ற எண்ணமே என்னுள் எப்போதும் எழும்."

பாதையில் ஒரு பயணிகள் விடுதிபற்றி: இவ்விடுதியில் பாத்திரங்கள், படுக்கை, பாய் முதலிய தேவைப் பொருட்களும் இருப்பதால் வசதியாக இருக்கிறது. வெளித் தாழ்வாரத்தில் அமர்ந்து குறிப்பெழுதிக் கொண்டிருக் கிறேன். இது தெமிவிடுதி. முழு வீச்சில் மலர்ந்து எழில்பரப்பும் ரோஜாச் செடிகள் கண்ணை நிறைக்கின்றன. பின்புலத்தில் நீல மலைகள் பனியில் புதைந்திருக்கும் மாட்சி. மாலை மணி ஐந்தே முக்கால்தான். நிறைவாகக் குளித்துவிட்டு பைஜாமா அணிந்து அமர்ந்திருக்கிறேன். உடலும் மனமும் லேசாகி, ஒருவித மகிழ்ச்சி என்னை நிறைத்திருக்க, வெளியே பார்க்கிறேன். வெண்முடிகொண்ட பறவைகள் மகிழ்ச்சியின் ஆரவாரம் எழுப்பியபடி வந்தமர் கின்றன. அருள்மொழி கூறும் பறவைகள் ஒலி. சிறிது நேரத்தில் இரவுச்சாப்பாடு. எட்டரை மணியளவில் உறக்கம். இந்த வாழ்வு இதமாயிருக்கிறது, சிங்கப்பூர் நிலைமைகளுக்கு நேர்மாறாக; நாளிதழ் படித்து எத்தனையோ நாள் ஆகிவிட்டது. காலை 5 மணி ஆனதும் எழுந்திருக்க வேண்டியது. 11 மணிக்கு சாப்பாடு. ஆறு–ஆறரைக்கே இராச்சாப்பாடு. ஒன்பதுக்குள் தூக்கம். சிங்டம் பாதைப்பற்றி: சந்தைக்குப்போகும் அழகிய பெண்களைப் பார்க்கிறோம். படமெடுக்க அனுமதி கேட்கிறேன்.

கல்கத்தா, சிக்கிம், அஸ்ஸாம் எல்லாவற்றையும் உள்ளடக்கிய பெரிய பகுதியின் மத்திய பொதுப்பணித்துறை வட்டத்தின் மேலாண்மைப் பொறியாளர் ஒருவரும் அதே சமயம் எங்களுடன் காங்டாக் ரெசிடென்சியில் தங்கியிருந்தார். பணி நிமித்தம் பயணம் மேற்கொண்டிருந்த அவர் வான் தோவின் நுட்பமான நாட்குறிப்பில் விடுபடமுடியாத முக்கியத்துவம் பெற்றார். அவரைப்பற்றி:

அவர் ஒரு விந்தை மனிதர். சாப்பாட்டு மேசைக்கான நாகரிகங்கள் என நாம் நினைக்கும் எதுவும் இவரிடம் இல்லை. கத்தியால் சாப்பிடுவார். சூப் குடிக்கும்போது ஓசையெழக் குடிப்பார். மூக்கை சிந்துவார். பேச்சுகூட ஒரு மாதிரியிருக்கும். புரிவது கடினம். சிக்கிம் வானிலைக்கு கான்க்ரீட் சாலைகள் 'பொருத்தமானவையல்ல' என்று கருதுபவர். அதைப்பற்றி சொல்வது "அவை பிளவுறும்,

மூழ்கிவிடும். கல்போல் இறுகிக்கொள்ளும். இது என்ன அர்த்தமற்ற வேலை, செலவும் அதிகம்" (இங்கு வான்-தோ விளங்காதது என்று குறிப்பிடுவது, பொறியாளரின் ஆங்கில உச்சரிப்பையும் இலக்கணப் பிழைகளையும்—'ஓ' என்பதை 'எ' போலவும் 'ஓ'வை 'அ'வை போலவும் உச்சரிப்பார். ஒருமை, பன்மை முதலிய இலக்கணப் பிழைகள்இருக்கும் என்று குறிப்பிடுகிறார்-மொழிபெயர்ப்பாளர்). அஸ்ஸாம் என்னைப் பற்றி 'அது மலிவில்லை; நான் சொல்வது என்னவென்றால் எங்கள் மண்ணில் கூட; சொல்வது புரிகிறதா?' என்பார். சிக்கிம் மன்னர் சொக்யால் அரசாங்கத்தின் தலைமைச் செயலாளர் தென்சப்பா இப்படியல்ல. அவர் அறிவாளி; குறும்பு மிளிரும் நகைச்சுவை உணர்வுகொண்டவர். வடக்கு சிக்கிமில் 'உள் வரம்பை'த் தாண்டிப்போகும்போது என்னை 'கவனிக்க' ஒரு தாசில்தாரை நியமித்திருந்தார்கள். அவர் என் கூடவே இருப்பார். ("பறவைகளை கவனிக்கிறவரை கவனிக்க ஒரு கவனிப்பாளர்" என்று சலீம் சொல்வார்) அதைப்பற்றி அறிய நேர்ந்தபோது தலைமைச்செயலர் சொன்னது: "அவரைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்; அவர் மாவட்டத்துக்கு அவர்தான் ராஜா. கண்ணசைவில் காரியங்கள் நிறைவேறி விடும். நல்ல பாம்பிடமிருந்து நஞ்செடுத்து அதையே மருந்தாக்கி விடுகிறோமில்லையா, இவரையும் அதே மாதிரி பயன்படுத்திக்கொள்ளுங்கள்: ஆனால், சும்மா சொல்லக் கூடாது. பாம்பைவிட இவர் பலமடங்கு நல்லவர்! இது எப்படி இருக்கிறது?

உண்மையில் தாசில்தார் உடனிருப்பு பேருதவியாக இருந்தது. சாமான்கள் பற்றாக்குறையோ, நடைமுறைப் பிரச்சினைகளோ எதுவுமே எழாமல் உதவியது.

தாங்கூ அருகில் 4000 மீட்டர் உயரத்தில் அமைந்துள்ள யாக்தாங் எனுமிடத்தில் ஒரு இபிஸ்பில் பறவையின் கூட்டை 18.4.1955இல் படமெடுத்தது பற்றி நாட்குறிப்பு கூறுவதைப் பாருங்கள்: இரவோடிரவாக மறைவிடத்தைவிட்டு நீங்கியதால் பறவை அமைதியாய் கிடந்தது. அதை பயப்படுத்திவிடாமல் கூட்டுக்குள் சலீம் எந்தவித ஓசையும் எழுப்பமுடிந்தது. அடைகாத்தபடி அது நெடுநேரம் அசையாமல் உட்கார்ந்திருந்ததில் சலிப்படைந்த சலீம் என்னென்னவோ செய்துபார்த்தும், ஊஹூம்! பிடித்து தள்ளாதது

தான் பாக்கி. 'மன்னரை மகேசன் காப்பாராக' பாடலைக்கூட தொண்டைகிழியப் பாடிப்பார்த்தார். இந்தப்பாடலாவது பறவையை உடனே எழுந்து நிற்கவாவது செய்யும் என்று நான் எதிர்பார்த்தேன்! ஒரு பயனுமில்லை.

தாங்கூ பகுதிபற்றி நாட்குறிப்பு: 'எங்கெங்கு காணினும் பிரார்த்தனைக் கொடிகள்தான். மடலாயத்தில் கிடைக்கும் அச்சுக் களால் பாடல்கள் கொடிகளில் அச்சிடப்பட்டுள்ளன. அறிவியலை நம்பும் நாம் இவற்றையும் நம்புகிறோமோ அல்லது டால்ஸ்டாய் மாதிரி 'அறிவியல் என்பது முழுமுதல் உண்மையை அறிந்திருப் பதாக நினைப்பது' என்று சொல்லிவிடலாமா? அல்லது ஒரு அறிவியல்வாதி எச்சரிக்கையாக பிரார்த்தித்துக் கொண்ட மாதிரியாக "கடவுளே, நீர் இருந்தால், என் ஆன்மா என்று ஒன்றும் இருந்தால், அதை ரட்சியும்' என்று பிரார்த்தித்துக்கொண்டு விடுவதே உத்தமமா?"

சிக்கிம் பறவைகளைப் பற்றிச் சொல்லும்போது, 1955வாக்கில் சொக்யால் மன்னரின் தேசத்தில் நடத்திய கணக்கீட்டின்போது நிகழ்ந்த சங்கடமான சம்பவமொன்று நினைவுவருகிறது. லாச்சென் என்ற இடத்தில் தங்கியிருந்தபோது, அங்கு ஒரு கடுமையான நிலநடுக்கம் ஏற்பட்டு சுற்றுப்புற குன்றுகளில் நிலச்சரிவுகள் ஏற்பட்டன. சும்தாங் போகும் கழுதைப்பாதையின் பெரும்பகுதி சரிந்து, அநேகமாக நேர்செங்குத்தாக கீழே ஓடிக்கொண்டிருக்கும் நதியில் விழுந்துவிட்டது. ஆழம் பலநூறு அடிகள். சுமைதூக்கிகளும் விலங்குகளும், அச்சுறுத்தும் குறுகலான மாற்று நடைபாதையில், சரிவுகண்ட பழைய பாதையின் இடிபாடுகளுக்கிடையில் இடறிவிழ நேர்ந்ததை சில நாட்களுக்குப்பிறகுதான் அதன் வழியே செல்லும் போது அறியநேர்ந்தது. எப்போதும் போல் என் சாதனங்களையும், தொலைக்கண்ணாடியையும் நானே சுமந்துகொண்டு கூலிகளுக்கும் கழுதைகளுக்கும் சிறுதொலைவு முன்னதாக சென்று கொண் டிருந்தேன். போகும் வழியில் அமைதியாக பறவைகளைக் கவனித்தபடி செல்வது எண்ணம். இந்த பயங்கரப்பாதையில் சிரமத்தோடு முன்னேறுகையில், இடிபாடுகளால் என் பாதை தடைபட்டது. அந்த இடத்தில் கற்களும் மணற்பாறைகளும் உருண்டு விழுந்து கொண்டிருந்தன. அகலம் இரண்டே மீட்டர்தான். எனினும் காலூன்றித்தான் அதைக்கடந்து போகமுடியும். சறுக்கிவிழுந்து செங்குத்தாக பாதாள நதியில் விழக்கூடிய அபாயம் என்னை பின்னடையச் செய்தது. தலைசுற்றி மயக்கம் வருவதுபோலாகி செயலிழக்கச்செய்தது. ஆணியறைந்ததுபோல் நின்று விட்டேன்.

முன்னே செல்லவும் முடியவில்லை, திரும்பிவிடவும் முடியவில்லை. எல்லாரும் வரட்டும். அதற்கு எவ்வளவு நேரமானாலும் சரி என்று அப்படியே அங்கு அமர்ந்துவிட்டேன். சுமார் அரைமணிநேரம் காத்திருந்தபோது, தொழிற்சாலையின் கன்வேயர் பெல்டினைப் போல சாமான்களையும் மனிதர்களையும் தானே இட்டுச்சென்று கொண்டிருந்த இடிபாடுகளைப் பார்த்துக் கொண்டிருப்பது ஒருவித மனமயக்கத்தையும் உண்டாக்கியது. அவ்விசித்திர மனோநிலை தன்னம்பிக்கைக்கு உகந்ததாக இல்லை. கனத்த சுமையுடன் முதல் கூலியாள் வந்து சேர்ந்தபோதுதான் பெரும் ஆறுதலாயிருந்தது. நிழலில்லாத அந்த இடத்தில் அப்படி யாராவது அமர்ந்திருப் பார்களா? அது அவன் மனதில் ஒரு புதிராய் இருந்ததாகப்பட்டது. ஊமைபோல் சைகை மொழியில் நான் காட்டியதை பார்த்தபோது நிலைமை அவனுக்கும் விளங்கிற்று. ஒருகையால் என்னைத் தாங்கியபடி சாதாரணமாக அவன் காலெடுத்து வைத்து அதைக் கடந்து என்னையும் அப்பால் கொண்டு சென்றான். இதெல்லாம் தினசரி வேலையில் ஒரு அங்கம் என்பது போல ஏதுமே நடவாத பாவனையில் அவன் நடைப் பயணம் தொடர்ந்தது. அவனுக்குப் பின்னே வந்த கூலியாட்களும் பாதையில் கோளாறு என்பதையே அறியாதவர்கள்போல பின்னால் வந்தார்கள். கவலையே இல்லாமல் அந்த உருண்டு வரும் இடிபாடுகள் இல்லாததுபோல அவற்றின்மீது கால் வைத்து கடந்து வந்தார்கள். இப்போது அதை நினைத்துப் பார்க்கும்போதும் அது எனக்குப் பெருமை சேர்க்கக்கூடியதாக இல்லை. என் ஆணவத்துக்கு அது செம்மையான அடி.

இதேபோல் மனமயக்கம் ஏற்படுத்திய, ‘முன்னும் போக முடியாது பின்னும் போகமுடியாது’ என்ற உணர்வு என்னை ஆட்கொண்ட சந்தர்ப்பம் இன்னும் ஒன்றே ஒன்று உண்டு. முன்பே எச்சரிக்கப் பட்டிருந்தும் நான் பிடிவாதம் செய்து, என் சாகச உணர்வு உந்தி, ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழக அறிவியல் அருங்காட்சி யகத்தின் நூறடி உயரக் கோபுரத்தில் ஏறமுயன்ற அனுபவம்தான் அது. அங்கே காற்றுப்போக்குக்காக இருந்த சின்னஞ்சிறு சன்னல்களில் இருந்த பறவைக் கூடுகளைப் பார்க்க ஆசைப் பட்டேன். டேவிட்லாக், அவரது அச்சமே அறியாத துணைவி எலிசபெத் இருவரும் 1948முதல் அங்கு ஆய்வு நடத்தி வந்தனர். அந்த அரிய ஆய்வின் முடிவுகளை 1956இல் வெளிவந்த அவரது “கோபுரத்துக் குருவிகள்” என்ற நூலில் காணலாம். கட்டிடத்தின் மேற்பரப்பில் அமைந்த இந்த கோபுரம் 60 அடி உயரம் கொண்டது. தளத்திலிருந்து கோபுர உச்சிக்குப்போகும் வளைவான மாடிப்

படிகளின் பெரும்பகுதி இருட்டானது. அதற்கப்புறம் கைப்பிடியற்ற முப்பதடி ஏணியில் ஏறவேண்டும். பிறகு அதே தொலைவு இன்னொரு ஏணி. முதல் ஏணியைவிட இரண்டாவது ஏணி பரவாயில்லை என்றாலும் இதுவும் பயங்கரம்தான். இப்போது இரண்டாம் தளம். இப்போது கண்ணாடிப் பெட்டிகள் வழியே அங்கு கூடுகட்டிவாழும் எழில் குருவிகளைப் பார்க்கலாம். பயங்கரமான கைப்பிடியற்ற அந்த செங்குத்து ஏணியின் உச்சத்திலிருந்து கோபுரப்பகுதியிலிருந்து கீழே ஒரு முறை பார்த்ததுமே போதுமடாசாமி என்ற எண்ணமே மேலோங்கிய உணர்வின் நியாயத்தை விளக்கவே இவ்வளவு விபரங்களையும் கூறுகிறேன். மிகமகிழ்வுடன் மேலே போவதை நான் கைவிட்டிருக்கலாம்தான். -ஆனால் கீழேயிருந்து ஒருவித அச்சத்துடன் நான் மேலே ஏறிக் கொண்டிருப்பதை டாக்டர். லாக் கவனித்துக்கொண்டிருந்தார். முதலிலேயே அவர் கூறியதை ஏற்காமல் மறுதலித்து விட்டதால், என் கவுரவத்தைக் காப்பாற்றிக்கொள்ள நான் எது நடந்தாலும் சரி என்று பல்லைக் கடித்துக்கொண்டு உச்சிக்குப் போயே ஆகவேண்டு மென்று கருதினேன். ஒரு சமயம் அச்சத்தில் செயலிழந்து விழப் பார்த்ததையும் மீறி மேலே சென்றேன்.

14

# செஞ்சிறகு நாரைகளின் நகரம்

இயற்கைவாதி என்ற அளவில் சில இந்திய அரசர்களையும் குறுநில மன்னர்களையும் மற்றவர்களைவிட நெருக்கமாக நான் அறிய முடிந்தது. அவர்களில் கட்ச்சின் மகாராவ் விஜயராஜ்ஜி ஒருவர். முடிவற்றது போல் தோன்றிய நாற்பதாண்டு காலம் (அல்லது அதற்கும் மேலேயே) பட்டத்து இளவரசராகக் காத்திருந்துவிட்டு அரியணை ஏறும் போது அப்போதே அவருக்கு வயது அறுபதுக்கு மேலாகியிருந்தது. அவரது தந்தையார் மகாராவ் கெங்கார்ஜியின் உடல்வளம் அப்படி. மன்னரை அவரது இரண்டு தலைமுறைக் குடிமக்கள் கட்ச் ராஜ்யத்தின் அழிக்கமுடியாத புராதனச் சின்னமாகவே வரித்து வந்தனர். தந்தை–மகன் இருவருமே நல்ல வேட்டைக்காரர்கள்; தேர்ந்த இயற்கை இயல் அறிஞர்கள். பெரியவர் வேட்டைக்காரராக அதிகப் புகழ் பெற்றவர். மகன் வேட்டைக்காரர் என்ற முறையில் மட்டுமின்றி பிற வகையாலும் ஒரு பறவை ஆர்வலர். கைத்துப்பாக்கி–துப்பாக்கி இரண்டைக் கையாள்வதிலும் மட்டுமின்றி டென்னிஸிலும் இளையவர் விற்பன்னர். அவரது இளம்பருவத்தில் இத்திறமை அவரை அகில இந்தியப்போட்டிகளில் ஒரு வழக்கமான ஆட்டக்காரராக ஆக்கியிருந்தது. அந்தக்காலத்து பிரபலங்கள் பலரும் இரட்டையர் போட்டிகளில் அவரோடு இணைந்து ஆட விரும்பியதால் பெரும்பாலான போட்டிகளில் அவர் வெற்றியும் பெற்று வந்தார்.

நீண்ட காத்திருத்தலையடுத்து அவர் அரியணை ஏறிய சிறிது காலத்திலே, 1942இல் எனக்கு முதன் முதலாக மகாராவ் விஜய ராஜ்ஜியுடன் தொடர்பு ஏற்பட்டது. அப்போதே இளமையின் துடிப்பு ஓரளவு குறைந்துவிட்டது. முழங்கால் காயம் ஒன்றின் காரணமாக உடற்பயிற்சி செய்ய முடியாமை வேறு. ஆக கொஞ்சம் குண்டாக ஆகிவிட்டார். இயக்கமும், உடலை வருத்துவதும் தேவைப்படும் வேட்டை நிகழ்ச்சிகளைக் குறைக்கவேண்டி வந்தாலும், சிறிய அளவு

வேட்டைகளில் தொடர்ந்து நிபுணராகவே இருந்து வந்தார். பறவைகளைப் பற்றி அறிவதில்-அதுவும் கட்ச் பகுதிப்பறவைகள் பற்றிய ஆர்வத்தில் குறைவேதுமில்லை. ஆக அவரது அழைப்பின் பேரில், அவரது தாராள உதவியுடன்தான் அவரது ராஜ்யத்துப் பறவைகள் பற்றிய கணக்கீட்டில் நான் இறங்கினேன். மிகவும் சுவையான பணியாக அது அமைந்தது. எனது "இந்தியப் பறவைகள் நூல்" அவருக்குப் பிடித்துப் போயிருந்ததால் அதேபோல் கட்ச் பறவைகள் பற்றி படங்களுடன் கூடிய ஒரு நூல் வெளிவர வேண்டுமென்ற நோக்கில் இந்த ஆய்வு துவங்கியது. இரண்டாம் உலகப்போர் முற்றுப்பெறாத நிலையில் 1943இல் பெட்ரோல் கடுமையான பங்கீட்டுமுறையின் கீழ் விநியோகிக்கப்பட்டுவந்தது. தனியார் போக்குவரத்து அநேகமாக நின்றே போயிருந்தது எனலாம். குறுநில மன்னர்களுக்கு ஒரு சலுகையாக அதிகப்படி பெட்ரோல் தரப்பட்டது. கட்ச்சைப் பொறுத்தவரை அது பறவைக்கணக்கீடு தொடர்பான பயணங்களுக்கு வழிசெய்தது. மற்றபடி போகமுடியாத ஒதுக்குப்புறப் பகுதிகளுக்கும் போக இது உதவியது.

இரண்டு முகாம்களுக்கு இடைப்பட்ட காலங்களில் என்குழு புஜ் நகரில் இரண்டு நாள் கழிப்பது வழக்கம். அப்போதெல்லாம் மகாராவ் என்னை வட்டாரத்தில் இயற்கை எழில் கொஞ்சும் பகுதிகளுக்கு அழைத்துச் செல்வார். மாலைநேர ஊர்சுற்றல் காற்றாடவும் உதவும். பொதுவாக அவரோடு ஒரே ஒரு வேலையாள் தான் இருப்பான். அவனிடம் ஒரு குடுவை இருக்கும். ஒரு பாட்டில் மது. பிஸ்தா, பாதாம் வகையறாவும் இருக்கும். கணக்கீடு எப்படிப்போகிறது என்று நான் விவரிப்பதைக் கேட்டுக்கொண்டும், அது பற்றி விவாதித்துக்கொண்டும் பொழுதைக் கழிப்பதை மேலும் இன்பகரமாக்கிகொள்ளத்தான்! மிக மிக விசித்திரமான ஒன்றை அப்போதெல்லாம் நான் கவனிக்க நேர்ந்தது. மகாராவ்—அதுவும் பொதுவாக மரியாதையிலும் நாகரிகத்திலும் சிறந்த மனிதரான மகாராவ்—அத்தகைய சமயங்களில் தாம் கொறித்துக் கொண் டிருந்தவற்றை வேண்டுமா என்று ஒரே ஒரு தரம்கூட என்னிடம் கேட்டதில்லை! அந்த ஆளும் அவர் சேவடி பணிந்து அமர்ந்திருப்பான். ஒரே ஒரு முறைகூட இது அவருக்கு தோன்றாதது விசித்திரமாகவும், நினைத்துப் பார்க்க முடியாததாகவும் (நமக்குத்) தோன்றினாலும் உண்மை அதுதான்.

அவரது ராஜ்யத்தில் காலத்துக்குப் பொருந்தாத ஒரு பிரபுத்துவ கால நடைமுறை பற்றி என் குறிப்புகளில் ஓரிடத்தில் வருகிறது, அதுவும் ஒரு முரட்டு வெளிப்பாடாக. ஆட்சிக்குட்பட்ட குடி

படைகள் மன்னரைக் காணவந்தால் மாளிகைவெளி வாசலிலேயே வாகனத்திலிருந்து இறங்கி சுமார் 50 அடி தூரத்தை நடந்துதான் கடக்க வேண்டும் என்பது அங்கு சட்டமாயிருந்தது. வாகனம் குதிரையாயினும்சரி, கார் என்றாலும் சரி, விதி அதுதான். விவாதங்களுக்காக மன்னரிடமிருந்து ஆள் வந்து நான் போகும்போது மிகவும் தாமதமாகத்தான் இது எனக்குப் புரிந்தது. எனக்கு ஏற்பட்ட எரிச்சல் சிறிதல்ல. இது எந்நிலையினராலும்—கட்ச் பகுதிக்கு வெளிநாட்டினராயினும் சரி, அதிகாரியாயினும் சரி, மற்றவராயினும் சரி—இந்தியர் அனைவரையும் கட்டுப்படுத்துவதும் விதி. இந்த கட்டளை எவ்வளவு தீவிரம் என்றால், மன்னரின் முதலமைச்சர் கூட, அலுவல் நிமித்தம் வரும்போதுகூட, இப்படி பணிந்து சென்றாக வேண்டும். ஆனால் எந்த வெள்ளையனும், எந்த ஆங்கிலோ-இந்தியனும் இதற்குக் கட்டுப்பட்டவனல்ல. அவர்கள் எவ்வளவு இழி மகன்களாயினும் எந்தத் தடையும், தடுப்புமின்றி நேரே வீட்டு முகப்புக்கே வாகனத்தில் போய் இறங்கலாம். வெளிக்கதவில் காவல் நிற்கும் வீரனுடைய வரவேற்பும் வணக்கமும்கூட கிடைக்கும். அந்த காலகட்டத்தில் மன்னரின் ஆட்சியை நடத்திவந்த திவான் பெரிதும் மதிக்கப்பட்ட ஒரு இந்திய மேலதிகாரி. ஆனால் அவரும் இப்படி பணிவுகாட்ட வேண்டியிருந்தது; ஆனால் ஒரு மிகக்கீழ்நிலை அலுவலனான சுங்கத்துறை கண்காணிப்பாளன் நேரே போய் இறங்கமுடிந்தது, அவன் ஆங்கிலோ-இந்தியன் என்பதால். வெளிவாசலில் என்னை இறங்கச் சொன்னபோது பேரதிர்ச்சி அடைந்தேன். ஒரு ரகளையே நடத்தி விட்டேன். இந்த அவமரியாதையான அவமதிப்பை எதிர்த்து திட்டவட்டமாக என் கருத்தை மகாராவ் அவர்களிடமும் கூறினேன். அதற்கு உரிய விளைவு இருந்ததென நம்புகிறேன். ஆனால் பிறகு அரண்மனைக்குச் செல்ல நேரவில்லை. இந்திய குறுநில மன்னர்களின் பகுதிகளில் கணக்கீடுகள் நட்த்தியபோது ஒரு விசித்திரமான பொருத்தமற்ற விஷயத்தை மகாராவ்கள், நவாபுகள், மகாராஜாக்கள் ஆகியவர்களுக்கிடையே கண்டு ரசித்தேன். அவர்கள் தம்முள் ஒருவரை ஒருவர் குறிப்பிடும் முறைதான் அது. ஒருவர்க்கொருவர் நெருங்கிய உறவினராகவோ, ஆழ்ந்த நண்பர்களானாலும் சம்வய்தினராகவோ இருந்தால் கூட, தனிப்பட்ட அதிகார பூர்வமானது அல்லாத உரையாடல்களில்கூட ஒருவர்க்கொருவர், ஒவ்வொரு முறையும் 'மாட்சிமை தங்கிய'தான்! சிரிப்பை ஏற்படுத்தும் ஒரு சடங்கு முறையான மரபு. அதேசமயம், "சாமானியர்களிடம்" பேசும்போது ஒருவர் மற்றவரைப்பற்றி

"அவருக்கு 13 குண்டு மரியாதைதான், எனக்கு 17" என்பன போன்ற குறிப்புகளை பேச்சுவழக்கில் வந்ததுபோல கூறுவதில் கவன மெடுத்துக் கொள்வார்கள். அதைத் தொடர்ந்து பேசிக் கொண்டிருந்த செய்தி பற்றி உரை தொடரும்.

கட்ச் பரம்பரையாக பஞ்சத்திலடிபட்ட பகுதி. தொடர்ந்து வானம் பொய்த்துவிட்டால் 2-3 ஆண்டுகளுக்கு flamingoes எனும் நாரைகள் வளர்வது பெரும்பாடு. அவை வளரும் பகுதிகளில் ஏழெட்டங்குல தண்ணீர் இருக்கவேண்டும். அப்போதுதான், அவை மணல் குன்றுகௌழுப்ப முடியும். மழை பொய்த்துவிட்டாலோ, போதாவிட்டாலோ, இந்த தேவை நிறையாது. இனவிருத்திப் பருவமான செப்டம்பர் அக்டோபரில் நீர் வறண்டுவிட்டால் சிரமம் தான். மாறாக 1944இல் நடந்ததுபோல் மழை கொட்டித்தீர்த்து விட்டால், அதிகப்படி ஆழத்துக்கு தேங்கி நிற்கும் நீர் தேவையான நிலைக்கு இறங்கி தண்ணீர் காய்வதற்குக் காலம்பிடிக்கும். எனவே ஐரோப்பா, ஆப்பிரிக்கா, அமெரிக்கா, ஆசியாவின் பிறபகுதிகள் போல இல்லாது கட்ச் பகுதியில் நாரைகளின் பருவம் முன்கூட்டியே கணிக்கமுடியாது வித்தியாசப்படும் விஷயம். அது மார்ச்-ஏப்ரலாக அமையலாம், அல்லது சிலசமயம் ஓராண்டு முழுவதும் இல்லாமலே போய் விடலாம். இனவிருத்திக்குப்பின் பறவைகள் குஞ்சுகளுடன் சிறு சிறு கும்பலாக எங்கெங்கோ உணவகம் தேடி இடம் பெயர்ந்து விடும். எனவே 'தலைநகரமே' வெறிச்சோடிப் போய்விடும். அப்படி புலம் பெயர் பறவைகளோ கடற்கறைகள், உப்பளங்கள் (தமிழகக் கிழக்குக் கடற்கரைக்குக்கூட) சௌராஷ்டிரா, ஏன் இலங்கைக்கு கூடப் போய் விடும். இனவிருத்திப் பருவமல்லாத காலங்களில் ராஜஸ்தானில் உள்ள சாம்பார் ஏரி, ஒரிசாவில் உள்ள சில்கா ஏரி முதலிய உப்பு நீர் ஏரிகளுக்கு போய்விடும்.

கட்ச் நாரைகளைப்பற்றி அறிய நான் கொண்டிருந்த பேரவா, எனது முந்தைய முயற்சிகளின் ஏமாற்றம் ஆகியவற்றை அறிந்திருந்த மகாராவ் ரண் பகுதியில் அவற்றின் நடமாட்டம் பற்றி கண் காணிக்க ஏற்பாடு செய்திருந்தார். அப்படித்தான் 1945 ஏப்ரலில் அவரிடமிருந்து எனக்கொரு அவசரத்தந்தி வந்தது. மேமாதம் செல்ல விருந்த கைலாஸ்-மானசரோவர் பறவையியல் யாத்திரைக்கான ஏற்பாடுகளில் மும்முரமாக இருந்த சமயம் அது. பிளமிங்கோ நாரைகள் வாழிடமான "நாரை நகரில்" அப்போது நடவடிக்கைகள் உச்சத்திலிருந்தன. என்னை உடனே வரச்சொல்லி தந்தி வந்தது. சங்கடமான நேரத்தில் வந்தாலும் இது நெடுநாட்களாகக் காத்திருந்த வாய்ப்பாதலால் நல்ல சமயத்தை நான் நழுவவிட விரும்பவில்லை.

இரண்டு நாட்களில் புஜ் நகருக்கு விமானத்தில் வந்து சேர்ந்தேன். போர் நடந்துகொண்டிருந்த அக்காலகட்டத்தில் வான்பயணம் துவக்க நிலையிலும், ஒழுங்குபடாமலும் இருந்தது. புகைவண்டிப் பயணமோ நிதானமும் ஆமை வேகமுமாக இருந்தது. விராம்கம் உள்ளிட்ட பல பகுதிகளில் மீட்டர்கேஜ் ரயில்கள்தான். கத்தியவார் வட்டாரத்தில் சிறுமன்னர்கள் பகுதிகளில் சில புகைவண்டி நிர்வாகங்கள் அவர்கள் கையில் இருந்தன. அவை வெறும் அந்தஸ்து அடையாளங்களாகவே நிர்வகிக்கப்பட்டன. அதில் யாருக்கும் அக்கறை இல்லை. ஒவ்வொருவரும் அடுத்தவருக்கு குறைந்தவரல்ல என்று காட்டவே விரும்பியதால், அவற்றின் கால அட்டவணைகள் ஒருங்கிணைத்து திட்டமிடப்படவில்லை. நேரம் தவறாமை போன்ற பிடிவாதங்களெல்லாம் அவர்களுக்கு கிடையாது. எனவே இணைப்பு கிடைத்தால், உங்கள் நற்பேறுதான். அப்புறம், கடைசியாக ஜாம்நகர்-நவ்லாகி புகைவண்டி நிலையத்தில் கூட்டமான பிளாட்பாரத்தில் இரவைக் கழிக்க வேண்டும். அது ஒரு திறந்தவெளிச் சத்திரம். மறுநாள் காலைதான் அங்கிருந்து நான் காண்ட்லாவுக்கு இயந்திரப் படகில் போக வேண்டும். அதற்கு நான் மறுநாள் காலை வரை காத்திருக்க வேண்டும். காண்ட்லாவிலிருந்து 4 மணி நேரம் களைப் படையச் செய்யும் அலுப்பான குறுகல் ரயில்பாதையில் பயணம் செய்தால் புஜ் சென்றடையலாம். ஆக மும்பையிலிருந்து 40 மணிப் பயணம்.

புஜ்ஜில் சர்பீட்டர் கிளட்டர்பக்கைச் சந்திக்கும் இனிய அனுபவம் கிடைத்தது. இந்திய அரசின் வனத்துறையின் தலைமைக் கண்காணிப்பாளராக இருந்து ஓய்வுபெற்றபின் கஷ்மீர் அரசரிடம் வனத்துறை தலைமைக் காப்பாளராக பணியாற்றிவிட்டு அப்போது மகாராவ் விஜயராஜ்ஜியின் அமைப்பில் கட்ச் வனத்துறையை சீரமைக்க வந்திருந்தார். இந்தியாவில் பணிபுரிந்த காலம் முழுவதுமே அசாதாரணமான திறமை கொண்ட வனத்துறை அலுவலராய் அவர் பெயர் வாங்கியிருந்தார். இயற்கையியலுக்கும் சுற்றுச்சூழல் இயலுக்கும் தன்னையே அர்ப்பணித்துக் கொண்டிருந்தார். கோடையின் கானலையும் பயணச் சிரமங்களையும் பொருட் படுத்தாமல், முதுமையடைந்த நிலையிலும் என்னோடு நாரைநகர் செல்ல விரும்புவதாக மகாராவிடம் கூறியிருந்தார்.

இரவில் நிர் என்னுமிடத்தில் நாங்கள் தங்குவதற்கு சொகுசான ஒரு முகாம் மகாராவின் தர்பாரால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. காவ்டா வழியே புஜ்-நிர் பாதை 70 மைல். காரிலும் ஒட்டக சவாரி யுமாக இதனைக் கடந்தோம். அன்றிரவு நான் சர். பீட்டர் இருவரும்

தனியே நேருக்குநேர் உரையாடிக்கொண்டிருந்தது, அரசியல் ரீதியாக ஒரு மோதலாக அமைந்தது. விருந்தென்னவோ, அமர்க்களம்தான்—டமாஸ்க் மேசை விரிப்புகள், வெள்ளிப்பாத்திரங்கள், சீருடை அணிந்த பணியாளர்கள். உலகப்போரின் போதும், அதற்கு முந்தைய எட்டுபத்து ஆண்டுகளிலும் காந்தியடிகளின் சத்தியாக் கிரகப்போர் உச்சத்திலிருந்த காலத்தில் இந்தியர்-ஆங்கிலேயர் உறவுகள் வேறெப்போதும் இருந்திராத அளவுக்கு சீர்கெட்டிருந்தன. அரசு ஊழியர்கள்—பெரும் அதிகாரியோ, சிறு அலுவலரோ, உதிரிகளோ—அனைத்து ஆங்கிலேயரும் வாயில் நுரை தள்ளாத குறையாக இந்தியத் தலைவர்களை வெறுத்தனர். ‘ராஜத்துரோக எலி’ காந்தியின் (அண்ணல் காந்திக்கு கர்னல் மெய்னர்ட் செகன் வைத்த பெயர் இது) பிரிட்டிஷ் எதிர்ப்புப் பிரசாரமும், நேரு ஆக்ஸ்போர்டிலும், கேம்பிரிட்ஜிலும் சரியான கல்விபெற்றிருந்தும் காந்திஜியின் ‘அடிவருடி’யாக அரச விரோத நடவடிக்கைகளில் ஈடுபட்டதும் அவர்களால் தாங்கிக் கொள்ளக்கூடியனவாக இல்லை. மாலை வேளையில் துவக்கத்தில் கிளட்டர்பக் இது குறித்த தமது மேலான கருத்துகளை எடுத்து வைக்க ஆரம்பித்து மனதில் இருந்ததை யெல்லாம் கொட்டித்தீர்த்தார். அந்த நெஞ்சில் அடக்கி வைத்திருந்த நஞ்சு முழுவதையும் கக்கினார். இத்தனைக்கும் அவர் இதுபற்றிப் பேச முகாந்திரமேயில்லை. நான் இனிய பொறுமைக் குணத்துக்கு பேர் போனவனல்ல என முன்பே கூறியுள்ளேன் அல்லவா? இப்போது என் பொறுமையைக் கைவிட வேண்டிய ஒரு நிர்ப்பந்தம் வேறு ஏற்பட்டுவிட்டது. பிறகென்ன? நானும் தேவைக்கு அதிகமாக தடாலடியாக பேசிவிட்டேன் என்றுதான் தோன்றுகிறது. ஆனாலும் அந்த விவாதம்தான் எங்களிடையே எதிர்காலம் முழுவதற்குமான சூழ்நிலை தெளிவடைய உதவியது. அவரது கருத்துகளை மாற்ற முயலும் ஆசையோ நோக்கமோ எனக்கு சிறிதும் கிடையாது. அதே நேரத்தில் என் எண்ணங்களை மாற்ற அவர் முயற்சிப்பதிலும் எந்தப் பொருளுமில்லை என்பதை தெள்ளத்தெளிய சொன்னேன். பறவைகள், வனவுயிர்கள் ஆகியவற்றிடம் ஆழ்ந்த ஈடுபாடு என்பது எங்களுக்குப் பொதுவான தாக இருக்கையில், அரசியலை அரசியல் வாதிகளுக்கு விட்டுவிட்டு நாங்கள் எங்கள் உறவை இந்த இரண்டு துறைகளுடன் ஏன் நிறுத்திக் கொள்ளக்கூடாது? அந்த முதல் விவாதம் துரதிருஷ்ட வசமானதென்றாலும் அவ்வளவுக்கவ்வளவு தெளிவானதுமாகும். எனவே அதன்பிறகு [illegible]வர் கவர்ச்சிகொண்ட அன்பான சகா என்பதே என் அனுபவம[illegible]யிற்று. அந்தப்பயணத்தில் பிறந்த அன்பும்

மரியாதையும் கலந்த நட்பு இங்கிலாந்தில் 1958இல் அவர் காலமாகும் வரை தொடர்ந்தது. அவரது மறைவுக்கு சில மாதங்கள் முன்பு அவரை சந்திக்கும் இனிய பேறும் எனக்குக் கிடைத்தது. இந்த நட்பு வலுப்பெறுவதில் அவரது பாசமிகு மகன் ஜே.இ. ஜாக் கிளட்டர்பக் (அரசுப்பொறியாளர்) பங்கும் கணிசமானது. ஜாக் அப்போது இருந்து வந்த ஜி.ஐ.பி ரயில்வேயில் தலைமைப் பொறியாளராக இருந்து பல்லாண்டு அரும்பணி புரிந்துவிட்டு 1948இல் ஓய்வுபெற்று இந்தியாவிலிருந்து தாயகம் திரும்பினார். அங்கே சாமர்செட்டில் பண்ணையாராக புதுவாழ்வு துவங்கினார். என்னைப் பொறுத்தவரை ஜாக் ஒரு இனிய நேயர். முழுக்க நேசிக்கத்தக்க பாராட்டத்தக்க மனிதர். அவ்வப்போது என்னோடு பலநாட்களை இந்தியக் காடுகளில் கழித்தவர். வேட்டைக்காகவும், முழு பணிவழி முகாம்களையும், மலையேறவும் இயற்கையைக் கற்கவும் சுற்றித்திரிந்த வனாந்தரங்களை ஒரு வெறியோடு நேசித்தவர். மற்ற ஆங்கிலேய நண்பர்கள் அனை வரையும்விட நெருக்கமானவர், நெஞ்சில் நின்றவர்.

பாரம்பரியமான நாரை நகர் நிர் என்ற ஊரிலிருந்து 10 கிலோ மீட்டர் தொலைவில் வடகிழக்கு திசையில் அமைந்துள்ளது. பொட்டைத் திடலான, எதிர்காலம் ஏதுமற்ற ரண் பகுதியில் அமைந்த இந்த இடத்தில்தான் பல்லாண்டுகாலமாக ஆண்டுதோறும் பறவைகள் வந்து தங்குகின்றன. குறைந்தது 1896இல் இருந்து இது ஆய்வாளர் கண்களில் பட்டுள்ளது. அங்கு சென்றடைய நடந்தும் போகலாம்; ஒட்டகம் அல்லது கோவேறு கழுதையிலுமர்ந்தும் போகலாம். சமயத்தில் தடுமாறி கணுக்கால் ஆழமோ தொடையளவு ஆழமோ நீரிலும் விழ நேரிடும். பெரும்பாலும் அடர்த்தியான உப்புநீர். மென்மையான வழுக்குப் பாதை மேலே மணலோ, உப்புப் படிகங்களோ மூடியிருப்பது போன்ற தோற்றம் ஆளை ஏய்த்துவிடும். உப்புக்கற்கள் உடைந்த கண்ணாடி போல கிழிக்கும் கூர்மை கொண்டவை. பாலைவனத்து காட்டமான சூரிய ஒளியில், புதிதாய் விழுந்த பனித்துளி போல் அது கண்ணைக் குருடாக்கும். தரையில் குளம்புகள் புதையுண்டு சிக்கிக்கொள்ளும் போது வாகன விலங்குகளின் கால்கள் கிழிபட்டுப்போவதும் உண்டு. நல்ல வேளையாக அந்த ஏப்ரல் மாத 45டிகிரி சென்டிகிரேட் வெப்பமும் தாங்கிக்கொள்ளக்கூடியதாக ஆகும் வகையில் பகல் முழுவதும் இளந்தென்றல் வீசிக்கொண்டேயிருந்தது. நாங்கள் திறந்த வெளியில் உறங்கிய நாட்களில் ஒரு பருத்தியாடை அணிந்து கொள்வதும் இரவில் தேவையாயிற்று. இனவிருத்தி அதிக பட்சமாயிருந்த ஒரு

ஆண்டில் பிளமிங்கோ எண்ணிக்கையை அவ்வளவு துல்லியமாக கணக்கிட்டது இந்த ஒரு முறைதான். பின்னரும் அவ்வளவு துல்லியமாகச் செய்ய இயலவில்லை. அவற்றின் இராக்கால நடமாட்டங்களையும் நடத்தையையும்கூட வேறெப்போதும் அவ்வளவு விரிவாக கண்காணிக்க முடிந்ததில்லை. பிரமாதமான நிலவொளியும் நீலவானமும் அழகிய பின்னணியை அமைத்துத் தந்திருந்தன. ஆனால், நல்ல நீர் போதிய அளவு இல்லாமையாலும் சமையலுக்கு எரிபொருளும், விலங்குகளுக்கான எவ்வித உணவும் கிடைக்காததாலும் இரண்டு இரவுகளுக்குமேல் 'களத்தில்' தங்க முடியவில்லை. அதற்கு, முன்னரே கவனமாக திட்டமிட்ட விரிவான முன்னேற்பாடுகள் தேவை. தரைப்பகுதியின் மொத்தப்பரப்பை அளந்து கொண்டு உத்தேசமாக சில இடங்களில் வசிப்பிடங்களை நிர்மாணித்துக்கொண்டு (90மீட்டர் x 90மீட்டர்) கூடுகள் அடர்ந்த பகுதிகளுக்கிடையில் வெட்டவெளிப் பகுதிகளும் இருக்குமாறு கற்பித்துக் கொண்டு நான் கணக்கிட்டு கண்டுபிடித்தபடி கூடுகளின் எண்ணிக்கை 1,04,758 ஆகும். இந்தத் தொகையின் அடிப்படையில். ஒரு கூட்டுக்கு இரு பறவைகள் என்றும், மூன்று கூடுகளுக்கு இரண்டு குஞ்சுகள் என்றும் அனுமானித்துக்கொண்டு அந்த வட்டாரத்தில் கூடின்றி வாழும் பறவைகளில் பெரியவை, சற்றே வளர்ந்த குஞ்சுகள் இவற்றையும் சேர்த்துப்பார்த்தால் மொத்தம் அநேகமாக 50,000 இருக்கும். ஆக, அந்த அளவிலே ஆசியாவின் பெருநாரைகள் வாழிடங்கள் அனைத்திலும் இந்த நாரை நகரமே ஆகப் பெரிதென்பது ஐயத்துக்கு அப்பாற்பட்டதாகும். உலகளவில்—குறைந்தது மிகப் பெரிய காலனிகளில் ஒன்றாயிருக்கும் கட்ச்சில்—பெரிய ரண் பகுதி உயிரியல் நோக்கில் பல ஆச்சரியங்களை உள்ளடக்கிய பூமி என்றும், இதுவே ஒரு தனி சிறப்பாராய்ச்சிக்கு உரியது என்றெல்லாம் நெடுங்காலமாகவே, எண்ணிவந்த எனக்கு அப்படி ஒரு ஆய்வினை நடத்தவே இயலாமல் போய் விட்டதே என்ற வருத்தமும் உண்டு. பின்னொரு முறை அங்கு சென்றபோது அவொசெட் பறவைகள் (ரிகர்விரொஸ்த்ரா அவொசெட்டா) கூடுகட்டி கூடி வாழும் காலனி ஒன்றை 'நாரை நகரின் புறநகர்'ப் பகுதியில் கண்டுபிடிக்கும் பேறு கிட்டியது. இன்னும் சில ஆண்டு களுக்குபிறகு போனபோது ரோசி பெலிகன்கள் (பெலிகேனஸ் ஓனோக் ரோட்டாலஸ்) எல்லைப் பகுதியில் நாரைகள் காலிசெய்து சென்ற பழைய கூடுகளில் கூடிவாழ்ந்து இல்லறம் நடத்துவதையும் கண்டேன். இந்தியத்துணைக் கண்டத்திலேயே இதுதான் இவ்விரு பறவைவாழ் நகர்களில் காணப்பட்ட முதல்சம்பவமாகும்.

எனது புகைப்படக்கருவி கடைசி நிமிடத்தில் சற்றே பழுது பட்டிருந்தது. எனவே மகாராவ் தன்னுடையதை இரவல் கொடுத் திருந்தார். என் கரங்களில் அது சரியாய் பணி செய்யவேண்டுமேன்ற ஐயத்தில் எதற்கும் இருக்கட்டுமென்று தன் தலைநகரிலிருந்து அரசவைக் கலைஞரையும் அனுப்பியிருந்தார். அலிமுகம்மது என்ற அந்த புகைப்படக் கலைஞர் தனது சாமான்செட்டுகளுடனும் உதவியாளருடனும் வந்து சேர்ந்துகொண்டார். அவரது சிறப்பு உதவி யாளரின் பணி என்ன என்பது அப்போது தெரியவில்லை. இரண்டு ஒட்டகங்கள் அவர்களுக்கும் அவர்களுடைய சாமான்களுக்குமாக சரியாய் போய் விட்டது. ஆங்கிலமன்னர் வெற்றிபெற்ற வில்லியம் காலத்திய அல்லது சற்று முன்பின்னான காலத்து புராதன நாற்காலி-மேசைகளை நினைவூட்டும் சரித்திரகால சாமானாகக்காட்சியளித்த, புகைப்பட நிலையங்களுக்கே தேவையான அளவில் மிகப்பெரிய கேமரா. உறுதியான தேக்குமரப்பெட்டி. கையாள சிரமமானது தானாகத்திறந்து மூட வசதி கிடையாது. கலைஞர் தன் கையால் லென்ஸ் பகுதியை ஒரு மூடி மூலம் திறந்து மூடவேண்டும். பட்டப் பகல் கதிரொளியில் கலைஞரின் கரம் மின்னல் வேகத்தில் இயங்குவதையும் மீறி தகடுகள் அதே விரைவில் இயங்காமையால் பலமுறை எவ்வளவு விரைவாக மூடித்திறந்தாலும் பிலிம் வெளிச்சத்துக்கு இரையாகி பாதிக்கப்படுவது தவிர்க்க முடியாத தாயிற்று. இதற்கென்று ஒரு வரலாறு இருந்தது தெளிவு. ரண் பகுதியில் நாரைகள் கூடுகட்டி குடும்பம் மகிழ்ந்து குலாவி இருந்ததன் முதல் சான்றாக மும்பை கழக வெளியீட்டில் 1896இல் முதன் முதலில் வந்த படத்தின் பிரதியை இந்தக் கேமரா மூலம்தான் மகாராவ் கெங்கார்ஜி எடுத்தார் என்றார்கள். நம்பலாம். அந்தப்பெரிய முக்காலியில் அதைப் பொருத்தி வைக்கமட்டுமல்ல, சிரமமான இயக்குமுறையும் இரண்டுபேர் கூட்டுழைப்பு இல்லாமல் முடியாத செயல்தான். அதை இயக்குவதை ஒரு கப்பலை ஓட்டிச் செல்வதுடன் ஒப்பிடலாம். இங்குதான் அந்த பயிற்சிபெற்ற உதவியாளரின் பணி வருகிறது. தலைமை புகைப்படக்காரர் (கப்பல் கேப்டன்!) கெஜக்கணக்கில் நீளும் கறுப்புத்துணிக்குள் தலையை நுழைத்துக்கொள்வார். கண்கள் தரையை ஊடுருவும். இவ்விதமாக தான் இருக்கும் 'பாலத்'தில் இருந்துகொண்டு கீழே 'இயந்திர அறை'யில் உள்ள துணைவருக்கு ஆணைகளை அனுப்புவார். குவிந்த நோக்கு (focus) க்கான குமிழை இப்படி அப்படி—ஆணைக்கேற்ப—நகர்த்தி துணைவர் சரி செய்வார். அந்தக்குமிழ் கேப்டனிடமிருந்து தொலைவில் அமைந்திருந்ததால் திறம்வாய்ந்த உதவியாளர்

அத்தியாவசியத் தேவையானார். கேமராவை குருவிக்கூட்டு காலனியில் நிலைநிறுத்தியிருப்போம். அதுதான் படப் பிடிப்புக்களம். தூரத்திலிருந்து பார்த்தால் வெட்டவெளியில் அதுவே ஒரு பெரிய வீடுபோல் தோன்றும். ஒரு காற்றடித்து 'கேப்டன்' தலைக்குமேல் உள்ள திரை காற்றில் அசைந்தாடிப் பறந்தால் 'சத்தியமாக படம் அவ்வளவுதான்' என்று நினைப்பேன். அவரை கேலிப் பொருளாக்கி நானும் அப்போது கொஞ்சம் அதிகமாகவே கேலி செய்திருக்கிறேன் என்று தோன்றுகிறது. ஆனால் அவர் அதையெல்லாம் பொருட் படுத்தாமல் பெருந்தன்மையுடன் பழகினார். உண்மையில் அவ்வளவு சிரிப்புக்கும் ஆளாக அமைந்தவன் நான்தான் என்பதும், ஒரு புகைப்படம் சிறப்பாக அமைய ஒரு நல்ல கேமராவைவிட சிறப்பான இன்னொன்று (கலைஞர்) தேவை என்பதும் தலைநகர் புஜ் போய்ச் சேர்ந்தபின்பு, இருட்டறையில் கழுவப்பட்ட அந்த பிரமாதமான படங்களை அவர் காட்டியபிறகே எனக்கு உறைத்தது.

டி.வி கோவெனின் 20 வண்ணப்படங்களுடன் கட்ச் மன்னரின் முழுமானியத்தில் ஆக்ஸ்போர்ட் யுனிவர்சிடி பிரஸ் வெளியீடாக கட்ச் அரசு சார்பில் 1945இல், கட்ச் பறவைகள், ஆயிரம் பிரதிகள் வெளியிடப்பட்டன. சரியான போர்க்கால சிரமங் களிடையே வெளியான இந்த நூலுக்கு இந்தியாவிலும் வெளியிலும் சிறப்பான விமர்சனம் கிடைத்தது. தமது விருந்தினர்களுக்கு அன்பளிப்பாகத் தர சரிபாதி (500) பிரதிகளை மகாராவ் வைத்துக் கொண்டார். துரதிருஷ்டவசமாக அவை ஈரமான ஓர் சுரங்க அறையில் வைக்கப்பட்டிருந்ததால் கறையான்களின் ரசனைக்கு இரையாயின. மிகவும் மலிவாக 20 ரூபாய் விலை வைத்திருந்ததால் எல்லாபிரதிகளும் விரைவாக விற்றுப்போனபின் பழைய புத்தகக் கடையில் ஒரு பிரதி நூறு டாலர் வரை விலைபோயிற்று.

கட்ச் கணக்கீட்டு ஆய்வின்போது அரசரது பகுதியின் கிழக்குக் கோடியில், சிறிய ரண்—ரண் எல்லையில் அமைந்த, சிறு குடிசைகள் கொண்ட, முற்றாக ஒதுங்கிய ரோப்பார் என்றதோர் சிற்றூரில் ஒருமுறை முகாமிட்டிருந்தோம். அங்கே ஒரே ஒரு 'வலுவான கட்டிடம்'—அதாவது மற்ற கட்டிடங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால்—மண்கோட்டைக்குள் இருந்த காவல் நிலையம்தான். அங்கு இரு காவலர்களும் ரோந்து போக இரு ஒட்டகங்களும் இருந்தன. அவர்களுடன் ஒரு 'பக்கி'யும் இருப்பார். அதிகாலையிலும் அந்தி மாலையிலும் முழு கிராமத்தையும் மண்ணில் விழி பதித்து வழித்தடந்தோறும் ஏதும் அடித்தடம் புதிதாய் இருக்கிறதா என்று தேடி மனிதனோ ஒட்டகமோ ஏதாவது ஊருக்குள் அடி எடுத்து

வைத்திருந்தாலோ, ஊரைவிட்டுப்போயிருந்தாலோ கண்டுபிடிப்பது தான் வேலை. மேலிடத்து ஆணைப்படி காவல் நிலையம் நாங்கள் தங்குவதற்காக ஒதுக்கப்பட்டது. பிரமிக்கத்தக்கவர்களான பரம்பரை 'பக்கி'களை முதன் முதலில் அங்குதான் நாங்கள் அறிந்தோம். காலடி, அடிச்சுவடு என்று பொருள்படும் பக் (PUG) என்ற வேர்ச் சொல்லிலிருந்து 'பக்கி' என்ற பெயர்ச்சொல் வருகிறது. கிராமத்தவரின் முகங்கள் எவ்வளவு அறிமுகமோ அந்த அளவுக்கு அவர்களின் காலடித்தடமும் இவர்களுக்குத் தெளிவு. ஒரு அடிச்சுவடு பார்வைக்கு வந்தால் பார்த்ததுமே—அது மனிதச் சுவடாயினும் சரி ஒட்டகத்தடமாயினும் சரி—சுவடுக் குரியவர் (அல்லது உரியது) உள்ளூரா வெளியூரா என்று உறுதியாகச் சொல்லிவிடும் வல்லமை 'பக்கி'களுக்கு உண்டு. ஒட்டகம் திருடுவது ஒரு பொழுது போக்காகவே வளர்ந்திருந்த அந்த பாலை நாட்டில் பக்கிகள் பணி காவல்துறைக்குப் பேருதவியாக இருந்தது. காணாமல்போன ஒட்டகம், திருட்டுப்போன ஒட்டகம் இவற்றை மட்டுமின்றி திருடர்கள் முதலிய குற்றவாளிகளையும் இவர்கள் உதவியால் பிடிக்க முடிந்தது. ஒதுக்குப்புற காவல்துறை சிறு நிலையங்கள் எல்லாவற்றிலுமே ஓரிரு பக்கிகள் இருந்தனர். பரம்பரை பரம்பரையாக இப்பணி செய்துவந்த பக்கிகளின் திறமை விசித்திரமும் வியப்புக்குரியதுமாகும்.

கான்பகதூர் மால்கம் கோதாவாலா அப்போது கட்ச் காவல் துறைத் தலைவராக இருந்தார். ராஜபுதனத்துப் பாலைப்பகுதிகள் பலவற்றிலும் பணியாற்றியிருந்த அவருக்கு பக்கிகளுடன் மிக அரிய அனுபவங்கள் ஏற்பட்டிருந்தன. ராப்பாரை அடுத்த எல்லைப்புற சிற்றூர் ஒன்றில் நடந்த ஒரு ஒட்டகத் திருட்டுபற்றி அவர் சொன்ன கதையை இங்கு குறிப்பிடலாம். இடது முன்னங்காலில் ஒரு பலவீன மிருந்ததால் இந்த ஒட்டகத்தின் அடிச்சுவட்டிலும் அதன் பாதிப்பு இருந்திருக்கிறது. இதெல்லாம் பக்கிகளுக்குதான் புரியும். ஓரிரவு இது ஒரு அயலூர்க்காரனுடன் காணாமல் போய்விட்டது. அவன் அதற்கு முன்தினம்தான் அவ்வூருக்கு வந்தவன் என்பது காலடி தடயச் செய்தி. புதியவனால் நடத்திச் செல்லப்பட்ட ஒட்டகச் சுவடுகளைப் பின்பற்றி பக்கி ஊரெல்லையும் தாண்டி நெடுந் தொலவு வந்துவிட்டார். பல மைல்களுக்கப்பால் நிலம் பாறையாக இருந்ததால் தடமேதும் தட்டுப்படவில்லை. இரண்டு ஆண்டு களுக்குப்பிறகு தனது கிராமத்துக்கு இந்த ஆள் விடுமுறையில் போனார். தொலைதூரக் கிராமமான அந்த ஊரும் காணாமல் போன ஒட்டகம் சென்றிருந்த திசையிலே இருந்தது. தன் ஊரில்

சுற்றித்திரியும்போது, எங்கோ ஓரிடத்தில் கண்ட ஒட்டகத்தின் அடிச்சுவடுகள் முன்பு தேடிய ஒட்டகத்தினுடையவை என்று கண்டுபிடித்தார். அதில் தவறேயில்லை. ஆனால் நடத்திச்செல்லும் மனிதனின் சுவடுகள் புதிதாய் இருந்துள்ளன. அடியொற்றிச்சென்று ஒட்டகக்காரன் வீட்டை அடைந்துவிட்டார். விசாரித்ததில் அதன் முந்தைய உரிமையாளரிடமிருந்து சில மாதங்கள் முன்புதான் புதிய ஆள் வாங்கியது தெரிந்தது. விற்றவரைக் கண்டுபிடித்து அவரது காலடிச்சுவடுகளை இந்த பக்கி பார்க்க, உடனேயே இதுதான் சொந்த ஊரிலிருந்து ஒட்டகத்தைக் கடத்திய ஆள் என்று உறுதியாகச் சொல்லிவிட்டார். காவல்துறைக்கே உரிய 'லேசான' விசாரணைமுறை திருடனை ஒப்புக்கொள்ள வைத்துவிட்டது. திருடனும் திருட்டுச் சொத்தை வாங்கியவரும் தண்டனை அடைய, ஒட்டகம் உரிமையாளரை அடைந்தது. இப்படி கான்பகதூர் பல செய்திகளைச் சொன்னார். ஏடறியாத இந்த எளிய கூட்டத்தாரிடம் பரம்பரையாகத் தொடர்ந்து விளங்கிவந்த அந்த அரிய சக்தியின் பெரும் சாதனைகளை அவை விளக்குகின்றன. எண்ணற்ற தலைமுறைகளாக வாழையடி வாழையாய் வளர்ந்த பெருஞானம் அது. பரிதாபம் என்னவென்றால், நவீன துப்பறியும் முறைகளின் வரவால் இவர்கள் சிறிது சிறிதாக அந்த பரம்பரை ஞானத்தையும், திறமையையும் புகழையும் மட்டுமல்ல, அத்தோடு கூடவே தமது வாழ்க்கைக்கு வழியையும் வாழ்க்கையையும் இழந்துவருவதுதான்.

பிரிட்டனில் 1945இல் பிரிட்டிஷ் இந்திய விலங்குகள் வரிசையில் பாலூட்டிகள் பற்றிய தொகுதிகளின் மறுபதிப்புக்கான பணியிலிருந்த ஆர்.ஐ. பொக்காக் மும்பை கழகத்துக்கு ஒருமடல் எழுதி பிரிட்டிஷ் அருங்காட்சியகத்தில் தேவையான செய்திகள் கிடைக்காததால் ஆய்வுக்காக கட்ச் காட்டுக்கழுதையின் படிமங்கள் அனுப்பித்தந்து உதவமுடியுமா என்று கேட்க, தாராள மனங்கொண்ட மகாராவ் விஜயராஜ் சிறிய ரண் பகுதியில் ஒரு சேகரிப்புப் பணிக்கு எல்லா உதவிகளும் தருவதாக மும்பைக்கழகத்துக்கு உறுதியளித்தார். அந்தப்பகுதியில் காட்டுக்கழுதைகள் மிக அதிகம். அந்த வேளையில் (மார்ச் 1946) குஜராத் பறவையியல் கணக்கீட்டில் ஈடுபட்டிருந்த நான் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ளப் பேரவாக் கொண்டேன். காட்டுக்கழுதையின் உடலியல் பற்றியும் சுற்றுச்சூழல் பற்றியும் அப்போது மனிதன் அறிந்திருந்தது மிகச் சொற்பமே என்பதால் அதை இன்னும் நுணுக்கமாக அறியும் ஆர்வமிருந்தது. இது ஒரு அரிய விலங்கு; விறுவிறுப்பான தகவல்கள் கிடைக்கும். அதோடுகூட கட்ச் கணக்கீட்டின்போது விடுபட்டுப் போன சிறிய

ரண் பகுதிப்பறவைகளைப் பற்றி ஆராயவும் இதில் வாய்ப்புக் கிடைக்கும். இந்திய வட்டாரத்தில் சிறிய ரண் பகுதி ஒன்றுதான் சிறுநாரை (Phoeniconaias minor) இனத்தின் ஒரேவாழிடம்.

மும்பை இயற்கை வரலாற்றுக்கழக மலரில் பி.என்.எச்.எஸ். 46:472–477 (1946) இதழில் காட்டுக்கழுதை ஆய்வுப்பயண விபரங்களும், இவ்விலங்கின் பழக்கவழக்கங்கள், உணவு முதலியன பற்றிய குறிப்புகளும் அடங்கிய கட்டுரை ஒன்று வெளியாயிற்று. கைப்பற்றிய ஐந்து கழுதைகளின் அளவு மற்றும் விபரங்களும் தரப்பட்டன. வனத்தில் இக்கழுதைகளின் எடையை அறிய ஒரு தோராயமாக அளக்கும் தொங்குதராசு தயாரிக்க வேண்டியிருந்தது. அதில் ஒரு காட்டுக்கழுதை ஒருபுறம், என்னிடமிருந்த 3-4 நாட்டுக் கழுதைகள் (கூடவந்த சகாக்கள் தான்) மறுபுறம் என்று நின்று ஒரு நிர்ணயிப்பு செய்து கொண்டோம்! பிறகு தனித்தனியாக என் சகாக்களின் எடையை எடைகாட்டும் இயந்திரத்தில் கணித்து, அவற்றைக்கூட்டி ஒரு மாதிரியாக கழுதையின் எடையை தோராயமாக நிர்ணயித்துக்கொள்வோம்! பறவைஇயல் கோணத்திலும் இந்தப் பயணம் மிகமிகப் பயனுள்ளதாக அமைந்தது. தற்செயலாக நாங்கள் போயிருந்த வழியில் ஆழமற்ற பரந்த ஓர் திறந்தவெளி நீர்நிலை வந்தது. பாணாஸ் நதி ரண் பகுதியில் நுழையும் முகத்துவாரப் பகுதியில் இந்நீர்நிலை உள்ளது. நான் அங்கு கண்ட அளவு பறவைகளை அதற்கு முன்போ பின்போ ஒரு போதும் கண்டதில்லை. புலம்பெயர் வாத்துகள், நெடுங்கால் நாரைகள், இன்னும் பிறவகைப்பறவைகள் மண்டிய காட்சி! மைல்கணக்கில் நீரையே கறுப்பாகத் தோன்றச் செய்யும் லட்சக் கணக்கான வாத்துக்கள்! பெரும்பாலும் சாதாரண டீல் (Teal) வகையின, (Anas Crecca) கொஞ்சம் ஷவல்லர்ஸ் கும்பல் (Spatula clypeata), இன்னும் தொலைவிலிருந்து இன்னதென நிர்ணயிக்க முடியாதபடி பறவைகள் பலவிதம், ஒவ்வொன்றும் ஒருவிதம். இவற்றைத் தவிரவும் எண்பது ரோஜா நிற பெலிகன்கள், நான்கைந்து லட்சம் சிறிய ப்ளமிங்கோ (Phoeniconaias minor) (No Greater) பல்லாயிரம் சான்ட்பைப்பர்கள், ஸ்டின்ட்கள், ஷாங்க் பறவைகள் (இவற்றில் சில பச்சை; சில சிவப்பு) ஆயிரக்கணக்கான சாதாரண கொக்குகள், ஆயிரக்கணக்கில் டெமாய்செல் கொக்குகள் இன்னும் எத்தனையோ பறவைகள். அத்தனையும் எங்கோ பயணம் போக இங்கு கூடுகின்றன. சரியான பருவகாலத்தில் மீண்டும் இந்த இடத்துக்குச் செல்லும் நற்பேறு எனக்குக்கிட்டாமலே போயிற்று.

15

# பரத்பூர்

பரத்பூர் "கானா" பற்றி 1935க்கு முன்பு நான் அறிந்திருந்ததெல்லாம், அது மகாராஜாக்கள், அவர்களது மேட்டுக்குடி விருந்தினர்கள் ஆகியோருக்கான தனிப்பட்ட வாத்து வேட்டைக்களமாக பெயர் பெற்றிருந்தது என்பதுதான். அந்த ஆண்டு மும்பைக் கழகக் காப்பாளரும் எனதினிய நண்பருமான பிராட்டர், எனது வேண்டுதலின்படி கழக உறுப்பினரும் விளையாட்டுகளிலும் இயற்கையிலும் சிறப்பார்வலருமான ஐசிஎஸ் அதிகாரி சர். ரிச்சர்ட் டாட்டன்ஹாமுக்கு, புகழ்பெற்ற கியோலாடியோ கானா சிற்றேரியில் காட்டுவாத்துகளுக்கு வளையம் கட்டும் திட்டமொன்றை முன்னோடித்திட்டமாக செயல்படுத்திப் பார்ப்பதெனில் அவர்கள் அரசின் தரப்பில் என்னென்ன உதவிகள் கிடைக்குமென கேட்டு எழுதினார். பிரிஜேந்திர சிங் மகாராஜா சிறுவனாய் இருந்த அந்த காலகட்டத்தில் ரிச்சர்ட்தான் பரத்பூர் நிர்வாகி. அவர் சொன்னது தான் சட்டம் என்கிற நிலையிலிருந்த 'நாட்டாமை', இவ்வாறுதான் வனப்பான இந்த பூமி எனக்கு அறிமுகமானது. அன்று முதல் இதுவே என் முக்கியமானதொரு வழக்கமான பணிக்களமாகிவிட்டது. அவ்விதமாக மும்பை கழகத்துக்கு, இந்தியாவில் புலம்பெயர் பறவைகள் பற்றிய கல்விக்கு முக்கியமாகவும் ஆயிற்று. அதற்கு முன்பு பறவைகளுக்கு வளையம் கட்டும் முறை இந்தியத் துணைக் கண்டத்தில் ஒரேயொரு முறைதான் செய்து பார்க்கப்பட்டிருந்தது. தார் பகுதியின் (இந்தப்பகுதி இன்று மத்தியப்பிரதேசத்தில் ஒரு அங்கமாக உள்ளது) செயலார்வமிக்க மன்னர் மகாராஜா சர் உதய்சிங் புவார் முயற்சியில் 1926இல் ஒரு திருப்புமுனையாக இம்முயற்சி செய்யப்பெற்றது. "தார் மகாராஜாவுக்குத் தெரிவியுங்கள்" என்று (பிரபல ரோல்ஸ் ராய்ஸ் எஞ்சின்களில் ஆரம்பகாலத்தில் இருந்தமாதிரி) பொறிக்கப்பட்ட அலுமினிய வளையங்கள் அவருக்காகவே மும்பை கழகத்தால் வடிவமைக்கப்பட்டன. அது

நிதானமாக செய்யவேண்டிய சிரமமான பணி. உலோகத்தகடுகளை சரியான அளவில் நறுக்கி, கூரிய முனைகளை மென்மைப்படுத்தி வாசகங்களையும் வரிசை எண்ணையும் உருக்கு அச்சுகள் மூலம் எழுத்தெழுத்தாக கைவேலையாகப் பொறிக்கவேண்டும். அன்றைய சூழலில் அது மிகச்சிறிய அளவிலேயே இயன்றது, இருந்தும் துர்க்கிஸ்தான், சைபீரியா உள்ளிட்ட சோவியத் நாட்டின் பல பாகங்களிலிருந்தும், அவ்வளவு தொலைவிலிருந்து, கிடைத்த பலன்கள் பிரமிப்பூட்டுவதாகவும் எதிர்பார்ப்பை உண்டாக்குவ தாகவும் இருந்தன. அந்த பிரமிப்பும் எதிர்பார்ப்புமே என்னை வாய்ப்பும் வசதியும் என்றாவது ஏற்பாட்டால், எப்போதாயிருந்தாலும் கழகம் இத்தனையும் தனது தலைமைப்பணிகளில் ஒன்றாக ஏற்கவேண்டும் என்று முடிவுசெய்ய வைத்தன. இந்த அனுபவத்தின் வெற்றியை வைத்தே வசதியும் ஆர்வங்களும் உள்ள சில ஜமீன்தார்களை இத்தகைய முயற்சிகளில் ஈடுபடுமாறு சிந்து நிர்வாக அதிகாரிகள் சிலர் மூலம் கவர கழகம் முயற்சியெடுத்தது. சிந்து அப்போது மும்பை மாநிலத்தில் ஒரு பகுதியாயிருந்தது. இங்கும் பிரச்சினை வளையம் தயாரிப்பதுதான். 'மும்பை இவ. கழகத்துக்குத் தெரிவியுங்கள்' என்பதை வளையங்களில் கைவினைஞர்கள் மூலமே பொறிக்கவேண்டியிருந்தது. எனவே நிறைய தயாரிக்க முடியவில்லை. சிறிய அளவில்தான் முயற்சி எடுக்கப்பட்டதெனினும் பலன் எதிர்பார்த்ததைவிட அதிக சிறப்பாயிருந்தது.

நீண்ட காத்திருத்தலுக்குப்பின் 'வாய்ப்பு' எதிர்பாராமலும் தற்செயலாகவும் உலக சுகாதார அமைப்பு வழியே வந்தது. தென்னிந்தியாவில் கர்நாடகத்தில் கியாசனூர் வனப்பகுதியில் 1957 அளவில் ஒரு கொடிய புதுவகை நோய் வேகமாகப் பரவியது. குரங்கு வியாதி என்றும், கே.எப்.டி. என்றும் அழைக்கப்பட்ட இவ்வியாதி குரங்குகளையும் மனிதர்களையும் தாக்கியது. உயிர்ச்சேதமும் ஏற்பட்டது. இது உண்ணிகள் வழியே பரவியது. புனே கிருமி ஆராய்ச்சி மையம் இதனை ஓம்ஸ்க் ஹெய்மராஜிக் காய்ச்சல், ரஷ்யாவின் வசந்த-கோடை என்சபலிடிஸ் (ஆர்.எஸ்.எஸ்) வகை யைச் சேர்ந்ததென்று கூறியது. கண்டம் விட்டு கண்டம் தாவி இந்தக்கிருமி வருகிறது என்றதும் ரஷ்யாவுக்கும் இந்தியாவுக்கும் இடையே போய்வந்து கொண்டிருக்கும் பறவைகள் வழியே இவ்வுண்ணிகளும் உண்ணிவழி கிருமிகளும் பயணம் செய்யலாம் என்றும் கணிக்கப்பட்டது. உலக சுகாதார அமைப்பு நடவடிக்கையில் தீவிரமான 1959 மார்ச்சில் ஜெனிவாவில் 'மனிதரையும் பிற உயிர்களையும் தாக்கும் கிருமிகள் பரவ பறவைகள் உதவியாக

அமைவது பற்றி ஆராய்வதற்கான அறிவியல் குழு' கூட்டம் ஒன்றுக்கு ஏற்பாடு செய்து என்னையும் அழைத்தது. கட்சிலும் வடமேற்கு இந்தியாவிலுமான பறவைகள் புலம்பெயர்தல் பற்றி ஆய்வதற்கு அவர்களுக்காக தயாரிக்கப்பட்ட திட்ட அறிக்கையை இக்கூட்டம் விவாதித்தது. திட்டம் மிக ஆதரவோடு ஏற்கப்பட்டது. உலக சுகாதார நிறுவன நிதியுதவியுடன் இந்தியத் துணைக் கண்டத்தில் திட்டமிட்ட நடவடிக்கையாக முதன்முறையாக வளையம் கட்டுதலும், பறவைகள் புலம்பெயர்தல் பற்றிய ஆய்வும் நடைபெற்றன. மும்பைக்கழகத்தின் புலம்பெயர் பறவைகள் திட்டம் ஆரம்பித்த கதை இதுதான். இந்த ஆய்வுக்கான வித்து என்னவோ ஹெரிகோலண்ட் பறவைஇயல் பார்வையில் பணிமனைக்குப் போயிருந்தபோது–1929லேயே என்னுள் பதிந்துவிட்டது.

கிட்டத்தட்ட 1965 வரை, வளரும் நாடுகள் தொடர்பான பரவலான பொதுசுகாதார ஆய்வுத் திட்டங்களுக்காக அமெரிக்கா உலக சுகாதார நிறுவனத்துக்கு கணிசமாகப் பொருளுதவி செய்து வந்தது. மூன்று நான்காண்டுகளுக்குப்பின் உலக சுகாதார நிறுவனம் மும்பை கழகத்துக்குத் தந்துவந்த நிதிஉதவி நின்றுபோயிற்று. கொரியா போரில் மிகப்பெரிய அளவில் ஈடுபட்டிருந்ததாலும் அது தொடர்பான நிதி ஒதுக்கீடுகளாலும் ஆராய்ச்சி மானியங்களை மறு பரிசிலனை செய்யவேண்டிய நிலைக்கு அமெரிக்கா ஆளானதால் மும்பைக் கழகத்தின் நிதித்தேவைகளில் நெருக்கடி ஏற்பட்டது. வளையம் கட்டும் திட்டத்துக்கு திணறல் ஏற்பட்டது. வாஷிங்டன் நகரிலுள்ள ஸ்மித்ஸோனியன் அமைப்பு மட்டும் சரியாக அந்த நேரத்தில் தலையிட்டிராவிடில் இதற்கு மரணமே சம்பவித்திருக்கும்! நிச்சயமற்ற நிகழ்காலமாயிருந்த அந்த இடைப்பட்ட காலத்துக்கு நிதித்தேவைகளை அவர்கள் கவனித்துக்கொண்டனர். அதைத் தொடர்ந்து தற்செயலாக, கூரையைப் பிய்த்துக்கொண்டு கொடுக்கிற தெய்வம்போல சற்றும் எதிர்பாராத ஓரிடத்திலிருந்து உதவி கிட்டியது.

அப்போது அமெரிக்க தரைப்படை மருத்துவ ஆய்வுக்கழகம் தென்கிழக்காசிய ஒப்பந்த நிறுவனத்தின் ஒரு அங்கமாக பாங்காக் நகரில் தலைமையகம் கொண்டு இயங்கிவந்தது. அவர்கள் மாபெரும் வளையம் கட்டும் திட்டம் ஒன்றை செயல்படுத்தி வந்தனர். புலம்பெயர் விலங்குகளின் நோய்கள் பற்றிய கணக்கீடு (எம்ஏபிஎஸ்/ மேப்ஸ்) என்று அது அழைக்கப்பட்டது. ஜப்பான், பிலிப்பைன்ஸ், தாய்லாந்து, மலேயா, தைவான், இந்தோனேசியா ஆகிய நாடுகள் அத்திட்டத்தின் களமாக இருந்தன. இந்தியாவுக்கும் அதை விரிவாக்க

அவர்களுக்கு பேரார்வம் இருந்தது. ஸ்மித்ஸோனியனும் உலக சுகாதார அமைப்பும் இத்துறையில் மும்பைக்கழகத்தின் அரும்பணி பற்றி அவர்களுக்கு சிறப்பாகக் கூறியிருந்தனர். மேப்ஸ் திட்டம் முழுமைக்குமான திட்டமிடலும் ஒருங்கிணைப்பும் செயலார்வம் மிக்க விற்பன்னரான அமெரிக்கப் பறவைஇயல் நிபுணர் முனைவர் எச். எலியட் மக்லூர் என்பவரால் கையாளப்பட்டு வந்தன. கலகலப் பான அந்த மனிதருடன் பணியாற்றுவதே ஒரு கல்வியும் சுகானு பவமுமாகும். பொது அமைப்புகளின் பணத்தைக் கையாள்வதில் நான் கடுமையான சிக்கனத்துக்கு பெயர்பெற்றவன்! எனவே அவர்கள் நிதியுதவி அளித்துவந்த தென்கிழக்காசிய நாடுகளின் திட்டங்களுடன் ஒப்பிடுகையில் வளையம் கட்டப்பட்ட பறவை களுக்கும் செலவான டாலர்களுக்குமான விகிதம் என்ற கோணத்தில் மும்பைக் கழகத்தின் சாதனையை அவர் வியந்து பாராட்டியபோது, நான் அளவிலாப் பெருமையடைந்தேன்.

மேப்ஸ் திட்டத்துக்கான நிதியுதவியில் பெரும்பகுதி ஜப்பானி லிருந்த ‘அமெரிக்க ராணுவ ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்திக் குழு (தொலைக்கிழக்கு)’ என்ற மையத்திலிருந்து கிடைத்தது. அவர்கள் மும்பை கழகத்தின் வளையம் கட்டும் திட்டத்தை ஆர்வத்தோடு கவனித்து பாராட்டினர். அது நிறுத்தப்படும் நிலைக்கு வந்து கொண்டிருப்பதைக் கண்டவுடன் உதவிசெய்ய முன்வந்தனர். நடவடிக்கைகளின் மூலம் கிடைக்கும் தகவல்களும், முடிவுகளும் அவர்கள் ஆய்வுக்கும் உதவும் என்பதால் அவர்களுக்கும் கிடைக்க வேண்டும் என்பது நிபந்தனையாயிருந்தது. அதில் ஏதும் தவறு இருப்பதாய் எனக்குப் படவில்லை. ஆனால், இதுபோன்ற பயனுள்ள ஓர் அறிவியல் கூட்டுமுயற்சி மும்பை கழகத்தையும், திட்டத்தின் தலைமைப் பொறுப்பாளன் என்ற முறையில் தனிப்பட என்னையும் எவ்வளவுதூரம் தவறான கோணத்தில் மக்கள் கவனத்துக்கும் சங்கடத்துக்கும் இட்டுச்செல்லக்கூட இயலும்-இட்டுச்செல்லவும் போகிறது என்று சிறிதும் சந்தேகப்படவேயில்லை.

மேப்ஸ் திட்டத்துடன் இணைந்து மும்பை கழகம் இதனை நடத்தப்போவதை வடஇந்தியப் பத்திரிகையென்றின் ‘அறிவியல் நிருபர்’ என்று அழைத்துக்கொண்ட ஒரு சாமர்த்தியசாலி பத்திரிகையாளர் அறிந்துகொண்டதாகத் தெரிகிறது. அவர் தாமாகவே கற்பனை செய்துகொண்டு பயங்கரமான முறையில் ஒரு செய்தியை வெளியிட்டார். ‘இவ்வாறாக புலம்பெயர் பறவைகளைப் பயன்படுத்தி உயிர்க்கொல்லி கிருமிகளை எதிரி நாடுகளுக்கு அனுப்பவும் பரப்பவும் அமெரிக்கா முனைகிறது.

வளையம் கட்டும் திட்டம் அந்த உயிரியல் போர்முறைக்கான திட்டமே' என்றார் அவர். காலமோ அமெரிக்காவுக்கும் கம்யூனிச நாடுகளுக்கும் பனிப்போர் உச்சத்தில் இருந்த காலம். நம் நாட்டுக்கு வரும் பறவைகளோ பெரும்பாலும் ரஷ்யாவிலிருந்து வருவன; சீனாவிலிருந்து வருவனவும் உண்டு. ஆக அவர் எழுதியதையும் மக்கள் நம்பக்கூடிய சூழல். அவரது கட்டுரை தில்லி அரசியல் வட்டாரங்களில் சிறு புயலையே ஏற்படுத்திவிட்டது. நாடாளுமன்ற மக்களவையிலிருந்த பொதுவுடைமை ஆதரவாளர்களும் அமெரிக்க எதிர்ப்பாளர்களுமான 'தேசபக்தர்கள்' கூக்குரலெழுப்பி சூடான கண்டனங்களை வீசத்துவங்கி விட்டனர். அதன் விளைவாக ஒன்றன்பின் ஒன்றாய் இரண்டு விசாரணைக் குழுக்கள் அமைக்கப் பட்டன. அவற்றின் அறிக்கைகள் முற்றிலுமாக மும்பை இயற்கை வரலாற்றுக்கழகத்தையும், திட்ட ஒருங்கிணைப்பாளர் சாலிம் அலியையும் குற்றநோக்கங்களோ, தேசவிரோத நடவடிக்கைகளோ கொண்டவர்கள் அல்ல என்று தெரிவித்தன: ஆயினும் நாடாளுமன்ற உறுப்பினர்களின் ஐயம் தீராததால், அவர்கள் கூச்சலை நிறுத்தவும் ஒரேடியாக ஐயங்களையும், ஊகங்களையும் நீக்கவும் அரசு 'உயர் அதிகார'க் குழு என்றழைக்கப்பட்ட ஒரு குழுவை நியமித்தது. புனேயிலிருந்த கிருமிகள் ஆராய்ச்சி மையம், டாடா அடிப்படை ஆராய்ச்சி நிறுவனம்-மும்பை, இந்திய உயிரியல் நிறுவனம் (கல்கத்தா) ஆகிய ஒவ்வொன்றிலுமிருந்து ஒருவராக மூன்று அறிவியல் உயர் விற்பன்னர்கள் அதில் உறுப்பினராயிருந்தனர். என்ன ஏது என்று முற்றிலும் புது விசாரணையாகவும் எல்லா அம்சங்களையும் அலசுவதாகவும் அதன் பணி அமைந்தது. முதல் இரு குழுக்களின் முடிவை அப்படியே இக்குழுவும் தெரிவித்தபின்பே மும்பை கழகத்தின் நற்பெயரும் நம்பகத்தன்மையும் மீண்டும் தெளிவாகின. ஆனால் இடைப்பட்ட ஈராண்டுகளில் நிகழ்ந்த அமளியில் எங்கள் திட்டம் நிதியின்மையால் சுத்தமாக நின்றே போய்விட்டது. இடையில் மேப்ஸ் திட்டமும் கைவிடப்பட்டு விட்டது. இத்தகைய சங்கடமான நிகழ்வுகளைத் தவிர்க்க, தான் அனுமதிவழங்கும் கூட்டுமுயற்சிகளுக்கு நிதி ஏற்பாடு செய்வதையும் அரசு தனது பொறுப்பாக ஆக்கிக்கொண்டது. பொதுக்கடன் (P.L.480) என்ற திட்டத்தின் கீழ் இந்தியாவில் தங்கும் இந்திய நாணயத்திலிருந்து அதற்கான தொகை ஒதுக்கீடு செய்யப்படும். சம்பந்தப்பட்ட அமெரிக்க நிறுவனத்தின் வேண்டுகோளின் பேரில் இப்படி ஏற்பாடு செய்யப்பெறும்.

இப்படி நிதியுதவி உயிர்பெற்றதும் கழகத்தின் வளையம் கட்டும்

திட்டமும் புத்துயிர் பெற்றது. புலம்பெயர் பறவைகளுக்கு மட்டுமின்றி, நிரந்தரவாசிகளுக்கும் விரிவுபடுத்தப்பட்டது. அவற்றின் சூழல், இயக்கம் ஆகியவை ஆராயப்பட்டன. பறவைகளின் புலம்பெயர்வு பற்றிய ஆய்வுகளும், அதில் பங்குபெற்ற எண்ணற்ற உயர் பட்டப்படிப்பு முடித்த உயிரியல்வாதிகளுக்கு அவற்றின் மூலம் கிடைத்த களப்பயிற்சியும், கழகத்துடனான எனது நெடுங்கால உறவில் அதிகபட்ச நிறைவான மகிழ்வளித்த அம்சங்களில் அடங்கும். அவர்களில் பலர் பின்னாளில் கழகத்தின் வழிகாட்டலில் பணிக்களப் பறவையியலில் ஆய்வு செய்து உயிரியலில் இன்னும் உயரிய பட்டங்களைப் பெற்றனர். இதுவரை (1983) அமெரிக்க அரசு சார்பான வனவுயிர், மீன் கழகத்துடனான கூட்டுமுயற்சியாக உருவான ஐந்து-ஐந்து ஆண்டுகளுக்கான இரு திட்டங்களுக்கும்கூட இந்திய வல்லுனர்களையே உயிரியல் ஆய்வாளர்களாக அமர்த்திக் கொள்ள இயன்றிருக்கிறது. இந்திய அரசின் பாதுகாப்பு அமைச்சகத்தின் கீழ் இயங்கும் வான்வழிப்பயண ஆய்வும் முன்னேற்றமும் பற்றிய வாரியத்தினால் வரைவு செய்யப்பட்டு நிதியுதவியும் தரப்பட்ட மூன்றாவது திட்டம், இந்திய விமான நிலையங்களில் பறவைகளின் இடைஞ்சல் பற்றிய சூழலியல் ஆய்வு. இது விரைவில் துவங்கும். பறவைகள் புலம்பெயர்தல் பற்றி முப்பதாண்டுகளாக நடந்துவரும் ஆய்வுகளால் ஒரு சாதனை நிகழ்ந்துள்ளது. கிடைத்திருக்கும் தகவல்கள் இந்தத்துறையில் நிலவிவந்த ஊகங்களுக்கு பதிலாக அளித்துள்ள, உறுதியான செய்தி விபரங்கள் உயரிய அறிவியல் முக்கியத்துவம் வாய்ந்தவை ஆகும்.

மும்பை கழகத்தின் வாடிக்கையான புலம்பெயர்பறவை ஆய்வுக்கு உலகச்சுகாதார நிறுவனத்தின் நிதியுதவி கிடைக்கும்வரை எனது வருடாந்தர பரத்பூர் பயணங்களை பரத்பூரிலேயே வாழும் நீர்ப்பறவைகளின் இல்லறப்பருவ காலத்தின் போதே வைத்துக் கொள்வது என் வாடிக்கையாகும். நாரைகளும் கொக்குகளும் நாலாவித கடற்பறவைகளும் பிறவுமாய் பல பறவையினங்கள் கானா பகுதியில் கூடிவாழ வரும்; காடெல்லாம் அவை அடர்ந்து வாழும் காட்சி. தேசத்திற்குள்ளேயும் வெளியிலும் அவற்றின் நடமாட்டம் சரியாக அறியப்படவில்லை. மகாராவ் தந்த நேசமிகு ஒத்துழைப்பாலும், அவரது வேட்டைக்காரர்களின் உதவியாலும், ஆண்டுதோறும் நூற்றுக்கணக்கான குஞ்சுகளுக்கு வளையம் கட்டியிருக்கிறேன். எல்லாம் கைவினை வளையங்கள்தான். சில விசித்திர விவரங்களும் மிகச்சுவையான செய்திகளும் எதிர்பாராத பிரதேசங்களிலிருந்ததெல்லாம் கிடைத்திருக்கின்றன—அதுவும்

ஒற்றைத் தனிப்பறவை திரும்பவுங்கூட! ஆனாலும் குறிப்பிடத்தக்க அளவு பெரும்பயன் இல்லைதான். ஸ்வீடன் நாட்டிலிருந்து பல வகைப்பட்ட வளையங்கள் அதுவும் பல அளவுகளில் கிடைக்கப் பெற்ற பிறகே—ஜப்பானிலிருந்து மிஸ்ட்-நெட் என்னும் வலை வகையும்—பெரிய அளவில் வளையம் கட்டும் ஆய்வுமுறை இயலக் கூடியதாயிற்று. ஏறத்தாழ முதல் ஐந்தாண்டுகளில் தரைப்பறவைகளே கவனத்தில் வந்தன. முக்கியமாக வீட்டுப்பறவைகளையும் சிட்டுக்களையும் கூறலாம். குறிப்பாக நிலத்தில் உணவெடுக்கும் வகையின. அவற்றின் உடலில்தான் உண்ணிகள் வாழும். வாத்துக்களுக்கு வளையம் கட்டும் சீரிய முயற்சி பின்னாளில் வருகிறது. வாத்துப் பிடிப்பதில் பரத்பூர் வாசிகள் திறமையாக இல்லை. பீஹாரைச் சேர்ந்த சாங்னி, மிஷ்ரிகார் இனத்தைச் சேர்ந்த தேர்ந்த பறவை பிடிக்கிறவர்களை நாங்கள் தெரிந்துகொண்ட பிறகே, குறிப்பிடப்படும்படியான அவர்களது தொழில் நுட்பம் எங்கள் உதவிக்கு வந்த பின்பே, பரந்த அளவில் நீர்ப்பறவைகளுக்கு வளையம் கட்டுவது இயலக்கூடியதாயிற்று.

தேசியப்பூங்காவாகவும், அதற்கும் முன்பு நீர்ப்பறவை சரணாலயமாகவும் பொதுச்சொத்தாவதற்கு முன்பு கியலாடியோ கானா—பரத்பூர் மன்னர்களுக்கு உரிமையான உன்னதமான தனியார் வாத்து வேட்டைக்காடாக இருந்தது. இன்றைய அரசருக்கு அதிகாரம் இருந்தவரையில் அவர் தன் வேட்டை உரிமைகளை விட்டுக்கொடுப்பது என்ற பேச்சல்ல-நினைத்துப் பார்க்கக்கூட வாய்ப்பே இருக்கவில்லை. அப்புறமல்லவா சரணாலயம் அமைப்பது! அடித்து சாப்பிடவும், வேட்டை கேளிக்கையாகவும் அவர் சுடுகிற சில வாத்துக்களைத் தவிரவும் ஒவ்வொரு பருவத்திலும் மூன்று—நான்கு வேட்டை விழாக்கள் நடத்துவார். சகலவித மிக முக்கியப் பிரமுகர்களும் அவ்வளவு முக்கியமில்லாதவர்களுமாய் பிரிட்டிஷ் மன்னரின் பிரதிநிதியான ஆட்சித்தலைவர், மாநில ஆளுனர்கள், உயர்மட்ட அதிகாரிகள், அதே தளத்து பட்டாளத்தார்கள், பிறபகுதியின் சக இளவரசர்கள் எல்லாரும் வருவர். அடையாளமிட்ட பகுதிகள் ஒவ்வொரு துப்பாக்கி (வீரரு)க்கும் நிர்ணயிக்கப்படும். ஏரியின் முழுப்பரப்பிலுமாக அவை பரவியிருக்கும். ஒரு ராணுவ நடவடிக்கைபோல சின்னச் சின்ன நடவடிக்கையும் நுணுக்கமாகத் திட்டமிடப்பட்டு நடைபெறும். அரசரின் ஆட்கள் பறவைகளை ஓரிடத்திலும் உட்காரவிடாமல், அவை பறந்த வண்ணம் இருக்குமாறு பார்த்துக்கொள்வர். அதற்கே, அவர்களுக்கு பயிற்சியும் உண்டு! ஏராளமான பலிகள் 'சாதனை'

ஆகும். இந்த மாபெரும் வேட்டை நிகழ்ச்சிகளில் புதுப்புது சாதனைகள் பல நிகழ்த்தப்படும். ஒரே நாளில் இரண்டாயிரம், மூவாயிரம் பறவைகள் இறந்த சாதனைகள் உண்டு. நான்காயிரம் பறவைகள் கொன்று குவிக்கப்பட்ட சாதனை மூன்று முறை நிகழ்ந்துள்ளது. 1938இல் நவம்பரில் 38 துப்பாக்கிகளுக்கு 4273 வாத்துகள் பலியானதுதான் கியோலாடியோ கானாவின் வரலாறு காணாத சாதனையாகும். அன்றைய தினம், அன்றைய பிரிட்டிஷ் அரசப் பிரதிநிதிதான் (இன்றைய குடியரசுத் தலைவர்போல) தலைமை வேட்டைக்காரர். லின்லித்கோ பிரபுவின் பங்கு இதில் அதிகமில்லையென்றாலும், வேறு ஒரு கோணத்தில் அவரும் உலக சாதனை நிகழ்த்தினார். ஒரே நாளில் தன் தோளில் தாங்கிய 12 போர் துப்பாக்கிமூலம் 1900 ரவுண்டுகள் சுட்டார். காலை நேர சுடுதலில் குறைந்தது 100 முறையாவது துப்பாக்கிச் சூடு நடத்தி தோளைப்புண்ணாக்கிக் கொண்டவனுக்குதான் அனேகமாக அமானுஷ்யமான இந்த சாதனையின் அருமை தெரியும்.

பறவைகளை ரசிப்பவர்களின் விருப்பத்துக்குரிய களங்களில் கானா ஒரு சிறப்பிடம் பெறுவது, அங்கு விதவிதமாக காணக் கிடைக்கும் உள்ளூர் பறவைகளும், புலம்பெயர் பறவைகளும், அவற்றின் வகைகளும் காரணமாக மட்டுமல்ல. இங்குதான் மிக நீண்ட காலம் தொடர்ந்து பறவைக்காட்சி என்பது இயலுகிறது. சில சமயங்களிலே தொடர்ந்து ஆறு மாதத்துக்குமேல் கூட இந்த விருந்து தொடர்ந்து கிடைக்கப்பெறுவதுண்டு. பொதுவாக இப்படி ஒரு நெடிய காலத்துக்கான ரசனை என்பது அரியதாகும். ஒழுங்காக மழை துவங்கும் ஆண்டுகளில் வாத்து, நாரை, மண்டையான் முதலியன ஆகஸ்டில் இல்லறம் நடத்தும். அவையும், அவற்றின் மக்கட் செல்வங்களும் வெளியேறுவதற்குள்ளேயே, நவம்பரில் அயல் நாட்டிலிருந்து புலம்பெயர் நாரைகளும் வாத்துகளும் வரத் துவங்கிவிடும். மாதமுடிவில் விருந்தினர்களே 'நகரை' முழுதாக ஆக்கிரமித்து விடுவார்கள். இப்படி நீடித்த கால அளவில் நீர்ப் பறவைகளைக்கண்டு பயில்வது என்பது உலகிலேயே வேறெங்கும் இல்லை என்றே கருதுகிறேன். இதுதான் இப்போது இங்குள்ள தேசியப் பூங்காவை இயற்கையியல் சுற்றுலாக்காரர்களுக்கும் பறவை-புகைப்படக்கலைஞர்களுக்கும் ஒரு சொர்க்கமாக ஆக்குகிறது. ஆனால், சுற்றுச்சூழல் பாதுகாப்புக் கோணத்தில் பார்த்தால் இது கொஞ்சம் பிரச்சினைக்குரிய விஷயம்தான்!

இளமையும் எழுச்சியும்கொண்ட ஐசி.எஸ் அதிகாரியான கே.பி.எஸ். மேனன் என்னுடைய ஹமீதண்ணாவின் நண்பரும்,

ரசிகருமாவார். பரத்பூர் ராஜ்ய நிர்வாகியாக ரிச்சர்ட் டாட்டன் ஹாமை அடுத்து இவர் வந்து சேர்ந்தார். 1936இல் அல்லது அதை யொட்டி அவர் பொறுப்பேற்றார். அவரும் சுமார் 12 வயதான அவரது இரட்டைப்பெண் குழந்தைகளும் இரும்புத்தொட்டிப் படகில் என்னுடன் சேர்ந்துகொண்டு சின்ன சின்ன குஞ்சுகளுக்கு வளையம் கட்டும் பணியில் எவ்வளவு பரபரப்பும் ஆனந்தமும் அடைந்தார்கள் என்பது தெளிவாக நினைவில் நிற்கிறது.

கியோலாடியோ கானாவை உலகப்புகழுக்குரியதாக்கும் இன்னொரு செய்தியும் உண்டு. உத்திரப்பிரதேசத்திலும், இந்திய-கங்கைச் சமவெளியிலும்கூட வெளிப்பார்வைக்கு இதேபோன்ற ஈரநில உறைவிடங்கள் மண்டிக் கிடந்தாலும் இந்தோ-பாக் துணைக் கண்டத்திலேயே இந்த ஒரே இடத்தில்தான் மிகக்குறைந்த அளவில் என்றாலும்கூட, அரியதும் அழகானதுமான பனிவெள்ளை சைபீரியக் கொக்குகள் குளிர்காலத்தில் வந்து தங்கும். இங்கே வேறிடங்களில் கிடைக்காத சுவையுணவு ஏதேனும் கிடைக்கிறதா அல்லது வேறு என்னதான் இங்கே அவைகளைக் கவர்ந்திழுக்கும் சிறப்பம்சம் என்று தெரியவில்லை. இந்தப்பறவைகள் வனவுயிர் (பாதுகாப்பது) சட்டம் 1972இன் முதல் அட்டவணையில் (முற்றிலும் பாதுகாக்கப்படுபவை) சேர்க்கப்பட்டுவிட்டதால் அவற்றின் இரைப்பையை சோதித்துப் பார்த்து அறிவது ஒரு போதும் இயலாததாகிவிட்டது. கியோலாடியா கானாவில் கர்னல் மெய்னர்ட்சகனுடன் அவரது சிறப்பாய்வுக்காக 1937இல் சிறகுப் பேன்களை சேகரித்துக் கொண்டிருந்த நாட்களில் தான் முதன் முதலில் நான் சைபீரியக் கொக்குகளை சந்தித்தேன். வந்திருந்த பதினொன்றில் ஒன்றைச் சுட்டேன். துரதிருஷ்டவசமாக அதன் உடலில் பேன்களே இல்லை. ஆனால் அதன் இரைப்பையில் இருந்தவற்றை சேகரித்துவைத்தோம். சைப்ரஸ் புல்லின் தண்டுகள் தான் நிறைய இருந்தன. வேறு எதுவும் இல்லையென்றே சொல்லி விடுமளவுக்கு அந்த தண்டுகள்தான் அதன் உணவு. அந்தப்புல் இனத்தின் பலவகைகள் இந்தப்பகுதியில் ஏராளமாக வளர்கின்றன. கியூவில் இவை அடையாளம் காணப்பட்டிருக்கவேண்டும். எப்படியோ அது நடைபெறாமலே போய்விட்டது. எனவே இந்தப்பறவை குளிர் காலத்தில் வேறெங்குமின்றி இங்கே மட்டுமே வருவது உணவுக்காகத்தானா இல்லையா என்பது விடை காணப்படாத வினாவாகத் தங்கிவிட்டது. ஊனுண்ணும் பறவைகள், இரையாகும் பறவைகள் ஆகியவற்றிலும் நாங்கள் உண்ணியைத்தேடி அலைந்தோம். கர்னல் மெய்னர்ட்சகன் தன் நாட்குறிப்பில் ஓரிடத்தில் சொல்கிறார்: "பரத்பூர். 23.1937. காலை உணவுக்குப்பின்

ஸ்பாடட், பல்லாஸ், இம்பீரியல் ஆகியவற்றில் தலைக்கு இரண்டும், டானி, ஸ்பிரோரார்னிஸ், சர்காயிடஸ் ஆகியவற்றில் ஒவ்வொன்றும் வேட்டையாடினேன்." தலைக்கு ஒன்றென்ன, நினைத்திருந்தால் ஒரு டசனே சுட்டிருக்கலாம். அவர் நினைக்காததுதான் ஆச்சரியம். இந்தவகைப் பறவைகள் 1936க்கும் நான் எழுதும் இக்காலத்துக்கும் இடையில் எவ்வளவு விரைவாக அருகிப்போய்விட்டன என்பது திடுக்கிட வைக்கும் வேகமாகும்.

இந்திய விடுதலையின்போது பரத்பூர் சிற்றரசை இந்தியாவுக்கு அதிகாரமாற்றம் செய்து ஒப்படைக்கும் ஆவணத்தில் கானாவில் வேட்டையாடும் உரிமை தனது தனி முன்னுரிமையாகவே தொடரவேண்டும் என்று ஒரு நிபந்தனையையும் விரும்பினார் அரசர். தானும் நண்பர்களும் அனுபவிக்க விரும்பிய ஒன்று அது. பிற முக்கிய விஷயங்களின் அழுத்தத்தால், அரசும் விட்டுக் கொடுத்தது. ஆனால் தான்மட்டும் தொடர்ந்து சுடுவது-சாமானியர்களுக்கு அதை மறுப்பது என்ற மன்னரின் கொள்கை அந்தப்பகுதியிலிருந்த மன்னரெதிர்ப்பு கட்சிக்கு எரிச்சலைக் கிளப்பியதால் அவர்கள் கடந்த காலத்தில் அவர் செய்த தவறுகளுக்கும் அநியாயச் செயல்களுக்கும் அவருக்கு தண்டனை தரவேண்டும் என வரிந்து கட்டிக்கொண்டு களமிறங்கினர். தனது சொந்த சுகத்துக்காகவும் தில்லியில் ஆளவந்தவர்களில் தம் நண்பர்களை மகிழ்விக்கவுமே அவர் இதில் விடாப்பிடியாக இருக்கிறார் என்று அவர்கள் ஒரு போராட்டத்தையே உருவாக்கி விட்டனர். அவர் வேளாண்மைக்கு நிலமின்றி வாடும் எண்ணற்ற ஏழை எளிய குடியானவர்களுக்கு வேலை செய்ய நிலமும், பாசன நீரும் கிட்டாமல் செய்கிற பாவ காரியத்துக்கும் அஞ்சவில்லை என்பது அவர்கள் முழக்கமாயிற்று. கோணல் புத்திக்கார அரசியல்வாதிகளின் ஆதரவுடன் கானா பகுதியை முற்றிலுமாக அழித்து ஒழித்துவிட சதி தீட்டப்பட்டு, அதை அதிவிரைவில் நிறைவேற்ற இருந்த நேரத்தில் மிகமிகத் தற்செயலாக அது என் காதுக்கு வந்தது. அது மிகப்பிரபலமான இரு பறவையியல் மேதைகளுடன் நான் பரத்பூர் போயிருந்த சமயம். ஒருவர் ஹோரஸ் அலெக்சாந்தர்; மற்றவர் அப்போது இந்தியத் தரைப்படையின் தலைமைப்பொறியாளரான ஜெனரல் சர். ஹெரால்ட் வில்லியம்ஸ். நாங்கள் மூவருமே பிரதமர் ஜவஹர்லால் நேருவை நன்கறிவோம். தனிப்பட்ட முறையில் அவர் இயற்கையை ஆழ்ந்து நேசிப்பவர் என்பதையும் அறிவோம். உடனே அவருக்கு என்ன நடக்கிறது என்று தெரியப்படுத்தி அவர் உடனடியாகத் தலையிட்டு அந்த

அழிவை தடுக்கவேண்டும் என்று வேண்டினோம். அவர் உரிய தருணத்தில் நன்முறையில் குறுக்கிட்டதால்தான் கானா அழிவிலிருந்து தப்பியது. வேளாண்மை, நீர்ப்பாசனம் ஆகியவற்றுக்குப் பொறுப்பேற்றிருந்த, சக்தியும், பரிவும் மிக்க அமைச்சர் ரபி அகமது கித்வாய் மூலம், நிலமும் நீரும் மறுக்கப்படுகிறது என்ற குற்றச்சாட்டை புலனாய்வு செய்து விற்பன்னர்கள் மூலம் சம்மந்தப்பட்ட அனைவருக்கும் நிறைவுதரும் விதத்தில் சிக்கலைத் தீர்த்துவைத்தார். ஆணவம் கொண்டிருந்த மன்னரும் காலப்போக்கில் வற்புறுத்தலுக்கும் தார்மீகக் கட்டுப் பாட்டுக்கும் பணிந்து தமது வேட்டை உரிமையை விட்டுக்கொடுத்தார். நிச்சய அழிவு என்ற நிலையிலிருந்த கானா இப்படியாகக் காப்பாற்றப்பட்டு இன்று உலகத்திலேயே சிறந்ததோர் நீர்ப்பறவை நிலையமாகத் திகழ்கிறது.

16

# பஸ்தார்–1949

பஸ்தார், காங்கேர் ஆகியவை பிரிட்டிஷ் இந்தியாவில் கிழக்கு மாகாணப் பகுதியில் அமைந்துள்ள ஆதிவாசி ராஜ்யங்களில் இரண்டாகும். இந்த வட்டாரம் 1949இல் நான் பறவைக் கணக்கிடு நடத்தும் வரை உயிரியல் அறிஞர்களால் அறியப்படாமலே இருந்து வந்தது. இதனால் களப்பணி இயற்கை ஆய்வாளரிடையே புதிரான ஒரு அறியாமையே நிலவியது. இந்திய விடுதலை கிடைத்து இரண் டாண்டுகள் ஆகியும் இங்கே மன்னராட்சியே தொடர்ந்து வந்தது. அவர்களின் எதிர்காலம் நிச்சயமற்றதாய் இருந்ததால் ஆட்சியும் ஆட்டம் கண்டுகொண்டிருந்தது. முரட்டு வட்டாரங்களாகவே தொடர்ந்து இருந்து வந்தன. ஒப்பிட்டுப் பார்க்கையில் மற்ற பகுதிகள் போல் 'நாகரிகம்', 'வளர்ச்சி', மாதர்கள் மேலாடை அணியாமை பற்றிய எச்சரிக்கை உணர்வு முதலிய மாறுதல்களால் பாதிக்கப் படவில்லை. சராசரி ஆதிவாசி நிலம் அது. நல்லவேளையாக அன்றைய பஸ்தார் இப்போது போல சீரழிக்கப்பட்டுவிடவில்லை. அதுவும் குறிப்பாக பய்லாடிலாவில் இரும்புத்தாது கிடைக்கும் என ஜப்பானியருக்கு தெரிந்தபின்பு ஊர் பெருமளவுக்கு உருவிழந்து விட்டது. மழை, வெயில் என எப்போதும் கார்கள் செல்லக்கூடிய ஆனால் தார்போடாத தூசியான சாலைகள் குறைவு. அவையும் அங்கொன்றும் இங்கொன்றுமாக இருந்தன. அகலமான, ஆனால், மையப்பகுதிகளுக்கு மட்டுமே செல்பவை. பெரும்பாலும் போக்குவரத்து என்பது மிகக் குறைந்த அளவிலான ஒழுங்கு இல்லாத தனியார் பேருந்துகள் மூலம்தான் அல்லது மாட்டுவண்டி! காட்டுவழிகள், கரடுமுரடான கச்சா சாலைகள் வழியே அவை ஓடிக்கொண்டிருந்தன. நாணலும் மூங்கிலுமான தற்காலிகப் பாலங்கள் மூலம்தான் காட்டு நீரோடைகளைக் கடக்கவேண்டும். மழைகால திடீர்வெள்ளம் பாலங்களை அடித்துச் சென்றுவிடுவது மிகச் சாதாரணம். ராணுவம் கழித்துக்கட்டிய கிழட்டு ஜீப்கள் தவிர

வேறு நான்கு சக்கர ஊர்திகளே கிடையாது. ஓடைகளில் நீர்மட்டம் குறைவாயிருக்கும்போது எங்கள் வண்டி புதைமணலில் சிக்கிக் கொள்வதோ, நடு ஓடையில் படிகள் வரை நீரில் மூழ்கிவிடுவதோ அடிக்கடி நடக்கிற கதைதான். அப்போதெல்லாம் யாராவது ஆள்கிடைத்து, அவர்கள் தள்ளிக்கொண்டு வந்து கரையேற்றினால் தான் உண்டு. ஆனால், ஆட்கள் கிடைப்பார்கள். பொதுவாக மரமேற்றி வரும் வண்டிகளும் இப்படியாக சிக்கிக் கொள்ளும் என்பதால் அந்த வண்டிக்காரர்கள்தான் அப்படிக் கிடைப்பவர்கள். இத்தகைய கசப்பான அனுபவத்தில் கற்றுக்கொண்ட பாடமாக நான் வண்டியில் எப்போதும் உள்ள உபகரணங்களாக இரண்டு நீள்பிடி மண்வெட்டிகளும் ஒயர் வலைகளும் வைத்துக் கொண்டேன். வலையை தரையில் விரித்துவிட்டால் சக்கரங்கள் மணலில் புதையுண்டு போய் விடாமல் காப்பாற்றிவிடலாம். ஆள்தேடிக் களைத்துப்போகும் பலனற்ற மணிக்கணக்கான நேரத்தை இது காப்பாற்றியது. இன்னொரு அனுபவத்திற்குப்பின் வண்டியின் மேலே ஒரு சைக்கிளைக் கட்டி எடுத்துச் செல்ல ஆரம்பித்தேன். ‘ஏதும் பலிக்காவிட்டால் இருக்கவே இருக்கிறது, எடு சைக்கிளை’ என்பது கொள்கையாயிற்று.

ஒரு நாள் பிற்பகல் பஸ்தாரின் தலைநகரான ஜக்தல்பூர்-கீடம் என்ற ஒரு பெரிய கிராமம் இரண்டுக்கும் நடுவில் பயணம் செய்து கொண்டிருக்கிறோம். சாலையோ மோசமான சாலை. தூரமோ இன்னும் 30 கி.மீ இருக்கிறது. அச்சு முறிந்துவிட்டது, பின் சக்கரம் கழன்றோடிவிட்டது, ட்ரக் கோணல் மாணலாக ஓடி சாலையோரப் பள்ளத்தில் இறங்கிவிட்டது. அந்த வட்டாரத்தைச் சேர்ந்த ஒரு சிறு நிறுவனத்தின் பேருந்து ஒன்று அந்தத் தடத்தில் இரண்டு நாளைக்கு ஒரு முறை போகும். கொஞ்சநேரம் முன்புதான் அது எங்களைக் கடந்து எதிர்த்திசையில் சென்றிருந்தது. எனவே மறுநாள் அது வரும் என்பது எதிர்பார்ப்பு. கிட்டத்தட்ட மாலைப் பொழுதாகி விட்டது. வண்டியிலிருந்த சாமான்களை எடுத்துவிட்டு, அருகிலிருந்த ஒரு திடலில் ஒரு முகாம் ஏற்படுத்திக்கொண்டு இரவைக்கழித்துவிட்டு மறுநாள் காலை வரை பேருந்துக்காக காத்திருப்பது ஒன்றுதான் செய்யக்கூடியது. காலை உணவுக்குப்பின் படுக்கை, மடக்குக் கட்டில் சமையல் பாத்திரங்கள், வாளிகள், விளக்குகள் மற்ற எல்லா சாமான்களையும் அவசர அவசரமாக மீண்டும் ஒழுங்குசெய்து எடுத்து வைத்துக்கொண்டு பொறுமையாக பேருந்து திரும்புமென்று காத்திருந்தோம். சூரியனும் மறைந்து விட்டான். பேருந்துதான் வரவில்லை. சரி, ஏதோ தகராறு என்று

புரிந்தது. எல்லாவற்றையும் மறுபடியும் பிரித்தோம். உள்ளே கவலையோடும் வெளியில் சிரமங்களோடும் இன்னொரு இரவையும் அங்கேயே கழித்தோம்.

அந்தப்பகுதியில் ஆட்கொள்ளிப் புலி ஒன்று நடமாடுகிறது என்ற தகவலின் பேரில் ஒருவாரத்துக்கு மாட்டு வண்டிப் போக்கு வரத்தையும் நிறுத்தியிருந்தனர். இரவு சாமான்களைப் பிரிப்பதும், விடிந்தபின் மீண்டும் கட்டிவைத்துக்கொண்டு காத்திருப்பதுமாக இன்னும் ஒரு நாளும் போயிற்று. மாலை வந்து போயிற்று, பேருந்து எதுவும் எந்தப் பக்கத்திலிருந்தும் வரவில்லை. ஜகதல்பூருக்கு தகவலனுப்பவும் ஏதும் வழியில்லை. மறுநாளும் இதே உறுதியற்ற நிலைதான் என்பதால் கேப்ரியலிடமும் சமையற்காரனிடமும் எல்லாவற்றையும் விட்டுவிட்டு, நள்ளிரவுக்குப்பின் சற்று குளிர்ச்சியாக இருக்கும்போது நடையைக் கட்ட முடிவு செய்தேன். அவ்வண்ணமே விடியற்காலை இரண்டு மணிக்கு பிரமாதமான நிலவொளியில், தோல் உரிக்கும் விற்பன்னனான அந்தோ டிசௌசா (கிழக்கு ஆப்ரிக்காவிலிருந்து அகதியாய்த் திரும்பியிருந்த முரட்டு கோவா இளைஞன்)வும் தோளில் தயாராகத் தொங்கிய மவுசர் துப்பாக்கியும் துணையாகக் கொண்டு நடக்கலானேன். மூங்கில் காடும் சால்மரங்களும் கலந்த அடர்ந்த வனத்தினூடே சாலை நீண்டது. அதுதான் புலிவரும் பாதை. பக்கத்தூரில் பலிவாங்கி பத்து நாள்தான் ஆகியிருந்தது. எதிர்பாராமல் தாக்கப்பட்டால் என் துப்பாக்கியால் எந்தப் பயனுமில்லை. நான் செய்தது பயமறியா இளங்கன்று வேலை என்று இப்போது புரிகிறது. அது ஒரு அமானுஷ்யமான அச்சுறுத்தும் அனுபவம். ஒரு இலை அசைந்தாலும் நிழல் நகர்ந்தாலும்—அது பயந்த மனதின் கற்பனையாய்கூட இருக்கலாம்—ஆகா, தொலைந்தோம் என்ற எண்ணம்தான் தோன்றும். ஆனால், ஏதாவது வண்டி வரும் என்று காத்திருந்து பயனில்லை என்று தோன்றியது. அதோடு வெயில் கொளுத்தோ கொளுத்தென்று கொளுத்தும்போது பகலில் போகவும் மனம் நாடவில்லை. பாவம், அந்தோணி டி-சௌசா. பல மைல்தூரம் பாக்கி இருக்கும்போதே காலணிகள் கடித்து, கால் புண்ணாகி ரத்தமும் வர ஆரம்பித்துவிட்டது. எனக்கே பரிதாபமாகத் தான் இருந்தது. ஆனால் நடுக்காட்டில், புலிபற்றிய பேச்சுகளுக்கு நடுவே, அவனை விட்டுச்செல்லவும் முடியாது. என்வே புண்ணோடும் வலியோடும் அவனும் வேகமாக நடக்க வேண்டிய கட்டாயநிலைமை. காலை எட்டுமணிக்கு ஜகதல்பூரை அடைந்தோம். முப்பது கிலோ மீட்டருக்கு மேலான தொலைவை

ஆறு மணிநேர நெடும்பயணத்தில் கடந்திருக்கிறோம். மனதுக்குள் இருந்த புலி (பற்றிய கிலி)யல்லவா பின்னாலிருந்து துரத்தியிருக்கிறது! பேருந்து நிறுவன மேலாளர் அன்பு மனம்கொண்ட கிருஷ்ணசுவாமி (கிருஷ்ணமூர்த்தியோ?) எங்களுக்கு உணவு அளித்தார். வீட்டுச் சமையலான அந்த இட்லிகளும், தொட்டுக் கொள்ளத் தேனும் இன்றும் நினைவில் சுவைக்கும் தரமாக இருந்தன. அவற்றைக் கழுவி உள்ளே அனுப்ப முழம்போட்டு அளந்த 'உண்மையான தென்னிந்திய காபி' (நாம் நீளமாக ஆற்றிக்கொடுப்பதை திரு. அலி இப்படிக் குறிப்பிடுகிறார்! வடநாட்டில் தேநீர், காபி ஆகியவற்றை ஆற்றிக் குடிப்பதில்லை. ஆற, ஆற குடிப்பதே பழக்கம்—மொழி பெயர்ப்பாளர்). பிறகு கையோடு எங்கள் வண்டியை இழுத்துக்கொண்டு வர ஒரு மாற்று வண்டியும், கூடவே ஒரு ஆளும் அனுப்பினார். இரண்டு நாள் தட்டி நிமிர்த்தி வண்டி சரியான நிலைக்கு வந்ததும் பயணம் தொடர்ந்தது.

வனங்கள் இப்போதுபோல் சீரழிக்கப்படாத அந்தக்காலத்திலும் எல்லாவித வனவுயிர்களுமே மோசமான அளவுக்கு பாதிக்கப்பட்டிருந்தன. பல ஆட்கொல்லிப் புலிகள் உணவுக்காக ஊருக்குள் நுழைந்துவிடும் நிலை ஏற்பட்டிருந்தது. அந்தப்பகுதிகளின் ஆதிவாசிகளான 'பில்'கள் எல்லாருமே—குழந்தைகள்கூட—உயிரினங்களின் நடமாட்டத்தை துல்லியமாக கணிப்பதில் உன்னதமான நிபுணர்கள். போதாதற்கு விதை விதைக்குமுன்பு ஒரு சமூகவேட்டை நடத்துவது அவர்கள் மரபு. சுற்றுப்பட்ட கிராமங்கள் அனைத்திலிருந்தும் உடல் வலிவுள்ள அனைத்து ஆடவரும் இணைந்து காட்டின் பரந்துபட்ட பகுதிகளில் வாத்தியங்களை முழக்கி, ஓடும் உயிரினங்கள் எல்லாவற்றையும் வேட்டையாடுவார்கள். பெரிசு, சிறிசு, விலங்கு பறவை, ஊர்வன என்ற எந்த வேறுபாடுமில்லை. காட்டின் உள்ள பேய், பிசாசுகளை விரட்டவும், அறுவடை அபரிதமாக அமையவும் இந்த 'விழா' நடத்தப்படுகிறது. உறுதியான வனப்பாதுகாப்புச் சட்ட விதிகள் இருந்தும் இந்த அழிவுபூர்வமான பழக்கம் கட்டுப்பாடு இல்லாமல் தொடர்ந்து நிலவி வருகிறது.

பஸ்தார் பறவைக் கணக்கீட்டின்போது காட்டு வழிகாட்டியாக என்னிடம் ஒரு ஆதிவாசி இருந்தார். பில்கள் வேட்டையாடுவதில் எவ்வளவு நிபுணர்கள் என்பதற்கு அவர் விஷயமே நல்ல உதாரணம். பெல்காமுக்குத் தெற்கே மேற்குத்தொடர்ச்சி மலைகளில்தான் அதுவரை 'பெரிய கருப்பு மரங்கொத்தி'யைக் காணமுடியும்

(ட்ரையோகாப்பஸ் ஜவேன்சிஸ் என்பது இதன் விலங்கியல் பெயர்). நியூ பவுனா இதழ்தான் இதுமாதிரி விபரங்களுக்கு வேதவாக்கு. அதில் ஸ்டுவர்ட் பேக்கர் 'தென்னிந்தியாவின் மேலைக்கடற்கரையில் திருவாங்கூரிலிருந்து பெல்காம் வரை' என்று எழுதியிருந்தார். ஆனால் அந்த இதழ் வெளிவந்ததற்கெல்லாம் பிறகு குஜராத் கணக்கீடு எல்லைகளை விரிவாக்கி மேற்குத்தொடர்ச்சி மலைகளின் வழியிலேயே வடக்கே விரிவாகி (டாங்ஸை அடுத்த) சூரத் டாங்ஸ் வரை என்று நிர்ணயித்தது. இது இப்படியிருக்க, இந்தவகை மரங்கொத்தி ஒன்றை முதிர்ந்துவளர்ந்த இரண்டாம் நிலைக்காடு ஒன்றில் மத்திய இந்தியாவில் பார்த்தபோது குழப்பமும் வியப்பும் அடைந்தேன். அதைக் கைப்பற்றி அடையாளம் காண விழைந்தேன். அது அதீதமான விலகிச்செல்லும் குணமும் எச்சரிக்கையும் கொண்டதாயிருந்தது. எட்டி எட்டிப்போய்க்கொண்டேயிருந்தது. மரம் விட்டு மரம் தாவி துப்பாக்கியின் வீச்சுக்கு அப்பாலேயே இருந்துகொண்டது. சுமார் அரை மணிநேரம் அதன் பின்னேயே ஓடிக்களைத்து வெற்றியும் காணாத நிலையில், அதை விடவும் மனமில்லாமல், இந்த ஆளிடம் அவர் மட்டும் அந்தப்பறவையைப் பிடித்துக்கொடுத்தால் அவருக்கு பெருந்தொகை (ஐந்து ரூபாய்) தருவதாய் சொன்னேன். துப்பாக்கியை வாங்கிக்கொண்டு அடர்ந்த முட்புதர்களினூடே அவர் மறைந்த ஐந்து நிமிடத்தில் வேட்டுச்சத்தம் கேட்டது. அடுத்த இரண்டே நிமிடத்தில் பறவை என் கையில்! இதற்கு உள்ளூர் மொழியில் பெய்ன்சா கிர்ரி என்று பெயரென்றும், அப்பகுதியில் இதுவொன்றும் அரிதானது அல்ல என்றும், இதுவும் கூடுகளிலிருந்து கைப்பற்றப்படும் சிறகு முளைக்காத குஞ்சுகளும் தின்னத்திகட்டாத சுவை கொண்டன என்றும் கூறினான். அதனால் தான் பறவை அவ்வளவு எச்சரிக்கையுமாக இருந்திருக்கிறது. ஹார்ன்பில் போன்ற பிற புதர்க் கூட்டுப்பறவைகளும் இதே காரணத்தால் அரிதாகிவந்தன. 'பெரிய கருப்பு மரங்கொத்தியும், அதைப்போலவே அது நாள் வரை மேற்குத் தொடர்ச்சி மலைப் பறவைகளாக அறியப்பட்ட வேறு சில பறவைகளும் தமது வீச்சை விரிவுபடுத்தி குறுக்காக பரவி கிழக்குத்தொடர்ச்சி மலைகள் வரை வந்துவிட்டன என்பதும் பஸ்தார்/காங்கேர் கணக்கீட்டின் மூலம் வெளியான முடிவுகளில் முக்கியமானதாகும். இந்த முடிவும், கேரளம் மற்றும் ஈரப்பதமான தென்மேற்கு இந்தியப் பகுதிகளில் மலேயாப்பகுதிப்பறவைகள் காணப்பெறுவதும், அறிஞர் ஹோராவின் "சாத்பூரா கொள்கை"க்கு ஒரு அர்த்தமும் ஆதரவும் தருகின்றன. ஹோராவின் கொள்கைபற்றி முன்பே பார்த்தோம்.

கிழக்கத்திய மாகாணப்பகுதிகளின் அண்டையில் அமைந்த சில 'சுதேச மன்னராட்சிப்' பகுதிகள் என் கணக்கீட்டுக்கு களங் களாயின. மயூர் பஞ்ச், பத்ரமா, பம்ரா, கொரியா, கியோஞ்சார், நீலகிரி, தென்கன்னல் மற்றும் பிற இடங்களில் ஆய்வுகள் நடத்தப் பட்டன. இந்தியாவில் இணைந்தபிறகு, இந்தியாவில் மாநில சீரமைப்பும் நடந்தபின்பு இவையாவும் அண்டைப்புற இந்திய மாநிலங்களான மத்தியபிரதேசம், ஆந்திரா, ஒரிசா ஆகியவற்றின் பகுதிகளாகிவிட்டன. கண்மூடித்தனமாக காடுகள் சேதப்படுத்தப் பட்டும்—அதுவும் மன்னர்கள் பகுதிகளில் இது அதிகம்—அறுவை மர ஒப்பந்தக்காரர்கள், காட்டு ஒப்பந்தக்காரர்கள் ஆகியோரின் கொள்ளையையும் மீறி, காடுகள்-பெரும்பாலும் சால் மரக்காடுகள் பொதுவாக நல்ல நிலைமையில் இருந்தன. ஆனால் மலைப்புறத்தில் பெரும்பரப்புகள் ஆதிவாசிகளின் வேளாண்முறை மரபான மாற்று வேளாண்மை (ஷிப்டிங் கல்ட்டிவேஷன்) காரணமாக சற்று நசிவுற்று விட்டன என்பதும் உண்மைதான். கிழக்கத்திய மாநிலங்களின் பகுதியிலேயே மயூர்பஞ்ச்தான் மிகப்பெரியதும் முறையாக கவனிக்கப் பட்டதும் என்று சொல்வது சரியாயிருக்கலாம். அங்கே பிரமாத மான காடுகளும் அருமையான வனஉயிர் வாழ்வும் உள்ளன. அரசர் வேட்டைக்காக ஒதுக்கப்பட்ட பகுதிகளில் ஒன்றான சிம்லிபால் இப்போது நமது மிகச்சிறந்ததும், புலிகள் நிறைந்ததுமான புலிகள் வாழிடம் ஆகும்.

சர்குஜாவின் மன்னர் தம் குடிமக்களுக்கு தாம் ஆற்றவேண்டிய கடமை என தமக்குத்தாமே விதித்துக்கொண்டதே புலிகளை ஒழிப்பதுதானோ என்று தோன்றுகிறது. தம் நெடிய ஆயுளில், தமது நாட்டில் மட்டுமின்றி, அண்டைப்புறப் பகுதிகளிலும் எங்காவது புலி இருப்பதாக கிடைத்தால் அதையும் ஒழித்து விடுவார். 1970களில் அவர் இறந்தபோது, அவருக்கு மனச்சாட்சி மட்டும் இருந்திருந்தால், அது 1170க்கு மேற்பட்ட புலிகளின் உயிருக்கு பொறுப்பேற்க வேண்டியிருந்திருக்கும். எப்படிப் பார்த்தாலும் இந்த எண்ணிக்கை ஒரு உலக சாதனையாகும். கன்ஹா வனவுயிர் சரணாலயம் தேசியப் பூங்கா என்ற நிலைக்கு உயர்த்தப்படுமுன்பு 1960களில் நான் ஒரு முறை அங்கு சென்றிருந்தேன். அப்போது ஒரு நாள் பிற்பகல் அண்டையில் ஒரு வேட்டை முகாமில் இருந்த இவ்வரசர் என்னிடம் வந்து நலம் விசாரித்துவிட்டு காலையில்தான் 1100வது புலியைக் கொன்றதாகவும், இந்த நாள் தன் வாழ்விலே ஒரு பொன்னாள் என்றும் கூறிவிட்டுப் போனார். முகம் முழுவதும் பூரிப்பும் தன்னிறைவு உணர்வும் நிரம்பி வழிந்தன. அவருக்கு ஏதோ

ஒரு பாரிசநோய் இருப்பதும், கைகள் புயலிடைச் சருகாக நடுங்குவதும் வெளிப்படையாகத் தெரிந்ததால், உரிய பாராட்டு களைத் தெரிவித்துக் கொண்டு அவர் எப்படி துப்பாக்கியை உறுதியாக பிடிக்கிறார் என்று கேட்டேன். மாட்சிமை தங்கிய மன்னர் அவர்கள் ஒரு மரக்கிளையில் அல்லது மைதானப் பகுதியில் தன் ஆயுதத்தை தாங்குதலாக வைத்துக் கொண்டு புலியின் உயிரைப் போக்குவதிலேயே இப்படி மகிழ்ச்சி யடைவதாகத் தோன்றியது. உண்மையிலேயே மனிதர்களின் ரசனைகள்தான் எத்தனைவிதம்! சில மாதங்கள் கழித்து அவரைக் காணவந்த அவருடைய ரசிகர் ஒருவர், அதுவரை மன்னர் கொன்ற புலிகள் எத்தனை என்று கேட்டதற்கு "1140தான்" என்று கூறிய மன்னர் 'தான்' என்பதில் ஒரு அழுத்தம் தந்து தன்மீதே அனுதாபப்பட்டுக் கொண்டார்.

அதே வட்டாரத்தின் சகமன்னர்களில் ஒருவர், கிழக்கு மத்தியப் பிரதேசத்தில் கொரியாவை ஆண்டுவந்தவர், கடைசி கடைசியாக தப்பிப்பிழைத்த மூன்று சிறுத்தைகளை ஒரே இரவில் கண்ணைக் கூசவைக்கும் ஒளி வெள்ளத்தில் ஜீப்பிலமர்ந்தபடி சுட்டு இந்திய மண்ணிலிருந்து சிறுத்தை இனத்தையே முற்று முழுக்க அழித்தவர் என்று, பொறாமைப்பட முடியாத வகையிலேயானாலும், வரலாற்றில் சாகா இடம் பெற்றார்.

17

# ஐரோப்பாவில் மோட்டார் சைக்கிள் பயணம்

தவாய் நகருக்கு 1914 இறுதியில் போய்ச்சேர்ந்த சிறிது காலத்தில் செர்பாடி காலத்திலிருந்தே, நண்பரான எல். எம். மதாருடைய 3.5 குதிரைத்திறன் கொண்ட என்.எஸ்.யூ வண்டியை ஓட்டத்துவங்கிய காலத்திலிருந்தே, மோட்டார் சைக்கிளில் போவது ஒரு போதைப் பழக்கம்போல் என்னைத் தொற்றிக்கொண்டது. ஆண்டுக்காண்டு மோட்டார் சைக்கிளிலும், அதில் போவதிலும் எனக்கிருந்த மோகமும் வளர்ந்து கொண்டேபோயிற்று. வளர்ந்து வரும் மகா குழப்பமான பம்பாய் போக்குவரத்து நெரிசலில் சில பல முறைகள் நூலிழையில் உயிர் பிழைத்த பின்பு நண்பர்கள் வற்புறுத்தலால் என் 68ம் வயதில்—1964இல் மோட்டார் சைக்கிள் சாகசத்தை நிறுத்திய பின்பும்கூட, எனது வண்டியை (அது இரட்டை உருளையும் ஷாப்ட்டும் கொண்ட, 1949ம் ஆண்டு 500 சிசி. வண்டி) கட்டாயமாகப் பிரியநேர்ந்த பின்பும் கூட, ஒரு பிஎம்டபிள்யூ சீறிப் பாய்ந்து செல்லும் காட்சியிலும், அது எழுப்பும் இசையிலும் பரவசமாவதைத் தடுக்க முடிவதேயில்லை. அந்தோ! விடுதலைக்குப் பின் வெளிநாட்டு வாகன இறக்குமதி தடைசெய்யப்பட்டபிறகு அந்த மாதிரி ராஜகம்பீரமான உயர்தர வண்டிகளை இந்திய சாலைகளில் காண்பது அரிதாகிவிட்டது. ஏதாவது பழங்கால வண்டியைப் பார்த்தால்தான் உண்டு. 'சாமானிய' படைப்புகளான ராஜ்தூத், ஜாவா, அப்புறம் என்பீல்ட் குடும்பத்தைச் சேர்ந்த இவற்றின் வசதியான உடன்பிறப்புகள்-எதுவுமே என் நெஞ்சைத் தொடுவதில்லை. ஆக, நான் வெளிநாடுகளில் பயணம் செய்யும் அரிய சந்தர்ப்பங்களில்தான் வேட்கையைத் தணித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. அப்போதெல்லாம் மோட்டார் சைக்கிள் காட்சி ஏதுமிருந்தால் நான் விடுவதில்லை. எனது இளம்பருவ

பர்மா நாட்களில் நான் படித்ததெல்லாம் மோட்டார் சைக்கிள் பற்றிய பத்திரிகைகளும் இந்தியப் பின்னணிப் பறவைகள், பொதுவான இயற்கை வரலாறு, வேட்டை ஆகியவை பற்றிய இதழ்களும் நூல்களும்தான்.

குறைந்தபட்சம் பகுதி உரிமையாளனாக நான் மோட்டார் சைக்கிள் வைத்திருந்தது 1915இல். அந்த வண்டி தவாயில் எங்கள் வணிக நிறுவனமான ஜே.ஏ. அலி சகோதரர்கள் நிறுவனத்தின் சொத்து. அது ஒரு 3.5 குதிரைத்திறன் கொண்ட ஜெனித். அதனை 'வெல்ல முடியாதது' 'அனைத்தையும் வெல்வது' என்றெல்லாம் விளம்பரப்படுத்துவார்கள். இரட்டை உருளையும் பெல்ட்டும், கியர்பெட்டிக்கு பதில் கிராடுவா கியர் என்ற 'சமர்த்தான' கருவியும் கொண்டது. இயந்திரத்தின் (எஞ்சினின்) மேலுள்ள இயக்கும் கம்பியின் விட்டத்தைக் குறைப்பதற்காக பொருத்தப்பட்டிருந்தது. கியர் விகிதங்கள் ஒரு விரிவான இறங்குமுக விகிதத்தில் பெற இது உதவும். டிராம் வண்டியில் வண்டியை நிறுத்த ஒரு பிடி இருக்குமே, அது போல பெட்ரோல் டாங்க்குக்கு மேல் குமிழுடன் கூடியதோர் உலோகத்தண்டு இருக்கும். அதைத் திருகி இயக்கலாம். அதற்குப் பிறகு நானும் வண்டி மாற்றி மாற்றி வெவ்வேறு குதிரைத்திறன் கொண்ட 3 ஹேர்லி டேவிட்சன் வண்டிகள், ஒரு டக்ளஸ், ஒரு ஸ்காட் (இரு உருளை, நீர் குளிர்விப்பான், இரட்டை ஸ்ட்ரோக்) ஒரு நியூ ஹட்சன் உட்பட பல வண்டிகளை கொஞ்சம் கொஞ்சம் நாள் வைத்திருந்தேன்; கடைசியாக எனக்குப் பிரியமான சன்பீமுக்கு வந்தேன். அதோடு என் வாகனயோகம் முடிந்தது. பிஎம்டபிள்யூ ஒன்றே ஒன்றாவது வாங்கியிருந்தால் மகிழ்ச்சியோடு சாகலாமே என்பது என் நிரந்தர சோகமாகும்! ஆண்டுதோறும் எப்படி மோட்டார் சைக்கிள் இயந்திரங்களின் வடிவமைப்பில் திருத்தங்களும் மேம்பாடுகளும் செய்யப்பட்டு வருகின்றன என்பதை ஆழ்ந்து கவனிப்பேன். இதற்கான ஏடுகளிலும் தயாரிப்பாளர்களின் வெளியீடுகளிலும் அவைபற்றிய விவரங்களையும் சாலையில் அவற்றை சோதித்து வெளியிடப்பட்டும் அறிக்கைகளையும் தீவிர ஈடுபாட்டுடன் படிப்பேன். ஆரம்ப காலங்களில் என் வண்டிகளின் பாகங்களில் பழுதுபார்த்து மகிழ்வேன். இயந்திரம் ஒழுங்காக வேலை செய்தாலும் விடாமல் மெருகூட்டுவதும், தேவையின்றி அதில் ஏதாவது செய்து கொண்டேயிருப்பதும் பழக்கம். அடிக்கடி விடுமுறைநாட்களில் அக்குவேறு ஆணிவேராகப் பிரித்து மீண்டும் மாட்டுவது வாடிக்கை. அந்த வேலையில் எண்ணெய், மசை, களிம்பு எல்லாவற்றையும் பூசிக்கொண்டு நிற்பேன். முடிவில் கைநிறைய

அதிகப்படியாக சில ஆணிகள், கொக்கிகள், திருகுகள் முதலியன தங்கிப்போவதும், தயாரிப்பாளர்கள் ஏன் இவ்வளவு தாராள வான்களாக முதலில் இவைகளையெல்லாம் வண்டியில் கோத்தார்கள் இதெல்லாமே தேவையிருப்பதாகத் தெரியவில்லையே என்று ஆச்சரியப்படுவதும் வாடிக்கைதான்! பராமரிப்பில் கெ லட்டிக்காரன் என்று நானே பாராட்டிக்கொள்வேன்—இயந்திரம், வெளிப்பகுதிகள் இரண்டிலுமே. வாரமுடிவு விடுமுறையில் நீண்ட நேரங்களை வண்டியின் பளபளப்பான பாகங்களைப் பிரித்துப் போட்டுக்கொண்டு நடுவில் அவைகளுடன் இருப்பதே ஒரு இதமான வேலையாய் பழகி, சாயம் பூசிக்கொண்டு (வண்டிக்குதான்!) பொழுதுபோகும். என்னளவு சுறுசுறுப்பாயில்லாத—ஆனால் புத்திசாலிகளாக இருந்தாலும் இருக்கலாம்—மற்ற நண்பர்களின் பொறாமையிலே மகிழ்ந்திருப்பேன்!

இந்திய விடுதலைக்குப்பின் பிராட்டரும், மக்கேனும் இங்கிலாந்து திரும்பிய பின்பு-பிராட்டர் பிரிட்டனுக்கும், மற்றவர் நியூசிலாந்துக்கும் போய்விட்டனர். மும்பை கழக அருங்காட்சியகக் காப்பாளனாக நான் பணியாற்றத் துவங்கியபின் 1950இல் கழகம் தனது சார்பாக ஸ்வீடன் நாட்டு உப்சாலா நகரில் நடந்த பன்னாட்டுப் பறவையாளர் மாநாட்டுக்கு என்னை அதிகார சார்பற்ற பங்கேற்பாளனாக அனுப்புவதற்காக கழகம் உறுப்பினர் களிடையே நிதி வசூலித்தது. பறவையாளர்களின் கலந்துரை யாடலை இரண்டாம் உலகப்போர் கலைத்துவிட்டது. எனவே, போருக்குப் பிந்தைய முதல் மாநாடு என்ற அளவில் இதுகுறித்து அனைவருக்கும் மகிழ்வான எதிர்பார்ப்புகள் ஏராளம்.

போரின் பாதிப்புகளிலிருந்து தப்பிப்பிழைத்த மிகச்சில நாடுகளில் ஒன்று என்பதால் மாநாடு ஸ்வீடனில் ஏற்பாடாகி யிருந்தது. நவீன உயிரியல் பெயர்முறைக் கலையின் தந்தையான கார்ல் லின்னயஸ் பிறந்த ஊரும் பல்கலைக்கழக நகரமுமான உப்சாலாவில் ஜூன் மாதம் நிகழவிருந்த மாநாட்டுக்காக எஸ்எஸ். ஸ்ட்ராதடென் என்ற கப்பலில் மே மாதம் 4ஆம் நாள் மும்பையை விட்டு சன்பீம் மோட்டார் சைக்கிளையும் எடுத்துக் கொண்டு நான் கிளம்பினேன். சன்பீமில் இங்கிலாந்தை சுற்றிவிட்டு பிற ஐரோப்பிய நாடுகளையும் சுற்றுவது என் திட்டம். இந்தியாவில் பணிபுரிந்து ஓய்வுபெற்ற நண்பர்கள் பரவலாக பலநாடுகளில் இருந்தனர். அவர்களையும் பார்க்கலாம், இயற்கையான விலங்கு வாழிடங்கள், இயற்கை வரலாற்றில் முக்கிய இடம் பெற்ற தலங்கள், சூழல் பாது காப்பு இடங்களை—சிறப்பாக பறவைகள் சம்பந்தப் பட்டவை—

எல்லாவற்றையும் பார்த்துவரலாம் என நினைத்தேன். நலம் விரும்பிகள் கேளாமலே தந்த அறிவுரைகள், அழிவையே முழக்கும் தீர்க்கதரிசிகள் எல்லாரின் வாக்கையும் பொய்ப்பிக்கும் வகையாக திட்டம் வெற்றிகரமாக நிறைவெய்தியது. ஒவ்வொரு வகையிலும் சுவையும் பயனும் உடையதாயிருந்தது. எல்லாவற்றுக்கும் மேலாக, அப்போதுதான் முடித்திருந்த போரின் விளைவாக எல்லா இடத்திலும் பொதுப்போக்குவரத்து சீர்கெட்டிருந்த அந்த சூழ்நிலையில் வேறெந்த முறையில் பயணம் செய்வதையும் விட இதுவே சிக்கனமாகவும் அமைந்தது. உலகம் சுற்ற செலவு குறைவாக மட்டுமின்றி அனைத்திலும் வசதியாகவும் இருந்தது. காலக் கட்டுப்பாடுகளுக்குட்பட்ட நிகழ்ச்சிநிரல், தங்குமிடம், புகைவண்டி பேருந்து இவற்றைத் தேடி அலைதல், முன்பதிவுசெய்தல் ஆகிய தொல்லைகளிலிருந்து முழுவிடுதலை கிட்டியது. இவையெல்லாம் ஒரு மனிதனுக்கு எந்த நேரத்திலும் மாறுதல் செய்துகொள்ளும் சுதந்திரத்தைப்பறித்து ஒரு அட்டவணைக்கு அடிமையாக்குவன அல்லவா! டில்பரி டாக்சிலிருந்து லிவர்பூல்ஸ்ட்ரீட் புகைவண்டி நிலையத்துள் வண்டி நுழைந்தபோது, வண்டியிலிருந்து இறங்கு பவர்களை எதிர்கொள்ள அலைமோதிய மக்கள் வெள்ளத்தைக் கண்டு மலைத்துப்போனேன். எனது பறவையியல் சகாவும், லண்டனில் நான் விருந்தினனாகத் தங்கப்போகிற அன்பருமான மெய்னர்ட்சகனை எப்படி சந்திப்பது? வைக்கோல் போரில் இரண்டு ஊசிகள் ஒன்றையொன்று எப்படிக் கண்டுபிடிக்கும் என்பதுதான் மலைப்புக்குக் காரணம்.

கூட்டத்தில் முட்டிமோதிக்கொண்டு ஒரு இலக்கின்றி நான் நகர்ந்துகொண்டிருந்தபோது ஒல்லியான உயர்ந்த ஒரு மனிதன் கொடிமரக் கம்பம்போல் விரைப்பாக நிற்கக் கண்டேன். அலைமோதும் கூட்டத்தை மீறி தனியாக அந்த நபரின் உயரம் அமைந்திருந்தது. அவருக்கே உரிய முன்சிந்தனையோடு சுயமான சிந்தனையில் வழிகண்டுபிடித்து—ஒரு பெட்டியை வாடகைக்கெடுத்து, அதில் ஏறி—நின்றுகொண்டிருந்தார் கர்னல் மெய்னர்ட் சகன்! அப்படியாக, நாங்கள் ஒருவரை ஒருவர் கண்டுகொண்டோம். ஓரளவு ஒதுங்கியிருந்த விக்டோரியா கால மூன்று மாடிக் கட்டிடம் ஒன்றில் அவர் வாழ்ந்து வந்தார். கென்சிங்டன் பார்க் தோட்டத்தை ஒட்டி அது அமைந்திருந்தது. ஒரு காலத்தில் பிரபுக்கள் வாழ்ந்த பகுதி அது. அரை நூற்றாண்டுக்கும் மேலாக, உலகின் எல்லாப் பகுதிகளிலும் சேகரித்த, பறவைகளின் பாடம் பண்ணிய மாதிரிகள் அந்த வீட்டை நிறைத்தன. உன்னதமான ஆய்வுகளின் சேகரிப்பாக

ஆயிரக்கணக்கானவை அமைந்திருந்தன. பெரும்பாலான நோல்கள், அவர் தன் கரங்களாலேயே தயாரித்தவை. அவருக்கே உரிய முழுமையும் உன்னதமும் அவற்றிலும் காணக்கிடைத்தன. எல்லாவற்றுக்கும் பெயரெழுதி, வரிசைப்படுத்தி அவர் பாதுகாத்து வைத்திருந்தவற்றைப் பார்ப்பதும் சுகானுபவம், பயில்வதும் சுகானுபவம். அவர் மனைவி அன்னி ஜாக்சன்—அவரும் பறவையியலாளராக சிறப்பாக அறியப்பட்டவர்—ஒரு துப்பாக்கி விபத்தில் இதற்கு முன்பே 1928இலோ முன்பின்னாகவோ இறந்துபோய் விட்டார். (பொல்லாத நெஞ்சங்கள் இதை 'திட்டமிட்ட' விபத்தாயிருக்கலாம் என்று கூறத்துணிந்தன!) நான் போனபோது மிகக்கவர்ச்சியான முப்பது வயதுடைய தெரஸா கிளே என்ற நெருங்கிய உறவுக்காரப் பெண்ணொருவர் அவருடன் வாழ்ந்து வந்தார். தெற்கு கென்சிங்டன் அருங்காட்சியகத்தில் பூச்சிகள் பகுதியில் பணிபுரிந்து வந்த இம்மாது பின்னாளில் அதிலேயே ஓர் உட்பிரிவில் உலக அளவில் ஒரு நிபுணராக உருவானார்.

முகத்திலடிப்பதுபோல் வேலைப்பாடுகள் நிறைந்த ஒரு கட்டிட வரிசை. ஒன்றோடொன்று இணைந்த கட்டிடங்கள். இது 19ஆம் நூற்றாண்டின் பின்பாதியில் அங்கே நடைமுறையிலிருந்த கட்டிட நாகரிகம். கென்சிங்டன் பார்க் கார்டனின் 17ஆம் எண் கட்டிடமும் அவற்றில் ஒன்று. தெருவைப்பார்த்த அந்த வீட்டின் முகப்பு இருபுறமும் தூண்கள் கொண்ட பாதையாகத் துவங்கும். பின்முற்றம் போல் ஒரு தோட்டம் வரிசையான எல்லா வீட்டுக்கும் பொது நடையாக அமைந்திருந்தது. இதேபோல ஒரு பகுதி இணைந்தும் மீதிபாகம் தனித்தும் கட்டப்பட்ட வரிசையான வீடுகளில் வசித்த அனைவருக்கும் அது பொதுவானது. நான் போனது ஜூன் மாதத் துவக்கத்தில், ஆண்டுதோறும் நடைபெறும் டெர்பி குதிரைப்பந்தயம் நெருங்கிக்கொண்டிருந்த நேரம். ஆண்டு தோறும் பந்தய நாளன்று நெருங்கிய நண்பர்களை எல்லாம் சுற்றுலா விருந்துக்கு அழைத்து உல்லாசமாகக் கழிப்பதை ஒரு புனிதக் கடமை போல் கர்னல் செய்து வந்தார். அந்த வருடம் நானும் அவர்களில் ஒருவனாகும் பேறுபெற்றேன். ஆணும் பெண்ணுமாய் நாங்கள் ஒரு இருபது முப்பது பேர்—வாலிபர்கள், அவ்வளவு வாலிபம் என்று சொல்ல முடியாதவர்கள்—எல்லாம்தான். எங்களை வாடகைக்கமர்த்திய ஒரு உல்லாச வாகனத்தில் எப்சம் டௌன்ஸ் நோக்கி அழைத்துச் சென்றார். உல்லாசமும் கேளிக்கையும் விருந்துமாக கும்மாளம். வண்டியின் கூரையில் அமர்ந்து குதிரைப்பந்தயத்தையும் கண்டு களித்தோம். அதேபோல்

வண்டிகளின் மீதும் வசதியான பிற இடங்களிலும் அமர்ந்திருந்த ஆயிரக்கணக்கான ரசிகர்களுடன் கூச்சலும் சத்தமுமாய் ஒரே அமளி. வண்டிகள் நிறுத்தும் புல்வெளியில் ஒரே நெரிசலாய் வாகனக்கடல்தான். உல்லாசப் பூங்காவும் அருகிலேயே இருந்தது. அதில் 'திறமை'யைக்காட்ட சூதாடுகளங்களும், எல்லாவித பந்தயக்கடைகளும் மண்டிக்கிடந்தன. மெய்னர்ட்சகன்கூட இவ்வளவு சரளமான உல்லாசமனிதராக இருப்பார் என்பது அது வரை நான் கற்பனைகூட பண்ணியிருக்க முடியாததாய் இருந்தது. எல்லா வேடிக்கையிலும் அவரே முதல் ஆள். உல்லாசமாகக் குதிரையேறி சுற்றுவதற்கும் அவரே வழிகாட்டி. தொடைதட்டிக் கொண்டும் எங்கும் எதையும் பரம ரசிகராக அனுபவித்துக் கொண்டும் வந்தார்.

இந்த டெர்பி பந்தயசுற்றுலா தொடர்பாக என் நினைவில் பசுமையாகத் தங்கியிருக்கும் மகா எரிச்சலான ஒரு விஷயம் அங்கு மிக மோசமாக செய்திருந்த கழிப்பக ஏற்பாடுகள் ஆகும். முற்றிலும் கற்கால ஏற்பாடுகள். திறந்த வெளியில் ஒரு குளிர் நாளில் இது எவ்வளவு அவசியமான தேவை என்பது எளிதில் கற்பனையில் உணரக்கூடிய விஷயம். ஒரு பெரிய கூடாரம். இடையில் தடுப்புகள் கிடையாது. நுழைவாயில் கட்டணம் 6 பென்னி. உள்ளே போய்விட்டால் இருபது பேருக்குக் குறையாமல் கீழாடையைத் தளர்த்தியபடி வரிசையாய்... தனிமை என்பதன் சாயல்கூட கிடையாது. இதில் உள்ளே வர புல்வெளியில் ஒரு குறுகிய சந்தில் எங்கள் பின்னே நீண்ட வரிசை வேறு. அப்பாடா என்ற நிம்மதி உணர்வுதான் கொடுத்த காசை செரிக்கவைக்கும். வேலை விறுவிறுப்பாய் நடக்கவே சாக்கடை நண்பகல் அளவிலேயே நிரம்பி வழியத் துவங்கிவிட்டது. சதசதவென்று ஒரே சிறுநீர்ச் சேறு. 'வேலை'யை முடிக்க எல்லாரும் அதில்தான் சள சளவென்று நடந்துவர வேண்டும். நாகரிகத்தில் மிகப் பின்தங்கிய ஊர்களில்கூட இது ஒரு காட்டுமிராண்டி நிலை. இந்தியாவில் 'சுதேசி'களின் சுத்தக்குறைவுகள் குறித்து மிக அருவருப்புடன் பேசிய ஆங்கிலேயர் களின் தாயகத்தில் இந்தக்காட்சி எனக்கு கொடிய அதிர்ச்சியா யிருந்ததை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். முடியாது, முடியாது நம்மால் இந்தியாவில் இதை 'வெல்ல' முடியாது.

மெய்னார்ட்சகன் தன் நூலகத்தில் பறவைகள் இயற்கை வரலாறு, வேட்டை முதலியவை தொடர்பான பல உன்னதமான நூல்களை சேர்த்து வைத்திருந்தார். அவற்றில் பல அந்தந்த நூல்களின் முதற்பதிப்பு என்ற வகையில் அரிதான நூல்களாகும். ஆனால்,

அவற்றைவிடவும் என்னைக் குறிப்பாகக் கவர்ந்தவை அவரது குறிப்புகளே. அவரிடம் 1890 அல்லது முன்பின்னாக ஆரம்பித்து வரிசையாக விடுபடாமல் அனைத்து குறிப்புகளும் கவனமாகப் பாதுகாக்கப்பட்டுவந்தன. ஆண்டுவாரியாக சாய்வெழுத்தில் தட்டச்சு செய்யப்பெற்று அழகாக தோல் பைண்டிங் செய்து வைத்திருந்தார். ஆப்பிரிக்காவில் பிரிட்டிஷ் ஆட்சிக்குக் கீழேயிருந்த நாடுகளில் பணியாற்றிய, கண்ணையும் காதையும் கூர்மையாக வைத்திருந்த ஆங்கிலேய ராணுவ அதிகாரி என்ற நிலையில் அவரது அனுபவங்கள்; வீரசாகசங்கள் மட்டுமின்றி, சமகாலத்தவர்கள் பற்றிய அவரது உயிரோட்டமுள்ள கணிப்புகளும் அதில் இருந்தன. அலுவலர்கள் மற்றவர்கள் என்று பலதரப்பட்டவர்களும் அவற்றில் வாழ்ந்தனர். அன்றைய அரசியல் சமூக நடப்புகள், அவற்றின் மீதான அவரது கருத்துகள் ஆகியவையும் பதிவாகியிருந்தன. அவரது கருத்துகள் கடுமையானவை. அனுதாபக் கண்ணோட்டமும், நடுநிலையும் அவரது கருத்துகளில் அரிதாகவே இருக்கும். மிக வெளிப்படையாக எதையும் வெடிப்புறப் பேசும் எழுத்து. மற்ற மனிதர்களைப்பற்றியும் நடப்புகளைப்பற்றியும் அவரது எல்லாக் கணிப்புகளுக்கும் இது பொருந்தும். இவைமட்டுமின்றி அந்த நாட்குறிப்புகளில் ஏராளமான அறிவியல் செய்திகளும் விபரங்களும் காணக் கிடைக்கும். அவரது நீண்ட ராணுவப்பணிக்காலம், ஆப்பிரிக்காவிலும் பிற இடங்களிலும் மேற்கொண்ட ஆய்வுப் பயணங்கள், வேட்டைகள் ஆகியவற்றின் மொத்தத்தொகுப்பு அது. அசாதாரணமான கூர்மையும், நுண்பார்வையும், சுத்தமாக சுய சிந்தனைகளையும் கொண்ட ஒரு மனிதனின் நேர்முக அனுபவங்களை அடிப்படையாகக் கொண்டமையால் அவை விலைமதிப்பற்ற களஞ்சியங்களாகும்.

அவரது 'கென்யா டைரி' உள்ளிட்ட பல அருமையான நூல்களுக்கு இவையே அடிப்படையாகும். அவரது வரலாற்றை எழுதியவர்களுக்கும் இது ஒரு வரப்பிரசாதமாய் அமைந்தது குறிப்பாக ஜான் லார்ட் எழுதிய கடமை, கௌரவம், பேரரசு (Duty, Honour, Empire) என்ற ராண்டம் ஹவுஸ் பதிப்பக (நியூயார்க், 1970) வெளியீடு. அவரது ஆப்பிரிக்க வாழ்வின் சாகசங்களும் அவரது துணிவையும் வீரத்தையும் கூறும் கதைகள் அவருக்குப் புகழைச் சேர்த்தன, வெறுப்பையும் சேர்த்தன. கவின் மாக்ஸ்வெல் எழுதிய நூல்களில் ஒன்று 'அந்தப் பக்கத்து மக்கள்' (அதாவது பிரிட்டிஷ் காலனிகளின் மண்ணின் மக்கள்) இவரைப்பற்றிக் கேட்டாலே எப்படி நடுங்கினர் என்பதைக் காட்டுகிறது. மாக்ஸ்வெல்

தனது இளமைக் காலம் பற்றிய மலரும் நினைவுகளில் தனது மாமா (அங்க்கிள்) வில்லியம் பெர்சி பிரபு பற்றிக்கூறுகிறார்—'கென்யாவில் கர்னலின் சாகசங்கள்' புகழ்பெற்றவை. அவர் எனது கதாநாயகர் ஆவார். மாமா பெர்சியும் கர்னலும் நெருங்கிய நண்பர்கள். ஒரு சமயம் நான் பொருளற்ற ஒரு கருத்தைக் கூறப்போக, பெர்சி சொன்னார்: "கவின், கர்னல் அடுத்த வாரம் நம்மோடு தங்க வருகிறார். உனது இடத்தில் நான் இருந்தால் அவர் முன் இப்படியெல்லாம் பேசமாட்டேன். கர்னல் வெறும் கையாலேயே மனிதர்களின் உயிரை வாங்கியவர்," இதைக்கேட்டபின்பு கர்னல் என்றாலே நரமாமிச ராட்சசன் என்பது போல ஒரு எண்ணம் வந்துவிட்டது!"

யூதர்களுக்கு ஓர் தாயகம் வேண்டும் என்ற கொள்கையைப் பரப்பி வந்த டாக்டர் செய்ம் வெய்ஸ்மன் என்பவர் கர்னலின் நண்பரும், பாராட்டுக்குரியவருமாவார். முதல் உலகப்போர் முடிந்ததும் சிலகாலம் பாலஸ்தீனத்தில் ராணுவ ஆட்சியாளராக இருந்தார். அப்போது இருவரும் பால்ஃபோர் பிரகடனத்தை அமல் படுத்துவதில் தீவிர ஈடுபாட்டுடன் பணி செய்து வந்தனர். இஸ்ரேல் நனவான பிறகு அடிக்கடி அங்கு போய் வந்த மெய்னர்ட்சகன், யூதர்களின் தீவிர ஆதரவாளர் ஆனார். உலகெங்குமிருந்து யூதர்கள் வந்து கூடி தமக்கு 'வாக்களிக்கப்பட்டிருந்த' மண்ணில் (இஸ்ரேல்) குடியேறினர். அவர்களது கடமையுணர்வையும், உழைப்பையும், 'நாட்டுப்பற்றையும்' அவர் பலபடப் பாராட்டுவார். மாறாக அரேபிய முஸ்லீம்களிடம் உருப்படியான எதையும் அவர் காணவில்லை. அவர்கள் மீதான வெறுப்பை அவர் மறைத்ததே கிடையாது. இஸ்ரேலியர்கள் நாடு தம் வசமிருந்த சிறு காலகட்டத்திலேயே பொருளாதார ரீதியாக அற்புதங்களை நிகழ்த்தியது உண்மையே. தண்ணீரற்ற பாலைவனத்தை வேளாண்மையில் தன்னிறைவு பெற்ற நாடாக்கினார்கள். தொழில்துறையில் வளர்த்தார்கள். கர்னலின் புகழாரம் ஒன்றுக்கு பதிலெழுதுகையில், இஸ்ரேலைப் பார்ப்பதில் எனக்கும் தீவிர ஆர்வமிருந்தாலும் ஒரு முஸ்லீம் பெயர்கொண்ட எனக்கு அங்கு வரவேற்பு இருக்குமா என்று ஐயமும் தெரிவித்தேன். இஸ்ரேலுக்கு 1953 மே மாதம் சென்று திரும்பியதும் எழுதிய ஒரு கடிதத்தில் அவர் சொல்கிறார்:

> "மரணக்கடலுக்கு அப்பால் ஜோர்டான் பள்ளத்தாக்கில் அக்பா வளைகுடாவில் பருந்துகளும், நாரைகளும், கடல் நாரைகளும் புலம்பெயர் பறவைகளாய் பறந்து செல்வதைப் பார்ப்பதில் காலம் அற்புதமாகக் கழிந்து கொண்டிருக்கிறது.

*இஸ்ரேல் வருவது பற்றி நீங்கள் எவ்வித ஐயமும் கொள்ள வேண்டாம். அங்கே வகுப்பு வித்தியாசமில்லை, மதக் கொலைகளில்லை, அரசியல் பலிகளில்லை. சர்வாதிகாரக் கூறுகளைக் களைந்துவிட்ட பொதுவுடைமையின் தூய பரிணாமம் இஸ்ரேல். இடது சாரியோ, வலதுசாரி பழமைவாதியோ குடிகள் அத்தனைபேரும் அரசுக்கு உண்மையானவர்கள். ஆறு அரேபிய முஸ்லீம் நாடுகளால் சூழப்பட்ட அபாய நிலையிலும் ஐந்தே ஆண்டுகளில் இவ்வளவு சாதனை படைத்த நாடு ஒன்றையும் நான் கண்டதேயில்லை. முழு சூழலும் உற்சாகமும் முன்னேற்றமும் நாட்டுப்பற்றும் மண்டியதாயிருக்கிறது. ஆணவமும், அதிகார தேசபக்தியும் அணுவளவுமில்லை. மாறாக, மனிதப் பண்புகளில் அரிதும் அருமையானதுமான பணிவே எங்கும் பரவிக்கிடக்கிறது. மத்தியக்கிழக்கிலே நிலையான ஒரே அம்சம் இஸ்ரேல்தான் என நம்புகிறேன். போய் பாரும்! ஆக, முழு மொத்தமும் மோசமான பகுதி எங்கேயிருக்கிறது? உலகில் குழப்பமான பகுதியே இல்லாத நாடெதுவும் இருக்கிறதா? ஆசியா, ஆப்பிரிக்கா இரண்டுமே விழித்துக் கொள்ளத் துவங்கிவிட்டன. கொட்டாவிவிட்டுக் கொண் டிருந்ததுபோய் எழுந்து சுயமாக நிற்கத் துவங்கிவிட்டன. ஆனால், அதுபற்றி இவ்வளவு கூச்சல் போடாதிருக்கலாம் என்பதே என்விழைவு.*

இங்கிலாந்தில் சுமார் ஒரு வாரம் இருந்துவிட்டு ஒரு ஸ்வீடன் நாட்டு சுற்றுலாக்கப்பலில் கோதன்பர்க் நோக்கிப் புறப்பட்டேன். ஒரு வாரத்தில் இங்கிலாந்து நாட்டில் ஆளுக்கொரு மூலையில் வாழ்ந்த என் பல நண்பர்களையும் மோட்டார் சைக்கிளிலேயே சென்று பார்த்துவிட்டு வந்துவிட்டேன். இங்கிலாந்தின் எழில் கொஞ்சும் பருவமான வசந்தகாலத்தில் ஊரைச்சுற்றுவது மிக இனிமையாயிருந்தது. நண்பர்களின் நண்பர்களுடன் ஓர்ப்ரோவில் ஓர் இரவைக் கழித்துவிட்டு ஒரு பிற்பகல் நேரத்தில் உப்சாலா போய்ச்சேர்ந்தேன். போய்ச்சேரவும் மாநாடு ஆரம்பிக்கவும் சரியாக இருந்தது. நான் துல்லியமாக நேரத்துக்கு போய்ச்சேர்ந்தது என் நண்பர்களிடையிலும், பிற பிரதிநிதிகளிடையிலும் பரபரப்பை ஏற்படுத்தியது. இந்தியாவிலிருந்து மோட்டார் சைக்கிளில் வந்திருக்கிறார் என்று நினைத்துக் கொண்டால் பரபரப்பு குறைவாகவா இருக்கும்?! வண்டியில் இரு கான்வாஸ் பைகளை

இணைத்திருந்தேன். பல்நோக்கு அலமாரி போன்றதோர் அமைப்பு. அதில் சிறப்பு நிகழ்ச்சிகளுக்கு அணிய ஒரு ஷெர்வானியும் இருந்தது. ஆனால் இதில் பெரும்பாலானவை தேவையற்றவையாக பின்னால் புரிந்தது. இரவில் விடுதிகளில் தங்க நேர்கையில் இந்தச்சுமையை விடுதிக்கு எடுத்துச்செல்ல இந்த ஏற்பாடு வசதியாகதான் இருந்தது. எல்லாவற்றையும் போட்டு நிரப்ப வசதியாயிருந்தாலும், சிறுநகரங்களிலும் நாட்டுப்புற கிராமங்களிலும் போகும்போது—அந்த சறுக்கிவிடும் கற்சாலைகளில் வேகமாகப் போகும்போது—நிலை தடுமாறுகிற வாய்ப்புகளை இது ஏகமாக அதிகப்படுத்தியதும் உண்மைதான். போரினால் மோசமாக அடிபட்டிருந்த ஜெர்மானிய நகரமான முன்ஸ்டர் நகரில் நுழையும் முன்பும் இத்தகைய ஓர் சம்பவம் நிகழ்ந்தது. இத்தகைய பல நிகழ்வுகளில் அது மிகவும் மோசமான ஒன்றாகும். ஒரே சறுக்கலில் வண்டி வானில் ஒரு வட்டமடித்து தூரப்போய் விழுந்தது. நட்டநடுச் சாலையில் நான் கையும் காலும் விரித்தபடிபோய் விழுந்தேன். நல்ல வேளை லேசான அடிதான். பயணத்தை பாதிக்குமளவுகூட பெரிதில்லை. நல்லவேளையாக அந்த சமயம் சாலையில் போக்குவரத்தும் அதிகமில்லை. இல்லாவிட்டால், கடந்துசெல்லும்போதே இடிபோல் ஓசையெழுப்பியபடி ஒரு டசனுக்குக் குறையாத கார்களை ஏற்றிக்கொண்டு ஆலைகளிலிருந்து தமது விநியோகிகளுக்கு எடுத்துச் செல்லும் ராட்சச டிரக்குகள் என்னைக் கடக்கும் போதெல்லாம் நான் கட்டுப்பாடிழந்து விடுவேனே, அவற்றில் ஒன்று அப்போது சாலையில் வந்திருந்தாலே போதும் என் பயணத் தொடர்கதையை திடீரென்று 'முற்றும்' போட்டு நிறுத்தியிருக்கும்!

பிரெஞ்சுக் காரோட்டிகள், அவர்களது வேகப்பைத்தியம் அதிலும் குறிப்பாக ட்ரக் ஓட்டிகள் பற்றியெல்லாம் என்னை எச்சரித் திருந்தார்கள். முதலாவதைப்பற்றி பாரிஸ் நகரச்சாலைகளில் எனக்கு நிறையவே மயிர் சிலிர்க்கவைக்கும் அனுபவங்கள் ஏற்பட்டன. நூலிழையில் உயிர்தப்பிய சந்தர்ப்பங்கள் ஒன்றுக்கு மேற்பட்டவையாகும். பிரெஞ்சுக்காரர்களின்-குறைந்தது பாரிஸ் மக்களின் விரும்ப முடியாத வேறு சில அம்சங்களையும் போதுமான அளவு அனுபவிக்க நேர்ந்தது. பாரிசை விட்டு கிளம்ப வேண்டியது தான் என்று நான் முடிவெடுப்பதற்குள் சில நிகழ்ச்சிகள் பல முறை நடந்ததால், இது ஏதோ தனிப்பட்ட பிரெஞ்சுக்காரர் சிலரின் தோழமையின்மை அல்லது இங்கிதமின்மை என ஒதுக்க முடியவில்லை. பிரெஞ்சுக்காரர்களின் மொழிவெறி உலகறிந்த ஒன்று. அதன் திட்டமிட்ட முரட்டு வெளிப்பாடென்று இவற்றை

முடிவெடுத்ததே சரியென்று படுகிறது. பாரிஸ் எனக்கு புதிது. ஒவ்வொரு நாளும் மிஷ்லின் சாலை வரைபடங்களை கவனமாக பார்த்துவிட்டுத்தான் வண்டியை எடுப்பேன். ஆனாலும் திடீரென ஓரிடத்தில் சாலைப் பழுதுபார்க்கும் பணியால் வாகனங்கள் பாதை மாற்றிப்போக வேண்டிய இடங்களில் பல சாலைகள் கிளைப்பாதைகளாய் பிரியும்போது திக்குத்தெரியாத காடாகத்தான் தோன்றும். போதாத காலமாக, பிரெஞ்சுமொழி வேறு பேசத் தெரியாது. யாராவது வழிப்போக்கரைப் பிடித்து எனக்குத்தெரிந்த ஆங்கிலத்தில் உயர்பட்ச மரியாதையோடு வழிகேட்டால், அவர் ஒரு முறை முறைப்பார், திரும்புவார், நடையைக் கட்டிவிடுவார். வருத்தப்படுவது போன்ற பாவனைகூட இராது. ஒருமுறை கூட வேறுவித அனுபவம் ஏற்பட்டதில்லை.

கட்ச் பகுதியின் மகா ரண் வட்டாரத்தில் 1944இல் முதன் முதலாக நீர்நாரைகளின் இல்லறவாழ்வு நகரத்தின் உன்னதத்தைக் கண்டநாள்முதல் எனக்கு நீர்நாரைகளிடம் ஒருஈர்ப்பு ஏற்பட்டது. அங்கே நான் கண்டதை வைத்து தயாரித்த அறிக்கைகளை சில அமெரிக்க, ஐரோப்பிய அறிஞர்கள் படித்திருந்தனர். அவர்களும் நீர் நாரை ரசிகர்கள். உப்சாலாவில் அவர்களுடன் கருத்துப் பரிமாறிக் கொள்ள முடிந்தது. இது போன்ற ஐரோப்பியப் பகுதிகளைக் காணவும் சுற்றுச் சூழல் ஒப்பாராய்வு நடத்தவும் விரும்பினேன். எனவே தெற்கு பிரான்சில் கேமார்க், ஸ்பெயினில் கவுடால்குயிவீர் நதியின் முகத்துவாரப்பகுதி ஆகிய இடங்களுக்குப் போக ஆர்வமா யிருந்தேன். பிரான்சின் பறவையியல் பிதாமகரான பேராசிரியர் ஜே. பெர்லியோஸ் இயற்கை வரலாற்றுக் கழகத்தில் ஒரு பெரிய புள்ளி. அவர் கேமார்க் நீர்நாரையகப் பொறுப்பாளருக்கு ஒரு அறிமுகக் கடிதம் கொடுத்தார்.

அங்கே முனைவர் லுக் ஹாப்மன் இருந்தார். இவர் ஸ்விஸ் பறவையியலறிஞர்; இளைஞர். அப்போது விரைந்து முன்னுக்கு வந்து கொண்டிருந்த இவர் பின்னாளில் ஒரு உயிரியல் ஆராய்ச்சி நிலையமொன்றை தாமே நடத்தி பிறகு உலகளவில் புகழ்பெற்று இப்போது உலகளவில் மேதையாகவே உரிய இடம் பெற்றிருப்பவர். அவரது விருந்தோம்பலும், பறவைகளைப் பார்வையிட வாய்ப்பும் கிடைத்தது. ஒரு நாள் பகல் உணவுக்கு தன் வீட்டுக்கு அழைத்தார். இரவு தங்குவதற்கு ஏற்பாடாகியிருந்த இடத்திலிருந்து 100 கி.மீட்டர் அப்பால் இருந்தது அவருடைய வீடு. பகல் ஒரு மணியளவில் அங்கு போயச்சேரும் வகையில் எனது பயணத்திட்டத்தை அமைத்துக்கொண்டேன். ட்ரக் ஓட்டும் பிரெஞ்சுக்காரர்களை நான்

புரிந்து கொள்ளாததால் நெற்றியிலே ஒரு ஆழமான வெட்டுக் காயத்துடன் நான் அங்கு போய்ச்சேர்ந்த போது மாலை மணி நாலரை! வண்டியின் நொறுங்கிய முன் விளக்கு; அதற்கும் சில சில்லறைக் காயங்கள்-நல்லவேளை, அதற்கும் பயணத்தை பாதிக்குமளவு அடிபடவில்லை. ஒரு செங்கோணமான வளைவில் மிக எச்சரிக்கையாக நான் திரும்ப முயற்சிக்கையில் மூலையிலிருந்து முழுக்கமுழுக்க சாமான் ஏற்றிய ட்ரக் ஒன்று சீறிப்பாய்ந்துவந்து ஒரு விரும்பத்தகாத இடி இடித்தது. என்னை விசிறியடித்துவிட்டு (திட்டித்தானிருப்பான் அதிலென்ன ஐயம்!) இதை எல்லாம் தன் பணியின் ஒரு பகுதி என்பது போல போயே போய்விட்டான். பின்னால் காரில் வந்த ஒரு புண்ணியவான், குருதி படிந்த உடைகளுடன் கிடந்த என்னை தூக்கிப்போட்டுக் கொண்டு போய் கிறித்துவ சந்நியாசினிகளால் நடத்தப்பட்ட ஒரு சிறு மருத்துவ மனையில் சேர்த்தார். ஏர்ல்ஸ் நகரிலிருந்து சில மைல் தூரத்தில் அவர்களது மடம் இருந்தது. அவர்கள் யாருக்குமே ஆங்கிலம் தெரியவில்லை. ஒரு சிரமமான ஊமை நாடகம் (இப்போது நினைத்தால் சிரிப்பு வருகிறது) மூலம் சூழ்நிலையும் இது எப்படி நேர்ந்தது என்பதையும் கூறி நான் யாரென்று அறிமுகப்படுத்திக் கொள்ள வேண்டியிருந்தது. சைகைகளாலேயே முன்னதாகவே எனக்கு தடுப்பூசி போட்டிருக்கிறார்கள் என்று தெரியப்படுத்தினேன். அவர்கள் அதைப்பற்றி மிகவும் கவலைப்படுவதாக நான் புரிந்து கொண்டேன். தையல் போட்டார்கள், கட்டுப்போட்டார்கள். ரத்த ஆடைகளைக் கழுவினார்கள். ஆனால் என்னை அந்த நிலையில் அனுப்பிவைக்கத் துணியவில்லை. மருத்துவமனையில் அனுமதியாகி அந்த இரவு உள்நோயாளியாக தங்கிச்செல்லுமாறு பணித்தனர். ஓசையற்ற ஒருசைகைப்போராட்டம் எனக்கு விடைபெற்றுத்தந்தது. மீண்டும் சைகை நாடகமாகவே எனது நன்றியையும் தெரிவித்தேன். லுக் ஹாப்மனின் தொலைபேசி எண்ணும் என்னிடம் இல்லை. நான் நினைப்பதை இவர்களுக்கு தெரியவைப்பது பெரும்பாடாயிற்று. என் மோட்டார் சைக்கிள் கிடந்த இடத்துக்கு ஒரு வாடகைக்கார் ஏற்பாடு செய்து தந்தார்கள். கொஞ்சம் இங்கே தட்டி அங்கே தட்டி, சரியான இடங்களில் வளைத்து நிமிர்த்தி, ஒரு வழிசெய்து அதை ஓடும் நிலைக்குக்கொண்டு வந்தபின், வம்பு பண்ணாமல் கிளம்பி வழியிலும் தகராறு செய்யாமல் சென்றடைந்தது. 'ஆளைக்காணோம்' என்று குழம்பிய ஹாப்மன் கவலையுடன் என்ன செய்யலாம் என்று சிந்தித்துக்கொண்டிருக்கையில் என் வண்டி உள்ளே நுழைந்தது. தலைக்கட்டுடன் இறங்கி கதையை விவரித்தேன்.

துரதிருஷ்டவசமாக, கேமராக் மையத்தில் ஜூலை மாதம் நீர்நாரைகள் இல்லறம் நடத்தும் காலமல்ல. ஆனாலும் களத்தில் இறங்கிப்பார்த்ததே சுவையான அனுபவம்தான். காலிசெய்து சென்ற கூடுகளைப் பரிசீலிப்பது இந்தியாவைவிட இங்கு எளிதாக இருந்தது. அதற்குரிய பருவத்தில் இங்கு ஏழாயிரம் ஜோடிகள் வருமாம். கட்ச் புகலிடத்தில் நம்பமுடியாத, இது வரை நடைபெற்ற ஒரே ஒரு கணிப்பு 1945இல் நடந்ததுதான். அதன்படி ஆண், பெண், ஓரளவு சிறகுமுளைத்த குஞ்சு, சின்னஞ்சிறுசு எல்லாம் 5 லட்சம் தேறியது. அடைகாப்பில் இருந்த முட்டைகள் அந்தக்கணக்கில் சேர்க்கப் படவில்லை. பெரிய நீர்நாரைகளின் (போனிகாப்டரஸ் ரூபர்) கட்ச் குடியிருப்பே ஆசியாவிலேயே அதிகப்பறவைகள் கொண்டது என்பதும் உலகிலேயே கூட இதுவே அதிகப்பறவைகள் கொண்டதாயிருக்கலாமென்பதும் நம்புதற்குரியதே. என்னைப் பொறுத்தவரை 1945இல் மேற்கொண்ட 'நாரை நகர்'ப்பயணமே நினைவில் நீங்கா இடம் பெறும். ஏனெனில் அதற்கு முன்னும் சரி, பின்னும் சரி, மேற்கொண்ட எத்தனையோ பயணங்களிலும் வேறு எந்தப் பயணத்திலும், பறவைகள் குடும்பம் நடத்துவது உச்சகட்டத்தில் இருக்கும் போது முடிந்ததில்லை. அது ஒரு அதிருஷ்டம்தான்.

உப்சாலாவிலிருந்து மாநாடு முடிந்ததும் நான் இரண்டு இடங்களைத் தெரிவுசெய்து களப்பணிக்காக சென்றேன். ஒன்று, ஸ்வீடிஷ் லாப்லாந்தின் அபிஸ்கோ, மற்றது நார்வே-ஸ்வீடன் எல்லையை ஒட்டிய ரிக்ஸ்க்ரான்சன். பனிபடர்ந்த மலைகளும், நுரை புரளும் ஓடைகளும், ஆங்காங்கே உறைந்துபோன ஏரிகளும் நீர்நிலை களுமாக அது ஒரு உன்னதமான இயற்கை எழில் மண்டிக்கிடக்கும் கனவுலகமாகும். நான் அங்கிருந்த ஜூன் மாத நடுப்பகுதிதான் அங்கு பறவைகள் இல்லறம் நடத்தும் காலமாகும். என்னைப் பொறுத்தவரை குளிர்காலத்துக்கு இந்தியா வரும் நண்பர்களை அவர்களது கோடை வாழிடங்களிலும் ஆர்க்டிக் காலனியிலும் காணமுடிந்ததில் எனக்கு விசேஷ மகிழ்ச்சி. நீண்ட அலகுகளும் நீரில் நடக்கும் திறனும் இனியகுரலும் கொண்ட 'கர்லூ' என ஆங்கிலத்தில் அழைக்கப்படும் பறவை, விம்ப்ரெல்கள், செங்கழுத்து பலாரோப்கள், அலகுகள் அகன்ற சான்ட்பைப்பர்கள், காட்விட் பறவைகள், ஸ்டின்ட் என்ற பறவைகள் ஆகியவை அந்த 'நண்பர்'களில் அடங்கும்!

அபிஸ்கோவில் சுற்றுலாப் பயணிகளுக்கான மரத்தாலான இல்லங்களில் தங்கினோம். நாங்கள் மூவர் ஒரு இல்லத்தைப் பகிர்ந்து

கொண்டோம். ஒருவர் பீட்டர்ஸ்காட். இவர் வைல்ட் பவுல் டிரஸ்ட்டை (காட்டுவாத்து அறக்கட்டளை) சார்ந்தவர். மற்றவர் ஐஸ்லாந்தைச் சேர்ந்த, ஃபின்னர் குட்மட்சன். ஐஸ்லாந்துக் காரரைப்போல ஒரு பெரிய உருவத்தை நான் கண்டதேயில்லை. ராட்சச உருவங்கொண்ட மனிதர். அதுதான் முதல் சந்திப்பு என்பதால் அவர் உருவம் பற்றியோ, குறட்டைவிடும் சக்தி பற்றியோ எனக்கு ஏதும் தெரியாது. உச்சஸ்தாயியில் குறட்டைவிடும் மனிதருடன் ஒரு சிறு இல்லத்தில்—அதுவும் கடல்மட்டத்திலிருந்து உயர்ந்த தளத்தில் கூடார அமைப்பில் தங்குவது எனக்கு 'ஒவ்வாமை' கொண்டதாகும். அதுவே வாழ்வின் மிகப்பெரிய இயலாமை என்பேன். எனவே அவரை முதன்முதலில் பார்த்தபோதே, எங்கள் சிறு இல்லத்தில் அந்த மாபெரும் மனிதமலை அடியெடுத்துவைத்த காட்சியிலேயே என் மனம் தளர்ந்து போய்விட்டது. முற்றிலும் மோசமான இரவு இது என்று எண்ணினேன். அந்த அச்சம் அர்த்தமற்றது என உணர்ந்தது ஒரு இனிய அதிர்ச்சியாகும். அவருக்கு இருந்த உடலுக்கு அவர் குறட்டை விடுபவரல்ல என்பது நம்பற்கரிய நற்செய்தியாயிருந்தது. மென்மையும் நேசமும் மிக்க மனிதர் என உணர்ந்துகொண்டேன். அருமையான பறவையியல் அறிஞருமான அவரிடமிருந்து அவரது கவர்ச்சிமிக்க ஐஸ்லாந்து பற்றியும் அவரது பறவைஇயல் வாழ்வுபற்றியும் நிறையத் தெரிந்துகொண்டேன்.

நான் அவ்வளவு நெருக்கமாக உறவு கொண்டிருந்த மும்பை கழகத்தின் பிற்கால வரலாறு பற்றிய பலசெய்திகளை குறிப்பிடாமல் விட்டுவிட்டேன் என்று படுகிறது. பர்மாவிலிருந்து 1924இல் வந்த பின்பும் இந்திய விடுதலைக்குப்பின்பும் அந்த உறவின் நெருக்கமும், நிகழ்ச்சிகளும் குறிப்பிடத்தக்கவை; எனக்கு அவை அறிவார்த்தமாக மிகவும் நிறைவளித்த காலக்கட்டங்கள்; கழக வரலாற்றில் அதன் வளர்ச்சியில் குறிப்பிடத்தக்க முன்னேற்றமிருந்ததாகவும் அதைப்பற்றி நாட்டிலும், வெளியிலும் ஒரு நற்பெயர் உருவானதும் இந்த கால கட்டங்களில்தான் என்று நினைக்கிறேன். நாட்டு விடுதலை ஏற்படுத்திய மிகப்பெரிய இடைஞ்சல் பிராட்டரின் இடத்துக்கு ஒரு தக்க ஆளைத் தெரிவு செய்யவும், இதுபோன்ற இடைவெளியை நிரப்ப சார்ல்ஸ் மக்-கேன் இடத்துக்கு துணைக்காப்பாளர் ஒருவரைத் தேர்ந்தெடுக்கவும் நேர்ந்ததுதான். அப்போது நான் கழகச் செயலராகவும் தற்காலிகக் காப்பாளராகவும் இருந்தேன். இருவரின் பணித்தரமும் அவ்வளவு உயர்வாயிருந்ததால் இணையான ஆட்களைத் தெரிவு செய்வது கடுமையான முயற்சியாயிருந்தது.

எனவே பலரை பரிட்சார்த்தமாக வைத்துப்பார்த்து கடைசியில் ஒரு வழியாக அனுபவம் இல்லாவிட்டாலும் பணிக்குரிய தகுதி கொண்டவர்களைக் கண்டுபிடித்து அமர்த்தினோம்.

இதைப்பற்றிப் பேசும்போது ஒரு தற்செயலான ஒரு அதிசயம் நினைவுவருகிறது. மிகமிக அரிதான, இணையற்ற அனுபவம். அறிந்தவர், தெரிந்தவர் என்று சகலவிதமானவர்களுக்கும் எத்தனையோ முறை கூறி மகிழ்ந்த அந்த விசித்திரத்தை மீண்டும் சொல்வதால் குடிமுழுகிப் போய்விடாது. இளைஞர்கள் களப்பணி என்பதைத் தவிர்க்கமுடியும் வரை தவிர்க்கவே முயல்வர். ஏனென்றால், அதற்கு இடைவிடாத கடுமையான உடலுழைப்பு கட்டாயத்தேவை. ஆனால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களில் ஒரு கேரள இளைஞன், உயிரியல் முதுகலைப்பட்டதாரி. அவனோ, அதில் ஈடுபாடுள்ளவனாக இருந்தான். சரியாகச் சொன்னால் அத்தகைய வேலைகளை செய்ய தீவிர விழைவு கொண்டிருந்தான் என்பதுதான் வியப்பான உண்மை. இயற்கைக்கு(!) முரணான இயல்பு கொண்டிருந்த இவனது பின்னணி என்ன என்று அறியும் அவாவினால், கேரளாவில் ஜீவநாயகம் என்றொருவர் உண்டு, அவரைத்தெரியுமா என்று கேட்டேன். இந்த ஜீவநாயகம் என்பவர் 1930களில் அரசு உதவிபெறும் தனியார் பள்ளிகளில் ஊழல் என்பது குறித்து திருவாங்கூர் அரசு நியமித்த கல்வித்துறை நிபுணர்களின் சுற்றுப்பயணக் குழுவில் உறுப்பினர்-செயலராக இருந்தவர். பறவையியல் கணக்கீட்டுக்காக 1932இல் நான் அங்கு சுற்றிக் கொண்டிருந்த நாட்களில் பல ஊர்களில் பயணியர் விடுதிகளிலும், தங்குமிடங்களிலும் இக்குழுவினரும் அதே சமயம் அந்தந்த ஊருக்கு வந்த காலங்களில் சந்தித்திருந்தேன். என்னிடம் அவருக்கு எப்போதுமே நட்பும் மனமார்ந்த நேசமும் இருந்தது. எனது பணியிலும் அவருக்கு ஈடுபாடு இருந்தது. ஆனால், இந்தப்பழக்கம் அப்புறம் தொடரவில்லை. இப்போது இந்தப்பையனும் கேரளக் காரன். இவனுக்கு அவரைத் தெரிந்திருக்குமா? இருபது ஆண்டுகளுக்கு முன்பு நான் சந்தித்த இந்த மனிதரைப்பற்றி உன் தாயகமான கேரளாவில் கேள்விப்பட்டிருக்கிறாயா என்று குருட்டாம்போக்கில் கேட்டுவைத்தேன். கோடியில் ஒரு வாய்ப்பாக முழுக்க முழுக்க நம்பவே அரிதாக என்ன பதில் வந்தது தெரியுமா? ஜீவநாயகம் வேறுயாருமல்ல—இந்த டானியலின் தந்தையார்! ஜேசி. டானியலின் பெயரில் முதலெழுத்து 'ஜே' தென்னக மரபுக்கும் வழக்கத்துக்கும் ஏற்ப ஜீவநாயகத்தைத்தான் குறித்தது! இதை நான் யூகிக்காமல் போனது என்(ன) அப்பாவித்தனம்!

பறவையியலையே வாழ்வுக்கு வழியாக ஏற்கவிரும்பி 1929இல் நான் முனைந்தபோது எனக்கு அதைப்பயிற்றுவிக்க இந்தியாவில் எந்தப் பல்கலைக்கழகமும் நிறுவனமும் திறன் கொண்டதாயில்லை. அந்த சோகானுபவம் நெஞ்சிலேயே இருந்ததால், இந்த வறுமையை நிவர்த்தி செய்யும் அனுபவமும், தேர்ச்சியும் எங்களுக்கு (மும்பை கழகத்துக்கு) கிடைக்கப்பெற்றுவிட்டபோது மும்பை பல்கலைக் கழகத்தை வலியுறுத்தி, எங்களை பறவையியல் மேற்பட்ட படிப்புக்கான வழிகாட்டி நிறுவனமாக அங்கீகரிக்கச் செய்தேன். பறவையியலை சிறப்புப் பாடமாக எடுத்துக்கொண்டு உயிரியலில் ஏற்கெனவே பட்டம் பெற்றவர்கள் முதுகலைப்பட்டத்துக்கும் முனைவர் தகுதிக்கும் பயில இது உதவியது. எனது முதல் முதுகலை (M.Sc.) மாணவரான புனாவைச் சார்ந்த விஜயகுமார் அம்பேத் காருக்கு, அவரது கட்டுரையான "பாயா வீவர் (புளோசியல் பிலிப்பைன்ஸ்) உயிரினத்தின் இனப்பெருக்க உயிரியலும், சுற்றுச் சூழலும்" என்பதற்கான அயல்நாட்டு-வெளித்தேர்வாளராக முனைவர் டேவிட் லாக், எப்.ஆர்.எஸ். அவர்களை நியமிக்குமாறு வலியுறுத்தி, ஒரு தனிச்சலுகையாக, வெற்றியும் பெற்றேன். திரு. லாக் ஆக்ஸ்போர்டில் எட்வர்ட் கிரே களத்துறைப் பறவையியல் நெறியாளராக இருந்து வந்தார். என்னுடைய வழிகாட்டுதல் சரியான பாதையில்தான் இருந்ததா என்று தெரிந்துகொள்ளும் எனது மனநிறைவே இதற்கு முக்கிய காரணமாகும். விஜயகுமாரின் கட்டுரைபற்றிய அவரது மதிப்புரை எனக்குத் துணிவூட்டுவதா யிருந்தது. சில சிறு சிறு குறைகளை விமர்சித்துவிட்டு, அவர் கூறினார்:

> "மும்பை பல்கலைக்கழகத்தின் முதுகலை தரமும் ஆங்கிலேய பல்கலைக்கழகங்களின் நிர்ணயிப்புக்கு சமமானதென்று அனுமானித்துக்கொண்டு இக்கட்டுரை தேர்ச்சிக்குரிய தென்று முடிவுசெய்கிறேன். தேவையான தகுதிகளை இது நிறைவேற்றுகிறது. கட்டுரை சுவையானது, மிகத்தெளிவாக எழுதப்பட்டு தயாரிக்கப்பட்டுள்ளது. எடுத்த தலைப்பினில் இப்போதுள்ள நூல்களை ஆழ்ந்து கற்று எழுதப்பட்டுள்ள இம்முயற்சிக்கு, தேவையான அளவு சொந்த ஆய்வுகளும் அடிப்படையாக அமைந்து இவரைத் தேர்ச்சிக்குரியவர் என்று முடிவு செய்வதை முற்றிலும் வலுப்படுத்துகிறது என்பது என் கருத்து."

ஆரம்பத்தொகையாக என் சிறு நன்கொடையை வைத்து,

மும்பைக்கழகத்தின் ஆதரவில் “சாலிம் அலி-லோக் பறவையியல் ஆய்வு நிதி (SALOR) என்று ஒரு அறக்கட்டளையை நிறுவினேன். கழகத்தின் நண்பர்களும் நலம் விரும்பிகளுமாக நன்கொடைகள் மூலம் அதை மூன்று லட்சம் பெறுமானமாக உயர்த்தினர். ஆனால் தலையாய பங்களிப்பு, 1964இல் விமான விபத்தில் உயிரிழந்த என் இனிய நண்பரும் சக-பறவையியலாளருமான லோக்-வான்-தோ அவர்கள் நினைவாக அவரது குடும்பத்தார் தாராளமாக செய்த நன்கொடையே இவ்வளர்ச்சியை சாத்தியமாக்கிற்று. இந்த நிதியத்தின் வட்டிகொண்டு ஒரே சமயம் இரண்டு முதுகலைபடித்த மாணவர்களுக்கு 2-3 ஆண்டு உயர் கல்வி அளிக்கமுடிகிறது. சில காலம் கழித்து சர். தோராப்ஜி டாட்டா அறக்கட்டளையினர் நல்கிய கொடையால் இன்னும் ஒரு மாணவருக்கும் உதவமுடிகிறது. இதெல்லாம் எனக்கு மிகமிக மனநிறைவளிக்கின்றன. ஏனென்றால் கழகம் இப்போது போதுமான அளவு பயிற்சிபெற்ற, தரமான களத்துறை உயிரியல் விற்பன்னர்களை உருவாக்கும் சக்தியுள்ள நிலைக்கு வந்துள்ளது. கழகம் இந்நிலையை அடையாவிடில் இந்தியாவில் அத்தகைய நிபுணர்கள் கிடைப்பது இயலாமல் போயிருக்கும்.

18

# ஹமீத் அலி

அதிகாரத்துக்கான பயிற்சி என்று புகழ்பெற்ற அரசு அதிகாரி சர். மால்கம் டார்லிங் எழுதி 1966இல் வெளிவந்த ஒரு நூல் சில ஆண்டுகள் முன்பு தற்செயலாக என் பார்வைக்கு வந்தது. சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன்பு ஒரு புத்தம் புது ஐ.சி.எஸ். அதிகாரியாக ஆன ஆசிரியரின் முதல் மூன்றரை ஆண்டுகால இந்திய வாழ்வை அது விவரிக்கிறது. பெரும்பாலும் தாய்நாட்டிலிருந்த தன் தாய்க்கும் நண்பர்களுக்கும் அவர் எழுதிய கடிதங்களையும், அவரது நாட்குறிப்புகளையும் அடிப்படையாகக்கொண்டு எழுதப்பட்டிருந்த நூல் அது. முன்னுரையில் “இந்தியாவும் நானும் என நினைக்கையில், நான் அங்குபோய்ச் சேர்ந்திருந்தபோது அதன் வரலாற்றை ஏதோ கொஞ்சம் அறிந்தவனாக, ஆனால் அதன் மக்களைப்பற்றி ஏதும் அறியாதவனாக இருந்தேன் என்று கூறவேண்டும்” என்கிறார். நூலின் முதல் பக்கத்தில், முதல்பத்தியில் தான் இந்தியா வந்து சேர்ந்ததைப் பற்றிக் குறிப்பிடுகிறார். சிறிதும் எதிர்பாராத பேரானந்தத்தையும் பெருமையையும் அந்தப்பகுதி எனக்களித்தது. அவர் எழுதுகிறார்:

> சிடி ஆப் வியன்னா” (வியன்னா நகரம் என்ற கப்பல்) 27.1.1904 ஞாயிறன்று பம்பாய் நகரில் கரைசேர்ந்தது. நான் தளத்தில் உறங்கிக்கொண்டிருந்தேன். கண்திறந்தபோது, நீண்டுகிடந்த எழிலார்ந்த சாலையும் அதனைத்தாண்டி தூரத்துக் குன்றுகளின் பின்னிருந்து இளஞ்சிவப்புக் கிரணங்களை நீட்டியபடி தங்கத்தகடாக காலையிளம் பரிதி எழுவதைக்கண்டேன், சூழல் சூடேறிவிட்டது. காற்றினிலே ஒருமணம் கனத்துக் கமழ்ந்தது. போர்ட்செய்ட் (Port Said) பகுதியில் இதை முதலில் உணர்ந்திருந்தேன். ‘உள்ளூர்வாசிகள் கிளர்ச்சிக்காரர்கள்’ என்ற கீழ்நாடுகள் பற்றிய அச்சத்தை போர்ட்செய்ட் என்னுள் விதைத் திருந்தது. நல்லவேளையாக, கப்பலிலேயே காணக்கிடைத்த

> ஒரு இந்தியர் மாறுபட்ட உணர்வை மனதில் பதித்தார். பம்பாய் நகரைச்சார்ந்த ஹமீது அப்துல் அலியும் என்னைப்போலவே இந்திய அரசுப்பணி (ஐ.சி.எஸ்)க்குப் புதியவர். பிரெஞ்சு, ஜெர்மன் ஆங்கிலம் ஆகியமொழிகளில் புலமை மிக்கவர். கற்ற அனைத்தைப் பற்றியும் சொந்தக் கருத்துகள் கொண்டவர். அருமையான நகைச்சுவை உணர்வு கொண்டவர். என்னைப்பொறுத்தவரையில் கப்பலில் இருந்தவர்களிலேயே சுவாரஸ்யமானவர் அவர்தான். இயற்கை என்னும் விபத்து அவரை வெள்ளையராக அல்லாமல் கறுப்பராகப் படைத்து விட்டதால், கப்பலின் சூழலிலிருந்து என்னையும் விட அதிகமாக அவர் ஒதுங்கி நின்றார். அன்றைய இந்தியாவில் கிழக்குக்கும் மேற்குக்கும் இடைப்பட்ட அகன்ற சமுதாய இடைவெளியை எனக்குக் குறிப்பாக உணர்த்திய முதல் அனுபவம் அது.

ஹமீதுதான் எனது அன்பு அண்ணன். எங்கள் (சகோதர–சகோதரிகள்) அனைவர்க்கும் ஆசை அண்ணண் அவர்தான். நான்தான் அவருக்கு நெருக்கமானவன் என்பதும், நானே அவரது (மாற்றுக்குறைந்த) நகல்தான் என்பதும் நான் பாவித்துக்கொண்ட நினைப்புகளாகும். மனநிலை, கண்ணோட்டம், ஆர்வங்கள், விருப்பு வெறுப்புகள் ஆகியவற்றில் நான் அவரைக் கொண்டிருக்கிறேன் என்ற எண்ணம் உண்டு. ஆரம்பத்தில் இயற்கையியல் மாணவனாக நான் துவங்கியதிலும் பரிணாம வளர்ச்சியுற்றதிலும், குடும்பத்தில் வேறு யாருடையதையும் விட ஹமீதண்ணாவின் நேரடி ஊக்கமும் அவரது பாதிப்புமே முதலிடம் வகிக்கும். எனக்கு 11–12 வயதில் பிறந்தநாள் பரிசாக முட்டைகளை சேகரிக்கும் ரௌலண்ட் வார்ட் கருவியை அவர் அளித்த அந்த நாள் முதலே, பறவையியல் கல்வியில் என் முன்னேற்றத்தை பரிவும் ஊக்கமும் காட்டியவராக கவனித்து வந்தவர் அண்ணன். நான் மேலும் அதிக முயற்சிகள் எடுக்க அவரது அறிவுரைகளும் விமர்சனங்களும் தூண்டுகோல்களாக இருந்தன. எனது திருவாங்கூர் பறவையியல் கணக்கீட்டு அறிக்கையைப் படித்து விட்டு 'மும்பை இயற்கை வரலாற்றுக் கழக மலரின் கடந்த இதழில் [(தொகுதி37(4)] திருவாங்கூர் கணக்கீடுபற்றி நீ எழுதியிருப்பதை அண்மையில்தான் நான் படித்தேன். எடுத்த பொருளை நீ கையாண்டிருக்கும் வகை குறித்துப் பாராட்டி உனக்குச் சில வரிகள் எழுதுவது நல்லதென்ற எண்ணம் ஏற்பட்டது.

வெளிப்படுத்தும் விதம் (சொல்லாட்சி) இதற்கு மேல் நிதானமும் முதிர்ச்சியும் கொண்டிருக்க முடியாது; உள்ளடக்கமும் பொருளும் இதற்குமேல் முழுமையாக அமையமுடியாது என்கின்றபடி அமைந்துள்ளன என்பது எனது அறிவுபூர்வமான கருத்து. உடனே உட்கார்ந்து உனக்கு எழுதியே தீரவேண்டும் என்று நான் எண்ணம் கொள்ளுமளவுக்கு இதனைப்படித்ததில் எனக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது (சதாரா–20.6.1935) என்று அவர் எழுதியதில் மெய்யாகவே நான் பெருமிதமுற்றேன். சிந்து மாகாணத்தில் ஹமீத்பாய் அரசுப்பணி நிமித்தமாக சுற்றுலாப் போயிருந்த முகாம்களில் குளிர்காலப்பள்ளி விடுமுறையை நான் கழித்தது ஒரு கல்விபோல அமைந்தது. இயற்கை வரலாறும் பறவைகளும் பற்றிய எனது ஆர்வத்தை வளர்த்து விட்டது மட்டுமல்லாது அவர் பணிபுரிய நேர்ந்த பகுதிகளில் அவர் பொறுப்பிலிருந்த நாட்டுப்புற மக்கள் அவரிடம் கொண்டிருந்த உண்மையான அன்பு, மரியாதை; ஒருவர் விடாது அவர்கள் அனைவரிடத்தும் அவர் நற்பெயர் பெற்றிருந்ததன் ரகசியங்களை ஆழமாக உணரும் வாய்ப்பினை நல்கியதாலும் அந்த காலகட்டம் என்றென்றும் நினைத்தற்குரியதாகும். இருபதாண்டுகள் கழித்து நான் பறவையியல் தொடர்பாக அவர் முன்பு பணியாற்றிய சில மாவட்டங்களுக்கு செல்ல நேர்ந்தபோது, நான் ஹமீதலியின் தம்பி என்ற 'மந்திரச் சொல்'லை கூறவேண்டியதுதான் தாமதம்—அவரை அறிந்திருந்த வெண்தாடிவேந்தர்கள் இருகை நீட்டி அணைத்து அன்பு சொரிவதும் தாராளமாக விருந்தோம்பி உதவி செய்வதுமாக பாசத்தைக் காட்டுமளவுக்கு அந்த அன்பும் மரியாதையும் ஆழமாகவும், உண்மையாகவும் வேரோடியிருந்தன.

ஹமீதுபாய் தேர்ந்த பன்மொழிப்புலவர். ஐரோப்பிய மொழிகளுள் பிரெஞ்சு, ஆங்கிலம், ஜெர்மனி ஆகியவற்றில் தேர்ந்த புலமை பெற்றிருந்ததுடன், உருது, இந்தி, சிந்தி, குஜராத்தி, மராத்தி, புஷ்டு, அரபி, பெர்ஷியன் ஆகிய மொழிகளிலும் தெளிவாக எழுதப் படிக்க கற்றிருந்தார். அவற்றில் பெரும்பான்மையானவற்றில் தெளிவாகப் பேசவும் செய்வார்.

எனது தாய்மாமனும் ஹமீதண்ணாவின் மாமனாருமான அப்பாஸ் தியாப்ஜியின் கதையே வேறு. அது கொஞ்சம் விசித்திர மானது. ஆனால் அன்றைய அரசியல் மாறுதல்களின் சூழலில் அப்படியும் பலபேர் இருக்கத்தான் செய்தனர்.

இங்கிலாந்திலிருந்து ஒரு வழக்கறிஞராகத் திரும்பியதும் 1893 வாக்கில் அவர் பரோடா கெய்க்வார் மன்னரின் அரசில் நீதித்துறையில் வேலைக்குச் சேர்ந்தார். பல்லாண்டுகாலம் மாவட்ட

நடுவராகப் பணியாற்றிய பின்பு, பதவி உயர்வு பெற்று பரோடா உயர்நீதிமன்ற நடுவராகி, 1913இல் ஓய்வுபெறும்வரை அந்நிலையில் பணியாற்றி வந்தார். அவர் என் தாயின் ஒரே சகோதரர், அதுவும் அண்ணன். ஆகவே 1897இலோ என்னவோ என் அன்னையார் கைம்பெண் ஆனபோது என் சகோதர சகோதரிகளின் காப்பாளராக அவர் ஆகியே தீரவேண்டியதாயிற்று—பெயருக்குத்தான். உண்மையில் குடும்ப பாரம் முழுவதும் இன்னொரு (தூரத்து) மாமா முறையினரான அமீருத்தின், அவரது துணைவி ஹமீதா பேகம் ஆகியவர்களின் தன்னலமற்ற, விரும்பிஏற்றுக்கொண்ட தோள்களில் தான் விழுந்தது. மிக விரைவிலேயே நாங்களும் அநாதையாகிவிட, அவர்களுக்கும் குழந்தையில்லாமல் போகவே அவர்கள்தான் எங்களுக்கு எல்லாமே. இந்தத் தம்பதியர் பற்றி முன்னரே குறிப்பிட்டிருக்கிறேன். நான் ஜெர்மனியிலிருந்து 1930இல் திரும்பியதிலிருந்து தொடர்ந்து வேலையின்றி இருந்தபோதும் சரி, பிறகும் சரி, 1935இலோ 36இலோ அவர் காலமானவரை, அப்பாஸ் மாமாதான் எனது உறவுக்கார முதியோர்களிலேயே என் பறவையியல் பற்றி, யாரையும் விட கடுமையான கருத்துகள் கொண்டிருந்தார் என்பதையும் வருத்தத்துடன் கூறத்தான் வேண்டும்.என் பறவையியல் தொடர்புகளை அவர் முற்றிலுமாக நிராகரித்தார். நான் காலத்தை வீணடிப்பவன், கடமையை நழுவவிடுபவன் என்பதும் பறவையியல் நடவடிக்கைகள் என் சோம்பேறித் தனத்துக்கும், 'நேர்மையான, பயனுள்ள' பணி எதுவும் செய்வதில் நான் கொண்டிருந்த தயக்கத்துக்கும் ஒரு திரை என்பதும் அவரது தெளிவு! 'சோம்பேறித்தனம்' கூட திருவினை ஆக்கியதைக்காண அவர் உயிரோடு இல்லாமல் போனது பரிதாபம்தான்!

எப்படியோ, அதெல்லாம் வேறுகதை. இங்கிலாந்தில் மாணவராக இருந்த நாள்முதல் உயர்நீதிமன்ற நடுவர் பணியில் ஓய்வு பெறும் வரை காலமெல்லாம் அவர் (அரச) விசுவாசிகளுக்குள் ஒரு மேட்டுக்குடி விசுவாசியாக இருந்தார். நெஞ்சுக்குள் ஒரு தேசிய மிதவாதியாயிருந்தும் பிரிட்டிஷ் மக்களைப்பற்றியோ, அரசு பற்றியோ லேசான விமர்சனத்தையும் கூட அவர் தாங்கிக் கொள்வதில்லை. சக்ரவர்த்தியையோ மன்னர் குடும்பத்தையோ சற்றே மரியாதைக் குறைவு காணும் எந்தக்கூற்றும் அவரைப் பொறுத்தவரை சாபக்கேடான பேச்சுதான். அவ்வாறான விசுவாசமற்ற 'தேசத்துரோக' உணர்வுகள் பேசப்படும் எந்த உரையாடலிலாவது அவர் 'சிக்கிக்' கொண்டார்கூட உடனே

எழுந்து அந்தக் குழுவிலிருந்து வெளியேறி விடுவார். அவருக்கு ஏதும் வலிமையான 'சுதேசி' எண்ணங்கள் இருந்திருந்தால்– அவற்றை அவர் செயலிலோ, கருத்திலோ வெளிப் படுத்தியதே கிடையாது. அவரது ஆடைகளெல்லாம் அந்நியத் துணிகளே. அவரது வாழ்முறையும் வீட்டு சாமான்களும் முற்றிலும் நாகரிகமானவைதான். சரியான மேற்கத்திய நிலைதான்; மிக 'நேரிய'வைதான். எனவே அவர், காந்திஜியுடனும் அவரது மக்கள் சார்ந்த அரசியல் போராட்டங்களான, சட்டமறுப்பியக்கம் இந்திய பிரிட்டிஷ் அரசுடன் (அகிம்சை என்றாலும்) ஒத்துழையாமை, அந்நியத்துணியை எரிக்குமளவான தீவிர சுதேசியம் ஆகியவற்றுடனும் இயல்பாகவே தீவிரமாக வேறுபட்டார். மற்றபடி அவரது மிதமான மெல்லிய தேசியம், நடுவர் என்ற முறையில் முழுக்கமுழுக்க நேர்மையும் நெறிபிறழாமை ஆகியவற்றை காங்கிரஸ் இடதுசாரிகளும் ஏகாதிபத்திய எதிர்ப்பின் தீவிரவாதிகளும் கூட ஒப்புக்கொண்டது மட்டுமல்ல, பாராட்டியும் வந்தனர்.

எனவே, 1919 ஜலியன் வாலாபாக் படுகொலையை அடுத்து காங்கிரஸ் ஒரு சுயேச்சையான உண்மையை நிறுவும் குழுவை நிறுவியபோது அதன் தலைவர்/அமைப்பாளர் பொறுப்புக்கு அப்பாஸ் மாமா பெயர் உறுதியான ஆதரவைப் பெற்றது. அருவருப்புடனும், தளபதி டயரின் மிருகத்தனம் பற்றி நூற்றுக்கணக்கான நேர்முக சாட்சிகளின் கூற்றுகளையும் இரையானவர்கள் வாக்குமூலங் களையும் கேட்டும், குறுக்கு விசாரணை செய்வதும் புரிந்து கொண்டபின் மாமா முற்றிலுமே மாறிப்போனார். விரக்தி அவரை முற்றிலுமாகத் தழுவியது. கொஞ்சம் அவநம்பிக்கையுடன் ராஜவிசுவாசிகளும், பிரிட்டிஷ் பிற்போக்காளர்களும் டயரின் நடவடிக்கைக்கு அளித்த போற்றுதலையும் அவர் கவனித்துத்தான் வந்திருந்தார். ஒரே நாளில் அரசியலில் கரணமடித்தார். மிகவிரைவில் காந்தியாரின் அதிநம்பகமான சக ஊழியரானார். மேற்கத்திய, பிரபுத்தனமான வாழ்வியலை விட்டொழித்து, வீட்டில் நெய்த கதரின் தீவிர நேசரானார். பழகியிராத மூன்றாம் வகுப்பில் நாடு முழுவதும் புகைவண்டிப்பயணம் மேற்கொண்டார். சகிக்காத, மூட்டைப்பூச்சி நிறைந்த சத்திரங்களிலும் ஆசிரமங்களிலும் தங்கினார். கட்டாந்தரைகளில் கண்ணயர்ந்தார். பேயரசு செய்யும் பிரிட்டிஷ் காலனித்துவ இந்திய அரசுடன் வன்முறையற்ற ஒத்துழையாமைப்போர் என்ற தாரக மந்திரம் ஓதியவராக கொதிக்கும் வெயிலில் காத தூரம் நடந்தார். இந்தத் துன்பங்களையும் பரபரப்பான நடவடிக்கைகளையும் அவர்

ஏற்றுக்கொண்டபோது அவருக்கு வயது எழுபது. இதற்கும் மேலே பல சிறைத்தண்டனைகளுமாக சேர்த்து அரசியல் கைதியாக சிறைவாசம் வேறு.

குஜராத்தில் உள்ள பஞ்ச்மஹல் மாவட்ட துணை ஆட்சித் தலைவராகவும் மாவட்ட மாஜிஸ்ட்ரேட்டாகவும் 1917இல் ஹமீத் அலி பணியாற்றி வந்தார். பர்மா வணிகத்தை 'படிப்புக்காக' நிறுத்தியிருந்த இடைவேளையில் அவரது குளிர்கால பணிச்சுற்றுலாவில் அவருடன் சில நாட்கள் தங்கும் வாய்ப்புப் பெற்றேன். அப்போது ஒரு கிராமத் தலையாரிக்கு எதிரான வழக்கொன்றை அவர் விசாரிக்க வேண்டியிருந்தது. 'விசுவாசமின்மையோ' 'ராஜத் துரோகமோ' அது போன்ற ஒரு குற்றம் சுமத்தப்பட்டிருந்தது. இரண்டாண்டுகளுக்கு முன்பு காந்தியார் தென்னாப்பிரிக்காவிலிருந்து திரும்பி வந்ததிலிருந்து குஜராத்தில் அத்தகைய 'குற்றங்கள்' தொற்றுநோய் போல விரைவாகப் பரவிவந்தன. தலையாரிக்கு ஆதரவாக சாட்சியம் தர காந்தியடிகள் வந்திருந்தார். (நீண்ட நாள் விசாரணைக்குப் பிறகு தலையாரி விடுதலை ஆனார்) ஒரு பிரமாதமான மாஞ்சோலையின் நடுவே நீதிமன்றம் ஒரு தற்காலிக முகாமிலும், எங்கள் குடியிருப்பு அருகிலேயே இன்னொரு முகாமிலுமாக அமைத்திருந்தனர். விசாரணைக்குப் பிறகு 'தேநீர்' பருக காந்தியடிகளை ஹமீதண்ணா உணவகப்பகுதிக்கு அழைத்து வந்தது எனக்கு தெளிவாக நினைவிருக்கிறது. தேநீர் என்றால் உண்மையில் கொஞ்சம் ஆட்டுப்பாலும் வறுத்த நிலக்கடலையும்தான் (கடலையோ-சிவ்டா என்ற அரிசி, பருப்பு, கடலை ஆகியவற்றை வறுத்த பணியாரமோ). அப்போது அவர் இந்தியாவில் தன் முழுத்தலைமையையும் காட்டாத காலமெனினும், தென் ஆப்பிரிக்காவில் இனவெறி எதிர்ப்பிலும் மனிதநேயத்துக்கும் அவர் செய்திருந்த தொண்டு அகில உலகிலும் அவருக்குப் பெருமை தேடித்தந்திருந்ததால் அவரைப் பார்த்ததே எனக்கு திகைப்பும் மகிழ்வும் தந்தது. படாடோபமற்ற அவரது வெளிப்படையான எளிமையும், நகைச்சுவை உணர்வும் எனக்கு அவரிடம் ஒரு ஈர்ப்பை ஏற்படுத்தின. ஆடம்பரம் எந்த உருவில் இருந்தாலும் எனக்கு ஒருவித நமைச்சலை ஏற்படுத்துகிறது. நகைச்சுவை, வாழ்வின் வரங்களில் ஒன்று என்றும் நான் நம்புகிறேன். எனவே, ஒரு விதத்திலும் தன்னுடைய உன்னதத்தால் பாதிக்கப்பட்டுவிடாத மனிதராகவும், தன் ஆளுமையைக் கண்டே சிரிக்கக் கூடியவராகவுமிருந்த காந்தியடிகளிடம் எனக்கு மிக உயர்ந்த மரியாதை இருந்தது. குடும்ப முறையில் தற்செயலாக அமைந்த இந்த சந்திப்பு என் நற்பெரும்பேறு

என்று நான் கருதுகிறேன். ஏனெனில் பிறகு அவரை சந்தித்த எந்த சமயத்திலும் அது ஒரு தனிப்பட்ட உறவாக அமையவில்லை. அநேகமாக ஒரு மகாத்மாவின் பொது தரிசனங்கள்தான்.

ஏறத்தாழ 1915இல் காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவிலிருந்து திரும்பியதிலிருந்து 1935இல்தான் (ஹமீதண்ணா) நிம்மதிப்பெருமூச்சுடன் பணிஓய்வுபெறும் வரையில், அண்ணன் பம்பாய் மாகாணத்தில் அவ்வப்போது மாற்றலாகி வருவதற்கேற்ப பல மாவட்டங்களில் நடுவராக இருந்தார். அது அரசியலில் புயல் வீசிக் கொண்டிருந்த காலம். தேசிய இயக்கம் அவருக்கு சங்கடங்களை ஏற்படுத்துமளவில் சூடாகக்கொண்டிருந்தது. இந்தக் காலகட்டம் முழுவதும் அவர் நிலை பொறாமைப்படக் கூடியதல்ல. மிகச்சங்கடமான கட்டம். தனது தெளிவான சிந்தனை முடிவுகளின்படி அவர் முழுமனதான தேசியவாதி. ஆனால் ஒரு மூத்த அதிகாரி—அதுவும் மாவட்ட ஆட்சித்தலைவர் என்ற அளவில். சட்டத்தில் எழுதியிருப்பதை நடுநிலையோடு நிலைநாட்டவேண்டியவர். அரசியல் கிளர்ச்சியாளர்களை எப்படி நடத்தவேண்டும் என்று குறிப்பிடப்பட்டுள்ளதோ, அப்படி நடத்தவேண்டியவர். அவரது தேசியச் சார்பும், தலைவர்களிடமும் பொதுமக்களிடமும் பிரபலமாக இருந்ததும் ஆட்சியாளருக்கு உள்ளூர அவர்மீது ஒரு சந்தேகத்தை உருவாக்கியிருந்தன. அதிகாரியாக பயிற்சி பெற்றுக்கொண்டிருந்த துவக்க காலத்திலிருந்தே அவர்மீது ஒரு கண் இருந்தது. அவருக்கு திறமையும் இடம்பொருள் ஏவலுக்கேற்ற வினைத்திறமும் இருந்தும், பணிக்காலம் நிறையும் போதுகூட அவர் மாவட்ட ஆட்சியர்-நடுவர் என்பதற்கு மேல் உயரவில்லை என்பதற்கு அவர் தனது தேசிய நோக்கையும் சார்பையும் ஒழுங்காக மறைத்துக்கொள்ளாததும், அரசு சார்பாளர்-அரசு எதிர்ப்பாளர் என்ற பேதமின்றி, பொது மக்களில் எல்லா மட்டத்திலும் அவருக்கு மரியாதை இருந்ததுமே காரணம் என்பது உள்ளங்கை நெல்லிக்கனியாகும்.

அவரது துணைவியும் அப்பாஸ் மாமாவின் மகளுமான ஷரீபா அண்ணியின் தேசியம் தீவிரமானது. சில சமயம் அசந்தர்ப்பமாக வெளிப்பட்டுவிடும்; அண்ணாவின் தர்மசங்கட நிலையை இது இன்னும் மோசமாக்கியதுண்டு. அண்ணி பெண் கல்வி, கிராமிய மகளிர் முன்னேற்றம் ஆகியவற்றில் குறிப்பாக ஆர்வம் கொண்டிருந்த, கடமை உணர்வுள்ள, மனவுறுதிமிக்க சமூக சேவகி. ஆழ்ந்த அரசியல் வண்ணங்கொண்டிருந்த சுதேசி இயக்கத்தில் அவர் ஒரு பிரசாரகர். அதில் அவர் வெளிப்படையாகவே இருந்தார். வீட்டுக்குள்ளேயே இப்படி வெடிப்புறப்பேசும் துணைவி;

வாசலிலேயே சட்ட மறுப்பையும் ஒத்துழையாமையையும் போன்ற தொந்தரவான தத்துவங்களை முழங்கும் நடமாடும் நிலையமாக மாமனார். இருவருமாக ஹமீதண்ணாவின் சங்கடம், தர்ம சங்கடமாகியது. தனது மாவட்டத்துக்குள் வந்து மாமனார் அரசை எதிர்த்து உரை நிகழ்த்தினால், கைதுசெய்வதன்றி வேறு வழி கிடையாதென்பதால் மாமனாரை தன் மாவட்டத்திலிருந்து விலகி நிற்குமாறு கையெடுத்துக் கும்பிடலானார்! அப்பாஸ் மாமாவையும் சும்மா சொல்லக்கூடாது, மாப்பிள்ளையின் நிலைமையை முற்றிலும் புரிந்துகொண்டு அந்தப்பகுதிகளை தவிர்த்து விடுவார்.

சட்டமறுப்பு இயக்கம் நிகழப்போகிற இடங்களில் சட்டம் ஒழுங்கை நிலைநிறுத்தவோ/மீட்கவோ புறப்படும் காவல்துறைக் குழுவினருக்கு இறுதி நிமிட ஆலோசனைகளில், உசுப்பிவிடப் பட்டாலும், உடனடி வன்முறை ஆபத்து இருந்தாலும் கூட ஆகக் குறைந்த அளவிலேயே காவல்துறை வன்முறையைப் பயன் படுத்தலாம் என்றும், எந்நிலையிலும் ஆறுவது சினம் என்றும் கூறுவதே எப்போதும் ஹமீதண்ணாவின் வழக்கம். சாம்ராஜ்யத்தைக் கட்டிக் காக்கும் ஒரு பிரிட்டிஷ் இளைஞர் காவல்துறைக் கண்காணிப்பாளராக இருந்த ஒரு மாவட்டத்தில் ஆதிவாசிகள் வனத்துறை சத்தியாக்கிரகம் செய்வதாக சூளுரைத்திருந்தனர். இரத்தம் ஓடப் போகிறதென்ற அச்சமான நிலை. அண்ணா மிகவும் கலங்கிப் போனது இயல்பானதே. சம்பந்தப்பட்ட இடத்துக்கு காவல்படையுடன் போகுமுன் அண்ணாவின் அறிவுரைக்காக அந்த இளைஞர் வந்தார். முழுக்க முழுக்க தவிர்க்கமுடியாவிட்டால் மட்டுமே வன்முறையைப் பயன்படுத்தலாம் என்றும் அதுவும் ஆகக்குறைந்த அளவில் இருக்க வேண்டும் என்றும் இவர் அவரிடம் வேண்டிக்கொண்டதை நான் கேட்டேன். “எக்காரணங்கொண்டும் துப்பாக்கி சூடு வேண்டாம்” என்பதே அவரது அறிவுரையின் முக்கிய பகுதியாக இருந்தது. ஒரு சமயத்தில் நிலைமை மோசமாகப் போயும் கூட, அந்த சம்பவத்தில் காவல்துறை வன்முறை தவிர்க்கப் பட்டது. மாவட்டத்தலைவர் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டார்.

அன்று பணியிலிருந்து ஓய்வுபெற்றதும்—1934 அல்லது சற்று முன்பின்—முசோரியிலிருந்த ‘சௌத்உட்’ என்ற எழிலார்ந்த மாளிகைக்கு அண்ணியுடன் குடியேறினார். பின்னால் இந்த பவனத்தை அதிகாரிகள் ஓய்வு இல்லமாகப் பயன்படுத்திக் கொள்ள அரசுக்கே நன்கொடையாக அளித்துவிட்டார். வயது எழுபத்தைந்துக்கு மேலாகி, அரை நூற்றாண்டுக்கு மேல் ஷரீபாவுடன் இனிதாக இல்லறமும் நடத்திய பிறகு, அவ

குறும்புத்தனமாக விளையாட்டாக தங்களை ஏமாற்றிய ஒரு நிகழ்ச்சியை அவரது நெருங்கிய கூட்டாளிகள் சொல்வர். எந்த விதமான அடையாளமும் முன்னதாக தெரியாத நிலையில் திடீரென ஒரு குண்டைத்தூக்கிப் போடும் கடிதமொன்றை அனுப்பியிருந்தார். நம்பமுடியாத அதிர்ச்சி அதில் வந்து சேர்ந்ததாம். ஒரு இளங்காலைப்பொழுதில் வந்த அக்கடிதம் அவர்களை அவரது திருமணத்துக்கு அழைத்திருக்கிறது! இதில், அவர்கள் அதற்கு சாட்சியாக இருக்கவேண்டுமென்று வேறு வேண்டுகோள். மலைவாழிடமான முசோரியில் ஹமீதலி-ஷரீபா தம்பதிக்கு ஏராளமான அறிவு ஜீவி நண்பர்கள். நிறையபேர் இவர்களை வணங்குகிறவர்கள் வேறு. ஊர்நலம் விரும்பியாக செய்த அறச்செயல்கள் அநேகம். லட்சியத் தம்பதியாக எண்ணப்பட்ட வர்கள். இவர் ஒரு புதுத்துணை தேடிக்கொள்கிறார்—அதுவும் அகால வசந்தத்தில் என்பதை நண்பர்களால் நம்பமுடியவில்லை. பாவம், கிழவருக்கு புத்திகெட்டு விட்டது என்று எண்ணியவர்களுக்கு பிறகு உண்மை தெரிந்தபோது நிம்மதியாயிற்று. வேறு ஒன்றுமில்லை. இசுலாமிய சட்டப்படி ஒரு முஸ்லீம் தனது சொத்துக்களில் எதையும் எல்லாவற்றையும் தான் நினைத்தவர்களுக்குக் கொடுக்கலாம். ஆனால், இறந்துவிட்டால், அது இஸ்லாமிய சட்டப்படி யார் வாரிசுகளோ, அவர்களுக்குதான் போய்ச்சேரும். அவர்கள் எவ்வளவு தூரத்து உறவினராக இருந்தாலும் அவர் உயிலெழுதி அதன் போக்கைத் தடுக்கமுடியாது. மகப்பேறற்ற முகமதியராக இருந்ததாலே, மரணத்துக்குப்பின் தன் சொத்து தனக்குப் பிடித்தவர்களுக்குப் போவதை உறுதி செய்துகொள்ள அவருக்கு ஒரே வழி, தன் திருமணத்தைப் மதச்சார்பற்ற பதிவுத் திருமணமாக்கிக்கொண்டு, விரும்பியவாறு ஒரு உயிலெழுதிக் கொள்வதுதான். ஆக இதுதான் கிழவரின் திருமணக்கதை.!

ஒரு நாள் பிற்பகல் 3 மணிக்கு மும்பையில் (நவம்பர் '80) என் மேசையிலமர்ந்து வீட்டிலிருப்பதற்கேற்ற உடையணிந்து வேலை செய்து கொண்டிருக்கிறேன். கையில்லாத சட்டை, படுக்கையறை பைஜாமா 'ஆக விருந்தினைரை எதிர்கொள்ளும் நிலை அல்ல! முன்பின் தெரியாத ஒருவர் கதவைத்திறந்து கொண்டு பொதுவாக விழிப்பாயிருக்கும் எனது நாய்களின் பார்வைக்கும் தப்பி—என் அறைக்குள் நுழைகிறார். வயது 65 இருக்கும். டை உட்பட சுத்தமாக மேனாட்டு பாணியில் உடை, சற்று குண்டான உடல். நியாயப்படி எனக்கு ஒரே எரிச்சல். நேரங்கெட்டநேரத்தில் தேவயற்ற இடைஞ்சல் பேர்வழியா? முறைப்பாக "யார் நீங்கள்?

என்ன வேண்டும்? இதுதான் வருகிற நேரமா” என்றேன். அவர் மன்னிப்பு கேட்டுக்கொண்டு குஜராத்திலிருந்து வருவதாகவும் தனக்கு முக்கியமான ஒரு நோக்கத்துக்காகவே கிளம்பி மும்பை வந்திருப்பதாகவும் சொன்னார். எப்படியோ என் முகவரி கிடைத்தும் 16–பாலிஹில் எங்கே என்று நெடுநேரமாய்த் தேடியதாயும் சொன்னார். என்னிடமிருந்து ஏதும் வேண்டாமென்றும், மாறாக ஒரு நெடுநாள் கடனைத் திருப்பித்தரவே என்னைத்தேடி வந்திருப்பதாகவும் சொன்னார். குஜராத் பல்கலைக்கழகமொன்றில் பதிவாளராகப் பணியாற்றி ஓய்வுபெற்ற தன் பெயர் ஷீர்சாகர் என்றும் பல்லாண்டுகாலம் முன்பு தன் தந்தையார் சதாராவில் ஆசிரியராகவும் சமூகசேவகராகவும் விளங்கியதாயும் அந்த இரட்டை நிலைமைகளில் அப்போதைய சதாரா மாவட்ட ஆட்சியர் என் அண்ணன் ஹமீது அலி ஐசிஎஸ். அவர்களிடம் தொடர்பேற்பட்டு அவரிடம் நட்பும் மரியாதையுமாகப் பழகி வந்ததாயும் அடுக்கிக் கொண்டே போனார். அந்த அருமைத்தந்தை அண்மையில் காலமாகி விட்டார். பத்தாம்நாள் (அல்லது பதினான்காம் நாள்) அவரது ஆன்மா அமைதி அடைய மரபுப்படி காகங்களுக்கு அன்னமிடும் சடங்கை நிகழ்த்தியிருக்கிறார்கள். அன்னம் படைக்கப்பட்டவுடன் அநேக காகங்கள் அங்கு குழுமிவிட்டன. ஆனால் வட்டமாக அமர்ந்து கொண்டனவே தவிர சாதத்தைத் தொடவேயில்லை. அதைப் பார்த்துவிட்டு ஒரு புத்திசாலிக்கிழவர் சொன்னது: ஒன்று, இறந்தவரின் ஆசை எதையோ பிள்ளை நிறைவேற்றவில்லை அல்லது ஏதோ ஒரு கடன் தீர்க்கப்படவில்லை. ஷீர்சாகருக்கு உடனே ஏதும் நினைவுவரவில்லை. கடைசியாக நினைவுக்கு வந்துவிட்டது. ஹமீதலி ஓய்வுபெற்று முசோரியில் வந்து தங்கி பல ஆண்டுகளுக்குப் பிறகு மகனை (ஷீர்சாகரை) உயர்கல்விக்கு அமெரிக்கா அனுப்புவதற்காக வாங்கிய அந்தக் கடனை எப்பாடுபட்டும் தீர்க்க முயலவேண்டும் என்று அனைவரது முன்னிலையிலும் இவர் ஆணையிட்டுக்கூறிய சில நிமிடங்களில் ஒரு காகம் சாதத்தை நெருங்கி கொத்த ஆரம்பித்திருக்கிறது. பிற காகங்களும் சேர்ந்துகொண்டு விட்டன. மனிதர்களின் ஆன்ம விடுதலையில் காகங்களின் பணிபற்றி வெளிநாட்டுக் கல்வி இவர் மனதில் ஏற்படுத்தியிருக்கக்கூடிய ஐயங்கள்கூட கரைந்துவிட்டன. இந்நிகழ்ச்சி ஷீர்சாகரை ‘மூட நம்பிக்கையில் முழு நம்பிக்கை’ கொண்டவராக ஆக்கிவிட்டது. எது எப்படியிருந்தாலும், அரை நூற்றாண்டுக்குப்பிறகு, யாரும் கேட்காத, ஞாபகப்படுத்தாத, மறக்கப்பட்டுவிட்ட ஒரு கடனைத் திருப்பிக் கொடுத்ததற்காக—அதற்கு அவருக்கு வேறு ‘நோக்கம்’

இருந்திருந்தாலும்-அவரை சகலவிதமாகவும் பாராட்டவேண்டும் அவர் போன்றோர் பலப்பலர் பிறப்பராக; அதுவும் அடிக்கடி பிறப்பராக!

எடுத்த சபதத்தை நிறைவேற்றும் புனிதக்கடமையே இவரை அகாலத்தில் வந்து என் அறைக்குள் நுழையச்செய்திருக்கிறது. அண்ணாவின் உயிலுக்கான அறங்காவலரில் நானும் ஒருவன்தான். ஆனால் அவரது ஆவணங்களில் இந்த 'கடன்' பற்றிய தடயங்களே ஏதும் கிடைக்கவில்லை. எனவே நான் பணத்தைப் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டேன். ஆனால், ஷீர்சாகரோ தன் சபதத்தை நிறைவேற்ற வேண்டுமென தீவிரமாக பதட்டப்படுகிறார்! எனவே காலஞ்சென்ற ஹமீதலி தம்பதியின் சொத்துகளை நிர்வகித்து வந்த வழக்கறிஞர்களான எஸ்.எப்பி. தியாப்ஜி நிறுவனத்தாரிடம் அவரை அனுப்பி வைத்தேன். அவர்களாலும் தம்மிடமிருந்த ஆவணங்களில் எதையும் கண்டுபிடிக்க முடியாது போகவே, என்னைப்போலவே அவர்களும் பணத்தைப் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்கள். பிறகு இவரே சட்டைப் பையிலிருந்து ஒரு கசங்கிய பழைய அஞ்சலட்டையை எடுத்துக்காட்டியிருக்கிறார். முசோரி 'சௌத் உட்' மாளிகையில் இருந்து 1934இலோ 35இலோ ஹமீதண்ணா தன் கைப்பட எழுதிய கடிதம். அதில் பெரியவரின் வேண்டுகோளைக் கண்டெழுதி வங்கி வரைவு ஒன்று பற்றியும் குறிப்பிட்டிருக்கிறார். உங்கள் பையன் கப்பலேற, சரியான சமயத்துக்கு பணம் கிடைக்கப் பிரார்த்திக்கிறேன்-நம்புகிறேன் என்றெல்லாமும் எழுதியிருக்கிறார். தொகை ஆயிரம் என்று தெரியவந்தது. அரிசி ரூபாய்க்கு எட்டு சேர், கோதுமை பத்து சேர், 4000 ரூபாய்க்குள் புத்தம்புது போர்ட் கார் வாங்கிவிடலாம் என்று விலைவாசி இருந்த அந்தக் காலத்தில், ஆயிரம்ரூபாய் ஒன்றும் சிறுதொகை அல்ல. அண்ணனின் பகட்டில்லாத வள்ளல் தன்மைக்கும் மனித நேயத்துக்கும் இது ஒரு அடையாளம்தான். மக்கட்செல்வமில்லாத அவர் தன் காலம் முழுவதும் மாதச்சம்பளத்தில் குறிப்பிடத்தக்க அளவை எப்போதும் வறியவர்களுக்காகவும் வயதான உறவினர்-சுற்றம்-ஆகியவர்களுக்கும், பலதரப்பட்ட ஆண்-பெண் குழந்தைகளின் கல்விக்கும் ஏனைய தகுந்த அறச்செயல்களுக்கும் செலவிட்டுவந்தார். அதில் எதற்கும் கணக்கு வழக்கும் கிடையாது. சந்தர்ப்ப வாய்ப்பாக அவ்வப்போது இவற்றில் சில, உதவிபெற்றவர்கள் வாயிலாகவோ, மூன்றாவது மனிதர் வாய்மொழியாகவோ தெரியவந்ததுதான்.

மூடநம்பிக்கைகள் பற்றிச்சொல்லும் போது ஒரு விஷயத்தை ஒப்புக்கொள்ள வேண்டும். சகலவித ஆன்மீக விஷயங்கள், மந்திர

வித்தை, ஜாதகம், புலன்களைக் கடந்த 'வித்தைகள்' இவற்றில் எல்லாம் என் சுபாவத்துக்கேற்ப நான் அவநம்பிக்கையே கொண்டிருந்தேன். ஆனால் தற்காலிகமாகத்தான் என்றாலும்–அந்த என் உறுதியெல்லாம் தகர்ந்து போகிறமாதிரி 1919இல் பர்மாவின் என் சகோதரன் ஆமிர் தொடர்பாக ஒரு சம்பவம் நிகழ்ந்தது. எங்கள் பர்மா வியாபாரத்தில் ஆமிர் இணைந்து இரண்டு மாதங்கூட ஆகியிருக்கவில்லை. நகருக்கு வெளியே, சில மைல் தொலைவில் ஒரு புத்த மடாலயம் இருந்தது. அதன் சூழல் மரங்களடர்ந்தது. அதில் ஒரு சிமெண்ட் நீர்நிலையிருந்தது. அந்த நீரில் ஏராள மீன்கள். அவற்றில் சில பல நூற்றாண்டுகளாக வாழ்ந்து வந்ததாக சொல்வார்கள். அவை புனிதமானவை என்று கருதி வணங்குவார்கள். பக்திமிக்க யாத்ரிகர்களும் சுற்றுலாப்பயணிகளும் உணவுபோட்டு போட்டு கொழுத்துப்போய் அவற்றைப் பார்த்தாலே சாப்பிடும் ஆசையைத் தூண்டுபவையாக இருக்கும். ஆனால் இந்த மீன்களை எவனாவது துன்புறுத்தினாலோ, பிடித்தாலோ அவன் நாசமாய்ப் போவான் என்ற ஆழமாக ஒரு மூடநம்பிக்கை அவற்றை வேட்டைக் காரர்களிடமிருந்து காப்பாற்றி வந்தது. என்னைப்போலவே ஆமிர் இவை போன்ற விஷயங்களில் அறவே நம்பிக்கை இல்லாதவன். ஒரு முரட்டுத்துணிச்சலில், விதியையே சவால் விடுபவன்போல, யாருமற்ற ஒரு தருணத்தில் விளையாட்டாக ஒரு கல்லை எடுத்து அடித்திருக்கிறான். அன்று காலைதான் அங்கு என் ஹேர்லி–டேவிட்சன் வண்டியில், பக்கவாட்டில் தெஹ்மினா, பின்னால் ஆமிர் என சுற்றுலாப் பயணிகளாக நாங்கள் போயிருந்தோம். நாங்கள் கிளம்பும்போது ஆள் எப்போதும் போல்தானிருந்தான். ஒரு குறையுமில்லை. பகலுணவுக்கு வீடுவந்து சேர்ந்தபோது மூட்டில் ஏதோ விறைப்பாகியிருக்கிறது என்றான். பின்னிருக்கையில் அமர்ந்து ஒரு மட்டமான சாலையில் பயணம் செய்தால் அப்படித்தான் என்று நாங்கள் அதை பெரிதாய் பொருட்படுத்தவில்லை. ஆனால் மாலையில் காய்ச்சல் போலிருந்தது. மூட்டுவலி ஏற்பட்டு தாங்க முடியாததாயிற்று. இரண்டு நாளில் காய்ச்சல் வலுத்தது. கீல்வாதக்காய்ச்சல் என்று மருத்துவர்கள் கண்டு சொல்ல அந்த ஊரில் இருந்த அத்தனை மருத்துவ வசதிகளையும் பயன்படுத்தியும் ஒன்பதாம் நாள் ஆமிர் மரித்துப்போனான். ஏதோ தற்செயலான நிகழ்வு என்று சொல்லுங்கள். ஆனால் என் பகுத்தறிவை அது ஒரு ஆட்டு ஆட்டிவைத்தது என்பது உண்மைதான்.

19

# இன்னும் ஐந்து பேர்

## சிட்னி தில்லோன் ரிப்ளி

தற்காலிகமாக வேல்ஸ் இளவரசர் அருங்காட்சியாகக் கட்டிடத்தில் மும்பை இயற்கை வரலாற்றுக்கழகம் இயங்கிக்கொண்டிருந்த காலத்தில், 1944இல், பறவை சேகரிப்பில் நான் ஈடுபட்டிருந்த நேரம். அந்தப் போர்க்கால நாட்களில் அமெரிக்க வீரர்கள் மும்பை வழியே போய்க் கொண்டிருப்பார்கள். ஒரு நாள் அத்தகைய ஒரு அமெரிக்கர் அங்கு வந்துசேர்ந்தார். நான்தான் சிட்னி தில்லோன் ரிப்ளி என்று தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டார். ரிப்ளி யேல் பல்கலைக் கழகத்தில் முதுகலை உயிரியல் மாணவர். அவரது பறவையியல் சம்பந்தப்பட்ட வெளியீடுகள் சிலவற்றை நான் படித்திருந்ததால் அந்த சந்திப்பில் நான் மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். முதல் சந்திப்பிலேயே ஒருவருக்கு ஒருவர் மிகவும் பிடித்துப்போய்விட்டது. தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கான அமெரிக்க ராணுவப்பிரிவில் எடுத்துக்கொள்ளப்பட்ட ரிப்ளி இலங்கையில் இரகசியத் தகவல்கள் அறிவதற்கான பணியில் ஈடுபடுத்தப்பட்டிருந்தார். அந்தப் பணி காரணமாக இணைப்புத் தலைமையகமான தில்லிக்கு அடிக்கடி வரவேண்டியிருந்தது. பின்னாளில் வாழ்நாள் முழுவதும் நண்பனாகவும், மதிப்புக்குரிய சகாவாகவும், பறவையியலிலும் பயணங்களிலும் துணைவராகவும், பல நூல்களின் வெளியீடுகளில் என் சக ஆசிரியராகவும் பரிணமித்த இந்த மனிதருடன் முதல் சந்திப்பு இப்படித்தான் ஏற்பட்டது. இந்த சந்திப்பிலும் பிறகு தில்லி-இலங்கை பயணங்களின் போதெல்லாம் அவர் மும்பை வந்த வேளைகளிலும் இருவரும் இணைந்து பறவை சேகரிப்பும் மற்ற பிற களப்பணிகளும் செய்வதுபற்றி பேசிக்கொண்டிருப்போம். போர் முடிய வேண்டியதுதான், உடனே நிலைமைகள் இயல்பாகி,

நாட்டில் நடமாட்டம் கட்டுப்படுத்தப்படாத நிலை வந்துவிட்டாலும் குறிப்பாக வடகிழக்கு எல்லைப்பகுதியில் நாங்கள் இணைந்து செய்யக்கூடிய பயணங்கள் பற்றி காற்றில் கோட்டை கட்டுவோம்! வடகிழக்கு அசாமின் எல்லைப்பகுதியான மிஷ்மி குன்றுகளுக்குப் போவதுதான் எங்கள் முதல் இலக்கு. அந்தப் பகுதி பறவையியல் அறியப்படாத ஒரு அங்கமாக இருந்தது. இதற்கு நீண்டகாலம் பிடித்தது. 1946ஆம் ஆண்டு முடிவில்தான் பகைமை மறைந்து இயல்புநிலையடைந்தது.

அப்போதுதான் இதனை ஆரம்பிக்க முடிந்தது. போர்க்கால இறக்குமதிக் கட்டுப்பாடுகளாலும் போரின் பின்விளைவுகளாலும் பெட்ரோலும் வாகனங்களும் அரிதாகிப்போயின, இதனால் சாலைப் போக்குவரத்து—அதிலும் அதிகப் புழக்கமற்ற இடங்களில்—ஒரு பிரச்சினையாகிப்போனது. ஆனால் மிஷ்மி குன்றுகள் பகுதியில் போக்குவரத்து பெரிதும் விலங்குகளும் சுமைதூக்கிகளையும் நம்பி இருந்ததால் பிரச்சினை குறைவு. அது ஒரு கூட்டுமுயற்சியாக இருந்தாலும் நிதிஏற்பாடு தனித்தனியாக அமைந்தது. என் செலவுகள் முந்தைய பலமுறைபோலவே லோக்-வான்-தோவினுடைய தாராள மனதினால் பார்த்துக்கொள்ளப்பட்டன. மும்பை கழகமும் கள சேகரிப்பாளர், தோலுரிப்பவர் தந்துதவியதோடு பின்னால் காட்சியக வசதிகள் தேவைப்பட்டபோதும் கைகொடுத்தது.

ஜப்பானிய, இத்தாலிய மிஸ்ட் வலைகளைப் பறவைபிடிக்கப் பயன்படுத்தியது அதுதான் முதல்முறையாகும். மிஷ்மியிலும் பொதுவாக கிழக்கு இமாலயத்திலும், அடர்ந்த புதர்களும் தாழ்வான வளங்களும் உள்ள பகுதிகளில் பதுங்கு பறவைகளும், ரகசியமான பறவைகளும் அதிகம். அத்தகைய பறவைகளைக் கண்டுபிடிக்கவும், பிடிக்கவும் இந்த பொறிகளைப் போல்—அதிலும் எளிதாக்கப்பட்ட ஜப்பானிய வலைகளைப்போல—சரியான வழி வேறு எதுவும் கிடையாதெனத் தெளிவாகப் புலனாயிற்று. ‘பிரிட்டிஷ் இந்திய வன உயிரினங்கள்’ என்ற நூல் வரிசையில் ஸ்டூவர்ட் பேக்கர் பங்களிப்பான பறவைகள் பற்றிய நூல்கள் வெளிவந்து 20 ஆண்டுகள் ஆகியிருந்தன. எங்களுக்கும், பிற சக நிபுணர்களுக்கும், விமர்சனப் பார்வையில் அவை குறைபாடுடையவையாகப்பட்டன. அவற்றை மறுபார்வை செய்து இடைக்காலத்திய அறிவையும் சேர்த்து காலத் துக்குத் தக்கதாக ஒரு பதிப்பைக் கொண்டுவருவது பற்றிய எண்ணமும் இந்தப் பயணத்தின் போதுதான் உருக்கொண்டது. புதுப்பதிப்பு, அதுவரை தெரியவந்துள்ள அனைத்துத் தகவல் களையும் கொண்டு, முற்றிலும் காலப் பொருத்தத்துடன்

வரவேண்டும் என்பது எங்கள் பேரவா. காட்சியக நிபுணர்களுக்கு மட்டுமன்றி சாமானிய ரசிகர்களுக்கும் உதவும் வண்ணம் நிறைய சித்திரங்கள் கொண்டதாக அது அமையவேண்டும்; எளிய முறையில் பறவைகளின் வரலாறும் அதில் வரவேண்டும். விதர்பி எழுதிய 'பிரிட்டிஷ் பறவைகள் பற்றிய கையேடு' என்ற நூலைப்போல அது வரவேண்டும் என்றெல்லாம் கனவுகண்டோம். டாக்சானமி என்ற பகுதிக்கு அவரும் சூழலியல் பகுதிக்கு நானும் ஆசிரியப் பொறுப் பேற்க வேண்டுமென்று பணியைப் பங்கிடும் செய்துகொண்டோம். ஐம்பதாண்டுகாலம் நான் பணியாற்றிச் சேர்த்த செய்திகளும், வடமேற்கு இந்தியாவில் பல்லாண்டுகாலம் பணிபுரிந்து விஸ்லர் நுணுக்கமாக எழுதி வைத்திருந்த பறவைக்குறிப்புகளும், ரிப்ளியின் இந்தியப் பயணங்களின் சேகரிப்பான குறிப்புகளும் பொதுப் பகுதிக்கான செய்திகளுக்கு அடிப்படை ஆவணங்களாக அமையும். இவைதவிர, கடந்த நூற்றைம்பது ஆண்டு காலத்தில் இந்தியப் பறவைகள் பற்றி வெளிவந்த முக்கியப் படைப்புகளிலிருந்து தேர்ந்து தெரிந்தெடுத்த பகுதிகளும் இடம்பெறும். அதிகாரப்பூர்வமான, முழுமையான ஒப்பீட்டுப்பட்டியல் ஒன்றை ரிப்ளி மும்பை கழகத்துக்காக தயாரிப்பார். அதுவே 'இந்தோ-பாக் பறவைகள் கையேடு' என்ற அந்த எங்கள் நூலிலே ரிப்ளியின் பகுதிக்கு அடித்தள ஆதாரமாக அமையும். எங்கள் கையேட்டில் எடுத்துக் கொண்ட பறவைகளைப் பொறுத்தமட்டில், அதுவரை எழுதப்பட்டிருக்கக் கூடிய அதிகாரபூர்வமான முழுமையான செய்திகளையும் கொண்டிருக்கும்; அனைவரும் அறிந்திராத செய்திகளும் அறியப்பட வேண்டியவையும் குறிப்பிடப்படும். இப்படித் திட்டமிட்டோம்.

நூலகத்தில் ஆராய்ச்சிப்பணியும் பல்வேறு நூல்களிலிருந்து எங்கள் நூலுக்கான தகவல்களை எடுப்பதும் நான்காண்டுகள் எடுத்துக்கொண்டன. அதில் ஆறுமாதம் நான் அமெரிக்காவில் செலவிட்டேன். அமெரிக்காவிலிருந்ததில் பெரும்பாலான நேரம் அப்போது ரிப்ளி உயிரியல் துணைப்பேராசிரியராகப் பணியாற்றிய யேல் பல்கலைக்கழகத்தில் கழிந்தது. கலந்துரையாடவும், ஆளுக்கொரு வடிவமைப்புச்செய்தி, ஆளுக்கொருவிதமாக எழுதி இரண்டையும் ஒப்பிடவும், அமெரிக்காவில் அவர் எழுதப்போகும் பகுதிக்கும் என் பகுதிக்கும் ஒரு இணைப்பும் இசைவும் ஏற்படுத்தக் கூடிய வகைகளை முடிவுசெய்யவும் இருவரும் ஒன்றாயிருந்தது உதவியது. இந்திய அரசும், அமெரிக்க கல்வி அறக்கொடையமைப்பும், இந்தியதேசிய அறிவியல் சங்கமும் இதற்கு நிதிஉதவியளித்தன. அமெரிக்காவில் வாழ்ந்த காலத்தில் என் செலவுக்கான உதவியை

யேல் பல்கலைக்கழக செஸ்ஸெல் உயிரியல் படிப்பூதியம் ஒன்று ஏற்றுக்கொண்டது. இதற்கு ரிப்ளி உதவினார். ஸ்மித்-முண்ட் பயணக்கொடை லஎன்ற அறநிதியம் என் பயுணச்செலவுகளுக் பொறுப்பேற்றுக் கொண்டது. கையெழுத்துப்பிரதி வேலை 1964இல் துவங்கியது. அதற்குள் ரிப்ளி ஸ்மித் சோனியன் நிறுவனத்தின் செயலராகப் பொறுப்பேற்று வாஷிங்டனுக்குப் போய்விட்டார். நூலின் முதல் பகுதி 1968இல் வெளிவந்தது. அடுத்தடுத்து விரைவாக அடுத்த பத்துதொகுதிகள் வெளியாயின. இறுதித்தொகுதி 1974இல் வந்தது. எனது 78வது பிறந்த நாளுக்கு நான்கு நாள் கழித்து 16.11.74 அன்று பிரதமர் இந்திராகாந்தி அதனை முறையாக வெளியிட்டார்.

மும்பை கழகத்துடன் தொடர்பு ஏற்பட்ட அந்தநாள்முதல் ரிப்ளி அதன் ஆதரவாளராக இருந்தார். ஸ்மித்சோனியன் நிறுவனத் துக்கு அவர் சென்றபின் அது பன்மடங்காயிற்று. பல்வழியிலும் கூட்டு முயற்சிகள் மேற்கொண்டதில் இரு நிறுவனங்களுமே அளவற்ற நன்மை எய்தின. நமது நாட்டின் வடகிழக்கு எல்லைப்பகுதி அரசியலில் நுட்பமான ஒரு பகுதி. அங்கே அறியப்படாத பல பறவையியல் செய்திகள் ஆய்வுக்குரியனவாக இருந்தன. அந்தக் கிழக்கத்திய-இமாலயப்பகுதியின் ஆய்வுப்பயணங்கள் அரிய பல ஆய்வுமுடிவுகளையும், குறிப்பிடத்தக்க அளவு அறிவியல் ஞான வளர்ச்சிக்கு உதவுவனவாகவும் இருந்தன. மும்பை கழகத்துடனான கூட்டு இல்லையேல் இதெல்லாம் இயலக்கூடியதேயில்லை. ரிப்ளி ஆர்வத்துடன் கலந்துகொண்டதும், அவரோடு பன்முகப் புலமையும், பார்ப்பதற்கு ஏதோ பலவீனமானவர்போன்ற (தவறான) வெளித் தோற்றமும் கொண்ட அவரது துணைவி மேரியும் வருவார். இருவரது இயல்பும் கடினமான பயணவாழ்வை இனிமையாக்கின என்பதைக் குறிப்பிட்டே ஆகவேண்டும். நான் முதன் முதலில் (1950ல்) உப்சாலா பறவையியல் மாநாட்டின்போது புது மணப் பெண்ணாகக் கண்ட மேரி இப்போது (1984இல்) இருப்பதை விடவும் மிக மெல்லியராக இருந்தார். அருமையாக உடையணிந்து அந்த அந்தஸ்துக்குரிய சமூக வட்டத்தில் அலங்காரமாக அவர் தோன்றியது இன்னும் நினைவிருக்கிறது. அதனை அடுத்து உடனடியாக ஒரு பறவையியல் பயணமாக நாகாமலைகளுக்கோ நியூகினி பகுதிக்கோ அவர்கள் கிளம்பிவிட்டனர். அந்தக் கடுமையான காட்டுவாழ்வுக்கு அவர் சிறிதும் தகுதியற்றவர் என்று நான் உறுதியாக நம்பினேன் அப்போது! பின்னாளில் இந்தத் தம்பதியுடன் பல கடுமையான பயணங்களில் கலந்துகொண்ட போதுதான் என் கருத்து எவ்வளவு மோசமான தவறு என்பது

புரிந்தது. வாஷிங்டன் நகரத்து இல்லத்து வரவேற்பறை மேரி வேறு, மழை தூறும், அட்டைகள் ஆளைப் பதம்பார்க்கும் காடுகளில் சிருடை அணிந்து அறிவியல் பயணம் மேற்கொண்டு வனாந்தர முகாம்களில் வலம் வந்த மேரி வேறு. இரண்டு அவதாரங்களும் ஒன்றுக்கொன்று சற்றும் பொருந்தாதவையாகும்.

மும்பைக் கழகம் எனது 75ஆவது பிறந்தநாள் (12.11.71) நினைவாய் தனது இதழில் ஒரு சிறப்பு மலர் வெளியிடத் தீர்மானித்தது. அதன் ஆசிரியப் பொறுப்பை ரிப்ளி இசைவோடு ஏற்றுக்கொண்டார். உலகளவில் எங்கள் சகாக்களுள் பறவை யியலாளர்கள், நண்பர்கள் ஆகியோரிடமிருந்து அதற்கான கருத்துரைகளை வாங்கிச் சேர்க்க ஒப்புக்கொண்டார். அந்தச் சிறப்பிதழில் என்னைப்பற்றி தாராளமாக ஒரு முன்னுரையும் இருந்தது (இச்சிறப்பிதழ்க் கட்டுரைகள் பின்னர் ஆக்ஸ்போர்ட் யுனிவர்சிட்டி பிரஸ் வெளியீடாக 'சிறகுகளின் தொகுதி' என்று நூல் உருவில் 1978இல் வெளியாயிற்று). இம்முன்னுரை தவிர நகைச்சுவை ததும்ப செய்யுள் வடிவில் ஒரு சொல்லாரமும் ரிப்ளியின் படைப்பாக சேர்க்கப் பட்டது. அது அமரத்துவம் பெறுவதைத் தவிர்க்க முடியாது! அதையும் இங்கு தருகிறேன்.

### சாலிமின் 77 ம் பிறந்தநாளுக்கு ஒரு ராகமாலிகை
### 12.11.1973 பூட்டான் முகாம்

வாக்கான், ரண் முதல் கீழைக்கடற்கரையும் கண்டியும் தாண்டி
அடைமழையானாலும் எரிக்கும் வெயிலானாலும்
சுற்றுலா மாளிகைகளிலும் சத்திரங்களிலும்
பறவைகள் உள்ள இடமெல்லாம்
இந்த அஞ்சலி பாயும் உம் செவிகளிலே!
சாலிம் எங்கள் மனிதன், சாலிம் எங்கள் நாயகன்,
தொட்டாலே அறிவுதரும் மேதை
ரென்களின் சிம்மசொப்பனம்,
பின்னுக்கும் பாயாக்குருவிக்கும் தோழன்
அவன்பெரிய ஆள்
அலகு பிளந்த ரென்களின்
ஆனந்தம் ட்ரோகோபன்களின் துயரம்
பாடும்சிட்டுகளின் பரவசம்! சிறுத்தையின் அச்சம்
பிளைவிட் ஆந்தைபோல் கூவுவோம்,
நீர்க்கோழிபோல் பாடுவோம்.

சதுப்புக்காடுகள் புதர்கள் சரியான குறுங்காடுகளில்
அரிய பறவைகள் வேட்டையாடுவார்கள்.
சாலிம்தான் சரியான மனிதன், சாலிம்தான் நாயகன்
சாலிமின் அறிவுதான் எவ்வளவு?
ரென்களின் சிம்ம சொப்பனம்
பின்பாயா ஆகியவற்றின் தோழன்
அற்புதமான ஆள் நம்ம சாலிம்.
காலகாலத்துக்கும் ஒளிரும் நந்தாவிளக்கவன் அறிவு
கண்டிப்பாய் நாம் அறிவோம் இதனை.
பிறந்தநாள் வாழ்த்துப் பாடுவோம்; மயில்களும்
மற்றபறவைகள் அனைத்தும் அதிகளவு இசைக்க
ஹாட்க்சனுக்கும் தெரியாது பேகருக்கும் புரியாது
கோல்டார்ட் இங்லீஷ் யார்தான் வாழ்வின் பொருளறிவார்
சாலிமை சரியாய் யாரறிவார்–பறவைகளின் சங்கீதம்
அவர் பிறந்த நாளையன்றோ இன்று கொண்டாடுகிறோம்.
சாலிமே நாயகன், சாலிமே நம்ம ஆள். அவர் ஞானம் அலாதி
ரென்களின் சிம்மசொப்பனம்;
பின்–பாயா ஆகியவற்றின் நேசன்
மெய்யாகவே அற்புதமான ஆள்.

அச்சுத்தொழில் அலங்கோல நிலையில் இருந்த அந்த நாளில் 1974 டிசம்பருக்கான கழக இதழ் 1976 மார்ச்சில்தான் வெளிவந்தது. இக்கவிதை என் 77ஆம் பிறந்த நாளன்று தில்லோன் ரிப்ளி கமுக்கமாக ஏற்பாடுசெய்த விருந்தில் புன்ட்ஹோலிங் மாநாட்டில் படித்தளிக்கப்பட்டது. பூடானில் நாங்கள் மேற்கொண்டதோர் பறவைப் பயணத்தின் உச்சகட்டமாக அமைந்தது அவ்விருந்து.

## ஜான்புர்டன் சான்டர்சன் ஹால்டேன்

அவரது இந்திய வாழ்வும் பணியும் மிகச்சொற்பகாலமேயாயினும் ஜேபிஎஸ். ஹால்டேன் அவர்களுடன் நட்புகொண்டு பணியாற்றும் வாய்ப்புக் கிடைத்தமை எனது பெரும்பேறாகும். அவர் மிகக்குறிப் பிடத்தக்க ஒரு மனிதர். உருவால் அறிவால் இரண்டினாலும் அவர் ஒரு மாமனிதர். எனது இன்னொரு நற்பேறு அவர் இந்தியா வருமுன்னரேயே இந்தியப் பறவைகளின் சுற்றுப்புற இயல் பற்றிய நூலை அறிந்திருந்தார். அது அவருக்குப் பிடித்துப்போய், சிறப்பாகப் பாராட்டியும் இருந்தார். தனது பொது உரைகளிலும், அறிவியல் மாநாடுகள் கருத்தரங்கங்கள் ஆகியவற்றிலும், அவர் அதுபற்றி வலிந்து

குறிப்பிட்டு பலபடப் பாராட்டி வந்திருந்தார். ஒரு லைலாகுலர் தவிர வேறு கருவிகள் எதுவுமே இல்லாமலே, உழைப்பும், ஊக்கமும் மட்டுமே கொண்டு எவ்வளவு சாதிக்க இயலும் என்பதற்கு ஓர் நல்லுதாரணமென அவர் அதனைப்பற்றி குறிப்பிட்டுவந்தார். வெளிநாடு சென்று திரும்பிய இந்திய விஞ்ஞானிகள்—குறிப்பாக அமெரிக்கா சென்று வந்தவர்கள்—பற்றிய அவரது கருத்து கடுமையானதாகவே இருந்து வந்தது. இங்கே (இந்தியாவில்) நுட்பக் கருவிகள் இல்லையென்று அவர்கள் புலம்பிக் கொண்டேயிருப்பதும், பெரும்பாலான ஆய்வாளர்களும், சோதனைச்சாலைகளும் நிகழ்த்தி வந்த சாதாரண தரத்தினதான பணிகளுக்கு அதுவே காரணமாக நியாயம் கற்பிக்கப்பட்டு வந்ததையும் கண்டித்தார். மேனாட்டு உயிரியல் வல்லுநர்களுக்குப் பொறாமை ஏற்படுத்தக்கூடிய அளவு ஆராய்ச்சி சாத்தியக் கூறுகள் இந்தியாவில் மண்டிக்கிடப்பதையும், அவர்கள் அதனைப் பயன்படுத்திக்கொள்ளாமல் தவறவிடுவதையும் அவர் செல்லுமிடமெல்லாம் சொல்லாமல் விட்டதில்லை.

ஜே.பி.எஸ்.ஸினுடைய நினைவாற்றலும், உணர்ந்து கொள்ளும் திறனும், முனைப்பான கவனமும் பெருமைக்குரியவை. அறிவியல் என்று முறையாக அறியப்படுகிற வேதியல், இயற்பியல், உயிரியல், மரபியல், உயிரியல் கணக்கீடு ஆகியவற்றில் மட்டுமன்றி மானிடஇயல், மானிடஇனங்கள் பற்றிய இயல், வானியல், தத்துவம், அதிலும் இந்து தத்துவம் ஆகியவற்றில் ஆழ்ந்தகன்ற பேரறிவாளர். நடமாடும் கலைக்களஞ்சியம். வானத்தையே ஒரு புத்தகம் போல் படித்து நட்சத்திரக் குழுமங்களையும் அவற்றில் அடங்கிய தனி விண்மீன்களையும் அவற்றின் சமஸ்கிருதப் பெயருடன் அறிமுகம் செய்யக்கூடியவர். பல தளங்களில் அவர் புரிந்துவந்த அறிவார்ந்த நடவடிக்கைகளுக்கிடையே, அறிவியல் ஆய்வுகள், அறிவியல் கட்டுரைகள் ஆகியவற்றுக்கிடையே, இன்றுவரை நடந்துள்ள கண்டு பிடிப்புகள், அறிவியல் கொள்கைகள், நிகழ்தகவுகள், ஆய்வுகள் பற்றியும் ஆழமாகத் தெரிந்துவைத்துக்கொண்டு—அதுவும் அறிவியலில் மட்டுமன்றி மானிடஇயல் கலைகளிலும் அவற்றை இணைத்து சிந்தித்து விவாதிப்பதிலும் விபரமாக விளக்குவதிலும் அவருக்கிருந்த தேர்ச்சி என்னைப் பொறுத்தமட்டில் ஒரு அதிசயம் என்றே படுகிறது. லண்டன் பல்கலைக்கழக விலங்கியல்துறைத் தலைவரும் ஹால்டேனின் பிரபல சகாவுமான பேராசிரியர் சர். பீட்டர் மடாவர் ரோனால்ட் கிளார்க் எழுதிய 'ஜே.பி.எஸ்' என்ற 1968ல் வெளியான வாழ்க்கை வரலாற்று நூலின் முன்னுரையில் சொல்வார்: "கணிதம், இலக்கியக்கல்வி, தத்துவம், அறிவியல்,

இதழியல், படைப்பிலக்கியம் என்ற ஆறுதுறைகளில் எதை எடுத்திருந்தாலும் அதில் சிகரத்தைத் தொட்டிருக்கக்கூடியவர் ஹால்டேன். உண்மையில், இவையனைத்திலும் அவர் இணையற்றவராய் விளங்கினார். அவரது வாழ்க்கைச் சித்திரத்தை கவனித்தால் அவர் அரசியல், நிர்வாகம் (ஓ! முடியவே முடியாது), நீதித்துறை, இன்னும் சொன்னால் எந்தவித விமர்சன இயலிலும் பிரகாசித்திருக்க மாட்டார். ஆனால், இறுதியாக அவர் தனது தலைமுறையை வேறெவரிலும் அதிகம் பாதித்த 3–4 உயிரியல் மேதைகளில் ஒருவராகப் பரிணமித்தார்.

அடர்ந்த புருவம், பெரியதலை, அழகற்ற உருவம் ஆகிய புறத்தோற்ற அம்சங்கள் புதியவர்களுக்கு ஒரு கவர்ச்சியின்மையை ஏற்படுத்துமளவு பொய்மையானவை. முட்டாள்களையும், எத்தர்களையும் சகித்துக்கொள்வது அவரால் இயலாத ஒன்று. அதை சம்பந்தப்பட்டவர்களுக்கு பட்டவர்த்தனமாக தெளிவாக்கிவிடுவார். ஆனால் உண்மையிலே தெரிந்துகொள்ள விரும்பும் இளைஞர் களிடம்—அதுவும் அவர்களது ஆர்வம் உண்மையாக இருக்கும் பட்சத்தில்—அவர்களிடம் ஏராளமான பொறுமையும், மென்மையும், பரிவும் காட்டிப் பழகுவார். அவர்களுக்கு உதவுவதற்காக எவ்வளவு சிரமமும் தியாகமும் மேற்கொள்ளவும் தவறமாட்டார்.; எவ்வளவு காலம் செலவிடவும் தயங்கமாட்டார். கல்கத்தா இந்திய புள்ளியியல் நிறுவனத்தில் பேராசிரியராக இருந்த காலத்தில் அப்படித்தான் பல கூர்மையான இளைஞர்களை இனங்கண்டு, அவர் "முட்டாள் தனமான சோதனைகள்" என்றழைத்த ஆய்வுகளை நடத்த உற்சாகப்படுத்தினார். தோல்வி வாய்ப்புகள் தெளிவான ஆய்வுகளைக் கூட நடத்த வைத்து, அவற்றில் சிலவற்றின்மூலம் சிலசமயம் எதிர்பாராத உண்மைகளையும் பயன்களையும் கொண்டுவந்து, அவர்களை தன்னிச்சையான அறிவியல் மேதைகளாக மலரச் செய்தார்.

1961இல் இரண்டாம் எலிசபெத் ராணியின் இந்திய வருகை திட்டமிடப்பட்டபோது இந்தியாவில் அவர் காணவேண்டிய இடங்கள் யாவை என்று அரசு அவரது கருத்தினைக் கேட்டபோது, "மேதகு ராணியார் நமது மாபெரும் இயற்கையியல் மேதை சாலிம் அலியைக் கலந்துகொண்டு இந்தியப் பயணத்தை தாமே விருப்பம் போல் திட்டமிடமுடியும் என்றார். சில்க்கா ஏரி (ஒரிசா) காசிரங்கா (அசாம்), சாம்பர் ஏரி (ராஜஸ்தான்) ஆகிய இடங்களுக்குச்சென்று வரலாம். வேட்டை நிகழ்ச்சிகள் இல்லாதிருத்தல் நலம். உயிரினங் களை மதிக்கும் கோடிக்கணக்கான இந்தியர்களிடையே ராணியார்

ஒரே முயற்சியில் நேசத்துக்குரியவராகிவிடலாம். ஷாஜஹான் இப்படித்தான் அவர்கள் நேசத்தை வென்றார்". என்று பதில் எழுதினார்.

மனித மரபணு இயல் குறித்து உலகளாவிய மாநாடு ஒன்று 1961 மே மாதத்தில் இத்தாலியில் நடந்தது. அதிலிருந்து திரும்பியதும் மனந்திறந்த ஒரு கடிதத்தில், "இத்தாலிய சங்கம் எனக்கு பூதாகரமான பரிசை அளித்துள்ளது-ஒரு லட்சத்து அறுபதினாயிரம் ரூபாய். அநேகமாக என்னைவிட நீங்களே இதற்குரியவர். உயிரியல் நிபுணராவது உங்களுக்குக் கடினம். எனக்கோ என் தந்தையாரின் உதாரணம் என்முன் இருக்கிறது. நீங்கள் ஏதும் உயிரியல் பணியில் உங்களுக்கு வாய்ப்பு கிட்டுமானால் உங்களுக்குப் பணம் தேவைப் பட்டால் நான் இதில் சில ஆயிரங்களை ஒதுக்குவேன்" என்று கூறியது என் நெஞ்சைத் தொட்டது.

சிங்கப்பூரில் 1958இல் மலேயா பல்கலைக் கழகம், டார்வின் வாலஸ் ஆகிய விஞ்ஞானிகளின் நூற்றாண்டையும் லினாவ் எழுதிய சிஸ்டமா நேச்சுரே (இயற்கையின் அமைப்பு) என்ற நூலின் பத்தாம் பதிப்பின் இருநூறாம் ஆண்டையும் கொண்டாடும் வகையில் ஒரு மாநாடு ஏற்பாடு செய்தது. அதில் தலைமை ஏற்க ஹால்டேன் அழைக்கப்பட்டிருந்தார். அதில் ஒரு ஆய்வுக்கட்டுரை படிக்குமாறு என்னை வலியுறுத்தியிருந்தார். நானும் 'சில இந்திய நேசவுப் பறவைகளின் இனப்பெருக்க உயிரியல்' என்ற கட்டுரையைப் படித்தேன். அவர் "இயற்கையின் தேர்ச்சி கொள்கை"யின் இன்றைய நிலைபற்றி நிகழ்த்திய உரை அவையினரை வாயடைத்துக் கேட்க வைத்தது. தாம் ஏற்றுக்கொண்டிருந்த இந்திய உடையில்–சுருக்கம் நிறைந்த வெள்ளை பருத்தி ஜிப்பா, தொளதொள பைஜாமா, காலுறையில்லாத நீண்ட காலில் பட்டாணிகளின் காலணி—என்பதுதான் அந்த அலங்காரம். ஒரு வெள்ளையர் தலைவர் இந்திய உடையுடன் ஆசனத்தில் அமர்ந்ததை, அவையிலிருந்த வெள்ளைக்கார 'பிரபு'க்கள் (அவர்கள் சூட், கோட், அணிந்த 'சரியாக' உடுத்திய கனவான்கள்) நக்கலான சிரிப்புடன் அங்கீகரித்தனர். உயிரியல் கணிதம் (பயோமெட்ரி) கருத்தரங்கில் அவர் செய்த ஒரு செயல்தான் அனைவரையும் அதிரடியாக வியப்பிலாழ்த்தியது. ஒரு பேச்சாளரை இவர் அறிமுகப்படுத்தினார். அவர் பேசத்துவங்கியதும் இவர் (ஹால்டேன்) மேடையிலிருந்து இறங்கி அவையோருடன் முதல் வரிசையிலமர்ந்து கொண்டார். உரையில் கணக்குகளும் புள்ளி விபரங்களும் மண்டிக்கிடந்தன. கீழே வந்த ஹால்டேன் பள்ளிக்கூட பெஞ்ச் போன்ற ஆசனத்தில்,

முழங்கை அந்த பெஞ்சில் படிய தலையைப் பிடித்துக்கொண்டு, அதே நிலையில் அசையாமல் கண்ணை மூடியபடி அமர்ந்திருந்தார். பத்து நிமிடத்துக்கு மேலாயிற்று. பேச்சாளர் புள்ளி விவரத்தின் மேல் புள்ளி விவரமாக அடுக்கிக்கொண்டே போனார். நாங்கள் ஹால்டேன் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறார் என்று நினைத்தோம். (உண்மையில் அந்த உரை எங்களில் பலருக்கு தாலாட்டாகத்தான் இருந்தது.) அவையோர் ஒருவருக்கொருவர் ஹால்டேனைக்காட்டி சிரித்துக் கொண்டிருந்தனர். திடீரென சிங்கம் உயிர்பெற்றெழுந்து பேச்சாளர் கூறுவதில் ஒரு பிழை இருக்கிறது என்றது. இந்த விபரம் இத்தனை, அந்த விபரம் அத்தனை என்றால் பேச்சாளர் குறிப்பிட்ட எண்ணிக்கை வராது என்றது. பேசிக்கொண்டிருந்தவர் தட்டுத் தடுமாறி தர்மசங்கடத்துடன் அவசரமாகக் கணக்கிட்டுப் பார்த்து விட்டு பரிதாபமாக ஹால்டேன் சொல்வது சரிதான் என்று ஒப்புக் கொண்டார். தலைவர் தூங்குகிறார் என்று நினைத்துக் கொண்டிருந்த அவையினர் அதையே ரசித்துக் கொண்டிருந்த நேரமெல்லாம் அவர், புள்ளிவிவரங்களை மனக் கணக்காக சரிபார்த்துக்கொண்டு இருந்திருக்கிறார்! அவரது கவனத்திறமைக்கு அது ஒரு பிரமாதமான எடுத்துக்காட்டு. ஏளனம் செய்தவர்கள் நாணித் தலைதாழ்ந்தனர்.

களத்தில் இரு இளம் விஞ்ஞானிகளை பராமரிக்க ஒரு சிறிய அளவு நிதியுதவி கேட்டு அறிவியல் தொடர்பான அலுவலகங் களுக்கு நான் எழுதியிருந்தேன். அதற்கு பதில்தரவே அவர்கள் ஏகப்பட்ட காலமெடுத்துக்கொண்டதை அறியநேர்ந்து அவர் எழுதிய கடிதத்தைப் பாருங்கள்: "பாரக்பூர், மே 2, 1962. ஒரு ஆர்வமுள்ள இளைஞனுக்கு உதவ உங்களுக்கு சுமார் 3000 ரூபாய் தேவைப் பட்டால் என்னைக் கேட்டிருக்கலாமே! இல்லை என்று சொல்வதைக்கூட நான் தாமதமில்லாமல் சொல்லியிருப்பேனே!" இதுதான் அவருக்கே உரிய தாராள மனப்பான்மை.

## ரிச்சர்ட் வாட்கின்ஸ் பர்ட்டன்

லெப்டினென்ட் கர்னல் ஆர். டபிள்யூ பர்ட்டன், அவரது 5 அண்ணன்கள், 3 தம்பிகள் அனைவருமே ராணுவ அதிகாரிகள் என்பது சுவராஸ்யமான விஷயம்! அவர்களில் நால்வர் (ஐவரோ?) தந்தையார் ஜெனரல் ஈ.எப். பர்ட்டன் அடிச்சுவட்டில் இந்தியத் தரைப்படையில் பணிபுரிந்துவந்தனர். அவர் புலிவேட்டையில் பெரும் விற்பன்னர். ரிச்சர்ட் பர்ட்டனைப் பொறுத்தவரை, 1891இல் இளங்கன்றாக மும்பை கழகத்தில் சேர்ந்த ஆரம்ப நாட்களான

இளம்பருவம்தொட்டே அவர் ஒரு துணிவுமிக்க வேட்டைக்காரராகப் பரிணமித்தவர். ஆட்கொல்லிப் புலிகள், சிறுத்தைகள். அடிப்பட்ட புலிகள், ஆகியவற்றுடன் பல சாகசப்போர்களில் ஈடுபட்டவர். ஒருமுறை அடிபட்ட கரடி ஒன்று இவரை சரியாகப் பதம்பார்த்து விட்டது. உன்னதமான வேட்டைக்காரர்கள் வேறு பலரைப் போலவே இவரும் பின்னாளில் வனவுயிர் பாதுகாப்பில் ஈடுபாடு கொண்டார். இளமையில் வேட்டையில் எவ்வளவு உற்சாக வெறியுடன் ஈடுபட்டாரோ அதே அளவு தீவிரத்தை வனவுயிர் பாதுகாப்பிலும் ஈடுபாடு கொண்டார். நாடு 1947இல் விடுதலை பெற்றது. துப்பாக்கி முதலிய ஆயுதங்களின் மீதான கட்டுப்பாடு தளர்த்தப்பட்டது. சட்டம் ஒழுங்கு பராமரிப்பு தொய்வுற்றது. சூழல் பாதுகாப்பு உணர்வு மிகுந்தவர்களாயிருந்த வெள்ளைக்கார வனத்துறை அலுவலர்களும் நிர்வாக அலுவலகர்களும் (பெரும் பாலானவர்கள்) இந்தியாவிலிருந்து போய்விட்டனர். ஆக இந்தியாவின் வனவுயிர்களின் கேடுகாலம் துவங்கிவிட்டது. வனத் துறையின் குறைக்கப்பட்ட எண்ணிக்கையிலான இந்திய அலுவலர் களின் கையில் சட்டபூர்வமாக வனவுயிர் பாதுகாப்பு என்பது துவக்ககாலம் தொட்டே ஒப்படைக்கப்பட்டது. ஆனால், அவர் களிலும் ஒரு சிலருக்கே அப்படி ஒப்படைக்கப்பட்ட வனவுயிர்ப் பாதுகாப்பு பற்றிய அறிவோ, ஆர்வமோ இருந்தது. வனத்துறை மூலம் அரசின் வருமானத்தை அதிகரிப்பதையே தமது முக்கியப் பொறுப்பாக நினைத்த அவர்களின் மனதில் வனவுயிர்கள் கடைசி இடத்தையே பெற்றன. இது ஒரு தண்டச்சுமை என்று எண்ணியவர்கள்கூட உண்டு. நாட்டுப்புறத்திலும் காட்டுப்புறத்திலும் வனவுயிர்கள் பயங்கரமான வேகத்தில் குறையத்துவங்கின. சில இனங்கள் அழிவின் விளிம்புக்கே போய்விட்டன.

இந்த காலகட்டத்தில்தான், ராணுவப் பணியிலிருந்து ஓய்வு பெற்று பெங்களூரில் வாழ்ந்துவந்த கர்னல் ரிச்சர்ட் பர்ட்டன் வனவுயிர் பாதுகாப்பை மக்கள் கவனத்துக்கும் அரசின் கவனத் துக்கும் கொண்டுவர முனைப்பாக முயன்றுவந்த மும்பை கழகத்தின் முயற்சிகளுக்கு அதன் ஆலோசகர்களில் ஒருவராகவும் இருந்த வகையில் தனது நீண்ட அனுபவத்தையும் ஈடுபாட்டையும் முழுதாக ஒப்புக்கொடுத்து உதவ முன்வந்தார். (நான் விரும்பு கிறேனோ இல்லையா என்ற பேச்சே இன்றி என்னை அப்போது கழகத்தின் செயலராக ஆக்கியிருந்தார்கள்.) நாங்கள் கையாண்ட முக்கியமான வழிகள் உள்ளூர் செய்தித்தாள்களில் விஷயம் அறிந்தவர்களின் கட்டுரைகளைத் தெரிந்து ஏற்பாடு செய்வது,

அறிவை வளர்க்கும் துண்டறிக்கை வெளியிடுதல், சம்பந்தப்பட்ட அமைச்சர்கள், அலுவலர்கள் ஆகியோருக்கு நேரடியாக எழுதுவது ஆகியனவாம். நாடெங்கிலும் கருணையேயில்லாத வண்ணம் வனவிலங்குகள் கொல்லப்படுவதுபற்றி ஒரு உணர்வுமில்லாதிருந்த மக்களிடையேயும் அரசிடத்திலும் ஒரு அக்கறையை உருவாக்குவதே எங்கள் தலையாய நோக்கமாயிருந்தது. வனவுயிர்களின் நல்வாழ்வுக்கு வழிசெய்யும் வண்ணம் இந்திய வனவுயிர் வாரியம் அமைக்கப்பட்டதற்கான பெருமை முக்கியமாக மும்பைக்கழகம், சுதந்திர இந்தியாவின் முதல் தலைமை அலுவலராக இருந்த எம்டி சதுர்வேதி, இந்திய உயிரியல் கழக நெறியாளராக இருந்த எஸ்எல். ஹோரா போன்ற காப்புணர்வு கொண்ட உயரதிகாரிகள், அரிதாய் இருந்த சில இயற்கையியல் வல்லுநர்களும், வேட்டைக்காரர்களுமான தனிப்பட்ட சிலர், முக்கியமாக விற்பன்னர்களான (இந்தியாவில்) தங்கிவிட்ட பர்ட்டன், மோரிஸ், ஈ.பி.ஜி. போன்ற வெள்ளைக்கார வேட்டை நிபுணர்கள், வலுவான ஆதரவளித்த பிரதமர் நேரு ஆகியோரைச் சேரும்.

மும்பைக் கழகத்தின் பொன்விழாவில் (1933) அதன் அருங் காட்சியகக் காப்பாளர் பிராட்டர் 'இந்திய வனவிலங்குகளும் அவற்றைக் காப்பாற்றுவதில் உள்ள சிக்கல்களும்' என்ற பொருளில் நிகழ்த்திய பேருரை வனவுயிர் பாதுகாப்பு இயக்கத்துக்கு வலுவான ஒரு ஊக்கத்தை ஏற்படுத்தியதுடன் மக்களிடையேயும் வனவுயிர்கள் பற்றிய ஆர்வத்திலும் புதுவிழிப்புணர்வை ஏற்படுத்தி பொறுப்பையும் ஈடுபாட்டையும் உருவாக்கியது. மத்திய அரசு 1935இல் தில்லியில் அனைத்து மாநிலங்களுக்கு இடையிலான உயர்மட்ட மாநாடு ஒன்றை ஏற்பாடு செய்யவைத்தது. நாட்டுப் புறத்திலும் காட்டுப் பகுதிகளிலும் விலங்குகள் பாதுகாப்புக்கான நடைமுறைப் படுத்தக்கூடிய பல பரிந்துரைகளை அம்மாநாடு தொகுத்துத் தந்தது. அவற்றில் முக்கியமான சில பரிந்துரைகளை நடைமுறைப் படுத்த நெடிய காலம் தேவைப்பட்டது. இந்திய வனவிலங்கு வாரியம் அமைக்கப்பட, (1951) விடுதலையடைந்தும் சில ஆண்டுகள் பிடித்தது. நமது பாரம்பரிய வனஉயிர் பாதுகாப்புப் பணியை நிறைவேற்றுவதற்கு சரியான அணுகுமுறைகளையும், கொள்கை களையும் அரசுக்கு அறிவுறுத்தும் பணி அதன் பொறுப்பாக்கப் பட்டது. கர்னல் பர்ட்டன் தனது நெஞ்சுக்குகந்த (வனஉயிர்) சேவையில் ஆற்றிய மிக முக்கியபணி, சட்டப்பூர்வமாகவும் நடவடிக்கைகள் மூலமும் இந்தப் பேணிக்காக்கும் வேலையை செய்ய வேண்டியதன் அவசியத்தை விளக்கும் 'இந்தியாவில் வனவுயிர்

பேணுதல்-மறைந்துவரும் இந்தியச்சொத்து' என அருமையாக எழுதப்பட்டு பரவலாக வெளியிடப்பட்ட சிற்றறிக்கை ஆகும். அடிப்படையான, காலத்தின் தேவைக்கேற்ற நல்விளைவுகளை ஏற்படுத்திய அவரது பல பணிகளில் தலையாயது அது.

## எட்வர்ட் பிரிட்சர் ஜீ

அஸ்ஸாமில் நீண்ட நெடுங்கால தேயிலைத் தோட்ட நிர்வாகத் துக்குப்பின் ஓய்வுபெற்று ஷில்லாங்கில் வாழ்ந்துவந்த எட்வர்ட் பிரிட்சார்ட் அஸ்ஸாமிலேயே மிகச்சிறந்த தனியார் நந்தவனங்களில் ஒன்றை அங்கு உருவாக்கினார். கிட்டத்தட்ட முழுதுமே அவர் தனியாளாக காடுகளில் சேகரித்த செடிகளால் உருவாக்கிய பூங்கா அது. தோட்டக்கார முதலாளியாயிருந்த ஆரம்பகால நாட்களில் இந்த இளைஞர் அருமையான வேட்டைக்காரர். அருமையான இயற்கையியலாளர், தீவிரமான மீனவர்! இறுதிவரை மீன்பிடிப்பதில் ஆர்வம் தொடர்ந்து இருந்துவந்தது. முதன்முதலில் 1948இலோ சற்று முன்பின்னாகவோ நாங்கள் சந்தித்தோம். அஸ்ஸாம் கவர்னராக அப்போது விளங்கிய சர். அக்பர் ஹைதரி (இளையவர்) அழைப்பின் பேரில் காசிரங்கா சரணாலயத்தில் காண்டாமிருகங்களின் எண்ணிக்கையைக் கணக்கிடும் பணியின்போது அந்த சந்திப்பு நிகழ்ந்தது. எட்வர்ட் அப்போதே வேட்டையாடுவதை சுத்தமாக நிறுத்திவிட்டு அதே தீவிரத்தோடு வனவுயிர் புகைப்படக்கலையில் இறங்கியிருந்தார். மிகவிரைவில் அத்துறையில் விற்பன்னருமானார். கர்னல் பர்ட்டன், மோரிஸ் ஆகியோருடன் வனவுயிர் பாதுகாப்பில் அவரும் முழுமூச்சுடன் இறங்கினார்.

பரத்பூரில் 1957இல் இவரைச்சந்தித்த(தை) தன் நாட்குறிப்பில் திரு. லோக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்:

> நன்றாக தடித்த மனிதர். வழுக்கை விழத்துவங்கிவிட்டது. ஆமை ஓட்டு மூக்குக் கண்ணாடி அணிந்தவர். பிரவுனிங் எழுதிய கவிதையில் வரும் பறவைபோல் எதையும் இருமுறை சொல்பவர். முதல் தொடரை இடித்துப் புடைத்துக்கொண்டு இரண்டாவது தொடர் வரும். "குடிதண்ணீர், குடிதண்ணீர்", "அவனுக்கு சலித்துப்போயிற்று அவனுக்கு சலித்துப் போயிற்று" ஆகையால் "சுட்டுக்கொண்டு செத்தான். சுட்டுக் கொண்டு செத்தான்" காதுகேட்காது. இருமுறை கூறுவதற்கு இதுவே காரணமாயிருக்கலாம். சாலிமும் சரியான செவிடு. இருவரும் பேசிக்கொள்ளும்போது -ஒன்று காதைக் கிழிக்கும்

கத்தல், மற்றதுசலிப்பூட்டும் ஈனஸ்வரம்—அதைப் புரிந்து கொள்வதில் உலகத்தவர்க்கு சிரமம் ஏதும் இருந்ததில்லை.!

இரண்டாம் உலகப்போரின்போது போர்ப்பணிக்கு தன்னை அர்ப்பணித்துக்கொண்டார். தோட்டத் தொழிலாளிகளை மேய்த்த அனுபவத்தை வைத்து பின்னாளில் புகழ்பெற்ற பர்மா சாலையின் ஒரு பகுதியை உருவாக்கிய பயோனீர் அணியில் அவரை நியமித்தார்கள். ஜீ என்ற பெயரிலேயே இன்னொருவர் அதே சாலைப்பணியில் சில மைல் தொலைவில் பணியாற்றினார். இதனால் அதிகாரிகளுக்கு குழப்பமேற்படவே, பேசுவதில் ஆர்வங் கொண்ட நமது ஜீ அவர்களை 'சாட்டர்-ஜீ என்று சரியான செல்லப் பெயரால் அழைத்தனர்!!

மும்பை கழகத்தின் புலம்பெயர் பறவைகள் திட்டம் தொடர்பாக 1961இல் நான் கிழக்கு இமாலயப் பகுதிகளில் இடங்களை தேர்ந்தெடுப்பதில் முனைந்திருந்தேன். மத்திய ஆசியாவிலும் அதற்கு அப்பாலுமிருந்து வரும் போகும் பறவைகள் பற்றி ஆராய சியாங் எல்லைப் பகுதியிலிருந்த வட்டமான கிண்ணம் (போணி) போன்ற நில அமைப்பு கொண்ட டுட்டிங் பகுதி மிகவும் சிறந்தது என்று அங்கு 1959இல் துணை அரசியல் அலுவலராக இருந்த என்.டி. ஜயால் கூறியிருந்தார். என்னோடு அங்கு வர ஜீ மகிழ்வோடு சம்மதித்தார். பி.எஸ்.எஸ். என்று கூறப்படும் துளைபோட்ட உருக்குத்தகடுகள் கொண்ட விமானங்கள் வராத காலத்தில், போருக்கு முந்தைய நாட்களில் அரசாங்க தலைமையகமான பாசிகட் என்னும் ஊரிலிருந்து டுட்டிங் போக 14 நாட்களாகும். அதுவும் கால்நடையாகவே ஏறி இறங்கிப்போக வேண்டும். அடர்ந்த காடுகள், செங்குத்தான மலைகள் செறிந்தசாலை. 1961இலோ நாற்பதே நிமிடம்! ஒரு சரக்கு விமானத்தில் அரிசி மூட்டை, பருப்புமூட்டை, கோதுமை மாவு மூட்டை ஆகிய சாக்குகளின் மீதும் மண்ணெண்ணெய் டின், பெட்ரோல் டப்பா, எண்ணெய் டின் ஆகிய சகபயணிகளோடும் நாற்பது நிமிடப் பிரயாணம்! சில ஆடுகள் உயிரோடு! கொஞ்சம் ஆட்டுக்கறியும் இருந்தது. அந்த டக்கோட்டா விமானத்தின் வயதான களைத்த கதவுகள் திறந்தே இருந்தன! காற்று வீசியடித்துக்கொண்டிருந்து. கீழே முடிவேயில்லாது தொடர்ந்து வந்துகொண்டிருந்த செங்குத்தான குன்றுகள், புதர்கள், ஆயிரக்கணக்கான அடிகள் கீழே அச்சுறுத்தும் மலையிடையான இடுக்குகள். ஆக மிக விறுவிறுப்பானதோர் பயண அனுபவம் அது. அதேசமயம், பனிமூடிய பிரம்மாண்டமான

மலைகள் குறுகலான அந்தப் பாதையின் இருபுறமும் தொடர்ந்து அமைந்து, மனஅமைதியின் விளிம்பைக் காட்டியதையும் குறிப்பிடத்தான் வேண்டும். இலையுதிர் கால புலம்பெயர் பறவைகளைக் காண நவம்பர் இறுதி தாமதம்தான். எப்படியும் நீண்டநெடுந்தொலைவும் துணைக் கருவிகளில்லாத குறையும் டுட்டிங் பகுதியில் வளையம் கட்டுவதை இயலாத பணியாகத்தான் ஆக்கப் போகின்றன. நாங்கள் அங்கு போய்வந்த சில வாரங்களிலேயே சீனபூதம் அந்தப் பகுதியை ஆக்கிரமித்து நமது எல்லையில் முதல் போரை துவக்கிவைத்தது.

சீனர்கள் நம் எல்லைக்குள் நுழைந்து நமது பலத்தையும் தயார் நிலையையும் உளவுகாணத் துவங்கிய அந்த காலத்தில் வளையம் கட்டும் திட்டம் சரிப்படுமா என்று பார்க்க ஜதிங்காவுக்கும் போயிருந்தோம். இங்கும் நவம்பர் அந்த மாதிரி வேலைகளுக்குரிய காலமல்ல. ஜதிங்கா, வடக்கு கச்சார் மலைப்பகுதியில் ஒரு சிற்றூர். அண்மைக் காலங்களில் பறவைகளின் "கூட்டமான தற்கொலை" குறித்து பலவிதமான செய்திகள் அடிபட்ட அதே ஜதிங்கா பகுதிதான். அந்த தற்கொலைகள் பத்திரிகையாளர்கள் திரித்த கயிறுதான்! ஏதோ கும்பல் கும்பலாக பறவைகள் ஒரு குறிப்பிட்ட காலத்தில் தற்கொலை செய்துகொள்வதாக பத்திரிகைகள்தான் கதைவிட்டன. எங்களுக்கு உள்ளூர்காரர்கள் கூறிய விபரம் வேறு விதமானது. தென்மேற்கு பருவக்காற்று வீசும் காலத்தில் நிலவில்லாத இரவுகளில் குறிப்பிட்ட வானிலை நிலவும் சமயங்களில், முகில்கள் சூழ்ந்த காடுகளில், லேசான மழைதூறும் பொழுதுகளில், பனி பொழியும் அந்த வித்தியாசமான நிலையில் இலையுதிர்காலம் புலம்பெயர் பறவைகளின் பயணத்துக்கு நேரெதிர் திசையில் பள்ளத்தாக்கு முழுதும் தெற்கத்திக்காற்று வீசுகையில், அங்கு அரங்கேறிய மாபெரும் சோகம் இவற்றைப் பிடித்து உணவாக்கிக் கொள்வதற்கான சதியாக இழிமன மானிடர்கள் இட்டு வைக்கும் விளக்குகளில் ஒளிதேடிவந்து மோதி பலப்பல பறவைக்குடும்பங்கள் விட்டில்கள்போல் மரணமடைவது தான் அந்த சோகம். இரவு மணி ஏழிலிருந்து ஒன்பது வரையும் அதிகாலை மணி இரண்டிலிருந்து நான்குவரையும் இதற்கு சரியான நேரங்களாகும். நட்சத்திரங்கள் இன்றி வானில் காரிருள் கவிழ்ந்திருக்கும் காலங்களில் புலம்பெயர் பறவைகளை ஒளியுமிழ் திபங்கள் கவர்வதில் அசாதரணம் ஏதுமில்லை. அவை எப்போதும் பின்பற்றும் தடங்களில் கலங்கரை விளக்கங்கள் உள்ள இடங்களிலெல்லாம் இது நிகழவே செய்கிறது. ஆனால்

ஐதிங்காவில் என்னைப்பொறுத்தவரை பாதிக்கப்பட்ட அம்சம் என்னவென்றால்—மரகதப்புறா (Chalcophas), மலைக்குயில் (Arboropliila), வெள்ளை மார்பு மீன்கொத்தி (Halcyon Smyrnensis), முதலிய பகல்நேரப்பறவைகள் காணப்பட்டதுதான். பொதுவாக அவை புலம்பெயர்பவை அல்ல. ஓரிடத்தில் நிலையாக வாழ்பவை. அதோடு சாதாரணமாக இரவில் பயணம் செய்பவையே அல்ல. ஆனாலும் தென்கிழக்காசிய நாடுகளிலும் சோவியத் யூனியனிலும் வளையம் கட்டப்பட்ட இத்தகைய 'நிலையாக வாழும்' பறவைகள் இந்தியாவில் பிடிபட்டபோது 'நிலைப்பறவை'களிலும் தொலை தூரப் பறவைகள்போல் ஒரு ஊர்சுற்றும் குணம் காணப்படமுடியும் என்பது புலனாயிற்று. இந்தப்பகுதிகளில் 'நிலைவாழ்பறவை'களுக்கு மிகப் பரவலான வளையம் கட்டும் திட்டத்தை நடத்திப் பார்த்தால் மேலும் அதிக உண்மைகளை உணர இயலும்.

ஈ.பி.ஜீ என்றழைக்கப்படும் எட்வர்ட் பீ.ஜீ. படித்த, பண்பான பிற்கால தோட்ட அதிபர்கள் வகையைச் சேர்ந்தவர். துப்பாக்கியை போட்டுவிட்டு புகைப்படக்கருவியை கையிலெடுத்த நாள்முதல் வனவுயிர் காப்புத்துறையில் அவர் நாட்டம் மலர்ந்தது. பதவி ஓய்வு பெற்றபிறகு அதுவே அவரது வாழ்வின் தாகமாயிற்று. உள்ளூர் நிலைகளை நேரடியாகக் காணவும் ஆராயவும் பல்வேறு தேசியப் பூங்காக்களையும் வனவுயிர் சரணாலயங்களையும் அவர் தன் செலவில் சென்று கண்டார். மும்பை கழகம் நடத்திய இதழிலும் ஓரிக்ஸ் இதழிலும் (ஓரிக்ஸ் இதழை புகழ்பெற்ற 'விலங்குகள் தாவரங்கள் பாதுகாப்பு சங்கம்' நடத்திவந்தது.) பிற பல அறிவியல் இதழ்களிலும் விரிவாகவும் ஆய்வுமுடிவுகளை விளக்கியும் பல கட்டுரைகள் எழுதினார். இந்திய நாளிதழ்களிலும் அடிக்கடி எழுதி இந்த இயக்கக் கொள்கைகளை மக்கள் முன்வைத்தார். ஒரு சமயத் தலைவரின் உறுதியோடு சூழல்காப்பு என்னும் செய்தியை தாமே தயாரித்த படங்கள், வானொலி உரைகள், ஆகியவற்றின்மூலம் பரப்பினார். சுயசிந்தனையுள்ள, சுயேச்சையாய் இயங்கிவந்த இயற்கையியலாளர் என்ற அளவிலும் இந்திய வனவுயிர் வாரிய உறுப்பினர் என்ற அளவிலும் அவரது வார்த்தை அரசு வட்டாரங் களிலும் மதிக்கப்பட்டது. காலின்ஸ் நிறுவன வெளியீடான 'இந்திய வனவுயிர்' என்ற 1964இல் வெளிவந்த இவரது நூலுக்கு பிரதமர் நேரு அருமையான முன்னுரை எழுதியிருந்தார். சாதாரண வாசகர் களுக்காக சுவையாகவும் கதைபேசும் நடையிலும் எழுதப்பட்ட இந்நூலை அவரே தேர்ந்தெடுத்த, அவர் எடுத்திருந்த, புகைப் படங்களும் அணிசெய்தன. இந்தியாவின் பெரிய விலங்குகள்

பற்றிய பல செய்திகளையும் கூறும் இந்நூல் பிரபலமாகவும் ஆயிற்று.

என்னைப்பொறுத்த மட்டில் இவர் என்னைப்புரிந்து கொண்ட நல்ல நண்பர். மும்பை கழகத்துக்கு அருஞ்சொத்து. அவர்கள் கேட்ட போதெல்லாம் எல்லா உதவிகளையும் இயன்ற வழியிலெல்லாம் செய்துவந்தவர். பல நேரங்களில் அதில் அவருக்கு செலவும் சிரமங்களும் இருந்ததைப் பொருட்படுத்தாதவர். அவரைப் போல இன்றும்பல உறுப்பினர்கள் இருந்தால்...! சுறுசுறுப்போடும் துடிப்பாகவும் பணியாற்றிக்கொண்டிருக்கும்போதே, அதுவும் அவரது தணியாத முயற்சிகளும் எந்த இயக்கத்துக்காகத் தன்னையே அவர் தந்திருந்தாரோ அந்த இயக்கப்பணிகளும் தம் விளைவாக நல்ல முடிவுகளைத் தர ஆரம்பித்த காலத்தில், அவர் காலமானது அவருக்கும் சரி, இந்தியாவின் இயற்கையையும் வனவுயிர்களையும் பேணிக்காக்கும் முயற்சிகளுக்கும் ஒரு வேதனையான விஷயமாகும்.

## ஹுமாயூன் அப்துல்அலி

தனது பால்யகால பள்ளிநாட்களிலிருந்தே ஹுமாயூன் எனது சமர்த்தான சீடர்களில் ஒருவனாயிருந்தான். அப்போதுதான் (1920களில்) நான் பர்மாவிலிருந்து தாயகம் திரும்பியிருந்தேன். என் மைத்துனர் ஹசனுடைய அண்ணா நிசாமுதீன் அப்துல்அலியின் மகன்தான் ஹுமாயூன். ஜப்பானில் வியாபாரத்தில் பிரமாதமாக வெற்றிகண்டு பிறகு மும்பைக்கு தமது தலைமையகத்தை மாற்றிக் கொண்டார் நிசாமுதீன். மரமடர்ந்த அமைதியான புறநகர்ப்பகுதி யாக அப்போது விளங்கிய அந்தேரியில் அவர் குடியேறியிருந்தார். சாதாரணப்பறவைகள் ஏராளமாக குடியிருந்த பகுதி அது. வனம் போல மரங்கள் மண்டிய அவர் வீட்டுத்தோட்டத்திலும் நிறைய பறவைகள் கூடுகட்டி வாழ்ந்து வந்தன. இங்குதான் ஹுமாயூனின் இயற்கையியல் பாலபாடங்கள் துவங்கின. பறவைமுட்டைகள், பாம்பு, பல்லி, தவளை மற்றும் சிற்றுயிர்களை சேகரிப்பான்! பறவைகளின் புதுவரவுகளையும், புதுக்கூடுகளையும் கண்டறிவதில் இவனுக்கு ஒரு விசித்திரமான துணை கிடைத்தது. முற்றிலும் வித்தியாசமான ஒரு வேலைக்காரி இருந்தாள். கல்வியே அறியாத கைநாட்டுப் பேர் வழியாயிருந்தாலும் பறவைகள் பற்றிய ஒரு விசித்திரமான ஈர்ப்பு இருந்ததால் அவளே தன்போக்கில் பறவைகளைத் தேடுவாள்.

பள்ளிப்படிப்பு முடிந்து புனித சேவியர் கல்லூரியில் முறைப்படி விலங்கியல் வகுப்பில் சேர்ந்தபோதே ஆர்வமும் ஆழ்ந்த

அறிவுமுள்ள ஒரு இயற்கையியாளனாக அவன் மலர்ந்துவிட்டான். குறிப்பாக பறவையியலில் அவனுக்கு ஆர்வமிருந்தது. மும்பையின் அண்டைப் பகுதிகளிலிருந்து தனது கல்லூரி அருங்காட்சியகத்துக் காக அருமையான பறவைகளை சேகரித்து அளித்திருந்தான். மும்பைக்கழக இதழில் 1936-7இல் வெளியான "மும்பை சால்செட்டி ஆகிய பகுதிகளின் பறவைகள்" என்ற கட்டுரையை நாங்கள் கூட்டாக எழுத அக்கட்டுரையும், 1924-29இல் திரட்டப்பட்ட என் சேகரிப்புகளும் அடிப்படையாக இருந்தன. ஹைதராபாதிலும் திருவாங்கூரிலும் நான் நடத்திய கணக்கீடுகளில் (1930-35) தன் நீண்ட கல்லூரி விடுமுறைகள் மூன்றை என்னோடு செலவிட்டான். முறையான பறவை சேகரிப்பு, களப்பணி ஆகியவற்றில், நடை முறையில் அவனது முதல் பாடங்கள் அங்கு துவங்கின. அவற்றை அவன் மிகச்சிறப்பாக பின்னர் வளர்த்துக்கொண்டான். களப்பணித் துணைவனாக யாரையும்விட பிரமாதமாக அவன் பரிணமிக்க அவனது ஆர்வமும் கற்பனையும் இணைந்த இயற்கையியல் அறிவும், கூர்ந்த பார்வையும், பகுத்தறிவும் சுயேச்சையான மனமும் உதவின. வேட்டைகளிலும் களப்பணி வனவாழ்விலும் அவன் ஓர் இனிய, உற்சாகப்படுத்தும், களிப்பூட்டும் சகா. இயற்கை வரலாற்றுக்கான பறவைகள் மற்றும் பிற பயில்பொருட்கள் சேகரிப்பில் நுண்ணறிவு கொண்ட அவன் அதில் அலுப்புறுவதேயில்லை. தனது 12 போர் துப்பாக்கி தயவில் அவன் சுடும் கலையில் நிபுணனாயிருந்தான். முகாம்களில் மாமிசத்துக்கு பஞ்சமேயிருந்ததில்லை. செங்குத்துப் பாறைகளில் உச்சியில் காணும் கழுகுக்கூடுகளில் ஏறுவது, குழிந்த பகுதிகளில் நூறடி உயரத்தில் ஐயத்துக்குரிய பலம்கொண்ட கயிற்றின் நுனியில் தொங்கியவாறு சில பறவைக்கூடுகளை ஆராய்வது போன்ற கரணம் தப்பினால் மரணம் என்கிற வேலைகளையெல்லாம் சில பறவைகளுக்காக செய்கிற அஞ்சா நெஞ்சன் அவன்.

மும்பை கழக செயலாளராகவும், மும்பை மாகாண வனவுயிர் அறிவுரை வாரியத்தில் கழக முகவராகவும் இருந்தபோது (1950-62) வனவளத்துறையுடன் இணைந்து மும்பை வன்பறவை வனவிலங்கு பாதுகாப்புச்சட்ட (1957) வரைவை உருவாக்குவதில் ஹுமாயூன் தீவிரமாக ஈடுபட்டிருந்தான். கடுமையான கூர்மைமிகு ஆய்வு முன்னேறிய பல மேலைநாடுகளில் இருந்துவந்த சட்டங்களை ஆய்ந்து நமக்கு ஏற்ப திருத்திக்கொண்ட திறமை ஆகியவைகளின் விளைவாக அச்சட்டம் மலர்ந்தது. சில சிறுமாற்றங்களுடன் பின்பு அதுவே மத்திய வனவுயிர் (பாதுகாப்பு) சட்டம் 1972க்கு முன்மாதிரியாக இருந்தது. இந்தியாவில் இதுகாறும் வனவுயிர்த் துறையில் ஒப்பற்ற

ஒரு சட்டமாக 1972 மத்திய சட்டத்தைக் கூறலாம். செயலர் என்ற பொறுப்பில் ஹுமாயூன் மேற்கொண்ட முயற்சிகளும் முனைப்புமே மைய அரசுடன் கழகத்துக்கான அலுவலகம், நூலகம், மதிப்பிடற்கரிய மாதிரிகள் ஆகியவற்றுக்காக கழகத்துக்கென்றே சொந்தமாக தனிக்கட்டிடம் பெறுவதற்கான பேச்சுவார்த்தைகளின் வெற்றிக்குக் காரணமாகும். இன்றும் அதற்கடையாளமாக ஹார்ன்பில் பவனம் திகழ்கிறது. பின்னாட்களில் இவனோடு ஒத்துழைத்துப் பணிபுரிவதென்பது எளிதல்ல என்கிற நிலை ஏற்பட்டமை அவனுக்கும் சரி அவன் நெஞ்சுக்கினிய நோக்கங் களுக்கும் சரி துரதிருஷ்டமே. அது அவனது பழைய சகாக்கள், ரசிகர்கள், நேயமிகு தோழர்கள் ஆகியோரிடையிலேயே அவனது மதிப்பைக் குறைத்தது. இல்லாவிட்டால் ஐயத்துக்கிடமற்ற அவனது திறமைகள் எவ்வளவோ ஆக்கப்பூர்வமாக பயன்பட்டிருக்கும்.

20

# அறிவியலார்ந்த பறவையியலும் வேட்டையும்

என் வாழ்வின் பிற்பகுதியில் நான் பறவைகளை நேசிப்பதால், யாராவது ஒரு பறவையைக் கொல்வதை—நான் கொல்வது என்ற பேச்சேயில்லை—நான் எதிர்த்துப் போராடுவேன் என்ற ஓர் எண்ணம் எப்படியோ மக்கள் மனதில் ஏற்பட்டுவிட்டது. உண்மைக்கும் இதற்கும் துளிக்கூட தொடர்பில்லை! இந்தத் தவறான கருத்தினால் நான் தர்மசங்கடங்களை சந்திக்க நேர்ந்திருக்கிறது. ஒரு பயனுமின்றிக் கொல்வதை நான் வெறுத்திருப்பது உண்மைதான். அது கலாசார நாசகாரச்செயல்; உயர்ந்த பட்ச கண்டனத்துக்குரியது. ஆனால் என் பறவைநேயம் மெல்லுணர்வுகளின்பாற்பட்டதன்று. அது அழகியல்–அறிவியல் சார்ந்தது. சில சமயம் நடைமுறை வாழ்வு சார்பானது. பறவையியல் கல்வியை அறிவியல் பூர்வமாக அணுக சில பறவைகள் உயிரிழக்க வேண்டியது தவிர்க்க இயலாததாகும். உயிர்கள் மடிவது எனக்கும் மகிழ்ச்சியளிக்கவில்லைதான். சில சமயம் மனச்சாட்சி உறுத்தவே செய்கிறது. ஆனால் ஒரு ஒழுங்குமுறையோடு நான் ஆரம்பகாலங்களில் உருவாக்கிய சேகரிப்புகளின்றி—பாவம், பல்லாயிரம் உயிரிழப்புகள்—இந்திய பறவையியலில் இத்தனை முன்னேற்றங்களை அடைதல் முடியவே முடியாதது என்பதிலும் எனக்கு ஐயமேயில்லை. எனது ஆரம்பகாலக் கணக்கீடுகளின் பங்களிப்பு முக்கியமானது. இந்தியப் பறவைகளின் சூழலியல் உடற்கூறியல், அவை பரவியிருந்த முறை, நிலஇயல் விபரங்கள் அனைத்துமே அந்த உயிரிழப்புகளின்றி ஆய்வுசெய்திருக்க முடியாத துறைகள்தான். அதே சமயம் இப்போது நாம் ஒரு நிலையை அடைந்து விட்டோம். இன்று அத்தகு உயிர்பறிப்புச் சேகரிப்பு அவ்வளவு தூரம் தேவையில்லை. ஒரு சில அரிய சூழல்களில் தவிர சிறகுதிர்த்தல் போன்ற நுட்பங்களை ஆராயும்போதும்,

நாட்டின் அறியப்படாத மூலை முடுக்குகளை ஆராயும்போதும், அருங்காட்சியகங்களிலும் கூட அரிதாக உள்ள சில உயிரினங்களை ஆராயும் போதும் மட்டும் இப்போதும் உயிர்க்கொலை தவிர்க்க முடியாதது. மும்பை சுழகத்திலும், இந்திய உயிரியல் கணக்ககத்திலும், வெளிநாடுகளிலுள்ள அருமையான காட்சியகங்களிலும் சாதாரண ஆய்வுகளுக்குத் தேவையான உயிரினங்கள் (இறந்தவை) கிடைக்கின்றன. உலக நாடுகளிடையான நல்லெண்ணமும், அறிவியல் மேதைகள் நிறுவனங்கள் இடையிலான இணக்கமான கூட்டுறவும், நேரத்தை சேமித்துவிட்ட விண்வழிப்பயணங்களும், சிரமங்களைக் குறைத்துவிட்டன. ஒப்பாய்வுகளுக்காக பொருட்களை கடன் வாங்குவதிலும் உள்ள சிரமங்களை இவை குறைத்துவிட்டன. கொஞ்ச காலம் முன்பு கூட பறவைகளைப் பயில்வது, வேலையற்ற பணக்காரர்களின் தொழில்; முறையற்ற நேரம் கொல்லும் பொழுது போக்கு என்றே எண்ணப்பட்டு வந்தது. அப்போது உயிரின அமைப்பியலும், தோல் இயலும் மட்டுமே 'அறிவியல்' அடிப்படை யிலான பறவையியலாக ஏற்கப்பட்டிருந்தன. அப்போதுகூட இயல்பான சூழ்நிலையில் உயிருள்ள பறவைகளைப்பற்றி கற்பதே எனது தலையாய ஆர்வமாக இருந்தது.

தோல் இயல்பற்றி நான் அலட்டிக்கொண்டதேயில்லை. முறையான கல்வியின் பகுதியாக பயின்றதோடு சரி. ஒதுங்கி நிற்கும் பார்வையாளனாக நானும் தோல்இயல் மேதாவிகளின் வாய்ச் சண்டையையும்—பல சமயம் மிக சூடாக இருக்கும்—பார்த்துக் கொண்டுதான் வருகிறேன். சிலசமயம் ஒருபுறமும் சாயாமல் வேடிக்கை பார்க்கிற மனநிலையிலும், சில சமயம் அப்பட்டமான மலைப்போடும் பார்த்துக்கொண்டு வருகிறேன். சிலர் மேதைகள், சிலர் போலிகள், சிலர் ஏட்டுச் சுரைக்காய்கள். அவர்கள் பார்த்த பறவையெல்லாம் அருங்காட்சியகத்தில் பதப்படுத்தி வைக்கப்பட் டிருந்த எப்போதோ இறந்துபோன பறவைகளின் உடல்கள்தான். மடை திறந்ததுபோல் அவர்களிடமிருந்து தன்னம்பிக்கையோடு வெள்ளம்போல் சொற்கள்–வெறுஞ்சொற்கள் வரும்போது எனக்கு

"அங்கோடுவார் இங்கோடுவார்
அடித்துக்கொள்வார் அணைத்துக்கொள்வார்
ஆட்டம் முடிந்தவுடன் அணியணியாய்
அடங்கிடுவார் (சவப்) பெட்டியிலே"

என்ற கவிஞர் உமர்கய்யாமின் வரிகள்தான் நினைவுவரும். ஆகமொத்தம் அநேக நேரங்களில் இவ்வளவுதான் கதை. முழுக்க சுற்றிவிட்டு முதல் கட்டத்திலேயே வந்து நிற்பவர்கள்தாம் நாம்.

இதில் எனக்கு விறுவிறுப்பேயில்லை. எல்லாம் எப்போதும் இப்படித்தான் நடந்து வந்திருக்கிறது, இப்படித்தான் நடக்கும் என்று அஞ்சுகிறேன். நல்லவேளையாக-குறிப்பாக இரண்டாம் உலகப் போரிலிருந்து-பழைய பறவையியல் கோட்பாடு மாறி, வாழும் பறவைகளுக்கும் அவற்றின் சுற்றுச்சூழலுக்கும் நடவடிக்கைக்கும் முக்கியம் தருவது ஆரம்பமாகிவிட்டது. அண்மைக்காலத்தில் பறவைக்கல்விக்கு அறிவியல் உலக அங்கீகாரமும் மக்கள் மன்ற மரியாதையும் அதிகரித்துள்ளது. 1973இல் உயிரியலுக்கான நோபல் பரிசுபெற்ற மூவரில் இருவர்—நிக்கோலஸ் டின்பர்கனும், கொன்ராட் லாரன்சும்—தம் ஆராய்ச்சி வாழ்வை சாதாரண பறவை ஆர்வலர்களாகத் துவங்கியவர்கள்.

“வேட்டையாடு, விளையாடு, வீரனாக நடைபோடு” என்ற வெள்ளைக்கார வாழ்க்கை முறை ஆதிக்கம் செய்த காலகட்டத்தில் பிறந்து வளர்ந்தவன் நான். மேல் நடுத்தட்டு இந்தியனுக்கு ஒரு சமூக கௌரவமாக இருந்த நாள் அது. வேட்டையில், அல்லது அதைப்பற்றிப் பேசுவதிலாவது ஒரு பயிற்சி இருக்க வேண்டியது கட்டாயம் என்றிருந்தது நிலைமை! அந்த மரபிலே நானும் என் அப்பா-மாமாவான அமீருத்தின் தியாப்ஜியின் ஊக்கத்தினாலும் போதனையினாலும் நல்ல துப்பாக்கிக்காரனாக உருவாகியிருந்தேன். அமீருத்தின் அந்நாளைய மேட்டுக்குடி சீமான்களிடையே மிகப் பழக்கமான மனிதர். வேட்டையில் பிரபலமான மன்னர்களோடும் நவாப்களோடும் மிக நெருக்கமான உறவு கொண்டிருந்தவர். அவரது பழகுவதற்கு இனியதன்மையும் வேட்டைத்திறமையும் உலகறிந்த செய்திகள். எனவே அவர்கள் தம் வேட்டை விழாக்களுக்கு அழைப்பதும் வாடிக்கையானதுதான். அவர் அடிக்கடி கூறிவந்த புலிவேட்டை பற்றிய கதைகளும் பெரிய வேட்டைக்கதைகளும் ஒரு உன்னதமான வேட்டைக்காரனாக வரவேண்டும் என்ற வெறியை என் இளம் மனதில் உருவாக்கி வளர்த்தன. பள்ளி மாணவனாக இருந்த நாட்களில் குளிர்கால விடுமுறைக்காக ஆவலுடன் காத்திருப்பேன். அதுதான் வேட்டைக்கான பருவம். வெளியூரிலிருந்து வரும் யாராவது ஒரு உறவினருடன் ஒட்டிக்கொள்வேன். குளிர்கால முகாமில் சென்றுகொண்டிருக்கும் மாவட்ட அதிகாரியாயிருந்தால் உத்தமம். அவர் தமக்காகவும் தம் விருந்தினருக்காகவும் வேட்டை நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்து கொள்வார். விடுமுறைக்கால மாணவனாக நான் வேட்டையாடியதெல்லாம் முயல்கள், குயில்கள், உள்ளான்கள், வாத்துகள், காடைகள் போன்ற சிற்றுயிர்கள்தான். முதல் உலகப்போருக்கு முன்பு இவையெல்லாம் ஏராளமாக

இருந்தன. இரண்டாவது உலகப் போர்வரைகூட—படிப்படியாகக் குறைந்து வந்தாலும்—கிடைத்துக் கொண்டிருந்தன. வேட்டைக்குப் போகும் இடத்தைப் பொறுத்து சின்காரா மான், கருமான், விராகமான், குரைக்கும் மான், பன்றி இப்படி ஏதாவது வேட்டையும் உண்டு. கிறிஸ்துமஸ் (விடுமுறைக்கு வரும்) விருந்தினர்கள், என் வயதொத்த பள்ளி செல்லும் என் ஒன்றுவிட்ட சகோதரர்கள் ஆகியோருடன் பகிர்ந்து கொள்வோம். இளைஞர்களான எங்களுக்கிடையே எத்தனை ரவுண்டு சுட்டதற்கு எவ்வளவு பறவை கிடைத்தது என்பதில் நேசமான போட்டிகள் வேறு. பையன்களுக்கு தோட்டாக்களை எண்ணிப் பார்த்துத்தான் கொடுப்பார்கள். எல்லாருமே சாதிக்க வேண்டும் என்ற வேகத்தில் இயங்குவார்கள்.

மும்பை மாகாணத்தில் ஒரு பகுதியாக சிந்து இருந்தபோது என் இரண்டாவது மூத்த அண்ணா ஹமீது வீட்டுக்குத்தான் இளைஞர்கள் எல்லாரும் விடுமுறையின்போது படையெடுப்பது வழக்கம். கொஞ்சமும் அலுத்துக்கொள்ளவே மாட்டார். எனது வேட்டை அனுபவம், இயற்கையியல் கல்வி கோணத்திலும் சரி, அவரது கோணத்திலும் சரி, இளைஞர் பட்டாளத்துக்கும் சரி, மிகமிகப் பயன்மிகு காலம், நில ஆவணக் கண்காணிப்பாளராராக அவர் பணியாற்றிய காலமும், சிந்துப் பகுதியில் வில்லங்க சொத்துக்களின் மேலாளராக இருந்த காலமும்தான். அவரது பணியில் வேலைப்பளு இல்லாததால் இதுபோன்ற செயல்களுக்கு ஏகப்பட்ட நேரம் கிடைத்தது. அதோடு அவரது குளிர்கால அலுவல் பயணம் மாநிலம் முழுவதையும் தழுவியது. போதாதற்கு தன் விருந்தினர்களின் ஆர்வத்தையும் அனுசரித்து அவருடன் நாங்கள் தங்கியிருக்கும் 3-4 வாரகாலத்தில் கூடியவரை வேட்டைப் பகுதிகள் உள்ள வட்டாரங்களில் அமையும்படி ஏற்பாடு செய்யப்படும். வாழ்வின் பிற்பகுதியில்தான்-மிகத்தாமதமாகவே-ஹமீதுபாய் வேட்டை பழகினார்—அதாவது 1904இல் ஐசிஎஸ் ஆனபிறகு சிந்து பகுதியில் நியமனமாக, அங்கேயோ ஆங்கிலேய சகாக்கள் எல்லாரும் வேட்டைக்காரர்களாக இருந்ததால்! பறவை வேட்டைக்கு அந்நாளில் சிந்துப்பகுதி சொர்க்கம் என்பார்கள். அது உண்மையும் ஆகும். குறைந்தது பாகிஸ்தான் பிரிவினைவரை அந்தப்பெருமை நீடித்தது. மிக விரைவிலேயே அவர் துப்பாக்கிகளை கையாள்வதில் வித்தகரானார். அவரது தினசரி சாதனையை இளையவர்கள்கூட யாரும் மீறுவது அரிதாயிற்று. எத்தனை பை நிரப்பினோம் என்று பெருமைப்படுவதை அவர் ஆதரிக்கவில்லை. அது புறாவாயினும் குயிலாயினும் வேறுபறவையாயினும் எண்ணிக்கையில் பெருமைப்

படுவதை அவர் மதிக்கவில்லை. மாறாக, இயற்கையியல் ஆர்வல ராகவும் பறவைகள் பற்றிப் பயில்வதில் விழைவுகொண்டவராயும் இருந்தார். சமையலறைக்கு அனுப்புமுன்பு பறவைகளை இனம் பிரித்து அடையாளங்காணுவதில் எங்களுக்கு ஈடுபாடு உண்டாக் கினார். அந்த தொட்டில் பழக்கம் எனக்கு பின்னாளில் பெரும் உதவியாக அமைந்தது. நாங்கள் ஏராளமாக சுடுவதில்லை என்றாலும் நாங்களே சுட்டபறவைகள் இல்லாத நாளே கிடையாது. சில நாள் மூன்று வேளையும் நாங்கள் சுட்டபறவைகளே கறியானதும் உண்டு.

நன்கு பழக்கப்பட்ட—மீண்டும் சொல்வேன், நன்கு பழக்கப் பட்ட ஒட்டகத்தின் மீது சவாரி செய்யத் தெரியாதவர்களுக்கு, மணல்வெளியான பாலைப் பகுதிகளில் அதைப்போல ஒரு விரைவான சொகுசான வாகனம் கிடையாது என்று தெரிந்திருக்க நியாயமில்லை. எப்போதும் ஹமீதண்ணாவின் வசம் அருமையான இரு ஒட்டகங்கள் இருக்கும். ஒன்று அவருக்காக, மற்றது ஷரீபா அண்ணிக்காக. அவர்களது குளிர்காலப் பயணங்களுக்கு அவ்விரு ஒட்டகங்கள்தான் வாகனம். விருந்தினர்கள் வரும் பட்சத்தில் அவர் களுக்காக அதிகப்படி ஒட்டகங்கள் தருவிக்கப்படும். அப்படி ஒட்டகங்களை அனுப்பிவைப்பதற்கு முதல்தர ஒட்டகங்களை வளர்ப்பதிலும், தராதரம் அறிவதிலும் விற்பன்னர்களான பல ஜமீன்தார்கள் மகிழ்வுடன் காத்து நிற்பார்கள்.

அதிகாலையில் நாங்கள் யாரும் எழும் முன்பே அண்ணா காயடிக்கப்பட்ட தன் குதிரையிலோ, தனது பிரியமான ஒட் டகத்திலோ ஜமீன்தார்கள், வருவாய்த்துறைப் பணியாளர்கள், அவர்கள் இவர்கள் என்ற விசித்திர பரிவாரம் புடைசூழ தன் பணிதொடர் பான கண்காணிப்புக்கோ பிறபணிகளுக்கோ கிளம்பிவிடுவார். அவர்கள் சிறிதும் பெரிதுமான பல ஜாதிக்குதிரைகளில் அமர்ந்து, அவரது ஒட்டகத்தின் வேகத்துக்கு ஈடுகொடுக்க முடியாமல் அசைந்தாடிச் செல்லும் தம் வாகனங்களில் அவரைத் தொடர்வது—அண்ணாவின் நம்பிக்கைக்குரிய தாடிக்கார ஓட்டுனர் ஜேன் முகம்மதுக்கு தனதுகுதிரை (ஒட்டகம்) எவ்வளவு அருமை யானது, விரைவானது என்று காட்டிக்கொள்வதில் ஒரு பெருமித இன்பம். அதனால், இந்தப் பரிவாரங்களுக்குத்தான் சிரமம்! மூன்று, நான்கு நாட்களுக்கு ஒரு முறை முகாம் இடம்பெயர்வது சற்று சிரமமான வேலைதான், ஆனால் எந்த பரபரப்பும் இல்லாமல் அதை அவர்கள் செயல்படுத்திய வித்தாரம் அன்றுபோல் இன்றும் எனக்கு மலைப்பேற்படுத்துகிறது. சிக்கலான பெரியபெரிய ஸ்விஸ் முகாம் துணிகள், மேசை-நாற்காலிகள், (ஜமுக்காளம், கட்டில்,

மேஜை, மடக்கு நாற்காலிகள்—அவற்றில் சாப்பாட்டு மேசை உடையணி மேசை, முகம் கழுவுமிடப் பொருட்கள், பணிமனை நாற்காலி இன்னும் பலவிதமானவையும் அடக்கம்) பெட்டிகள், குளியல்தொட்டிகள், வாளிகள், பாத்திரங்கள், எல்லாவற்றையும் தூக்கிச்செல்லவேண்டும். பீங்கான் பாத்திரங்கள், கண்ணாடிப் பாத்திரங்கள், படிப்பறை விளக்குகள், அரிக்கேன்கள் முதலான உடையக்கூடிய பொருட்களை பத்திரமாக இடமாற்ற அதற்கென்று குழிவான மரபெட்டிகள் உண்டு. ஒட்டகத்தின் முதுகிலிருந்து இருபுறமும் தொங்கும் கூடைகளில் இவற்றை ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்குவர். சாமான்கள் தூக்கிச்செல்வதற்கென்று பழக்கிய ஒட்டகங்கள் இவற்றை சுமந்து செல்லும். பதினைந்து-இருபது ஒட்டகங்கள் ஒன்றின் வாலில் ஒன்றின் மூக்கு இணைக்கப்பட்டு ஒரே வண்டிபோல் ஒரே ஒரு ஒட்டகக் காரரால் வழிநடத்தப்பட்டு இரவெல்லாம் பயணம் செய்து போக வேண்டிய இடத்தைப் போய்ச் சேரவும் பொழுதுபுலரவும் சரியாயிருக்கும். வலுவான, தொடர்ச்சி யான குலுக்கல்களையும் மீறி-ஒரு சாமானும் அலுங்காமல் சேதப்படாமல் கொண்டு சேர்க்கும் அளவு இடம் மாற்றுவதே ஒரு அருங்கலையாக, அதே சமயம் எளிதாக அவர்களால் செயலாக்கப்படும். மறுநாள் முற்பகலில் ஐயாவும் அவரது விருந்தினர்களும் வந்து சேரும் முன்பாக எல்லாம் கச்சிதமாகியிருக்கும். அலுவலக முகாம், விருந்தினர் பகுதி, சமையலகம் எல்லாம் அவர்கள் வந்ததுமே பயன்படுத்தக் கூடியவாறு ஆயத்தமாக இருக்கும். மேசை நாற்காலிகள், ஆடையணியும் மேசைமீதான சாமான்கள், குளியலறையில் இருக்க வேண்டிய பொருட்கள் அனைத்துமே முதலில் முகாமிட்டிருந்த இடத்தில் எப்படி இருந்ததோ அப்படியே வைக்கப்பட்டிருக்கும். ஒரு ஊக்குகூட அது கிடந்த மாதிரியே கிடக்கும்!

சமையற்காரரும் முன்னரே வந்து சமையலை ஆரம்பித் திருப்பார். சாப்பாடு குறித்த நேரத்தில் காத்திருக்கும். ஆக, நாம் இடம் மாறிவிட்டோம் என்றே நம்பமுடியாது. கூலிப்பட்டாளமும் முகாம் பணியாட்களும் தம் பணியில் அவ்வளவு வித்தகர்கள். தட்டு முட்டான முகாம் சாமான்களும் பிறவும் கிளம்புமிடத்தில் மூட்டை கட்டப்படுவதும் சேருமிடத்தில் பிரிக்கப்படுவதும் செல்லுப் பூச்சிகளின் விரைவையும் ஒழுங்கையும் நினைவுபடுத்தும். அதைப் பாராட்டாமல் விடமுடியாது. மேசை நாற்காலி, முகாம் சாமான்கள் ஆகியவற்றில் இரண்டு இரண்டு இருந்தது. ஒன்றைப் பயன்படுத்திக் கொண்டு ஒன்றை அடுத்த முகாமுக்கு மூட்டை

கட்டுவதும் வசதியாக சிரமமின்றி இருக்க உதவியது. காலம் மாறிப்போச்சு! ஓ! அரக்க பரக்க ஓடும் இந்நாட்களில் ஜீப் என்ன, கார் என்ன, தார் சாலைகள் என்ன, வசதிகள் கூடிய விருந்தினர் மாளிகை என்ன, மின்வசதி என்ன, அரசுச் செயலர்களையும் அமைச்சர்களையும் கலந்துகொள்ள தொலைபேசி என்ன, தலைமை யகத்தில் ஒருபாடாக அதிகரித்து விட்ட எழுதுபணிச்சடங்குகள் வேறு-பார்க்கின்சன் விதிதான், வேறென்ன! மாவட்ட அலுவலரின் சுற்றுப்பயணம் முன்புபோல ஒரு நிதானமான சுற்றுலாவாக இல்லாமல் போய்விட்டது. வேட்டையைப் பொறுத்தவரை, அதற்கான பணிகள் பொருட்கள் வெடிமருந்து ஆகியவை கிராக்கியாகிவிட்டதும், பொதுமக்களிடையே அதன் மதிப்பு மறைந்துபோனதும், அனைத்திலும் மேலாய் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் சிறிதும் பெரிதுமான வேட்டை மறைந்து விட்டதும் சேர்ந்து ஆக மொத்தத்தில் சட்டப்பூர்வமான இனிய வேட்டை அனுபவம் காணாமல் போய்விட்டது. பள்ளி விடுமுறையை நாங்கள் உல்லாசமாக கழித்ததுபோல் செலவிடும் வாய்ப்பு (இன்றைய) மாணவன் எவனுக்கும் கிடைப்பதற்கே இல்லை. வெளியுலகில் கானகத்தில் மனம் மகிழ்வது தெரியாமலேயே போய்விட்டது.

தலூர் அல்லது ஹவுபரா பஸ்டர்ட் (Chlamydotis Undulata Macqueenii) என்ற வகையை முதன்முதலாக நான் பார்த்ததே 1910இல் (என்று நினைவு) சிந்துவில் இத்தகைய ஆரம்பகாலப் பயணங்களில் ஒன்றில்தான். உயிரினங்களின் இயற்கை வண்ணமே ஒரு கேடயமென்றும், எப்படி அவை எதிரிகளிடமிருந்து தப்ப உதவுகிறதென்றும் நான் படித்ததுண்டு. ஆனால் நேரடியாக இந்த மான்களைக் காணும் அனுபவம் கிட்டும்வரை அதனுடைய உன்னதமான சக்தியை நான் நம்பியிருக்க முடியாது. தலூர் சாப்பாட்டுப் பிரியர்களின் நாவில் நீர் ஊறச்செய்யும் பிராணி. அது மிகச்சுவையானது என்பதும் மறுக்க முடியாத உண்மைதான். ஒட்டக முதுகிலிருந்து தலூரை வேட்டையாடுவது சிந்துவில் வழக்கம். எனவே எங்களுக்கு விதிக்கப்பட்டதும் அதுதான். ஒரு பெரிய சுகமல்ல. மிஞ்சிமிஞ்சிப்போனால் ஒரு சுற்றிவளைத்த சுகம். ஆனால் நாம் எய்வதற்கு முன் குறிவைக்க வசதியாக ஒட்டகத்தை ஓட்டுபவர் அதனை கோணம் தவறாமல் நிறுத்துவது போன்ற பணிகள் அவருக்கு ஒரு நிபுணத்துவம் இருந்தால்தான் இயலும். அவர்களுக்கு இதிலொரு சவால் இருக்கிறது. அந்த பாலைவன வாசிகளின் பார்வைக்கூர்மை அபாரமானது. அரைகிலோமீட்டர் தொலைவிலேயயே அதன் இயல்பான மணற்பாங்கான பின்

புலத்தில் ஒரு ஹவுபராவை அடையாளம் காண்பது முன்அனுபவம் இல்லாவிடில் ஒரு பைனாகுலர் உதவியுடன்கூட எளிதில் செய்யமுடியாத வேலை. அதை வெறும் கண்கொண்டே செய்வது மிகச்சிலருக்கே வரும் நுட்பம். ஒரு பறவையை கண்டுவிட்டால் அதன்பிறகு கடைப்பிடிக்க வேண்டிய யுக்தி என்ன? அதற்கு ஐயம் எழாமல் அதனை சுற்றி வளைத்து மெல்ல மெல்ல அணுக்கத்தில் நெருங்கி துப்பாக்கி தூரத்துக்கும் வந்துவிடவேண்டும். அது உங்கள் நடமாட்டத்தை புத்திசாலித்தனமாக கவனித்துவிட்டது என்பதை, சாதாரண வேகத்திலேயே நடந்து, திரிவதுபோல போய், திடீரென்று பார்வையிலிருந்தே மாயமாய் மறைந்த பிறகுதான் உணர்வீர்கள்! எவ்வளவோ கவனமாக வட்டமாக சுற்றிவந்து, வட்டத்தை படிப் படியாக சிறிதாக்கிக்கொண்டே வந்து கடைசியில் பார்த்தால் நிலைமை இப்படி! கண்ணிமைக்கும் நேரத்தில் சிறு புதர்முன் அது அமர்ந்திருப்பதும் கழுத்து நீண்டு தெரிவதும் ஒட்டகத்தை நிறுத்துவதும் 'சுடுங்கள்!" என்பதும்.. உங்களை பொறுத்த மட்டில் அங்கு ஒன்றுமே இல்லை. மனம் சலித்து ஒட்டகக்காரர் அந்தப் புதரருகே ஒரு இடத்தைக் காட்டி "சுடுங்க" என்பார். அவரது சலிப்பைத் தவிர்ப்பதற்காக தயக்கத்துடன் தான் நீங்கள் சுடுவீர்கள். (ஏனெனில் நம் கண்ணுக்கு ஒரு மண்ணும் தெரியாது!) அங்கே குண்டுபட்டு ஏதோ ஒன்று தரையில் சாயும். பார்த்தால், அங்கே சிறகு விரிய உங்கள் இரை விழுந்து கிடக்கும். எல்லாமே இமைக்கும் நேரத்தில்! இப்படித்தான் நான் முதல் ஹவுபராவைப் பிடித்தேன். தப்பித்துக்கொள்ள உயிரினங்களுக்கு அவற்றின் உடல் வண்ணமே எவ்வளவு மகத்தான உதவி என்பதில் என் பால பாடத்தையும் கற்றேன். பிற இடங்களில்-கட்சில்கூட-பறவைகளை துப்பாக்கி ஓசையில் விரட்டும்போது தரையிலிருந்துதான் சுடுகிறோம். இந்த முறைதான் விறுவிறுப்பாக இருக்கிறது. வாடை வீசும் குளிர் நாட்களில் பறவைகள் தொடர்ந்து நகர்ந்து கொண்டேயிருக்கையில், வேலை சுவையான ஒரு சவால்.

ஆனால் பருந்தை விரும்புவர்களுக்கு ஹவுபரா ஒரு பிரமாதமான இணையற்ற இரையாகும். கல்ப் எமிரேட்ஸ் நாட்டு ஷேக்குகள் பருந்துப் பிரியர்கள். அவர்களது வெறித்தனமான நடவடிக்கைகள் இவற்றின் அழிவுக்கே வழிசெய்து விடுகின்றன. 1967-68 குளிர்காலத்தில் மட்டும் ஒரு ஷேக் மட்டுமே பாகிஸ்தானில் 915 பறவைகளின் சாவுக்குக் காரணமாக இருந்திருக்கிறார். அதுவும் நான்கே வாரங்களில், இந்தக் கொடுமை ஆண்டுதோறும் வளர்ந்து கொண்டேவருகிறது.

21

# எனது நூல்கள்

பறவைகள் எங்கு தோன்றும், எங்கே அவை மிகுந்த எண்ணிக்கையில் காணப்படும், அவற்றின்பழக்க வழக்கங்கள், நடவடிக்கைகள், அவற்றின் சார்புகள், சூழலியல் விபரங்கள், வாழ்க்கை வரலாறு ஆகியவைபற்றிய செய்திகளடங்கிய பல்லாண்டுகாலக் களப்பணிக் குறிப்புகள் ஒழுங்காக அடுக்கப்பெற்று தொகுக்கப்பட்டாலன்றி பயனற்றவையாகிவிடும். சரியாகச் சொல்வதானால் பயன் படுத்தப்பட முடியாத குப்பையாகிவிடும் என்று சொல்லவேண்டும். ஒழுங்கான முறையில், சரியாக வகைப்படுத்தப்பட்டு, அவ்வப்போது திருத்தப்பட்டு தொகுக்கப்படவேண்டும். எனது பறவைக்கல்வி வாழ்வின் பெரும்பகுதி ஒலிநாடாவும் ஒலிப்பதிவுக்கருவிகளும் பிறந்து பிரபலமாவதற்கு முந்தைய காலத்தைச் சேர்ந்தவை. அந்தக் காலகட்டத்தில் களப்பணியின்போதே குறிப்புகள் எழுதுவது என்பது மிகவும் மெதுவாகச் செல்லும் களைப்பூட்டும் பணியாயிருந்தது. நான் வகுத்துக்கொண்டமுறை எனக்கு திருப்தி தந்தது. வேறொன்று மில்லை, எப்போதும் சட்டைப்பையில் சிறு குறிப்பேடும் பென்சிலும் வைத்துக்கொண்டு ஆங்காங்கே அப்போதே அவசரஅவசரமாக குறித்து வைத்துவிடுவேன். பார்த்த பறவைகளின் பெயரோடு, சுவையான அம்சங்கள் ஏதும் கவனத்தில் விழுந்தால் அதையும் எழுதிவிடுவேன். வித்தியாசமான விஷயங்களை அப்போதே என் கருத்துக்களையும் சேர்த்து எழுதிக்கொண்டு விடுவது வழக்கம், அவற்றின் பொது செயல்பாடு, பாடல்கள், கூவும் முறை, உணவு, உறையுள், சமூக வாழ்வு, தம்முள் நடந்துகொள்ளும் முறை முதலியவை அதிலடங்கும்! எல்லாவற்றையும் நானே வகுத்துக் கொண்ட ஒரு சுருக்கெழுத்தில் குறித்துக் கொள்வேன். திரும்பி முகாமுக்கு வந்ததும் உடனுக்குடன் எதுவும் மறந்து போய்விடுமுன், என் விசித்திர சுருக்கெழுத்திலிருந்து அவற்றை சாதாரண மொழிக்கு மாற்றி விரிவுசெய்து, ஒரு இறுக்கமற்ற குறிப்பேடு வடிவத்தில்

தாள்களை சீர்செய்வேன். வணிகர்கள் கணக்கு எழுதும் (லெட்ஜர்) ஏடுபோல ஒவ்வொரு பறவைக்கும் ஒரு அத்தியாயம் இருக்கும். ஒவ்வொரு பதிவும்-வெறுமனே ஒரு குருவியைப் பார்த்தது மட்டு மானாலும்-அதற்குரிய நாள், இடம், உயரம் எல்லாம் கொண்டிருக்கும். இந்த ஏற்பாட்டில் பின்னால் என்றைக்காவது ஒருநாள் இந்த ஏடுகளைப் புரட்டினால்கூட ஒரு குறிப்பிட்ட பறவைக்கான பக்கத்தைத் திறந்தால் அந்தப் பறவை பற்றி எங்கு எப்போது நான் எதை கவனித்திருந்தாலும் அவ்வளவும் படம்போல விபரமாக விரியக்காணலாம். ஒரு அறிக்கை தயாரிக்கவோ, நூலெழுதவோ தகவல் தேவைப்படும்போது வேலையை எளிதாகவும் விரைவாகவும் செய்ய இது உதவியது.

இந்தியாவின் நாட்டுப்புறப்பகுதிகளில் காணும் சாதாரணப் பறவைகள் பற்றி தொழில்நுட்ப ரீதியாக அல்லாது சாமானியர் களுக்கும் புரியும் வண்ணம் ஒரு நூல் வேண்டும் என்று பலகாலமாக ஒரு சிந்தனை இருந்தது. மும்பை கழகம் 1935 செப்டம்பரில் அப்படி ஒரு நூலெழுதுமாறு என்னை முறைப்படி பணித்தது. தெரிவுசெய்த 180 பறவைகள்பற்றி வண்ணப்படங்களுடன் அமையவேண்டும் என்றும், மும்பை கழகம் வெளியிட்ட சுவர்ப்பிரசுரங்கள் நாட்டில் பல ஆங்கிலப்பள்ளிகளில் பிரபலமாக ஆகியிருந்தால் அவற்றை பயன்படுத்திக் கொள்ளலாம் என்றும், படங்கள் முழுப்பக்க அளவில் அமையலாம் என்றும் திட்டமிடப்பட்டது. கச்சிதமாக 350 வார்த்தைகளில் ஒவ்வொரு பறவையும் காணப்படும் இடங்கள், பரவல், உணவு, பழக்கவழக்கங்கள், கூவல்கள், கூடுகட்டி வாழ் முறைகள் ஆகியவை பற்றி விளக்கமும், புலம்பெயர்தல், பறத்தல், பறவைகளை ரசித்தல், மனிதனுக்கு பறவைகளால் வரும் உதவி முதலியவைபற்றி ஒவ்வொன் றுக்கும் தனித்தனியே ஒரு அத்தியாயம் என்றும் தீர்மானிக்கப் பட்டது. சிக்கன நடவடிக்கை யாக ஒரு பக்கத்துக்கு 4 பறவை என்று தற்போதைய பதிப்புகளில் இருப்பது நூலின் 5ம் பதிப்பிலிருந்து (1955) துவங்கியதாகும். சுவர்ப்பிரசுரங்களின் மக்கிப்போன 4 வண்ணப்படங்களை மாற்றி புதுப்படங்களை சேர்க்க நேர்ந்தபோது இம்மாற்றமும் கடை பிடிக்கப்பட்டது. புதிதாக சில பறவைகள் இடம் பெற்றன. இதற்கான விபரங்களை கழகத்தின் அருங்காட்சியகக் காப்பாளர் பிராட்டரிடமிருந்து முன்னரே நான் சேகரித்து வைத்திருந்தேன். சொல்லப்போனால் நூலுக்கான முதல் நகல் 1930இல் கிஹீம் நகரில் வேலையில்லாமல் வாழ்ந்து கொண்டிருந்த நாட்களிலேயே தயாரிக்கப்பட்டுவிட்டது.

கிஹீமில் ஆரம்பித்தது என்று சொல்லும்போது அந்த ஊரில் கிடைத்த ஒரு அசாதாரண அனுபவம் பற்றி இங்கே குறுக்கிடாகக் கூறாமல் இருக்கமுடியவில்லை. கிஹீமில் நாங்கள் இருந்த கடற்புறத்து வீட்டில் கீழ்த்தளத்தில் ஒரு பலநோக்கு அறை, அதைச்சுற்றி முப்புறமும் பரந்த திறந்தவெளி வராந்தாக்கள். அங்குதான் பகல் பொழுது கழியும். குறிப்புப்புத்தகம், தாள்கள் கோப்புகள், பாதி எழுதிய நகல் என்று தாள்கள் நிறைந்த என் எழுதுமேசை அங்குதான் இருந்தது. மாடியில் இருந்த படுக்கையறையில்தான் தெஹ்மினாவும் நானும் உறங்குவது. ஒருநாள் காலை கண்விழித்ததும் கீழே இறங்கி வந்து பார்க்கிறேன்–ஒரே பயங்கரம். எல்லாம் சிதறிக்கிடக்கின்றன. பல கசங்கிப்போய், பலகிழிந்தே போய், மேசையைச்சுற்றி மட்டுமல்ல சற்றுத்தொலைவில் இருந்த தோட்டத்திலும்கூட தாள்கள். புரியாத புதிராக இருந்தது. இரண்டு மூன்றுநாள் ஒன்றும் நடக்கவில்லை. பிறகு மீண்டும் அந்த 'ஆவி' வேலையைக் காட்டிவிட்டது. மேலும் காகிதநாசம். ஒரு மண்ணும் விளங்காமல் மர்மம் அதிகரித்தது. இரண்டாம் நிகழ்வை அடுத்த இரவில், ஆளோ, மிருகமோ, ஆவியோ அந்த ஏதோ ஒன்றின் அக்கிரமப்பழக்கம் அதிகரிக்கிறது. இதற்கு ஏதாவது செய்தே ஆகவேண்டும் என்று நினைத்தேன். மேசையைச் சுற்றி தரையில் வரும் மிருகத்தின் காலடித் தடத்தைப் பதிவு செய்ய வசதியாக ஒரு பொடியைத் தூவிவைத்தேன். ஆக, அது ஒரு நாய் என்று கண்டுபிடித்தோம். ஆனால், ஒரு நாய் ஏன் மீண்டும் மீண்டும் என் காகிதங்களை கடித்துக் குதறவேண்டும், தாள்களை விசிறியடிக்க வேண்டும், அதில் அந்த நாய்க்கு என்ன விசேஷ அக்கறை என்பது எனக்கும் புரியவில்லை என்பது வேறு கதை. மறுபடி எப்போது வரும், நேரங்கெட்ட நேரத்தில் எந்த சமயம் அதன் நேரம் என்பது தெரியாத நிலையில் நான் ஒரு சரியான வேலை செய்தேன். தர்மா என்ற காதுகேளாத தோட்டக் காரக்கிழவன் வீட்டுக்கு சற்றுத்தொலைவில் தோட்டத்துக்குள்ளேயே இருந்த ஒரு சிற்றறையில் வசித்து வந்தான். அவனது கால் கட்டை விரலில் ஒரு நூலைக்கட்டி, அதன் மறுமுனையை என் படுக்கையின் தலைமாட்டில் கட்டி விட்டேன். அத்துடன் ஒரு மணியை இணைத்தேன். தலைமாட்டிலேயே துப்பாக்கியும் இருந்தது. 'திருடன்' தன் வேலையில் 'கையும் களவுமாய்' இருக்கும்போதே ஓசையின்றி நான் விழித்துக்கொள்ள ஒருவழி செய்துகொண்டேன். இரண்டு, மூன்று நாள் கழித்து காலை 3 மணிக்கு மணி ஒலித்தது. உடனே துப்பாக்கியை கையில் அணைத்தபடி ஓசையின்றி மாடியிலிருந்து இறங்கினேன். என் வருகையைக் கண்டுகொண்ட நாய்

மேசையிலிருந்து குதித்து விரைந்தோட ஆரம்பித்தது. கண்ணில் ஒரு குற்ற உணர்வு! காலிடுக்கில் வாலை சுருட்டிக்கொண்டு போய்க்கொண்டே திரும்பி ஓரக்கண்ணால் திருட்டுப்பார்வை பார்த்துக்கொண்டு அறையை காலிசெய்தது. இந்தத் தொந்தரவு மேலும் நீடிக்காமல் நிறுத்தும் வகையில் எந்தவித வருத்தமுமின்றி அந்த நாயை சுட்டுக்கொன்றேன். ஆனால் இன்றும் அதன் முறைகேடான வேலை எனக்குப் புதிராகத் தான் இருக்கிறது. ஒரு முறை என்றால் கூட பரவாயில்லை, மீண்டும் மீண்டும் மீண்டும் என் மேசையை சூறையாடி ஜீரணிக்க முடியாத என் தாள்களை நாசம் செய்வதில் அதற்கு என்னதான் லாபம் இருந்தது?

பல அத்தியாயங்களும் முதலில் தெஹ்மினாவுக்கு படித்துக் காட்டப்படும். நூலின் மொழி நடையை செப்பமிடுவதில் அவள் பங்கு சிறப்பானது. பேச்சு நடை ஆங்கிலத்தில் தெஹ்மினாவுக்கு 'மண்வாசனை' உண்டு. நடை செய்ற்கையாக இருந்த இடங்களை செப்பனிட்டு இயல்பாக்கி அவள் படிக்க இனிமையானதாக்கித் தருவாள். 'இந்திய பறவைகள் பற்றிய நூல்' (The Book of Indian Birds) என்ற இப்புத்தகத்தின் விமர்சகர்களும் (வாசகர்களும்தான்) சரி, பிந்தைய பிற நூலின் விமர்சகர்கள்-வாசகர்களும் சரி, புத்தகம் விறுவிறுப்பாக ஓடுவதை ஒரு தனி அம்சமாகக் குறிப்பிட்டு புகழ்ந் துள்ளது எனக்கு தனித்த நிறைவளித்ததாகும். டபிள்யூஎச். ஹட்சன், ஈ.எச். அட்கின் (ஈ.எச்.ஏ) இருவரும் எனக்குப் பிடித்த இயற்கை நூல் ஆசிரியர்களில் அடங்குவர். வறட்டு செய்தித்தொகுப்பைத் தரும் உரைநடையைக் கூட எப்படி சுவையான நூலாக ஆக்க முடியும் என்பதற்கு அவர்களது எழுத்துக்கள் அருமையான எடுத்துக் காட்டுகளாகும். கொஞ்சம் அழகுபடுத்தி மெருகூட்டவேண்டும், அவ்வளவுதான். குறைந்தது அட்கின் தனது எளிய, பார்ப்பதற்கு சாதாரணமான தன் கட்டுரைகளை வெளியிடுமுன் இதில் கவனம் செலுத்துபவர் என்பது தெரிந்ததே. ஒரு நூல் விறுவிறுப்பாகச்செல்ல வேண்டும் என்பதற்கு நானும் முக்கியத்துவம் தருகிறேன். அதற்காக செலவாகும் கூடுதல் உழைப்பும் நேரமும் பயனுள்ள செலவுதான்.

இந்தியப் பறவைகளைப்பற்றி இப்போது பிரபலமாகிவிட்ட களவழிகாட்டி வகையிலான, வண்ணப்படங்களுடன் கூடிய நூல் களுக்கு இதுவே முன்னோடி. இன்று நாட்டில் பறவைகள் பற்றியும் பறவையியல் பற்றியும் பரவலாக ஏற்பட்டுள்ள ஆர்வத்தை உருவாக் கியது, வளர்த்தது ஆகியவற்றில் இந்நூல் பெரும் பொறுப்பேற்றது என்று பலரும் ஒப்புக்கொள்கிறார்கள். எனவே இதனை வெளியிடும் பணி குறித்து சில விபரங்களை அறிவது சுவையாயிருக்கும். முதற்

பதிப்பாக 1941 ஆகஸ்டில் 3,000 பிரதிகள் வெளிவந்தன. கலை நயத்துக்குரிய வெளிநாட்டுக் காகிதத்தில் இதனை அச்சிட்டவர்கள் மும்பை 'டைம்ஸ் ஆப் இந்தியா' அச்சகத்தார் ஆவர். ரூபாய் 14 விலையுள்ள இந்நூலில் மக்களுக்குத் தெரிந்த 181 வகையான நாட்டுப்புறப்பறவைகள் இடம்பெற்றன. ஒவ்வொரு பதிப்பிலும் பேசப்பட்ட பறவைகளின் எண்ணிக்கை உயர்ந்தது. துரதிருஷ்ட வசமாக விலையும் உயர்ந்தது! கடைசியாக ஜூலை 1980ல் வந்துள்ள 11ஆம் பதிப்பில் 280 பறவைகள் இடம் பெறுகின்றன. விலை ரூ.60 ஒரு பதிப்புக்கு சுமார் 4500 பிரதியாக முதல் பத்து பதிப்புகளில் 46,000 பிரதிகள் வந்துள்ளன.

ஜப்பானுடனான போர் நடந்துகொண்டிருந்தது. அதனால் தென்கிழக்காசியாவுக்கு போய்க்கொண்டும் வந்துகொண்டுமிருந்த ஆங்கிலோ-அமெரிக்கத் துருப்புகள் மும்பை வழியாக பயணம் செய்தபடியே இருந்தன. அவர்களில் பலர் பறவைகள் பற்றிய ஆர்வலராக இருந்தனர். அவர்கள், தாம் வெப்பப்பிரதேச பறவைகளைப்பற்றி அறிமுகம் செய்துகொள்ள உதவ எத்தகைய நூல் வேண்டுமென்று நினைப்பார்களோ அப்படி எனது நூல் அமைந் திருந்ததால் விற்பனை துவக்கத்திலேயே பிய்த்துக்கொண்டுபோயிற்று. அதன் ஆரம்பகால வாசகர்களில் பண்டித ஜவஹர்லால் நேருவும் ஒருவர்! அவரே ஒரு இயற்கை நேயர். கையெழுத்துடன்கூடிய ஒரு பிரதியை அப்போது (1942) டேராடூன் சிறையிலிருந்த தன் மகளுக்கு பிறந்தநாள் பரிசாக அனுப்பிவைத்தார். இந்திராவும் அப்போது சிறையில்தான்இருந்தார். அவர் இருந்தது நைனியில். குழந்தை களுக்காக திரு. ராஜேஸ்வர் பிரச த் நாராயண் எழுதிய "நம் பறவைகள்" (Our Birds, வெளியீடு 1959) என்ற நூலின் முன்னுரையில் இதனை நினைவுகூர்ந்து "என் தந்தையார் டேராடூன் சிறையிலிருந்து சாலிம் அலியின் சுவையான நூலை அனுப்பிவைத்து, அது முற்றிலும் புதியதோர் உலகை என் கண்முன் காட்டும் வரை நானும் பெரும்பாலான இந்தியர்களைப் போலவே பறவைகளைப் பற்றி எல்லாம் தெரிந்த பாவனையில்தான் இருந்தேன். அப்போது தான் தெரியாதது எவ்வளவு என்று உணர்ந்தேன்" என்று கூறிச்செல்கிறார். அதற்கும் பலநாள் கழித்து 1983ல் (செப்.15) மும்பை இயற்கை வரலாற்றுக் கழகத் தாளாளர் என்ற முறையிலும், நாட்டுப் பிரதமர் என்ற முறையிலும் கழகத்தின் நூற்றாண்டு விழாவில் துவக்க உரை நிகழ்த்தும்போதும் அதைப்பற்றிக் குறிப்பிட்டு "விலங்குகளை நான் எப்போதுமே நேசித்துவந்துள்ளேன். ஆனால் பறவைகளைப்பற்றி அதிகம் அறிந்திருக்கவில்லை. நைனி சிறையின்

நெடிதுயர்ந்த மதில்கள் அவற்றிலிருந்து என்னைப் பிரிக்கும் வரை அதே நிலைதான். முதன்முதலாக அங்கே பறவைகள் பாடும் ஒலியினை நான் கேட்டேன். அதை மனதில் பொதிந்து வைத்தேன். பிறகு விடுதலையடைந்தபின்பு முனைவர் சாலிம் அலி நூல்மூலம் பறவையை இனங்கண்டேன்" என்று கூறினார்.

மவுலானா அபுல்கலாம் ஆசாத், இந்திய தேசிய காங்கிரஸ் 1942 'வெள்ளையனே வெளியேறு' மாநாட்டின்போது தலைவராக இருந்த வகையிலும் காந்தியடிகளின் 'செய் அல்லது செத்துமடி' என்ற ஆணையின் தொடர்பாகவும் அகமது நகர் சிறையிலிருந்தார். அவரது படுக்கைக்கு நேர் உயரே ஒரு பொந்தில் சிட்டுக்குருவிகள் கூடுகட்டியிருந்தன. அந்த விடாமுயற்சிகொண்ட ஜோடியை வைத்து அவர் எழுதிய 'குருவியின் இல்லம்' என்ற உன்னதமான படைப்புக்கு எடுத்தாள சிலகுறிப்புகளை தன் சிறைச் சகா பண்டிதநேருவிடமிருந்து வாங்கிப் படித்த என் நூலைப் பயன்படுத்தினார் என்று பின்னர் எனக்குத் தெரியவந்தது. எனது நூல் ஹிந்தியிலும், பஞ்சாபியிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. உருதுவில் தயாராகி வருகிறது.

தவாய்நகரில் ஜேஏஅலி சகோதரர்கள் அண்ட் கோ நிறுவனம் மூடப்பட்டதில் இருபங்காளிகளுக்கிடையே கடன்களைப் பிரித்துக் கொண்டதில் பலபேருக்கு கடனை திருப்பித் தருவதிலும், நிறுவன முதலீட்டைத் திருப்பும் விதமாகவும் நானும் கடனாளியானேன். தொகை திகைக்க வைப்பதாயிருந்தது. மும்பை திரும்பி பல்லாண்டு காலம் வருமானமில்லாமல் இருந்தபோது அந்த நிறுவனத்தை மூடும் போது கிடைத்த சொத்துகளும் மெல்ல மெல்ல கரைய, கடனுக்கான வட்டியோ வளர்ந்துகொண்டிருந்தது. ஒரு சமயம் நான் திருப்பிக் கொடுக்கிற நிதானத்தில் இந்தக்கடனை என்றுமே தீர்க்கமுடியாதோ என்று கூட தோன்றியது. சிலபேர் தாராள மனத்தோடு வட்டி வேண்டாம் என்று கூறிவிட்டதையும் சிலர் தொகையைக் குறைத்துக் கொண்டதையும் மீறி என் கடனிருப்பு வளர்ந்துகொண்டே வந்தது அச்சுறுத்துவதாக இருந்தது. அடிக்கடி என் இரவுகள் தூக்கமிழந்தன. கழுத்தில் கட்டிய கல்லாகிவிட்ட கடன்களிலிருந்து என்றாவது விடுதலை கிடைக்குமா என்று கலங்கிப்போனேன். அப்போதுதான் இறைவன் கொடுத்தவரம் என்கிற மாதிரி இந்த நூல் வந்தது. முதல் நான்கைந்து பதிப்புகளில் ஆசிரியர் என்ற முறையில் எனக்குக் கிடைத்த பணம் எல்லா கடன்பொறுப்புகளிலிருந்தும் முழுமையாக விடுபட உதவியது, எனக்கும் நிரந்தர நிம்மதி வந்தது.

இதன் வெற்றியையும் 1945இல் வந்த 'கட்ச் பறவைகள்' வெற்றியையும் கண்டுவிட்டு எனது விடுமுறைக்கால நண்பர்கள்

இதேபோல் நீலகிரி, இமாலயம், தீபகற்பப்பகுதியின் மலைகள் ஆகிய இடங்களில் காணப்படும் சாதாரணப் பறவைகள் பற்றியும் வண்ணப் படங்கள் கொண்ட ஒரு நூலைக் கொணரவேண்டும் என்று கூற ஆரம்பித்தனர். என் 'கட்ச் பறவைகள்' (Birds of Kutch) நூலைப் பதிப்பித்தவர்கள் ஆக்ஸ்போர்ட் யூனிவர்சிடி பிரஸ் நிறுவனத்தார். அப்போது ஆர்.சஹாகின்ஸ் (Hawkins) இந்தியக் கிளையின் தலைமை மேலாளராயிருந்தார். அவர் ஆதரவிலும் வருமானத்தில் பங்கு என்ற அடிப்படையில் படங்கள் வரைய ஒப்புக்கொண்ட இலங்கையைச் சேர்ந்த பிரபல பறவை ஓவியர் ஜீ.எம்.ஹென்றி துணையுடனும், போட்டோ-ஆப்செட் முறையில் 'இந்திய மலைப்பறவைகள்' 1949இல் பிரிட்டனில் 10,000 (பத்தாயிரம்) பிரதிகள் அச்சிடப்பெற்றன. அவரது ஓவியங்கள் பிரமாதமானவை. இந்திய, வெளிநாட்டு அறிவியல் பத்திரிகைகளில் இதற்கு அருமையான திறனாய்வுகள் வந்தன. வாசகர்களும் பலப்பட புகழ்ந்தனர். இவ்வளவு இருந்தும் விற்பனை பதிப்பாளர்களுக்கு நிறைவாயில்லை. முதற்பதிப்பு விற்பனையாக 25 ஆண்டுகளாயின! ஐந்தாண்டுகள் பிரதிகள் இல்லா திருந்தது. அந்த இடைக்காலத்தில் நாட்டில் மக்களிடையே பறவையியல் ஆர்வம் வளர்க்கப்பட்டிருந்தது. அயல்நாடுகளிலிருந்து வனவிலங்குகளுக்காகவும் பறவைகளுக்காகவும் வரும் சுற்றுலாப் பயணிகள் தொகையும் வளர்ந்திருந்தது. இவற்றின் விளைவாக பறவைகள் பற்றிய நூல்களுக்கு தேவை பிறந்தது. எனவே ஆக்ஸ் போர்ட் யுனிவர்சிடி பிரஸ்காரர்கள் 1979இல் 'இந்திய மலைப் பறவை'களை மறு அச்சீடு செய்தார்கள். புதிய பதிப்பாக வெளியிட நேரமில்லாததால் அது மறு அச்சீடாக அமைந்தது. அடுத்தடுத்து இரண்டு வெளியீடுகள் வந்தன. இடைப்பட்ட காலத்தில் விலை உயர்வையும், உலகளாவிய பண வீக்கத்தையும், 1949இல் ரூ.20 ஆக இருந்த முதல்பதிப்பின் விலை 1948 மறு அச்சீட்டில் ரூ 140 ஆக உயர்ந்ததில் உணரலாம்! ஆனால், இப்போதும் மூலத்திலிருந்து படங்கள் 9 வண்ணங்களில் ஆக்கப்படுகின்றன.

பிரபல வடமொழி அறிஞரும் சென்னையின் புகழ்வாய்ந்த வழக்கறிஞருமான சர்.சி.பி. ராமசாமி அய்யர் மன்னராட்சியின் கீழ் திருவாங்கூரில் 1950களில் திவானாக இருந்தார். திவான் (பிரதமர்) என்ற முறையினால் திருவனந்தபுரம் பல்கலைக் கழக வேந்தராகவும் இருந்தார். மும்பை கழக சஞ்சிகையில் 1935 முதல் 37 வரை தொடராக வெளியிடப்பட்ட எனது திருவாங்கூர் கொச்சி பறவையியல் ஆய்வின் அறிவியலார்ந்த அறிக்கையைப் படித்ததில் அது அவர் கவனத்தை ஈர்க்கவே அதை 'மக்கள் பதிப்பாக'

வண்ணப்படங்களுடன் நூலாக வெளியிடத் தீர்மானித்து விட்டார். உயிரியல் மாணவர்கள், வனத்துறையினர், சுற்றுலாப் பயணிகள் உட்பட பலருக்கும் அது பயனளிக்கும் என்பது அவர் கணிப்பு. எனவே அதற்காக ஆக்ஸ்போர்ட் யுனிவர்சிடி பிரஸ்காரர்களுக்கு மானியம் தருவதாக அறிவித்தார். ஓவியங்களுக்காக உன்னத கலைஞரான டிவி. கவ்வன் (திருமதி கார்டனர் லூரயி) ஏற்பாடு செய்யப்பட்டார். அவர் கூர்மையான தகுதிமிக்க பறவையாளர். அவர் 'இந்தியப் பறவைகள்' நூலில் படைத்திருந்த ஓவியங்கள் மூலம் தனக்கென்று ஓர் தனியிடம் பெற்றுவிட்டவர். பதிப்பிக்கப் பட்ட ஆயிரம் பிரதிகளில் ஐநூறை பல்கலைக்கழகமே விநியோகித்தது. மீதி ஐநூறு பிரதிகள் குறுகிய காலத்திலேயே தீர்ந்து போயின. (விலை ரூ.35/-) பல வாசகர்களுக்கு ஏமாற்றம் ஏற்பட்டதெனினும், அடுத்த பதிப்பு வெளியீடுமளவுக்கு அவர்கள் எண்ணிக்கை இல்லை. ஆக 1969 வரை அது விற்பனைக்குக் கிடைக்கவில்லை. மொழிவழி மாநில சீரமைப்பில் திருவாங்கூர், கொச்சி, அண்டைப் பகுதிகளான மலையாள மாவட்டங்களையும் சேர்த்துக்கொண்டு இந்தியப் படத்தில் கேரளமாக பிறப்பெடுத்தது. இரண்டாம் பதிப்புக்கான வேண்டுதலும் வலுத்தது. அதனால் மீண்டும் பல்கலைக்கழக உதவியில் மலபார் பகுதியையும் உள்ளடக்கத்தில் சேர்த்து பழைய விலையிலேயே திருத்திய, விரிவாக்கப்பட்ட பதிப்பு 'கேரளப் பறவைகள்' (Birds of Kerala) என்று வெளிவந்தது. அந்த விலைக்கு இது ஒரு வரப்பிரசாதம். முந்தைய பதிப்பு போலவே இதுவும் விரைவில் விற்றுப் போயிற்று. சில ஆண்டுகள் ஒன்றும் நடக்கவில்லை. பிறகு 1985 (மார்ச்)இல் பெரியாறு வனவுயிர்ச் சரணாலயப் பொன்விழா நினைவாக கேரள அரசின் வனத்துறை ஆக்ஸ்போர்ட் யுனிவர்சிடி பிரஸ் உதவியுடன் மூன்றாவது வெளியீட்டைக் கொண்டுவந்துள்ளது.

தவாய் நாட்களின் ஆரம்பகாலத்தில்தான் வெப்பமண்டல மழைக்காடுகளுடன் என் முதல் அறிமுகம் நேர்ந்தது. அது தெனஸ்ஸரீம் பகுதி. அதுமுதலே அந்தவகைப் பசுமைக் காடுகளை மீண்டும் நெருக்கத்தில் பார்க்கும் அவா என்னுள் இருந்து வந்தது. அதன் பறவைகளையும் இயற்கை வரலாற்றையும் ஆராய விரும்பினேன். அந்த ஆசையை திருவாங்கூர் ஆய்வு ஓரளவு நிறைவேற்றியது. எனது வட்டார ஆய்வுகளிலேயே உயர்ந்த மட்ட மகிழ்ச்சியையும் நிறைவையும் அளித்ததும் அதுதான். 'சிஸ்டமாடிக்ஸ்' என்ற பாரம்பரிய முறையை விட்டு சூழலுக்கு முக்கியம் தந்து மரபை மீறிய அணுகுமுறையில் நான் ஆய்வு செய்தது எனக்கு

மகிழ்வளித்தது. இந்த மாறுதல் அனைத்துத் துறையினராலும் பாராட்டப்பட்டது. மாணவர்களுக்கும் மக்களுக்குமாக அதை இன்னும் பரவலாகத் தரமுடிவது—அதுவும் வசதியாக நூல்வடிவில் தருவது—எனக்கு களிப்பூட்டியது. உண்மையில் பலவகைகளிலும் 'கேரளப் பறவைகள்'தான் என் நூல்கள் அனைத்திலும் என் மனதுக்கு நிறைவளித்தது. 'இந்தியப் பறவைகள்' பற்றிய நூலைவிட இது குறைந்ததல்ல.

பறவை சேகரிப்புக்காகவும் களப்பணிக்காகவும் 1950களில் லோக்-வான்-தோ ஆதரவில் நான் மேற்கொண்ட சிக்கிம் பயணங்கள் (பற்றி முன்பே கூறியுள்ளேன்) விளைவாக சொக்யால் அரசு உதவியுடன் ஆயூபி. 1962ல் முப்பது ரூபாய் விலையில் 'சிக்கிம் பறவைகள்' என்ற நூலை வெளியிட்டது. சர்வதேசப் பெருமை பெற்ற கலைஞர்களான பால் பர்ருவல் (பிரான்ஸ்), டேவிட் ரெய்ட் ஹென்றி (இங்கிலாந்து), ராபர்ட் ஸ்கோல்ஸ் (ஜெர்மனி) ஆகியோரின் வண்ணப் படங்களுடன்அது வெளிவந்தது. அச்சேறிய இரண்டாயிரம் பிரதிகளில் ஓராயிரம் சிக்கிம் அரசுக்கே போயிற்று. அவர்கள் அரசு விருந்தினருக்கும் பிறருக்கும் அன்பளிப்பாக பயன்படுத்தினர். மறுஆயிரம் ஓராண்டுகாலத்தில் விற்றுபோனது. பிரதிகள் கிடைக்கவில்லை. மறு அச்சிடுபற்றி சிந்தித்துக் கொண் டிருக்கும்போதே சிக்கிம் இந்தியாவுடன் இணைக்கப்பட்டுவிட்டது. பிறகு இதுபற்றிபேச்சே எழவில்லை. இந்நூலுக்கு விளம்பரமாக ஐந்து ரூபாய் விலையில் ஒரு குறுநூல் வந்தது. புத்தகம் வெளிவருவதில் ஏகப்பட்ட தாமதம் ஏற்பட்டதால் குறுநூல் ஏற்பாடு செய்யப்பட்டது. இதில் புத்தகத்தில் வரவிருந்த 17 வண்ணப்படங்களும் பறவைகள் பற்றிய சிறு குறிப்புகளுடன் இடம் பெற்றதால் இதற்கு 'சிக்கிம் பறவைகள்-ஓவியநூல்' (Picture Book of Sikkim Birds) என்று பெயர். அந்த விலைக்கு அது மிகவும் மதிப்புடையதாகி மாணவர்கள் கரங்களிலும் சுற்றுலாப் பறவையாளர்கள் கரங்களிலும் அணிசெய்தது.

நானும் தில்லான் ரிப்ளியும் கூட்டாக எழுதிய 'இந்தோ–பாகிஸ்தான் பறவைகள் பற்றிய கையேடு' (Hand book of the birds of India and Pakistan) நூலின் பிறப்பும் வரலாறும் பற்றிய ஒரு சிறுவிளக்கம் இந்த சுயசரிதையில் இன்னொரு இடத்தில் வருகிறது. நான் அதற்காக பதிப்பாளர் தேடிக்கொண்டிருக்கையில் ஏற்பட்ட பதிப்பாளர்கள்-பதிப்புத்தொழில் பற்றிய ஒரு அனுபவத்தை இங்கு பகிர்ந்துகொள்ளத் தோன்றுகிறது. அது ஒரு சுவையான கிளைக் கதையாகும். என் முந்தைய நூல்களைப் பதிப்பித்த ஓ.யு.பி.

பதிப்பகத்தாரிடம் அதைக் கொடுத்திருந்தேன். அவர்களும் அதில் ஆர்வம் காட்டினார்கள். ஆனாலும் பத்து தொகுதிகளும் நூற்றுக்கு மேற்பட்ட படங்களும் கொண்ட பெரிய திட்டம் அதிக காலமெடுக்கும், அதிகமான ஆசிரியப்பணிகளும், பணச்செலவும் கேட்கும். இதனால் இறுதி முடிவெடுக்கத் தயங்கி, முன்வைத்த காலைப் பின்வாங்கும் நிலைபோல் பட்டது. வணிக ரீதியிலும் அடிவாங்கினால் வழக்கத்துக்கு அதிகமான அடியாகிவிடும் என்பதும் தயக்கத்துக்குக் காரணம். பாகிஸ்தானுக்கு ஏற்றுமதி தடை செய்யப்பட்டிருந்ததால், பிரதிகளை விற்க முக்கியக் களம் இந்தியாதான் என்பது எதிர்பார்ப்பு. இந்தியாவில் அந்த அளவுக்கு இந்தத்துறையில் விழிப்புணர்வு இல்லை. இதுபோன்ற குறுகிய பொருள்பற்றிய நூலுக்கு அதிக வெளிநாட்டு சந்தை இராதென்பது அச்சம். இருந்தாலும் அதை நம்பி பணியாற்ற முடியாது என்றும் அஞ்சினர். இவ்வளவு சஞ்சலங்களுக்கிடையே ஒரு நாள் பிற்பகல் தொலைபேசி ஒலித்தது. புகழ்வாய்ந்த பிரிட்டிஷ் பதிப்பகத்தின் தலைவர் வில்லியம் காலின்ஸ் பேசினார். அன்றுகாலைதான் அவர் இந்தியா வந்து இறங்கியிருக்கிறார். தாஜ்மஹால் ஓட்டலில் தன்னைச் சந்திக்க முடியுமா என்று கேட்டார். நான் இப்படி ஒரு நூலெழுதி வருவதாக அவரது உளவாளிகள் கூறியிருக்கிறார்கள். அது உண்மையா-அப்படியானால் எனக்கு பதிப்பாளர் கிடைத்து விட்டாரரா எனத் தெரியவேண்டும்! எனது வழக்கமான பதிப்பாளர்களான ஓ.யு.பி. ஆர்வம் தெரிவித்துள்ளனர் என்பதையும், ஆனால் வணிகப்பார்வையில் அது ஒரு பெரிய திட்டமாகவும் நிச்சயமற்ற சூதாட்டம் போலும் இருப்பதால் தயங்குவதையும் அவரிடம் கூறினேன். அவர் "ஓ.யு.பி. இதை வேண்டாமென்று தீர்மானித்துவிட்டால் நாங்கள் தயார்" என்றார். இதை ஓ.யு.பி.க்கு சொன்னதும் அவர்கள் முடிவெடுக்க வேண்டிய தாகி, உடனே தீர்மானித்து, ஒப்பந்தம் நொடியில் கையொப்பமாகி விட்டது! ஹாகின்சைப் பொறுத்தவரை அது ஒரு மிகத் துணிச்சலான முடிவு, ஆனால், அவர்கள் வருந்தும்படி விளைவு இல்லை என்பது எனக்கும் மகிழ்ச்சியே. பதிப்பக கௌரவம், விற்பனை இரண்டு தளத்திலும் அவர்களுக்கு அது ஒரு குறிப்பிடத் தக்க வெற்றியாயிற்று. அனைத்து தொகுதிகளுக்கும் இரண்டாம் பதிப்பு படிப்படியாக வெளியாகிறது. பத்துத்தொகுதிகளையும் ஒன்றாய்த் தரும் உன்னதமான நோக்கில் வந்த (Compact Book) முழுமைப் பதிப்பு 1983இல் வெளிவந்தது. தேக்கத்தில் கிடந்த பந்தை திரு. காலின்ஸின் அந்தத் தொலைபேசி அழைப்புதான்

இயங்க வைத்தது என்று நினைப்பதை என்னால் தவிர்க்க முடியவில்லை.!

கையேடு (Hand book) நிறைவுபெற்ற இரண்டாண்டுகளில் (1976 செப்டம்பர்) மும்பை 'நவநீத ஹிந்தி டைஜஸ்ட்' ஆசிரியர் திரு. நாராயணதத் என்பவர், எனது வரலாற்றை ஒரு சுருக்கமான நூலாக வெளியிட தயாரிப்புகளை செய்து கொண்டிருந்தவர், எனக்கு சில கேள்விகளை அனுப்பியிருந்தார், "இதை எழுத நாளைக்கு எத்தனை மணிநேரம் உழைத்தீர்கள்? கைப்பட எழுதினீர்களா? சொல்லச்சொல்ல யாராவது எழுதினார்களா?" என்பதும் ஒன்று. அவ்வப்போது பலபேர் இத்தகைய கேள்விகளைக் கேட்கிறார்கள். அவருக்கு சொன்ன விடையே அனைவர்க்கும் பொருந்தும்.

> "சாதாரணமாக நாளைக்கு 10-12 மணிநேரம் உழைத்தேன் (சிலசமயம் 14-15 மணிநேரமும் உண்டு). சாப்பாடு முதலியவற்றுக்காக இடைவேளை இருக்கும். நூலகத்திலும், அருங்காட்சியகத்திலும் ஆய்த்துப்பணியை முடித்தேன். அது 1953 முதல் நடந்துவந்தது. எழுதிமுடிக்க கிட்டத்தட்ட பத்தாண்டுகாலம் பிடித்தது. முதல் நகல்கள் அனைத்தும் என் கையாலேயே எழுதுவேன். (சொல்லி எழுதச் செய்வது இல்லை) மாற்றுவதும் திருத்துவதும் செய்ய ஏராளமாக நேரமெடுத்துக் கொள்வேன். தொடர்களை மாற்றுவது, இடம்மாற்றுவது, சொற்களை மாற்றுவது, கச்சிதமாகவும், கதையளக்காமலும் அமையும் விதத்தில் முடிந்தவரை சொற்றொடர்களைச் சுருக்குவது ஆகியவை இதில் வரும். அறிவியல் பூர்வமான விஷயங்களடங்கிய செய்திகளை வாசகருக்குத் தருவது, அதை இனிமையான படிப்பு அனுபவமாக ஆக்குவது இணையான முக்கியம் பெறுகிறது. இது என் உறுதியான நம்பிக்கை. இப்படி 'பாடாய்படுத்தப் பட்ட' கையெழுத்துப்பிரதியை மூன்றுவரி இடைவெளியில் தட்டச்சு செய்யக்கொடுப்பேன். மீண்டும் மெருகூட்டுவதும் வடிவமைப்பதுமாக அதேவித மறுபரிசீலனை, பலமுறை மீண்டும் தட்டச்சுக்குத் தருவதுண்டு. போதுமான நிறைவு ஏற்படும்போது இறுதி நகல் தட்டெழுத்தில் உருவாகும். அதுதான் அச்சகத்துக்கும் போகும். இது ஒரு நீண்ட மெனக் கெட்ட வேலைதான்—ஆனால் அதில் பயனிருக்கிறது என்பதை அறிகிறேன்!

சிக்கிம் பறவைக் கண்க்கிடு அண்டைநாடான பூடானிலும்

ஆய்வு நடத்தவேண்டும் என்ற பசியை ஏற்படுத்தியது. பிராங்க் லுட்லோ, ஜார்ஜ் ஷெரிப் ஆகியோருக்கு 1933-1934இல் சாத்தியப் பட்டதைவிட தீவிர ஆய்வாக அது அமையவேண்டுமென்பது ஆசை. அவர்களின் ஆய்வுக்காலத்தில் சக்கரவண்டிகளுக்கேற்ற சாலைகள் இல்லை. ஏராளமான ஓடைகளைக் கடக்க பாலங்களில்லை; குன்றிடை இடுக்குகளும் ஏராளம், கடுமையான நிலப்பரப்பில் கூலிகளுடன் விலங்குகள்மீது பயணம் செய்வது அவர்களது நடமாட்டத்தைக் குறைப்பதாக அமைந்திருக்கிறது. அந்தக் கணக்கீடுகள் சாகசப்பயணங்களாகக் காட்சி தந்தன. உண்மையும் அதுதான். இதுபற்றிய சுவையான ஓர் நிகழ்ச்சியை 1937ம் ஆண்டுக்கான 'தி இபிஸ்' கூறுகிறது. என்னை 1960களில் மேன்மை தங்கிய டிரக் கயால்போ ஜிக்மே போர்ஜி வாங்சுக் அழைத்திருந்தார். அவரே ஒருதேர்ந்த வேட்டைக்காரரும், இயற்கை இயலாளரும் ஆவார். வனவுயிர் பாதுகாப்பில் ஆழ்ந்த ஆர்வம் கொண்டவர். பூடான் நாட்டுப் பறவைகள் பற்றி ஆராயவே அந்த அழைப்பு. அதற்கு பதில் உபசாரமாக அவர் தீவிரமாக ஆசைப்பட்டது போல் சிக்கிம் பறவைகள் பற்றிய நூலைப்போலவே பூடான் பறவைகள் பற்றி சித்திர நூல் ஒன்றைத் தயாரித்தேன். எல்லைப்புற சாலை நிறுவனத்தின்மூலம் போக்குவரத்து, தங்கும்வசதி, உணவுப்பொருள் ஆகியவற்றுக்கும் ஏற்பாடு செய்தார். எல்லைப்புற சாலை நிறுவனம் இந்திய அரசு நிறுவனமாகும். பொறியியலாளர்களைக் கொண்ட, ஏறக்குறைய படையினைப் போன்றதோர் அமைப்பு. பூடானின் வடக்குப்புற சர்வதேச எல்லைப்பகுதிகளில் சாலைகள் அமைக்க பூடான் அரசுக்கு அந்த அமைப்பு உதவி வந்தநேரம் அது. பயங்கர செங்குத்தான குன்றுகளின் உச்சியில், முடியவே முடியாதெனத் தோன்றும் மலைகளின் விளிம்புகளில், வளைவும் நெளிவும் நிறைந்த பகுதிகளில், (U வடிவத் திருப்பங்கள் நிறைந்த) பகுதிகளில் நூற்றுக் கணக்கான மீட்டர் உயரத்தில் தொத்தி நிற்கும் பரப்புகளில் சாலையமைப்பதில் பயங்கர சாதனை படைத்தது இந்த அமைப்பு. பணிகளின் நடுவே பலப்பல வாகனங்கள் பள்ளத்தில் உருண்டு போயிருக்கின்றன. மலைச்சாலை ஒன்றில் ஒருமுறை நான் படித்த எச்சரிக்கை அறிக்கை நினைவுவருகிறது. "பிரவேசிக்க வேண்டாம். சாலை அபாயநிலையில் உள்ளது. தப்பிப்பிழைப்போர் தண்டிக்கப் படுவார்கள்!" இங்கே, பூடானிலும், தண்டிக்கப்படும் வாய்ப்பைத் தவிர்த்துக்கொள்ள அந்த மாதிரி அறிவுரைகளை நாங்கள் கண்டிப்பாகப் பின்பற்றி நடந்துகொண்டோம்!

அந்தச் சாலைகள் பொறியியல் தன்மைக்கும் கட்டமைப்புக்கும்

எடுத்துக்காட்டானவை. இடுக்கில்லாத கடும்பாறைகளைப் பிளந்து அமைக்கப்பட்ட சாலைகளில் வளைவுகள் முதலியவை மிகமிகக் கவனமாக, பொருட்கள் ஏற்றிய கனமான எந்த ஒரு வாகனமும் தளவாட வண்டியும் நீண்ட நெடிய ஆழத்தில் சிக்கிவிடும் ஆபத்துக்கு ஆளாகி விடாத அளவில் திறமையாக அமைக்கப்பட்டிருந்தன.

சீனப்படை 1962இல் NEFA (இப்போது அருணாசலப் பிரதேசம் என்று அழைக்கப்படும்) வடகிழக்கு எல்லைப்பகுதியில் நுழைந்தபோது பொம்டிலா வழியாக நமக்கு எல்லைக்கு போகும் ஒரேவழியாயிருந்த சாலையை பாதித்தபோதுதான்—நமக்கு அத்து மீறலைத் தடுத்து நிறுத்த ஒரு மாற்றுப் பாதையுமில்லாத நிலையில் தான்—தேவைப்படும் நேரத்தில் நம்மைப் பாதுகாத்துக்கொள்ள பூட்டான் போன்ற அந்நிய 'நேச' நாடொன்றின் வழியே திபெத் எல்லைக்கு ராணுவ முக்கியம் வாய்ந்த சாலைகளை அமைத்துக் கொள்வதில் பேரபாயகரமான குறைபாட்டை நாம் அதிர்ச்சியுற்று உணர்ந்தோம்.

பூடானில் 1966க்கும் 73க்குமிடையே ஆறு வெவ்வேறு சேகரிப்புப் பயணங்கள் மேற்கொள்ளப்பட்டன. ஒவ்வொன்றும் 4 முதல் 8 வாரங்கள் வரை எடுத்துக்கொண்டன. நாட்டின் கிழக்குப் பகுதி, மேலைப்பகுதி, நடுப்பகுதி அனைத்தும் மிக விரிவாக எடுத்து ஆராயப்பட்டன. சில ஆய்வுகள் முனைவர் ரிப்ளி, திருமதி ரிப்ளி இந்திய உயிரியல் அகத்தின் முனைவர் பிஸ்வமாய் பிஸ்வாஸ் ஆகியோருடன் கூட்டாக நடத்தப்பட்டன. எதிர்பார்த்தபடியே பூடானின் பறவை வாழ்வு என்பது சிக்கிமிலிருந்தோ அருணாசலப் பிரதேசத்திலிருந்தோ ஒன்றும் பெரிதாக வித்தியாசமாக இல்லை. அதனால் அண்டை நாடான சிக்கிமுக்கென தனியே விரிவாக ஒரு நூல் உள்ள நிலையில், பூடானுக்கென்றும் ஒரு நூல் எழுதுவது தேவையில்லை என்றுபட்டது. கிழக்கு மத்திய நேபாளம் முதல் அருணாசலபிரதேச கிழக்கெல்லை வரையான கிழக்கத்திய இமாலயப் பகுதி முழுவதும் நிலஇயல் அடிப்படையில் ஒரே வகை என்பதால் இப்பகுதி முழுமைக்குமாக களப்பணி வழிகாட்டியின் அமைப்புக்கு பழைய நூலையே வடிவமாற்றம் செய்வதே யதார்த்தத்துக்கு உகந்தது என்ற என் கருத்தை மன்னரும் தனக்கே உரிய அறிவூப்பூர்வ அணுகுமுறையில் ஒப்புக்கொண்டார். ஓவியங்களை வடிப்பதற்கான செலவில் பெரும்பகுதி செலவை ஏற்பதுடன் நூல் வந்ததும் 500 பிரதிகள் வாங்கிக்கொள்ளவும் ஆயு.பிக்கு மானியமாக தன் அரசின் ஒப்புதலை அளித்தார். 'கிழக்கத்திய இமாலயப் பறவைகள் பற்றிய களப்பணிக் கையேடு'

(Field Guide to the Birds of the Eastern Himalays) என்பது நூலின் பெயர். (இந்தப் பெயரில் 'பூடான்' என்று) வெளிப்படையாகக் குறிப்பிட வில்லை என்ற காரணத்துக்காக மன்னர் மறைவுக்குப் பின்னர் வந்த அடுத்த அரசு இந்த ஒப்புதலை முறையற்ற வகையில் ரத்து செய்துவிட்டது!) இதே போல் 'ஒரு துவக்கமாக' 300 பிரதிகளை வாங்கிக்கொள்வதாக மன்னர் கூறியிருந்தார். ஆனால் நூல் வெளிவரும் முன்பே மன்னராட்சி காற்றோடு போய்விட்டது. இத்தகைய எதிர்பாராத இடர்களிடையே 1977இல் வெளிவந்த இந்நூலும் வாசகர்கள்-விமர்சகர்கள் இருசாரார் இடையிலும் அருமையான வரவேற்பைப் பெற்றது. விலை ரூ.130க்கு உயர்த்தப் பட்ட நிலையிலும் 1983 வரை நூல் 3 மறு பதிப்புகளைக் கண்டது. இப்போதும் வேகமாக விற்பனையாகிக் கொண்டிருக்கிறது.

இந்தியாவின் நேஷனல் புக் டிரஸ்ட் நிறுவனம் பண்டிதநேரு அவர்களின் ஆர்வத்தால் 1957இல் தன்னாட்சி நிறுவனமாக அமைக்கப் பட்டது. நாட்டுமக்களை புத்தக நேயர்களாக்கும் இயக்கமாக பணிபுரிவதென்ற முக்கியக் குறிக்கோளுடன் நிறுவப் பட்ட இந்த அமைப்பு ஆங்கிலம், இந்தி, இந்தியாவின் ஏனைய மொழிகள் ஆகியவற்றில் நல்ல இலக்கியத்தைப் பதிப்பிக்கவும், பிறர் பதிப்பிப்பதற்கு ஊக்கம் தரவும், தன்நூல்களை மலிவு விலையில் விற்கவும், செயலாற்றுவதைப் பணியாகக்கொண்டது. இவர்களது நூல் வரிசைகளில் ஒன்று 'இந்தியா-நாடும் மக்களும்' என்பது இவ்வரிசைக்கான நூல்கள் பலதுறைகளிலும் துறைசார் மேதை களைக் கொண்டு எழுதப்பெறும். 'சாமானியர்கள்' பொது அறிவை வளர்க்கக்கூடியதான, கலைச்சொற்கள் கலவாத மொழி நடையில் அமையும். நேர்த்தியாக அச்சிடப்பட்டு கவர்ச்சியான அமைப்பில் வெளிவரும். சாமானியனுக்கு கையைக் கடிக்காதபடி விலை அமையும். இவ்வமைப்பின் தலைவர் முனைவர் பி.வி. கேஸ்கர் 1965இலோ முன்பின்னாகவோ 'பொதுவான பறவைகள்' (Common Birds) பற்றி ஒரு நூலெழுதித்தருமாறு கேட்டுக்கொண்டார். கிட்டத்தட்ட எனது 'இந்தியப் பறவைகள் பற்றிய நூல்' போல அமையலாம் என்றார். அது பறவைகள், பறவையியல் ஆகியவற்றில் சாமானியர்களின் ஆர்வத்தைத் தூண்டுவதில் வெற்றிகண்டது. ஆனால் விலைதான் கீழ்நடுத்தர வர்க்கத்துக்கு அதிகம் என்று கூறப்பட்டது. இந்தியாவின் பெரிய மொழிகள் அனைத்திலும் மொழியாக்கம் செய்து வெளியிடுவதன்மூலம் செய்தி நாடுமுழுவதும் எடுத்துச் செல்லப்படும்.

அது முழுமையாக நான் மும்பைக் கழகத்தின் 'கையேடு'

வெளியிடும் பணியில் ஈடுபடிருந்த நேரம். ஆனாலும் இவர்களின் நியாயமும் எனக்குப் புரிந்தது. தேவை, வாய்ப்பு எல்லாம் புரிந்தது. அவரது வேண்டுகோளைப் புறக்கணிக்க மனமில்லை. எனவே அதனை ஏற்றுக்கொண்டேன். ஆனால் இன்னொருவரை இணை ஆசிரியராக சேர்த்துக்கொண்டு அவருடன் கூட்டாக இந்நூலைக் கொண்டு வருகிறேன் என்று தெரிவித்தேன். எனது மருமகள் லயீக் (திருமதி ஜாபர் புட்டேஹலி) கூர்மையான இயற்கை நேயமுள்ள, கற்பனை வளம் படைத்த பத்திரிகையாளர். சரளமான இனிய ஆங்கிலநடை கைவரப்பெற்ற பெண். தனது இளம்பருவத்தில் எனது பறவையியல் சிஷ்யகோடிகளில் ஒருத்தி; ஆர்வமிக்கவள். காலப் போக்கில் அதிலும் ஒரு தேர்ச்சி வரப்பெற்றவள். இந்த புதிய பொறுப்பை ஏற்கும்படி வற்புறுத்தினேன். எனது மிகக்குறைந்த தொழில் நுட்ப உதவியையும் அறிவியல் அறிவுரையையும் கொண்டு விரைவாக ஒரு இனிய எளிய நூலினை அவள் படைத்தாள். அது நூல் நிறுவனத்தின் நோக்கங்கள் அனைத்தையும் நிறைவுசெய்தது. 'இந்தியா—நாடும் மக்களும்' வரிசையின் நூல்களிலேயே மக்கள் வரவேற்பில் அது முதலிடம் பெற்றது என்றே சொல்லலாம். குறைந்தது முதன்மையான நூல்களில் ஒன்று என்று உறுதியாக சொல்லலாம். 'பொதுவான பறவைகள்' என்பதே நூலின் பெயராக அமைந்தது. 1967-68இல் அது நான்குமுறை அச்சிடப்பெற்றமையே அதன் புகழுக்குச் சான்றாகும். பிறகு கொஞ்சம் வடிவமைப்பு மாற்றத்துடனும் புது ஓவியங்களுடனும் ஒவ்வொரு படத்திலும் பல பறவைகள் முற்றும் புதியதாக, ஒரு ஆங்கிலப்பதிப்பு தொடர்ந்தது. ராஜ்கோட்டைச் சேர்ந்தவரும் வளர்ந்துகொண்டிருந்த பறவை ஓவியருமான இளைஞர் கே.பி.ஜாதவ் அதில் பங்கேற்றார். அது ஹிந்தியிலும் மராத்தி, குஜராத்தி, பஞ்சாபி, தமிழ், தெலுங்கு, மலையாளம், ஓரியா, வங்காளி, அசாமி என்று ஏறத்தாழ எல்லா மொழிகளிலும் மொழியாக்கம் செய்யப்பெற்றது. அவற்றில் பல மொழியாக்கங்களில் மறு பதிப்புகளும் வந்தன. ஆங்கில மூலநூல் எப்படி நாடு முழுவதும் பரவலான முறையில் தொடர்ந்து அதே வரவேற்பை மக்களிடம் பெற்று வருகிறதோ, அவ்வண்ணமே மொழியாக்க நூல்களும் அந்தந்த வட்டாரங்களில் புகழுடன் விளங்குகின்றன.

22

# பரிசுகள்

நான் சிறுவனாக இருந்தபோது—ஏன் அண்மைக்காலம் வரைகூட, இந்தியாவில் உயிரியல் என்றால் உடலின் பணியும் பங்கும் பற்றி பயிலுதல், உடலினைக் கூறுபோட்டு உடலமைப்பைப் பயிலுதல், உடலைப்பதனிட்டு தோல் அமைப்பு இத்யாதிகளைப் பயிலுதல், அவ்வளவுதான். இதுதான் வகுப்பிலும் சோதனைக்கூடத்திலும் கற்பிக்கப்பட்டு வந்தது. வெளியில் வந்து உலகில் இயற்கைச் சூழலில் உயிரினங்களின் வாழ்க்கை பற்றிக் கற்பது பற்றி யாருக்கும் கவலையில்லை. சூழலியலும் மரபியலும் (Ecology & ethology) (இன்று எல்லாரும் பயன்படுத்தும் நாகரிக அடையாளச் சொற்களாகி விட்டன) அன்று செவியறியாச் சொற்கள்! நான்கு சுவர்களுக்கு வெளியிலான கல்வி என்பது வகைப்படுத்தவும், உடலைப் பகுத்துப் பார்க்கவும், விளக்கிக்கூறவும் உதவுமென்பதற்காக மாதிரிகள் சேகரிப்பது, அதை பதப்படுத்தி சேமிப்பதுடனும் முடிந்தமாதிரி தான். அரிதான மதிப்புக்குரிய விதிவிலக்குகளில் சுந்தர்லால் ஹோரா ஒருவர். ஆனால், அவர் காலத்தால் பின்னால் வருபவர். இந்திய உயிரியல் நிறுவன (Zoological Survey) இயக்குநர் பொறுப்பு வரை உயர்ந்த மீன் இயல் அறிஞர். இந்திய புதுப்புனல் மீன்களின் உடலியல், சூழலியல் ஆகியவை பற்றியும் மீன்கள் சூழலுக்கு தம்மை மாற்றிக்கொள்வது பற்றியும், இந்தோ-மலாய் மீன் இனங்கள் பூகோள அடிப்படையில் பரவிக்கிடப்பதில் உள்ள விந்தைகள் பற்றியும் ஹோரா நிகழ்த்திய ஆய்வுகள் மரபு மீறியவை; நியாயமான சர்வதேசப் புகழை அவருக்குத் தந்தவை.

என்னைப் பொறுத்தவரை, எப்போதுமே பறவைகளில் என் ஆர்வம் அவற்றின் உயிர்வாழ்விலும், சூழலியல், நிலஇயல் இவற்றிலும்தான். ஆய்வு அறிக்கைகளிலும் சரி, நூல்களிலும் சரி, சூழலியலுக்கு முக்கியத்துவம் தந்து வந்திருக்கிறேன். ஜெர்மனியில் புதுப்பாதை அமைத்த பறவை இயலாளர்களான ஸ்டெரஸ்மான்,

ஆஸ்கார் ரெய்ன்ஹராத் போன்றவர்கள் உறவினால் 'தொற்றிக் கொண்டது' அந்தப் பார்வை. அவர்கள் இந்த அணுகுமுறையை வலுப்படுத்தினார்கள்-வழிப்படுத்தினார்கள். இந்திய உயிரியல் நிபுணர்களில் மிகச்சிலரே என் இந்த 'புதிய' சூழல்முறை அணுகுதலை எனது அறிவியல் பூர்வமான எழுத்துகளில் இனம் கண்டனர், பாராட்டினர். அவர்களில் நிச்சயமாக ஹோராவும் ஒருவர். எனது ஆய்வுகளைப்பற்றி வெளியிட்ட மதிப்பீடுகள் காரண மாகவே அவர் தலைவராக இருந்தபோது 1953இல் 'வங்காள ஆசியாடிக் சங்கம்' பெருமைக்குரிய பரிசான 'ஜெய்கோவிந்தா சட்ட தங்கப்பதக்க'த்தை எனக்கு அளித்தது. அதன் விருதளிப்பு பட்டயத்தில் எனது "ஆசிய சார்பான உயிரியல் ஆராய்ச்சிகளுக்காக" என்று கூறியிருந்தார்கள். எனக்குக் கிடைத்த இத்தகைய அங்கீகாரங்களில் இதுதான் முதலில் கிடைத்தது. எனக்கு 1967இல் தரப்பட்ட 'பிரிட்டிஷ் பறவையாளர் சங்கப் பதக்கம்' முதலிய வேறு சில பரிசுகள் ஆசியாடிக் சங்கப்பதக்கத்தைக் காட்டிலும் சர்வதேச அளவில் மிகமிக மதிப்புள்ளவையாக இருந்தாலும் உணர்ச்சி பூர்வமாக ஆசியாடிக் சங்கப் பதக்கமே முதலிடம் பெறுகிறது. ஏனெனில், அதுவே ஒரு இந்தியனுக்கு இத்துறையில் கிடைத்த முதல் பாராட்டு. எனக்கு முன்பு பிரிட்டிஷ் சங்கப்பரிசு ஆங்கிலேயர் களுக்கு மட்டுமே கிடைத்திருந்தது. முதல் வெளியாள் நான்தான். அதோடு, யாருக்குமே அவரது பணிக்காக முதன்முதலில் அளிக்கப் படும் கௌரவமே வேறெந்த கௌரவத்தையும் விட சிறப்பானது. ஏனென்றால் அதுவே வேறு எவரது உதாரணத்தாலும் பாதிக்கப் படாமல் தருபவர்களின் சுத்தமான விமர்சன மதிப்பீட்டின் விளைவாக தீர்மானிக்கப்படுகிறது. அந்த அங்கீகாரமே பிறகு வருகிற அங்கீகாரங்களைத் தருகிறவர்களுக்கு முன்னுதாரணமும், ஓரளவு பாதிக்கும் நிர்ணய சக்தியாகவும் அமைந்துவிடல் இயற்கையே. அதுபோலவே கௌரவ முனைவர் பட்டங்களில் அலிகர் இசுலாமிய பல்கலைக்கழகம் முனைவர் பட்டம் தந்ததே உணர்ச்சிபூர்வமான முறையில் வேறெதையும் விட முக்கியமானது. ஏனெனில், அதுதான் எனது பணிகள் பற்றிய மதிப்பீடுகளின் அடிப்படையில் முதன் முதலில் தரப்பட்ட முனைவர் பட்டமாகும். பிறகு 1973இல் தில்லி பல்கலைக்கழகமும் 1978இல் ஆந்திரப் பல்கலைக்கழகமும் இதே மரியாதையை எனக்களித்ததை நான் சற்றும் குறைத்து மதிக்கவில்லை ஆனால் உணர்ச்சிபூர்வமாக அவை அலிகர் மரியாதைக்கு முற்றிலும் இணையானவையல்ல.

ஏதாவது ஒரு வழியில் என் விதியோடு பின்னிப்பிணைந்து

விட்ட நிறுவனம் மும்பை இயற்கை வரலாற்றுக் கழகம்-அதுவும் 1923இல் பர்மா (மியான்மர்) நாட்டிலிருந்து 'மீண்டு' வந்தபிறகு மிக நெருக்கமாக மும்பைக் கழகம் இந்தியாவில் வனவுயிர் பாதுகாப்புக்கான இயக்கத்தை முன்னின்று நடத்திய அமைப்பு, நேரிடையாகவோ, மறைமுகமாகவோ அதனுடைய நூறாண்டுகால வாழ்வின் காலகட்டத்தில் நம் நாட்டில் இயற்றப்பட்ட எல்லா வேட்டைச் சட்டங்கள், வனப்பறவை விலங்குகள் ஆகியவற்றின் நலம் நாடும் சட்டங்கள் அனைத்தையும் உருவாக்கியதிலும் கழகம் பங்களித்துள்ளது. சிறுபையனாயிருந்த நாள்தொட்டு நானும் ஒரு ஆர்வமுள்ள வேட்டைக்காரன். ஆனாலும் நமது காடுகளும் வனவுயிர் களும் படிப்படியாக அதே சமயம் மிகவிரைவாக குலைந்துவருதல் கண்டு என் கவலையும் வயதோடு கூட அதிகரித்தே வந்துள்ளது, அதுவும் இரண்டாம் உலகப்போருக்குப்பின் பாதுகாப்பு மனப்பாங்கு கொண்ட பிரிட்டிஷ் வனக்காவல் அலுவலர்கள் தாயகத்துக்குக் கப்பலேறியதும், சட்ட ஒழுங்கு ஏற்பாடுகள் மெத்தனமானதும் மன்னராட்சிப்பகுதிகள் என்ற அமைப்பு மறைந்ததும் இந்தச் சீரழிவின் வேகத்தை விரைவாக அதிகப்படுத்தின. மன்னராட்சிப் பகுதிகள் வனவுயிர் பாதுகாப்பில் பயனுள்ள முறையில் ஆர்வம் காட்டின. இயற்கையை காத்துப் பராமரிப்பது மும்பை கழகத்தின் பணிமரபு. அதன் கௌரவச் செயலாளராகவும், பத்திரிகையின் ஆசிரியனாகவும்—விரும்பியோ, விரும்பாமலோ—அந்தச் சிறப்புகள் என்னை வந்தடைந்தபோது என் சக்திக்கேற்ற அனைத்து முறைகளிலும் அதனைப்பேணி வந்தேன். கழகப்பணி தொடர்ந்து நடைபெறுதல், அதன் நோக்கங்கள் பிரசாரம் செய்யப்படல் இரண்டுக்கும் ஒல்லும் வகையான நல்வினை யாவும் செய்து வந்துள்ளேன்.

உலக வனவுயிர் நிதியம் 1961இல் அமெரிக்கா, பிரிட்டன், சில ஐரோப்பிய நாடுகள் ஆகியவற்றைச் சேர்ந்த இயற்கைப் பாதுகாப்பு நிபுணர்கள் சிலரது முயற்சியால் பிறப்பெடுத்தது. "இயற்கைப்பாதுகாப்பு, இயற்கை வளப்பாதுகாப்புக்கான சர்வதேச சங்கத் (IUCN) திட்டங்களுக்கு உலகு தழுவிய முறையில் வேண்டு கோள்கள் மூலம் நிதிசேர்ப்பது அதன் தலையாய நோக்கமாகும். அது அமெரிக்காவின் எண்ணெய்த் தொழில் குபேரன் திரு. ஜே.பால்கெட்டிக்கு சர்வதேச ஜே.பால்கெட்டி வனவுயிர்ப் பாதுகாப்புப் பரிசை நிறுவுமளவுக்கு ஆர்வத்தை உண்டுபண்ணியது. இந்தத் துறையின் நோபல் பரிசாக இந்த 50,000 (ஐம்பதாயிரம்) டாலர் பரிசு கருதப்படுகிறது. முதன்முறையாக 1974க்கான இந்தப்

பரிசுக்குரியவரைத் தேர்ந்தெடுக்க பல நாடுகளையும் சேர்ந்த தலைசிறந்த 13 இயற்கையிலாளர்களைக்கொண்ட பன்னாட்டு நடுவர்குழு இப்பரிசுக்குரிய தகுதி கொண்ட ஒரு நிறுவனம் அல்லது தனியார் ஒருவரைப் பரிந்துரைக்குமாறு உரிய காலத்தில் பலருக்கு எழுதிக் கேட்டதில் நானும் இருந்தேன். இந்தியாவில் வனவுயிர் பாதுகாப்பிலும், இயற்கை பற்றிய அறிவைப் பரப்புவதிலும் உன்னதப் பணி செய்துவருகிற மும்பைக் கழகத்தின் பணிகள் போற்றி அகவல்கள் பாட ஆளில்லாமையால் உலகம் அறியாமல் கிடக்கிற நிலையில், 'நல்ல சமயமடா, இதை நழுவ விடுவாயோ' என்றெண்ணி மகிழ்ந்து நான் அதன்பெயரைப் பரிந்துரைத்தேன். அதற்கு பயனில்லாமல் ஏமாற்றம் மிஞ்சியது. இருந்தாலும் எனக்கு அதன் புகழை அந்த சர்வதேசிய நடுவர்குழுவின் பார்வைக்குக் கொண்டு வரவாவது செய்தோமே என்று ஒரு நிறைவு ஏற்பட்டது. அவ்வளவுதான். பெரு நாட்டு பெலிப் பெனவிடஸ் என்பவருக்கு, அழிந்து போகும் நிலையிலிருந்த தென்னமெரிக்க 'வைகுனா' என்னும் கம்பளி தரும் உயிரினத்தைக் காத்தமைக்காக பரிசு அளிக்கப்பட்டது. பிறகு 1976 ஜனவரியில் ஒரு நாள் காலை சிற்றுண்டி சாப்பிடும் முன்பு, முதலழைப்பாக தொலைபேசி ஒலித்தது. எதிர்பார்க்கப்பட முடியாதவர் அழைத்தார். உள்ளூர் கிளை அஞ்சலகத்தலைவர் அபோதுதான் வாஷிங்டனிலிருந்து என் பெயருக்கு வந்திருந்த ஒரு தந்தியை பெற்றுக்கொள்ள நேரில் வரமுடியுமா என்று கேட்டார். வழக்கப்படி ஏன் அவர் எனக்கு அனுப்பிவைக்கக்கூடாது என்று கேட்டேன். அந்தத் தந்தி எனக்கு ஒரு பரிசு கிடைத்திருப்பதைக் கூறுவதால் அதை நேரில் கொடுத்துப் பாராட்ட அவர் ஆசைப் படுவதாகச் சொன்னார். நான் எந்தப் பரிசையும் எதிர்பார்த் திருக்காததால் எனக்கு இது பெரும் புதிராக இருந்தது. ஏதோ, எங்கோ தவறு நடந்துள்ளது என்று நினைத்தேன். நேசம் ததும்ப அவர் என்கையில் கொடுத்த தந்தியில் என் முகவரிதான் இருந்தது. "ரகசியமாக வைத்துக்கொள்ளவும். உங்களை 1976ஆம் ஆண்டுக்கான ஜே. பால்கெட்டி வனவுயிர் பாதுகாப்புப் பரிசுக்குத் தேர்வு செய்திருக்கிறோம். விபரங்கள் சில நாட்களில்.–தாமஸ் லவ்ஜாய்" (பரிசுக்கான நடுவர்குழு ஒருங்கிணைப்பாளர்) என்றிருந்தது. அப்போதும் நான் மும்பைக் கழகம் என்பதற்கு தவறாக (பரிந்துரை செய்த) என்பெயர் வந்துவிட்டது என்றெண்ணினேன். ஏனெனில் யாராவது என் பெயரை அனுப்பியிருந்தால், எனக்குத் தெரிந்திருக்க வேண்டுமே. எல்லாம் புரிய சிறிது காலம் பிடித்தது. அமெரிக்க நாடாளுமன்ற மேலவையான (மாநிலங்களவை) செனட்டில்

மேரிலாண்ட் மாநில உறுப்பினர்கள் இருவரில் ஒருவரான (இளைய) சார்லஸ் மெக். மத்தியாஸ் எனது பெயரைப் பரிந்துரைத்திருக்கிறார். எனக்கும் அவருக்கும் நண்பரான, மும்பைக் கழகத்துக்கும் எனக்குமுள்ள உறவை அறிந்திருந்த, அதன் பணிகளைப்பற்றி மிகத் தெளிவாகத் தெரிந்திருந்த, நிரந்தரமாக அதற்கு ஆதரவும் ஆசிகளும் தந்துவந்த யாரோ ஒருவர்தான் இந்த மத்தியாசை இதில் ஈடுபடுத்தியிருக்க வேண்டும். பரிசுடன் ஒரு பாராட்டுரையும் வந்து சேர்ந்தது. ஐயத்துக்குரிய அதே மனிதர்தான் இதற்குப் பின்னாலும் இருந்திருக்கிறார் என்பதில் ஐயமில்லை!

என் 'தயாவானை' இனங்கண்டு செனட்டர் மத்தியாசுக்கு ஒரு கடிதத்தில் அவரது மரியாதைக்கு நன்றி கூறிவிட்டு கூடவே என் மகிழ்ச்சியையும் ஆச்சரியத்தையும் அதில் தெரிவித்தேன். அவரது 8.3.76 தேதியிட்ட அழகான பதிலில் அவர் "இரண்டாம் ஆண்டுக்கான பால்கெட்டி பரிசுக்கு உங்களைப் பரிந்துரைக்க நேர்ந்தது எனக்கு கௌரவமாகும். பரிசினை வென்றதற்கும், அதன்மூலம் எனது முடிவு சரியானதே என்பதற்கு பன்னாட்டு நிபுணர்களின் நடுவர் குழுவின் ஒப்புதல் கிடைத்ததற்கும் உங்களுக்கு நான் நன்றி கூறுகிறேன். இந்த பரிசுக்கு தாங்கள் மிக்சரியானவர். உங்களுக்கு கிடைத்தமைக்கு நான் மகிழ்ச்சி அடைகிறேன். பாராட்டுக்கள்" என்று எழுதினார். எனக்குத் தருவதென்ற முடிவு கிட்டத்தட்ட ஏகமனதான முடிவென பின்னர் தெரிந்தபோது என் உவகை இரட்டிப்பாயிற்று. அமெரிக்க மேலவையின் நடவடிக்கைக் குறிப்பில் 25.3.76 அன்றைய பகுதியில் அமெரிக்க அதிபருக்கு மத்தியாஸ் சமர்ப்பித்த உரையினைப் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது.

> அதிபர் அவர்களே, பல ஆண்டுகளுக்கு முன்பு இந்தியா சென்றிருந்தபோது இந்தியாவின் பிரபல பறவையியல் மேதை சாலிம் அலியை சந்தித்ததுண்டா என்று பிரதமர் திருமதி காந்தி கேட்டார். நான் இல்லையென்றதும் அந்த சந்திப்புக்கு உடனடியாக ஏற்பாடு செய்தார். அதன்மூலம் என் நினைவுக்கெட்டியவரை என் வாழ்வில் அதிகபட்ச மகிழ்வும் இனிமையுமான ஒரு அனுபவத்துக்கு வாசலைத் திறந்து விட்டார். மும்பையை அடுத்த தேசியப் பூங்காவில் சாலிம் அலியுடன் ஒரு நாளைக் கழித்தேன். வனங்களில் பொதிந்துள்ள இயற்கையின் அழகுக்கு என் கண்களை அவர் திறந்துவிட்டது மட்டுமல்ல, வரலாற்றிலேயே விறுவிறுப்பான ஒரு காலகட்டத்தில் இந்திய மக்களின் வாழ்வின் சகல அம்சங்களிலும் அவர் கண்ட, கற்ற அனுபவங்களை அலி

என்னுடன் பகிர்ந்துகொண்டதும் என் நற்பேறாகும். அன்று நான் இந்தியப் பறவைகளைப் பற்றி கொஞ்சம் கற்றுக் கொண்டேன். அதனிலும் மேலாய் உலகெங்கும் மனித குலத்தினருக்கு பொதுவாகக் காணக்கிடைக்கும் மனித இயற்கையின் பண்புநலன்களைப் பற்றியும் தெரிந்து கொண்டேன். ஜெ.பால்கெட்டி சூழல்காப்புப் பரிசுக்காக யாரையாவது பரிந்துரைக்கும்படி உலக வனவுயிர் நிதியம் என்னைக் கேட்டுக்கொண்டபோது அவர் பெயரை மகிழ்வுடன் முன்மொழிந்தேன். இன்றையதினம் சூழல் பாதுகாப்புக்காக நிறுவப்பட்டுள்ள பரிசுகளிலேயே அனைத்திலும் பெரிதான இந்த ஐம்பதாயிரம் டாலர் பரிசுக்கு அலி தெரிவு செய்யப்பட்டிருப்பதாக குடியரசின் துணைத்தலைவர் ராக் பெல்லர் அறிவித்தபோது நான் மெத்தவும் மகிழ்வெய்தினேன். 'இந்தியாவில் சூழல் பாதுகாப்புக்கான ஒரு சூழ்நிலை உருவாக்கியவர்' என்று சாலிம் அலி சிறப்பிக்கப் படுகிறார்."

மும்பையின் காலை நாளேடுகளில் பரிசுச் செய்தி வெளியாகி சில மணிநேரங்களுக்குள் எனக்கு தொலைபேசியில் வெள்ளம் போல் அழைப்புகள், வங்கியாளர்கள், முதலீட்டுத்தரகர், அந்த மாதிரி வகைகளைச் சார்ந்த பல்விதமான பெரிய மனிதர்கள்! எல்லாம் தர்மத்துக்கு அறிவுரைகள்! உயர்ந்த வருமானம் வருமாறு எப்படி முதலீடு செய்வது என்று நுட்ப அறிவுரைகள்! அவரவர் நிறுவனமே அனைத்திலும் சிறந்தது என்ற இறுதித் தீர்ப்புகள்! அப்புறம் இத்தனை பணத்தை நான் என்ன செய்யப்போகிறேன் என்று அறியத்துடித்து மூக்கை நுழைப்பவர்களின் விசாரணைகள் வேறு. அத்தனை இனிய சுருக்கமான விசாரிப்புக்கும் ஒரே பதிலாக "நானே எல்லாவற்றையும் சாப்பிட்டு விடலாமென்று நினைத்தேன். இப்போது பார்த்தால் இத்தனைபேர் ஏகப்பட்டபேர்-வந்து விட்டா(டீ)ர்கள்" என்று சொன்னேன். பரிசின் மிகப்பெரும் பகுதி மும்பை கழகத்துக்குச் சென்றது. ஒரு நெடுங்கால அருங்கனவு பலிக்க அது உதவியது. ஆம், அவர்கள் அமைக்க விரும்பிய 'சாலிம் அலி இயற்கைப் பாதுகாப்பு நிதியம்' அமைக்க அடிப்படை நிதியாக அது அமைந்தது. லோக் வான் தோ இக்கழகத்தின்பால் கொண்டிருந்த அன்புக்கும் மரியாதைக்கும் அடையாளமாக தாராளமனம் படைத்த அவரது குடும்பத்தினர் உவந்தளித்த பெருங்கொடை அந்த நிதியத்துக்கு வலுச்சேர்த்தது. தகவல் தாமதமாகக் கிடைத்ததால்

நியூயார்க்கில் 1976 பிப்ரவரியில் நடந்த பரிசளிப்பு விழாவில் கலந்து கொண்டு பால்கெட்டி பரிசை நேரில் பெறமுடியவில்லை. என்சார்பில் நமது தூதரான. டிஎன் கவுல் பரிசைப் பெற்றுக்கொண்டார். அவரது பொருத்தமான உரை அனைவராலும் பாராட்டப்பெற்றது. உலக வனவுயிர் நிதியத்தின் வேறொரு நிகழ்ச்சிக்காக அதே ஆண்டு சான் பிரான்சிஸ்கோ சென்றிருந்தேன். அங்கு எனக்கு முன் பால்கெட்டி பரிசைப் பெற்றிருந்த பெலிப் பெனவிடிஸை சந்தித்தேன். அதை அவர் ஒரு லட்சம் டாலர் சந்திப்பு என்று கூறினார்!!

பல்லாண்டு கால வாழ்வில் எனக்கு கிடைத்த விருதுகளையும் பரிசுகளையும் பட்டியலிட்டு இந்த அத்தியாயத்தை முடிக்கிறேன். இங்கு இதனைப் பட்டியலிடுவதற்கு இரண்டு காரணங்கள்—ஒன்று செய்திகள் எங்காவது பதிவாகவேண்டும் என்பது. அத்தோடுகூட, காலஞ்சென்ற மரியாதைக்குரிய என் மூத்த உறவினர்களைப்போன்ற சந்தேகப் பிராணிகளுக்கு, பறவையியல் போன்ற பார்ப்பதற்கு பயனற்றதாய்த் தோன்றுகிற பணிகூட முற்றிலும் பயனற்றதல்ல, பரிசு தராததல்ல. விடாமுயற்சியுடனும் முழு அர்ப்பணிப்புடனும் பணியாற்றவேண்டும். அவ்வளவுதான் என்று உணர்த்தி விடவேண்டும் என்பது இரண்டாவது காரணம்.

1953 ஆசியக் கழகத்தின் 'ஜெயகோவிந்தா சட்டப் பதக்கம்' ஆசிய உயிரியல் ஆராய்ச்சிகளுக்காக.

1958 இந்தியக் குடியரசுத் தலைவரின் பத்மபூஷண் விருது 'இந்தியப் பறவையியலுக்காற்றிய சீரிய பணிக்காக'.

1958 (கௌரவ) முனைவர் பட்டம்-அலிகர் இஸ்லாமிய பல்கலைக்கழகம்.

1967 பிரிட்டிஷ் பறவை இயலாளர் மன்றத்தின் தங்கப்பதக்கம்.

1969 இயற்கைவளப் பாதுகாப்புக்கான சர்வதேச சங்கத்தின் ஜான் சி.பிலிப்ஸ் நினைவுப் பதக்கம். 'சர்வதேச இயற்கைப் பாதுகாப்புத் துறையில் சீரிய பணிக்காக'.

1970 சுந்தர்லால் ஹோரா நினைவுப் பதக்கம்; இந்திய தேசிய அறிவியல் கழகம். 'இந்தியப் பறவையியலுக்காற்றிய தலையாய பணிக்காக'.

1973 பாவ்லோவஸ்கி நூற்றாண்டு நினைவுப் பதக்கம், சோவியத் நாட்டு மருத்துவ அறிவியற்கழகம்.

1973 இன்சிக்னியா ஆப் ஆபீசர் இன் தி ஆர்டர் ஆப் தி கோல்டன் ஆர்க். (துங்கவளைவு வரிசையில் அலுவலர் அடையாளம்) மாட்சிமை தாங்கிய மன்னர்குல இளவரசர் பெர்னார்ட், நெதர்லாந்து.

1976 வனவுயிர் பாதுகாப்பான ஜெ. பால்கெட்டி சர்வதேசப் பரிசு.
1978 (கௌரவ) முனைவர் பட்டம்-ஆந்திர பல்கலைக் கழகம்.
1979 சி.வி. ராமன் நினைவுப்பதக்கம்-இந்திய தேசிய அறிவியல் கழகம்.
1981 வங்கதேச ஆசியக்கழகத் தங்கப்பதக்கம். இந்தியத் துணைக் கண்ட பறவை இயலுக்கு அளித்த சீர்மிகு பங்களிப்புக்காக.
1981 கல்கத்தா ஆசியக் கழகத்தின் ரவீந்தர்நாத் தாகூர் பட்டம்.
1982 பறவையியல் தேசிய ஆராய்ச்சிப் பேராசிரியர்-இந்திய அரசு
1983 தேசிய வனவுயிர் கூட்டமைப்பு (அமெரிக்கா) வழங்கும் சர்வதேச (சூழல்) பாதுகாப்புப் பரிசு.
1983 வனவுயிர் பாதுகாப்புக்கான தேசிய விருது (துங்கப்பதக்கம்) இந்திய அரசு.

23

# பறவைக்கல்வியின் சாகச அனுபவங்கள்

பறவைகள் பற்றிய ஆய்விலேயே வாழ்நாள் முழுவதும் கழித்ததில் என் சாகச அனுபவங்கள் என்ன என்பது என்னை எங்கும் எதிர்கொள்ளும் கேள்விகளில் ஒன்றாகும். வீரதீரக் கதைகளை ஆவலுடன் எதிர்பார்க்கிறவர்களுக்கு நான் தந்து வரும் ஒரே பதில் ஏமாற்றம்தான் அளிக்கும். பறவையியல்-இதை நீங்கள் பொழுது போக்கு என்றோ தொழில் என்றோ, ஆர்வம் என்றோ எப்பெயர் சொல்லிக்குறித்தாலும், எவ்வளவுதான் சாகசங்களுக்கும் பரிசு களுக்கும் ஏமாற்றங்களுக்கும் இடமளித்தாலும், அதன் இயல்பு அடிப்படையில் மிகமிக அமைதியான புறவெளிப் பயிற்சிகளில் ஒன்று. அதில் விறுவிறுப்புக்கு குறைவொன்றுமில்லை. நிச்சயமாக சாகசங்களுக்கும் குறைவில்லை. ஆனால், அவை சாதாரணமாக இக்கேள்வியை கேட்பவர் நினைக்கிற வகையின அல்ல என்பது வேறு. ஒருவர்க்கு ஏற்படும் ஐயம் அல்லது யூகம் ஆகியவற்றை அவற்றின் பின் சென்று ஆதாரங்களைத் தேடுவதும் அதன் பின் சென்று படிப்படியாக ஒரு உண்மையை (உண்மைகளை) கண்டுபிடிப்பதும் (உறுதிப்படுத்திக்கொள்வதும்) தான் இங்கு நான் குறிப்பிடும் 'சாகசம்'. இப்படி, 1930இல் வேலையில்லாமல் கிஹீம் பகுதியில் லத்தீப் குடும்பத்தாரின் வீட்டில் இருந்த நாளில் உன்னதமான மகிழ்வளித்த ஒரு சாகசத்தை நான் அனுபவித்தேன். பாயா நெசவாளிப் பறவையின் குடும்பப் பெருக்க உடலியலைப் பற்றிய சரியான முதல் விளக்கம் எனக்கு குருட்டு அதிருஷ்டமாகக் கிடைத்ததைத்தான் சொல்கிறேன்.

காலம் காலமாக ஏடுகளில் பறவைகளின் குடும்ப வாழ்வு பற்றி கூறப்பட்டிருப்பதைத்தான் நானும் படித்திருந்தேன். என் போன்ற ஆர்வமுள்ள பறவைப் புகைப்படக்காரனுக்கு அவையே

சுவையான செய்திகள்தான். ஆனால், ஒரு ஏணியில் பத்தடி உயரத்தில் கேன்வாஸ் மறைப்பில் இருந்து கொண்டு கூடுகளை சில அடி தூரத்தில் பார்த்தபோது அவற்றின் குடியிருப்பில் 'மரபு மீறிய' சில செயல்பாடுகளைக் கவனித்ததில் பறவைகள் அந்த நூல்களைப் படித்ததில்லை என்பது ஐயமின்றித் தெளிவாயிற்று! ஒவ்வொரு நாளும் இப்படி மறைந்திருந்து பார்த்த மர்மங்கள் அங்கு இடம்பெற்ற நடவடிக்கைகள் பற்றிய விரிவான குறிப்புகள், படங்கள் என்னதான் நடக்கிறது என்பது பற்றி ஏறத்தாழ சரியான யூகங்களை அளித்தது. சில வாரங்களை செலவிட்டு முடித்த பிறகுதான், கொஞ்சம் நம்பிக்கையோடு, கிடைத்த விபரங்களைக் கோர்த்துப் பார்த்து பாயாக்களின் இல்வாழ்வு உடல்கூறு உண்மைகளை உணரமுடிந்தது. அதன்பிறகு இந்தப் புதிய விளக்கங்கள் என்னாலும் பிற ஆய்வாளர்களாலும் ஆராய்ச்சி எனும் உரைகல்லில் மீண்டும் மீண்டும் உரசிப்பார்க்கப்பட்டு நிறுவப்பட்டு மேற்கொண்டு மெருகேற்றப்பட்டு, இப்போது 'அதிகாரபூர்வமான முடிவுகளாக' ஏற்கப்படுகின்றன.

சுருங்கச் சொன்னால், உண்மை இவ்வளவுதான்; பாயா ஆண் தன் 'இல்லற' உடையில் சிட்டுக்குருவிபோல அழகான ஒரு பறவை. பெரிய பளபளப்பான தங்கநிறப்பறவை. ஒருவனுக்கு ஒருத்தி என்பதில் நம்பிக்கையற்ற மன்மதக் கலைஞன். இரண்டோ-நான்கோ சிலசமம் ஐந்து!-எத்தனை மனைவியும் இருக்கலாம். ஏதோ அந்தப் புரம் மாதிரி. ஒரே நேரத்தில் அல்ல, ஒவ்வொன்றாக! எத்தனை பேருக்கு அதனால் வீடுகட்டித்தர முடிகிறது என்பதைப் பொறுத்தது அது. கூடுகட்டும் பொறுப்பு முழுக்க முழுக்க ஆணின் கடமை; பெண்ணுக்கு அதில் வேலையில்லை. பாபுல் மரத்தையே தேர்ந் தெடுத்து கச்சிதமாக வளைந்த கழுத்து பாத்திரம் போன்ற தானே பின்னிய கூட்டை அதில் தொங்கவிடும். 'கட்டிட' வேலையின் ஒரு கட்டத்தில் கூடு பாதி உருவாகிய நிலையில் ஒரு பெண்கள் பட்டாளம் அங்கு வரும். அவை வீடு தேடிக்கொண்டிருக்கும் மாதர்கள். இந்தப் படையெடுப்பு திடீரென ஒரு இளங்காலைப் பொழுதினிலே நடக்கும். ஒரு காலனிக்குள் அவை நுழைகையில் ஆண்கள் ஆரவாரமாக வரவேற்கும். ஒரே கூச்சல்தான்! ஆர்வம்தான்! ஒவ்வொரு வீ(கூ)டாக பெண்கள் நிதானமாக கட்டிட எழிலைப் பார்வையிடும். சில ஏற்கப்பட்டு பிற ஒதுக்கப்படும். பரிசீலனை நடைபெறும்போது வீட்டைக் கட்டிய ஆண் வாசலில் காத்து நிற்கும். ஆர்வத்தில் சிறகுகள் துடிக்க, அழைப்பைத் தெரிவித்து தீர்ப்புக்காகக் காத்திருக்கும். வீடு பிடித்துப்போனால் பிடித்த வீட்டை

ஆக்கிரமித்துக்கொண்டு பெண் ஆணின் வசமான சமிக்கைகளை விழைந்து, விரைந்து ஏற்கும். ஹெல்மட் வடிவ பாதி கட்டிய கூட்டிலேயே சேர்க்கை நடைபெற்று திருமணம் உறுதிசெய்யப்படும். பிறகு ஆண் தனது கட்டிடப் பணியினைத் தொடரும். நீண்ட வாயிற் குழாயமைத்து வீட்டு வேலையை நிறைவு செய்யும். பெண்ணானது உள்ளே முட்டையிட்டு, அடைகாத்து குஞ்சுகளை உலகுக்களிக்கும் குடும்ப வேலை முற்ற முழுக்க பெண்ணின் கடமை. கட்டிடம் கட்டும் ஆர்வம் கொஞ்சம் கொஞ்சமாக முற்றிலும் அடங்கிய ஆண்தான் அதன்பின் குடும்பப்பணியில் மனைவிக்கு உதவும். அதுவே மிக அரிதான விஷயம்தான். கூட்டைக் கட்டி முடித்ததும் ஆண் சில அடிதூரம் சென்று அடுத்த கூட்டைக் கட்ட ஆரபிக்கும்! அரை வீடு முடிந்த நிலையில் இரண்டாவது வீட்டை ஒரு பெண் ஆக்கிரமிக்கும். எனவே அடுத்த வீடு என்றால் அடுத்த 'வீட்டுக்காரி' என்றுபொருள்! ஆக எத்தனை வீடோ, அத்தனை வீட்டுக்காரி!! ஆக ஒரு பெருமிதமான ஆண்குருவி பல பெண்களின் கணவனாயும், பல குடும்பங்களின் தந்தையாகவும் ஒரே சமயத்தில் இருக்க முடியும். சில சமயங்களில் ஒரு கூட்டை எந்தப் பெண்ணும் ஏற்காமல் போவதும் நிகழக்கூடும். பெண் கண்ணோட்டத்தில் அதில் என்ன குறையோ! சலிப்படையாத ஆண், பாதி கட்டியதை விட்டு விட்டு மீண்டும் கட்ட ஆரம்பிக்கும். பாயா குடியேற்றங்களில் பல அரைவீடுகளைக் காணலாம். அதன் பின்னணியிலுள்ள கதை இதுதான். துரதிருஷ்டவசமாக, பாதிவீடுகள் ஆண்மக்கள் ஊஞ்சலாடவும் உள்ளே அடைகாக்கும் மனைவியைப் பார்த்து காதல் கீதங்கள் இசைக்கவும் உருவானவை என்கிற கதை உண்மையில்லை!

இந்தியாவில் பறவை வாழ்வில் காணப்படும் பல்வேறு வகைகளும் வளங்களும் இதுபோல் எத்தனை திகைப்பூட்டும் மர்மங்களை வருங்கால பறவைஇயலாளர்கள் கண்டுபிடிக்க வைத்திருக்கின்றனவோ! அந்த விஞ்ஞானிகளுக்கு விடாமுயற்சியும் ஆர்வமும் வேண்டும். அவ்வளவுதான். இப்போதும் பறவைபக்தர்கள் குறைவு தான். ஆனால், பிற புறவெளிப் பொழுதுபோக்குகளுடன் இதுவும் ஒரு நாகரிகமான வேலையாக மக்களிடையே பிரபலமடையத் துவங்கிவிட்டது. 'பறவைகளைப் பார்த்தல்' என்றறியப்படும் களப் பணிக்கல்வி அமைதியானதோர் பணிதான். ஆனால் சாகசங்களே-சில சமயங்களில் இடர்பாடுகளும்கூட இல்லாத துறை என்று முற்றாகத் துணிந்து கூறிவிடவும் முடியாது. எடுத்துக்காட்டாக யானைகள் நிறைந்த தென்னிந்தியக் காடுகளில் அடிக்கடி நானே சங்கடமான ஆபத்தான சூழல்களில் சிக்கிக் கொண்டது உண்டு.

திடீரென்று ஒரு காட்டுயானை நெருக்கத்தில் வந்து நிற்கும். கர்நாடகத்திலும் கேரளாவிலும் இது வாடிக்கை. இது நடுங்கச்செய்கிற அனுபவம். அநேகமாக எப்போதும் இது ஒரு கௌரவமற்ற காட்சியில் முடியும்—யானைக்கு எதிர்த்திசையில் நமது இளம் விஞ்ஞானி ஓடுவதுதான் அந்தக் காட்சி! உண்மையில் சொல்லப் போனால், மதம் பிடித்ததாக இருந்தாலோ கன்றுடன் வரும் தாயாக இருந்தாலோ தவிர காட்டுயானையால் துன்பம் நேர்வதே கிடையாது. ஆனால் மிக நெருக்கத்திலோ, அல்லது அதிர்ஷ்டம் கெட்ட நேரத்திலோ இதை ஆராய்ந்துகொண்டு காலம் கடத்துவது சரியான ராஜதந்திரமல்ல! அறிவார்ந்த நடவடிக்கை (ஒடுவது) ஒன்றே! ஏனெனில் உயர்ந்த புல் நிறைந்த பகுதியில் சாதாரணமான மந்தை ஓடுவதில் ஏற்படும் நெரிசலில் யானைகள் அறியாமலேயே கூட நமது பறவையிலாளரை ஆபத்துக்கு இரையாக்கி விடலாம். அப்போது வீரமல்ல, விவேகமே நன்று.

கொச்சி வனத்துறை டிராம் நிறுவனம் அக்காலத்தில் நாட்டிலேயே (உலகத்திலேயே?) மிக மலிவாக நடத்தப்படும் ரயில்வே என்று பெருமையுடன் கூறப்பட்டு வந்தது. நான் அதை நம்புகிறேன். அதன் கார்டு ஒரு காலத்தில் வெள்ளையாயிருந்த சீருடை, அவர்களுக்கே உரிய நிறமான வெள்ளைநிறம் (ஒரு காலத்தில்) கொண்ட தொப்பி, ஊதல், கொடி எல்லாம் தரித்த முழு ஊழியர். பத்தாண்டு பணியாற்றி பணிநிரந்தரமாக்கப்பெற்ற அவரது மாத ஊதியம் ரூ. 25/- ஜெர்மனியில் உருவாக்கப்பட்ட எஞ்சின் (இரண்டடிகாஜ்) இயக்கும் எரிபொருள் என்ன தெரியுமா? சுற்றுப்புறக் காட்டிலிருந்து வெட்டப்பட்ட மரங்கள். சாலக்குடியி லிருந்து பரம்பிக்குளம் வரை சுமார் 65கிலோமீட்டர் நீளப்பாதையில் பல இடங்கள் உன்னதமான மலைகள். மூங்கிலும் அடர்ந்த கதம்பமான 'ஈரக்காடுகள்'. ஆங்காங்கே பள்ளத்தாக்குகளில் நிரந்தரப் பசுமைக்காடுகள், வழியெங்கும் நீரோடைகள். இந்தத்தடம் முதலில் கொச்சி வனநிர்வாகத்தினரால் உட்புறக்காடுகளிலிருந்து கட்டை க்ளைக் கொண்டுவருவதற்காக ஏற்படுத்தப்பட்டது. ஓயர் கயிறுகள், புல்லிகள், எடைக்கற்கள், தடைக்கற்கள் ஆகியவைமூலம் இது இயங் கியது. சமதரையில் பிற இரயில் வண்டிகளைப்போல் இயங்கியது. சரிவுகளில் புவி ஈர்ப்பு சக்தியே போதுமானதாயிருந்தது! சில சரிவுகள் அச்சுறுத்துமளவு செங்குத்தானவை. மேலிருந்து சாமான் கொணரும் வண்டிகளை கீழிருந்து வரும் காலிவண்டிகள் சமன் செய்யும். அதற்கு வகைசெய்யும் வண்ணம் இயந்திர ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கும். பொதுவாக பயணிகள் செல்வதில்லை.

ஆனால் அலுவல் நிமித்தம் செல்லும் வனத்துறை அலுவலர்களோ, மிகமுக்கியப் பிரமுகரோ போவதென்றால் இரு இரும்புவண்டியை சேர்ப்பார்கள். அதில் உள்ளே நாற்காலிகள் இருக்கும்.

நாங்கள் 1933இல் கணக்கிடு நடத்திய சமயம் பயணம் செய்தது இப்படித்தான். அங்கேதான் அரசினரின் முகாம் கட்டிடம் புகை வண்டித்தடத்துக்கு அண்மையில் அமைந்திருந்தது. அந்தக்கட்டிட வெளிவாசல் அருகே புகை வண்டி நிறுத்தப்பட்டு சாமான்களும் உபகரணங்களும் இறக்கப்பட்டு அந்த இல்லத்துக்குள் எடுத்துச் செல்லப்பட்டன. சரிவுகள் தோறும் ஒயர் கம்பிகள் உதவியால் கடப்பது வேடிக்கையான அனுபவம். 20 ஆண்டுகள் முன்போ அதற்கும் முன்போ நிறுவப்பட்ட ஏற்பாட்டில் இடையில் ஒயர்கள் மாற்றப்படவே இல்லை என்பதால் சரிவுகளின் ஆழத்துக்கேற்ப சாகசத்தின் அளவும் அமைந்திருந்தது! அடிக்கடி தூசுகளும் மரம் எரித்த கரியும் ஒரு மேகமாய்த் திரண்டுவந்து அவற்றோடு தீப்பொறி களும்—அவை எப்படி எங்கள் துணிகளிலும் பிற சாமான்களிலும் விழும் என்பது இப்போது நினைவில் நிற்கிறது. பயணம் முடிவதற்குள் இப்படியே என் சட்டையும் தெஹ்மினாவின் புடவையும் தீப்பட்டு தீப்பட்டு அவற்றில் பல ஓட்டைகள் உண்டாகி விட்டன! எட்டு மணி நேரத்தில் 40 மைல் என்பது நல்ல வேகம் தானே! குரியார்குட்டியிலிருந்து எட்டுகிலோமீட்டர் தொலைவில் இருந்த பரம்பிக்குளம்தான் இறுதி நிலையம். அங்கு வனத்துறை டெப்போவும், மரங்களின் பட்டறையும் இருந்தன. அங்கே மரங்கள் சேகரிக்கப்பட்டு, அடுக்கிவைக்கப்பட்டு உரியபோது சாலக்குடிக்கு அனுப்பப்பெறும்.

கொச்சின் வனத்துறை ட்ராம் வண்டியில் மறுபடி நான் பயணம் செய்தது 1946இல் ஆகும். அதற்கு சிறிது காலத்திலேயே பரம்பிக்குளம் நீர்மின்திட்டத்துக்காக ட்ராம் தடங்களைத் எடுத்து விட்டார்கள். மாபெரும் அணையும் நீர்தேக்கமும் வந்து விட்டன. அவற்றினடியில் பரம்பிக்குளமும் அந்த இனியவனமும் மறைந்து போய்விட்டன. விசாரித்ததில், பதின்மூன்று ஆண்டுகள் முன்பு சரிவுகளைக் கடக்க உதவிய அதே ஒயர்கயிறுகள்தான் இப்போதும் உள்ளன என்று அறிந்ததில் பயணம் இன்னும் சாகசமிக்கதாய் ஆயிற்று. மாலை மயங்குகின்ற நேரம் நாங்கள் பரம்பிக்குளம் சென்றடைந்தோம். ட்ராம்வே தடத்தருகே பங்களாவின் தாழ் வாரத்தில் அந்த வட்டார ஆதிவாசிகளான காடர்கள் சிலர் குழுமி யிருந்தனர். அவர்கள் நடுவே அரசு பார்வை விடுதிகளுக்கே உரிய விக்டோரிய ராணி (19 ஆம் நூற்றாண்டு) காலத்து கையுள்ள

நாற்காலி ஒன்றில் காலை நாற்காலியின் நீண்ட கைகளில் போட்டவாறு மேலே சட்டை போடாத வெறுங்கால் வெள்ளையர் ஒருவர் அமர்ந்திருந்தார்.

நாங்களே ஒருவரை ஒருவர் அறிமுகப்படுத்திக்கொண்டோம். அவர் ஒரு ஆஸ்திரியர். மனித சமூகஇயல் அவரது துறையாகும். பேரன் ஓமர் ரால்ப் எஹ்ரென்பெல்ஸ் என்ற பெயர் கொண்ட அவர் (வசதிக்காக?) இஸ்லாமியராக ஆகிவிட்டிருந்தார். ஹிட்லரின் பிரபலமான 'ஒருங்கிணைப்பு' முயற்சிக்கு சற்று முன்னதாக தப்பி ஓடி இந்தியா வந்தடைந்தவர். பறவையியல் தன் இரண்டாவது காதல் என்று கூறிக்கொண்ட அவர்-வனவாசிகளை ஆராய்வதற்காக அங்கு முகாமிட்டிருந்த அவர்-மறுநாள் காலை நான் பறவைகளை ஆராயப் போகும்போது தானும் கூடவர ஆர்வம் காட்டினார். ஒரு வனத்துறைக்காவலர் உதவியுடன் 410 எண் துப்பாக்கியோடு குண்டுகளுடன் ஒருவர்பின் ஒருவராக அவர், நான், ஓமர் மூவரும் பயணம் துவங்கினோம். அடர்ந்துயர்ந்தகாடு. ஐந்தடி உயரப்புற்கள் மண்டிய சூழலில் விலங்குகள் போகும் குறுகலான சாலையில் சென்று கொண்டிருந்தோம். இரவுநேர ராப்பாடி அகலவால் குருவியின் பிடித்தமான நாடு! (Schuenicola Platyura) என் மனதில் அதைப் பற்றியேதான் சிந்தனை. பாதையில் ஒருவளைவில் திரும்பிய காவலர் உடனடியாக பின்வாங்கினார். அவர் கையைக் காட்டிய இடத்தில் ஒரு காட்டு யானையின் தலை தெரிந்தது. அதே பாதையில் எதிர்ப்பக்கமிருந்து யானை வந்து கொண்டிருக் கிறது. நாங்கள் இந்தப்பக்கமிருந்து போய்க்கொண்டுள்ளோம். தலைதெறிக்க ஓட ஆரம்பித்தேன். ஓடும்படி ஓமருக்கும் சைகை செய்தேன். அவர் பத்தடி பின்னால் வந்துகொண்டிருந்தார். என் சைகையை எப்படி புரிந்துகொண்டாரோ, மனிதர் ஓடிய ஓட்டம் ஒரே ஓட்டம். அதைவிட வேகமாக எதுவும் அல்லது யாரும் எதிர் வினையாற்றி நான் பார்த்ததில்லை! ஒரு பூனையின் சாகசத்தோடு துள்ளிக்குதித்து அவர் நீண்ட நெடுங்கால்கள் எவ்வளவு விரைவாக ஓடமுடியுமோ, அவ்வளவு விரைவாக இப்படி அப்படி திரும்பிக் கூட பார்க்காமல் ஓடி மிக விரைவில் என்னையும் தாண்டி அரை பர்லாங்தூரம் போய்விட்டார். அவர் ஓட்டம் நிற்கவே நிற்காதோ என்று நினைத்தேன். இன்னும் அரை பர்லாங்போய் நின்றார். நானும் இளைப்பும் களைப்புமாய் ஓடி அவரைச்சென்று சேர்ந்ததும் இரகசியக் குரலில் மனிதர் கேட்டாரே ஒரு கேள்வி— 'ஆமாம், அது என்ன?' மிகச்சுவையான இச்சம்பவத்துக்குப் பிறகு எங்கே எப்போது காட்டு யானையைப் பார்த்தாலும் மனிதர்

அன்றைக்கு ஓடிய விரைவுதான் நெஞ்சில் தோன்றும்! அன்றைக்கு அந்த யானை, பாவம், எங்களைப் பார்த்ததா இல்லையா என்று தெரியவில்லை. அந்த வளைவு வரும் முன்பே காட்டுக்குள் திரும்பி நுழைந்தது பிறகு கண்ணில் படவேயில்லை.

வேறுவிதமான இடைஞ்சல்கள் ஏற்படுவதும் உண்டு. ஒரு மயிர்க்கூச்செறியும் நிகழ்ச்சி. சீனா திபெத்தை விழுங்குவதற்கு சில ஆண்டுகள் முன், 1945இல் நான் மேற்கொண்ட கைலாஸ் மான சரோவர் பயணத்தில் அல்மோராவிலிருந்து லிபு ஏரிக்கணவாய் நோக்கி இமாலயப் பகுதியில் போய் கொண்டிருந்தோம். பாதையின் மிகக்குறுகலான ஒரு பகுதியில்-இந்தப்பக்கம் ஆயிரம்அடி பாதாளம். அந்தப்பக்கம் மூந்நூறு அடி கீழே காளிநதி. கூலிகள் முகாம் அமைத்துக்கொண்டிருக்கிறார்கள். நான் தன்னந்தனியே முன்னால் கொஞ்சதூரம் போகிறேன். அந்தக்கணத்தில் ஒரு சின்னஞ்சிறிய வண்ணப் பறவை—அந்த மஞ்சள் பூசிய யூகினா இன்றும் மனதிலிருந்து மறையவில்லை—ஒரு புதரின் உச்சியில் உட்கார்ந்தது. நான் நிற்குமிடத்திலிருந்து சில கெஜதூரம்தான். என் தொலை நோக்கியின் பார்வையில் அது விழுமாறு நகர்ந்தேன். அது இன்னும் கொஞ்சம் மேலே எத்தியது. எனவே தெளிவாக காண்பதற்காக தொலை நோக்கியிலிருந்து விழிகளை அகற்றாமலே இன்னும் ஒரு எட்டு பின்னால் எடுத்து வைத்தேன். ஒரு கூழாங்கல் உருண்டு விழுந்து சத்தமெழுப்பிக் கொண்டே கீழேபோயிற்று. முதுகுக்குப் பின்னால் என்ன எனும் பிரக்ஞையே கிஞ்சித்துமின்றி எங்கே இருக்கிறோம் என்ற நினைவே இன்றி நகர்ந்திருக்கிறேன். கூழாங்கல் சத்தத்திலும் எதுவும் உணராமல் என்ன சத்தம் என்று தோள்வழியே பின்னால் பார்த்தால்—என் முடி சிலிர்த்து நின்றுவிட்டது—மலை விளிம்பின் ஓரத்துக்கே வந்துவிட்டேன் என்று மின்னலடித்தாற்போல் உணர்ந்து மாசேதுங்கின் சீர்திருத்த வேகத்துக்கு இணையான விரைவில் முன்னால் தாவினேன்! இரண்டே இரண்டு அங்குலம்தான். கூழாங் கல்லைத் துரத்திக் கொண்டு போயிருப்பேன். கூலிகள் அன்றைய பயணத்தை முடித்து நாளின் முடிவில் ஓரிடத்தில் தங்க முனையும் போது என்னைக் காணாதிருந்தால், என் திடீர் மறைவுபற்றி என்ன நினைத் திருப்பார்கள் என்பது இப்போதும் மலைப்பாயிருக்கிறது. ஏனெனில் 'பறந்து'போய் விட்ட பறவையாளனின் உடலை பாதாள நதியிலோ இன்னும் கீழே அதல பாதாளத்திலோ கண்டு எடுப்பது கோடியில் ஒரு வாய்ப்புதான்!

கணிதத்தின் ஆரம்ப பாடக்கணக்குகளைப் போட்டுக் கொண்டு

அமைந்திருப்பதை விட இளம்பருவத்தில் அருமையான இடங்களில் அருமையான பறவைகளைத் துரத்திக்கொண்டு அலைவதையே நேசித்தவன் நான். அன்றுதொட்டு அரைநூற்றாண்டு காலத்துக்கும் மேலாக சுகம்காணவும் ஆன்மாவை உயர்த்திக் கொள்ளவும் அவை உதவின. இயந்திர மயமாகிவிட்ட உயர்வேக யுகத்தின் போலி நாகரிகத்தின் பரபரப்பிலிருந்தும் சலசலப்பிலிருந்தும் விலகி ஒதுங்கி மலைச்சிகரங்களிலும் வனத்தின் உள்வயிற்றுப் பகுதிகளிலும், ஒவ்வொரு காட்சியும் இனிக்கும் அந்த உன்னத சூழ்நிலைகளுக்கு ஒதுங்க இவ்வாழ்வு ஒரு சாக்காக இருந்தது. இதுவும் ஒருவகை தப்பி ஓடல் என்பீர்கள். இருக்கலாம், ஆனால் இதற்கு என்று நியாயப் படுத்திக்கொள்ளும் முயற்சி தேவையில்லையே!

# பின்னுரை

"ஒருவர் தன்னையே புகழ்ந்துகொள்வதில் உள்ள வசதி யாதெனின், தேவையான அழுத்தம் கொடுக்க முடியும், எந்த இடத்தில் எவ்வளவு சொல்லவேண்டும் என்பதும் சரியாக அமையும்" என்றார் சாமுவேல் பட்லர். இந்த சுயசரிதையை எழுதுகையில் அந்தப் பொன்னான அறிவுரையை எப்போதும் மனதில் இருத்தி வந்திருக்கிறேன். சரியான இடங்களில்கூட அந்த அழுத்தம் அதிகமாகிவிடும் சபலத்துக்கு இடம் தராது முயன்றிருக்கிறேன். ஆனால் அதில் எவ்வளவு வெற்றி கிடைத்துள்ளதென்று தெரியவில்லை. என் பெரும்பாலான கடிதங்கள்—அதுவும் களத்திலிருந்து எழுதியவை—கையெழுத்துப் பிரதிகள்தான். பெரும்பாலும் நகலெடுத்து வைத்திருக்கவுமில்லை. மங்கியும் அழிந்தும் போன சுருக்கெழுத்து நோட்டின் பக்கங்கள், மாதிரிகளைக் குறித்து வைக்கும் கையேடு, பல ஆண்டுகள் ஆகியும் எப்படியோ தப்பிப்பிழைத்த ஒருவழிக் கடிதத் தொடர்புகள் (அதாவது எனக்கு பதிலாக வந்தவையும், என் கருத்து கேட்டு வந்தவையுமான கடிதங்கள் மட்டும்); இவற்றோடு பொருத்திப் பார்க்க மறந்தும் மறவாமலும் என் நினைவுப் பகுதிகளில் பதிந்து கிடந்த செய்திகள், இவற்றை வைத்து சமாளிக்க வேண்டியிருந்தது. நான் ஒழுங்காக நாட்குறிப்பு எழுதுவது கிடையாது. ஆனால் என் பயணங்களில் அவ்வப்போது கலந்துகொண்ட சுறுசுறுப்பான நண்பர்கள் சிலர் நாட்குறிப்பு எழுதியுள்ளனர். அவற்றிலிருந்தும் இந்நூலுக்கான செய்திகள் கிடைத்துள்ளன. மிக முக்கியமான செய்திகள் அப்படி பதிவாகியுள்ளன. ஆனாலும் சுவையான முக்கியமான சம்பவங்களும் அனுபவங்களும் மனிதர்களும் அப்படியும் விடுபட்டுள்ளன(ர்). எண்பதாண்டுகளை சொல்ல முயலும் ஒரு நூலில் இதுவும் தவிர்க்க முடியாததுதான். இயற்கை வரலாற்றில் என் ஆர்வம் தவிர என் தனிவாழ்வின் பகுதிகளும் பல பத்திரிகையாளர்களைக் கவர்ந்துள்ளது. அவர்களின் துருவும்

கேள்விகள் வாழ்வின் பொதுவான அம்சங்கள் பற்றிய என் கருத்துக்கள், என் பொழுதுபோக்குகள், பிற ஆர்வங்கள், சாதாரண உலகியல் நடப்புகள் பற்றிய என் எண்ணங்கள், என் நம்பிக்கைகள், ஆன்மீக நம்பிக்கைகள் பற்றிய செய்திகளையும் வெளிக் கொணர்ந்திருக்கின்றன. ஆன்மீகம், தத்துவ இயல் குறித்த வினாக்களுக்கான என் விடைகளை எனது அசைக்க இயலாத கருத்துகளாக ஏற்கலாம்.

கேள்வி: நீங்கள் மட்டும் ஆங்கிலம் அறிந்திராவிடில் இன்றைய அறிவுலகம் அறியும் சாலிம் அலியாக இருக்க முடியாது. ‘ஆங்கிலம் மட்டும் இல்லாவிடில், இந்தியா என்பது அணுக முடியாத கடலில் அமைந்த பல்வகை தேசிய இனங்களின் தொகுப்புதான்’ என்கிறார்களே, இந்தியாவின் இணைப்பு மொழியாக ஆங்கிலத்தை உருவாக்குவது நல்லது என்பதை ஏற்கிறீர்களா?

விடை: இன்றைய நாட்டு நடப்பையும் உலக நடப்பையும் கருதிப் பார்த்தால், புதுமையான சிந்தனைகள், கருதுகோள்கள், அறிவியல், தொழில்நுட்பம் ஆகியவற்றில் பின்தங்கிவிடாமல் முன்னேறுவதற்கு ஆங்கிலம் இந்தியாவின் இணைப்புமொழியாக உருவாக்கப்படுவது விரும்பத்தக்கது என்பதுகூட அல்ல, தவிர்க்கவே முடியாதது என்பது என் தெளிந்த முடிவாகும். இந்திக்கும் பிற இந்திய மொழிகளுக்கும் உரிய ஆதரவும் உற்சாகமும் அளிக்கக் கூடாது என்பதல்ல பொருள். இங்கு இந்தி என்று நான் குறிப்பிடுவது மக்கள் பேசும் எளிய இந்துஸ்தானியையே. இந்தியாவின் பொதுவான இணைப்புமொழி இந்தி என்று கூறும்போது, மகாத்மா காந்தி மனதில் கருதியதும் இந்த இந்துஸ்தானியைத்தான். யாரும் முயற்சிக்காமலும், பயிற்சி தராமலும் இயல்பாகவே, நாம் நினைக்கும் முன்பிருந்தே அது நடைபெற்று வருவதையும் காண்கிறோம். பிரிட்டிஷார் இந்தியாவுக்கு அளித்த முக்கியமான, ஏன், முதலிடம் பெறுகிற பரிசே ஆங்கிலமொழிதான் என நான் கருதுகிறேன். நாட்டில் பலரின் கருத்தும் அதுதான். நாட்டை ஒருமைப்படுத்துவதில் அதுவே தலைமையான பங்கு வகித்துள்ளது. நாம் இதுகாறும் சாதித்துள்ள ஒற்றுமையும் அதன்மூலம் சாதித்ததுதான். உலக அரங்கில் இந்தியா பெற்றுள்ள பெருமைக்கும் அதுவே வழி வகுத்தது. நம்மைப் போன்ற எளிய பாமரர்க்கும் தெள்ளத் தெளிவாகப் புரிகிற இது, மற்ற எல்லாவகையிலும் அறிவாளிகளென்றும் ஞானியரென்றும் நாமே ஏற்கிற நமது தலைவர்கள் சிலருக்கு ஏன் புரியவில்லை? அவர்கள் ஏன் குறுகிய பார்வையும் அறியாமையும் கொண்டுள்ளனர்? இதுதான் எனக்குப் பெரும் வியப்பாக உள்ளது.

வினா: உங்களை வளர்த்த முறையில் மதத்துக்கு ஒரு பங்கு இருந்ததா? அப்படியானால் உங்கள் வாழ்வில் அதற்கு ஒரு இடம் இருக்கிறதா? சூஃபி மரபு உங்களிடம் பாதிப்பு ஏற்படுத்தியுள்ளதா?

விடை: நான் இளைஞனாக இருந்தபோதும், இப்போதும்கூட பல இஸ்லாமியக் குடும்பங்களில் நிலவுகிறபடியும், சிறு வயதுமுதலே கிளிப்பிள்ளைபோல திருக்குர்ஆன் படிக்கவும், மனப்பாடம் செய்து ஒப்பிக்கவும் எங்களுக்குக் கற்பிக்கப்பட்டது. குர்ஆன் எழுதப்பட்டுள்ள அரபு மொழியில் ஒரு வார்த்தைகூடப் புரியாமலே அதைச் செய்துவந்தோம். நியதியாக விதிக்கப்பட்ட தொழுகைகளை ஓதுவதும் கற்பிக்கப்பட்டிருந்தது. ஆனால், இவை எதுவும் என் ஆன்மீக நிலையை உயர்த்த உதவவில்லை; மாறாக மரபு வழிப் பிரார்த்தனை மீது நிரந்தரமாக ஒரு சலிப்பை ஏற்படுத்திவிட்டன. அவை பொருளற்றவை, போலிவேடத்தின் கூறுகள் என்ற எண்ணமே உருவாயிற்று. வெளிவேடங்களில் மிக ஆசாரமாக அமைந்த என் மூத்தோர்களின் இரட்டைத்தனத்தின்மேல் எனக்கு ஒரு கண்டனப் பார்வையே ஏற்பட்டது. அவையும் என் கருத்துகளில் மாறுதலேற்படுத்தக் கூடியவையாக இல்லையே!

வினா: மனித இனத்துக்கு வெளியே ஒரு உயிரினம் பற்றிய (பறவை இயல்) ஆய்விலேயே வாழ்வை இணைத்துக்கொண்டவர் நீங்கள். அது மனிதன் இயற்கையின் பிறகூறுகளிலிருந்து ஒரு தனி நிலைக்குரியவன் என்ற கருத்துக்கு எதிராக உங்களை முடிவு செய்ய வைத்துள்ளதா? அல்லது பசி, உயிர்வாழ்தல், பாலுணர்வு ஆகியவை தவிர பிற உந்துதல்களும் உள்ளனவென்பதால் அவன் இயற்கையின் பிறகூறுகளிலிருந்து மாறுபட்டவன்தான் என்று நம்புகிறீர்களா?

விடை: நான் ஒரு சாமானியன் என்று முதலிலேயே சொல்லி விடுகிறேன். மர்மங்கள், உணர முடியாதவை போன்றவற்றில் எனக்கு நம்பிக்கை கிடையாது. எனவே நான், மனிதன் பிற உயிர்களிலிருந்து எவ்வகையிலும் மாறுபட்டவனல்ல என்று உறுதியாகவே நம்புகிறேன். பிற விலங்குகளுக்குள்ள அடிப்படை உந்துதல்கள், இயல்புகள், பழகு முறைகள்தான் அவனிடமும் காணப்படுகின்றன. ஆனால் ஒன்று, அவனது மூளை அதிக வளர்ச்சி பெற்றுள்ளது. அதைக் கொண்டு அவன் செயலையும் சிந்தனையையும் பகுத்தறிவுக்கேற்ப அமைத்துக் கொள்ள முடிகிறது. அதேசமயம் தேவன் விதித்த விதி என்று கூறி பிற உயிர்களிலிருந்து தான் உயர்ந்தவன் என்ற பொய்யான ஒரு முடிவை தானே கற்பித்துக் கொள்கிறான். "மனிதனின் உணர்ச்சிகள், இயல்புகள், பழ்குமுறை ஆகியவை பிற விலங்குகளிலிருந்து வேறு பட்டதல்ல; யோசித்துப் பார்த்தால் கொஞ்சம் மெருகூட்டப்

பட்டவை என்று சொல்லலாம்; அவ்வளவுதான்" என்பதை 'ஏப் சூப்பர் ஏப்' (குரங்கும் உன்னதக் குரங்கும்) என்ற உன்னதமான திரைப்படம் மிக அழகாகவும் தெள்ளத் தெளியவும் காட்டுகிறது. தத்துவ உலகைப் பொறுத்தமட்டில் நான் திக்குத் தெரியாத காட்டில் சிக்கிய சிறு மழலைதான்! உதாரணமாக, மலைஉச்சியில் சம்மணமிட்டு அமர்ந்துகொண்டு உந்திக்கமலத்தை எண்ணி தியானம் செய்வதெல்லாம் வீண்வேலை என்றே எனக்குப் படுகிறது. மரணத்துக்குப் பின் மனிதநிலை என்ன என்று கவலைப் படுவது, நம்புவதற்கோ நம்பாதிருக்கவோ பகுத்தறிவு பூர்வமான அடிப்படை களற்ற கருதுகோள்களைப்பற்றி சிந்திப்பது எல்லாமே அதே போல்தான். 'பிறப்பு இறப்பு இவற்றிலிருந்து ஒரே நிவாரணம் இடைப்பட்ட காலத்தை அனுபவிப்பது'தான் என்று தத்துவ ஞானி ஜார்ஜ் சந்தாயனா கூறுவதே எனக்கும் உடன்பாடாக உள்ளது. இன்றைய வாழ்வு ஒன்றுதான் எல்லாம். நம் கையில் உள்ள இயக்கும் சக்தியை, நமது சொந்தச் செயல்களைக் கட்டுப்படுத்தவும் திசை நிறுத்தவும் உள்ள சுயவலிமையை, பனிமூட்டம் போன்ற கருத்து களைப் பற்றி சிந்திப்பதில் செலவிடுவது, அந்த சக்தியை மிகமிகத் தவறாகப் பயன்படுத்துவதாகும் என்று நம்புகிறேன். அதுவும், அக்கருத்துகளும் முடிவுகளும் சரியான அடிப்படைகள் இல்லாதவை என்று நாம் (குறைந்தது நான்) கருதும்போது அப்படித்தானே முடிவுகட்ட முடியும். கருவிலேயே பொருள்முதல்வாதி என்று சிலர் சொல்கிறார்களே அந்த வகை ஆள்தான் நான். ஆனால் அதனால் கெட்டவனாகத்தான் இருப்பேன் என்று கட்டாயமில்லை! என்னைச் சுற்றி கிடைக்கின்ற சான்றுகளிலிருந்து, பிற உயிர்களிலிருந்து, இயற்கைத் தேர்ச்சிமூலம் உருவானவன்தான் என்று டார்வின் சொல்கிறாரே, பிற்கால அறிவியல் கண்டுபிடிப்புகள் மெருகூட்டிச் சொல்கின்றனவே, அந்தக் கொள்கையை நம்புவதில் எனக்கு சிரமமேயில்லை. மனிதன் என்பவன் உன்னதம் பெற்ற வாலில்லாக் குரங்கு என்றும் நம்புகிறேன்.

*வினா:* மற்றவற்றிலிருந்து மனிதனை வேறுபடுத்திக்காட்ட பொருளியலல்லாத ஒரு கோணம் இருப்பதை நீங்கள் ஒப்புக் கொள்ளவில்லையா? மனிதனுடைய அழகியல் கருதுகோள்களையும் நெறியியல் பகுதிகளையும் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? அவை அதிகம் வளர்ச்சியுற்ற மூளையில் உருவாகின்றன என்கிறீர்களா?

*விடை:* எனக்கென்று ஒரு தத்துவரீதியான பார்வை இல்லை. எனவே இவை நெறியியல், அழகியல் கருத்துக்கள் வளர்ந்த மூளையில்

உருவாகின்றனவா என்பது பற்றி நான் சிந்தித்ததில்லை என்பதை ஒப்புக்கொள்ளவேண்டும். எல்லாவிதமான உணர்வுகளுக்கும் புரிதல்களுக்கும் மூளையே மையம் என்றும், அதிலிருந்தே இவை யாவும் பிறக்கின்றன, மூளையாலேயே கட்டுப்படுத்தப்படுகின்றன என்றும் நம்பினாலும், அது ஒன்றுதான் இயக்கு சக்தி என்று நான் கருதவில்லை. 'மனசாட்சி' அல்லது காந்தியடிகள் சொற்களில் சொன்னால் 'உள்ளிருந்து வரும் குரல்' போன்ற ஏதோ ஒன்று நிச்சயமாக இருக்கிறது என்று எனக்கும் தோன்றுகிறது. அதைப் பற்றிய அறிவுபூர்வ விளக்கத்தை நான் தேடுவதுமில்லை, கூறுவதும் இல்லை. விலங்குகளிடமும் அழகியல், நெறியியல் எண்ணங்கள் இருக்கவே செய்கின்றன என்று நான் நம்புகிறேன். வெளிப்படை யாகத் தெரிந்தாலொழிய மனித மனம்தான் அதனைப் புரிந்து கொள்வதில்லை. உதாரணமாக, ஆஸ்திரேலியாவில் உள்ள போவர் பறவைகள் பற்றிக் கூறலாம். இவற்றில் ஆண்பறவை மிகக் கவனமாக தரையின் ஒரு பகுதியைத் தேர்ந்தெடுத்து சுத்தம் செய்கிறது. அங்கே சுள்ளிகளை வைத்து ஒரு கூடு கட்டுகிறது. வண்ணப் பொருட்களைப் பார்த்துப் பார்த்து எடுத்துச்சென்று கூட்டின் உட்புறத்தை அழகு செய்கிறது. பல சமயங்களில் அந்தப் பொருட்களை வெகு தொலைவிலிருந்து கொண்டு வருகிறது. எல்லாம் தன் பெட்டைக் குருவியை மகிழ்விக்க! ஏன், நம் நாட்டிலேயே கருப்புத்தொண்டை நெசவுக் குருவியை எடுத்துக் கொள்வோமே; இங்கும் ஆண்தான் கூடுகட்டுகிறது. கூடு கட்டுவதில் ஒரு குறிப்பிட்ட நிலை வரும்போது, பல மாதிரிகளிலிருந்து ஒன்றைப் பெண் தேர்ந்தெடுக்க, அதன்பிறகு அந்தக் கூட்டுக்கு ஆண் குருவி களிமண் பூசுகிறது. வண்ணமயமான மலரிதழ்களைப் பொருத்தி அழகு செய்கிறது. எதிர்காலப் பெண் துணையைக் கவர இதையெல்லாம் செய்து அதை தனது கூட்டுக்கு அழைக்கிறது. பெண்ணின் அழகியல் கருத்துகளைக் குறிவைத்து அது பெண்ணைக் கவர்கிறது!

*வினா:* நேருஜி சொன்னதைப் பாருங்கள். "தன்னிச்சையான செயல்பாடு—விதிவசம் இரண்டுக்கும் இயற்கையின் நியதியில் போராட்டமில்லை. வாழ்வு இரண்டும் சேர்ந்தது ஆகும். வாழ்க்கை ஒரு சீட்டாட்டம். உங்களுக்கு சீட்டுகளை வழங்கும் கை உங்கள் கட்டுப்பாட்டில் இல்லை. அந்தக் கைதான் விதி. உங்கள் சீட்டுகளை வைத்துக்கொண்டு நீங்கள் ஆடும் விதம் சுயேச்சையான முயற்சி" என்று அவர் சொன்னார். 'சீட்டுப்போடும் கையில் உங்களுக்கு நம்பிக்கை இருக்கிறதா?

*விடை:* 'சீட்டுப்போடும் கை' விவகாரம் என் அறிவுக்கு

எட்டவில்லை. நமது மரபணுக்களின் தன்மையை நான் அந்தக் கைபோல நினைக்கிறேன். அது நம் ஒவ்வொருவரையும் பாதிக்கிறது. அது நம் கட்டுப்பாட்டில் இல்லை. வசதியாக நாம் அதை 'விதி' என்றும் 'ஊழ்வினை' என்றும் கூறுகிறோம். ஆனால் தன்னிச்சையான செயல்படுதிறன் என்பதும் நமக்கு இருப்பதால் அந்த ஊழ்வினை யையும் நெறிப்படுத்திக்கொள்ள முடியும். ஓரளவுதான் என்றாலும் குறிப்பிடத்தக்க அளவு இது இயலுமென நான் கருதுகிறேன். வேறு விதமாக சொன்னால், (சீட்டாடும் உதாரணத்துக்கே போனால்) கிடைத்த சீட்டுகளை நல்லவிதமாக பயன்படுத்தி ஆட முடியும்.

என் மாதிரி சிந்தனைகள் கொண்ட என் நண்பர் சாகேப் ஜாதா முகம்மத்-உஸ்- ஜபர்கானிடம் கிட்டத்தட்ட இதே கேள்வியை ஒருநாள் கேட்டேன். அவர் சொன்ன பதிலை அப்படியே என் கருத்தாக எடுத்துக் கொள்ளலாம்:

> "வாழ்க்கை என்பது புலன்களின் இன்பம் மட்டுமே அல்ல. யோகியர் ஞானம் மட்டுமேயுமல்ல. அத்தனை வாழ்வும் நிலையில்லாத வண்ணக் களஞ்சியம். அதை அனுபவிக்க ரசனை வேண்டும். புரிந்துகொள்ள அறிவு வேண்டும். மதம், தத்துவம் ஆகியவற்றுக்கு அங்கு வேலையில்லை. ஆகவே அவற்றுக்குத் தேவையுமில்லை. ஆனாலும் அவை தொடர்ந்து அங்கம் வகித்துக்கொண்டே வருகின்றன என்பதுதான் புதிர். எனவே வாழ்க்கையும் ஒரு புதிராக விளங்குகிறது."

இன்னொரு கேள்வி என்னிடம் மீண்டும் மீண்டும் கேட்கப் படுகிறது. வனவிலங்குகளைப் பாதுகாப்பது பற்றி உரத்த குரலெழுப்பும் நானே வேட்டையாடும் விளையாட்டையும் ஆதரிப்பது எப்படி? இரண்டும் எப்படி ஒத்துப்போகும் என்பதே அந்தக் கேள்வி. வேட்டையை ஒரு பொழுதுபோக்கு விளையாட்டாக ஒருபோதும் செய்திராதவர்களுக்கு இது முரண்பாடாகத் தோன்றுவது இயல்புதான். என் (இளமைக்) காலத்தில் நானும் வேட்டைக்காரனாக இருந்திருக்கிறேன் என்று ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன். நான் அதை விட்டதுகூட ஏதோ பாவம் செய்து கொண்டிருக்கிறோமே என்ற வருத்தத்தினால் அல்ல. அதற்கு ஒரு நடைமுறைக் காரணம் உண்டு. பல உயிரினங்கள் உலகில் இல்லாமலே போய்விடக்கூடிய அளவுக்கு இந்தியாவில் வன விலங்குகளின் நிலையில் பரவலாக ஒரு சீரழிவு ஏற்பட்டிருந்தது என்பதே அந்தக் காரணம். இத்தனை கிலோ கறி வேண்டும்

என்பதற்காக எப்படியும் சுடுவதற்கும், வேட்டையாடுதல் என்ற முறையான செயலுக்கும் உள்ள வேறுபாட்டை நீங்கள் உணர வேண்டும். 'வேட்டை' என்பதில் காலங்காலமாக அனுசரிக்கப் பட்டுவரும் விதிமுறைகள் எவ்வித சலுகையுமின்றி அனுசரிக்கப்பட வேண்டும். மிருகங்கள் குட்டி போடும் பருவங்களில் வேட்டையாடக் கூடாது; குட்டிகளும், தாய்களும் வேட்டையாடப்படக் கூடாது. விதிக்கப்பட்ட அளவுக்கு மேல் வேட்டையாடக் கூடாது; இரவு நேரத்தில் ஊர்திகளில் அமர்ந்துகொண்டு (கண்ணைக் குருடாக்கும் ஒளி வெள்ளத்தை எற்படுத்திக்கொண்டு) வேட்டையாடுவது தவறு. வனஉயிர்கள் நீர் பருக வரும் பகுதிகளில் வேட்டை கூடாது. இவை அத்தகு விதிகளில் சிலவாகும். இத்தகைய தடுக்கப்பட்ட முறைகளே, திருட்டு வேட்டையையே தொழிலாகக் கொண்டவனின் தொழில் முறைகளாகும். வனவுயிர்களின் இன்றைய வருந்தத்தக்க நிலைமைக்கு அத்தகைய திருட்டுத்தனமான வேட்டைக்காரர்களின் கண்டனத்துக் குரிய வேலைகள்தான் காரணமேயின்றி, வேட்டையை விதிமுறை களுக்கு உட்பட்ட விளையாட்டாக ஏற்று சட்டபூர்வமாகப் பயில்பவர்களின் செயல்களல்ல. சரணாலயங்களிலும், வனவுயிர்ப் பூங்காக்களிலும் வனவுயிர்களின் பாதுகாப்புக்காக சிறப்புப் பணியாளர்கள் நியமிக்கப்பட வேண்டும். அப்படி நியமிக்கப்பட்டும் உள்ளனர். மற்ற இடங்களில், சட்டபூர்வமான வேட்டைக் காரர்கள்தான் திருட்டு வேட்டைக்காரர்களுக்கு தப்பமுடியாத அச்சுறுத்தலாக அமைவார்கள். திருட்டுத்தனத்தைத் தடுக்க அதுவே நிச்சயமான பயனுள்ள வழியாக உலகெங்கும் ஏற்கப்பட்டுள்ளது. எந்தவிதமான வேட்டையும் முழுவதுமாக சட்டபூர்வமாக தடை செய்வது சரியான பரிகாரமல்ல. முறையான வேட்டைக்காரர்கள் தன் வழியில் குறுக்கிட மாட்டார்கள் என்று திருட்டு வேட்டைக் காரனுக்கு தெரிந்திருக்கும் நிலைமைகளில் 'திருடனுக்கு சரியான வேட்டைதான்' என்பதே உண்மை. கடந்த பத்தாண்டுகளில் புலிகளுக்கான ஒதுக்கீட்டு வனங்களின் அனுபவம் தெளிவாகக் காட்டியுள்ளதுபோல வனப்பகுதி சுற்றுப்புறச் சூழலுக்கான முழுமையான பாதுகாப்பு ஏற்பாடு, புலிகள் மட்டுமல்ல அவற்றின் இரைகளான மான்கள், பன்றிகள் ஆகியனவும் அதற்கேற்ப பல்கிப் பெருகி இயற்கையின் சமச்சீர் ஏற்பாடு நிலைபெற உதவுகிறது. இரைகளைக் கொன்று உண்ணுகிற, புலிபோன்ற ஆளும் மிருகங்கள் இல்லாத பகுதிகளில் உரிய பாதுகாப்பும் தரப்பட்டால், அங்கு (அவற்றுக்கு இரையாக வேண்டிய) குளம்புள்ள மிருகங்கள் (அவ்வகை ஆபத்தின்மையால்) அளவுக்குமேல் பல்கிப் பெருகி

விடும். அத்தனைக்கும் உணவு தரக்கூடியதாக சுற்றுப்புறம் இராது. அப்போது அந்த உயிரினங்களின் தொகை குறைக்கப்படாவிட்டால் (நெறியான வேட்டையின் மூலம் இதை செய்வதில் என்ன தவறு?) அந்த அதிகப்படி உயிர்கள் உணவுக் குறைவாலும் நோயாலும் இறந்தே தீரும். அப்போது, புரோட்டின் மிகுந்த, தொடர்ந்து கிடைத்துக் கொண்டிருக்கக் கூடிய, மதிப்பு வாய்ந்த உணவு மூலத்துக்கான வழி ஒன்று இப்படி தவறான முறையில் அடைபட்டுப்போகும். என்னைப் பொறுத்தவரை பச்சையாகச் சொன்னால், வனவுயிர் பாதுகாப்பு என்பதே நடைமுறை வாழ்க்கைக்கான ஒரு நோக்கம்தான். அதாவது அகிலம் முழுதும் அங்கீகரிக்கப்பட்டுள்ளபடி அது அறிவியல், பண்பாட்டுத்துறை, அழகியல், பொழுதுபோக்கு, பொருளாதாரம் என்ற பல்துறை தழுவிய ஒட்டுமொத்த அணுகுமுறை. அங்கே உணர்ச்சிபூர்வமான அணுகுதலுக்கு இடமேயில்லை. இன்றைய கல்வி முறையில் சூழல் பாதுகாப்பு என்பது அகிம்சை என்ற ஒற்றை அடித்தளத்தில் இளைஞர்களுக்கு பயிற்றுவிக்கப்படுகிறது. புனிதப்பசு பாதுகாக்கப்பட வேண்டும் என்பது ஒரு உதாரணம். இன்றைய இந்த அணுகுமுறை முற்றிலும் தவறான அடிப்படை கொண்டதும் துரதிருஷ்டவசமானதும் ஆகும் என்பது என் கருத்து. மூலதனம் அப்படியேயிருக்க, வட்டி பயன்படுத்திக்கொள்ளப்படவேண்டும் என்பதே எனது வனவுயிர் பாதுகாப்புக்கொள்கை. எனக்கு இவற்றினால் கிடைத்த இன்பம் அடுத்தடுத்த தலைமுறைகளுக்கும் கிட்டவேண்டும் என்பது என் நம்பிக்கை.

## பிற்சேர்க்கை 1

# பறவைக் கணக்கீட்டு நடத்துவதற்கான ஹியு விஸ்லரின் அறிவுரைகள் 1931

அண்மையில் நடத்தப்பட்ட சில கணக்கீடுகள்—குறிப்பாக அமெரிக் கர்கள் ஜெர்மானியர்கள் நடத்தியவை—இவை எப்படி நடத்தப்படக் கூடாது என்பதற்கு சிறந்த எடுத்துக்காட்டுகளாகத் திகழ்கின்றன என்பது நாமெல்லாம் ஒப்புக்கொள்ளும் செய்தியாகும். ஒரு குறிப்பிட்ட பகுதிக்கு ஒரு சேகரிப்பாளரை அனுப்புவார்கள். ஏராளமான எண்ணிக்கையில் மாதிரிகளை சேகரிப்பதுதான் நோக்கம். பெரும்பாலும் புதியன சேர்த்தல், சில சமயம் பண்ட மாற்றுக்கு உதவுமென்று இருப்பதையே சேகரித்துக்கொள்வதுமுண்டு. பொதுவானதாகவோ, உயிரியல் ரீதியிலோ முக்கியமான செய்தி களைப் பரப்புவதில் முயற்சிப்பது கிடையாது. அவற்றில் நாம் கற்க ஏதுமிருப்பதில்லை. தோல்கள்பற்றிய விமர்சனக் குறிப்புகள் தவிர சிறப்பாக ஒன்றுமிராது. இன்னும் பொதுவான பயனுள்ள வகையில் நீங்கள் பணியாற்ற வேண்டுமென்பது என் விருப்பம். உங்கள் மனப்போக்கும் அத்தகையதுதான் என்பதும் நான் அறிந்ததே. நீங்கள் வெறும் வறட்டு சோதனைச்சாலை ஆய்வாளரல்ல— உயிரியல் அறிஞர். ஆகவே நம் இருவர் கருத்தும் நிச்சயமாக இதில் ஒத்துப் போகும் என்று எண்ணுகிறேன்.

முதலாவதாக, நமக்கு சரியான பறவைகள் (மாதிரிகள்) வேண்டும். (1) குறிப்பிட்ட மாநிலத்தில் எந்த வகையானவை வாழ்கின்றன என இனங்காண; (2) உங்கள் களப்பணிக் குறிப்பு களுடன் ஒத்துப்போகிறவகையில்; (3) பொதுவான தகவலுக்கும், பிறபுகுதிகளில் காணப்படுவனவற்றுடன் ஒப்பிட்டுப்பார்க்கவும்; (4) பிற உயிர்களின் உடலில் ஒட்டி வாழும் உயிர்களைப்பற்றி ஆராயவும் இவை தேவைப்படுகின்றன. தோல்உரிக்கும் பணியைச் செய்ய ஹென்ரிக்ஸ் உள்ள வரை உங்களுக்கு அதற்கான

உடலுழைப்புத் தொல்லையும் காலவிரயமும் தவிர்க்கப்பட்டுவிடும். எனது பயணங்களில் எனது நேரத்தை இதற்கும் செலவிட்டேன். அதனாலே இதைவிட முக்கியமான வேலைகளுக்கு நேரமில்லாமல் போய்விடும். உங்கள் நேரம் உங்கள் கையில்.

முகாமில் அரைமணிநேரம்-பொதுப்பறவைகள் வரிசையில் தன் பணியை முடிக்க ஹென்ரிக்ஸுக்கு அதுவே போதும். துப்பாக்கி சுடத்தெரிந்த எவரும் ஹென்ரிக்ஸுக்கு அரை டசன் பறவைகளைத் தந்துவிட முடியும்-முக்கியமானவை பின்னால் வரும் என்பது இருக்கவே இருக்கிறது. எவ்விதப் பறவையினமும் விடுபட்டுப்போய் விடாமல் பார்த்துக்கொள்ளும் வண்ணம் கவனமாக சுற்று வட்டாரத்தை ஒரு சுற்றுசுற்றிப் பார்த்துவிட உங்களுக்கு நேரம் கிடைத்துவிடும். லடாக்கில் நான் வெகுசீக்கிரம் கிளம்பிவிடுவேன். நடுப்பகலுக்கு வீடு திரும்பிவிடுவேன். பொதுவாக மாலையிலும் ஒரு சுற்று போய்வந்து விடுவது வழக்கம். சாதாரணப் பறவைகளை பார்த்துக்கொள்ள ஒரு துணைவன் இருந்துவிட்டால் உண்மையிலே முக்கியமானவற்றைக் கொண்டுவருவதில் உங்கள் முழு நேரத்தையும் கவனத்தையும் செலுத்தமுடியும். நீங்கள் ஐந்துமைல் சுற்றி சாதாரண மைனாக்களையும் புல்புல்களையும் கொண்டுவருவது-அது உங்கள் காலத்தை விழலுக்கிறைப்பதுதான். அவைதான் ஆயிரம் கிடைக்குமே.

ஒரு முகாமுக்கு வந்ததும் அந்தப்பகுதியின் பெரிய அளவு படம் ஒன்றை வாங்கி நிலஇயல் கோணத்தில் அப்பகுதியில் எந்தெந்த வகை நிலப்பகுதிகள் அடங்குகின்றன என்று கவனமாகப் பார்க்க வேண்டும். பெரும்பாலான பறவைகள்—அதிலும் நம் ஆர்வத்தைத் தூண்டும் பறவைகள்—நிலஇயல் அடிப்படையிலேயே பரவலாக வாழ்வதைக் காண்கிறாம். எனவே ஒரு குறிப்பிட்ட இடத்தையே சுற்றிச்சுற்றி வந்து கொண்டிருந்தால், அண்டைப் பகுதிகளின் விசேஷங்களை பாதியளவாவது விட்டுவிட நேரிடும். படம், ஒரு பக்கம் தாழ்வான மலைப்பாறைகள் மறுபுறம் ஒரு ஆற்றுப் படுகை, இரண்டு மைல்களுக்குப்பால் ஒரு ஆழங்குறைந்த ஏரி, இன்னொரு பக்கம் பாதுகாக்கப்படும் காட்டுப்பகுதியும் மருதநிலமும் என்று விரியலாம். இவ்வகை நிலங்கள் அனைத்திலும் வாழக்கூடிய பொதுவான பறவைகள் தவிர ஒவ்வொரு பகுதிக்கும் என சிறப்பாக சிலவகைப் பறவைகள் இருக்கும். அவை இதர பகுதிகளில் இரா. எனவே ஒவ்வொரு முகாமின்போதும் எந்தெந்த பறவையினங்கள் அந்த முகாமின் அனைத்துப் பகுதிகளுக்கும் பொது, எந்தெந்தப் பகுதியில் எந்தெந்த பறவைகள் விசேஷம் என்பதை நிர்ணயிப் படுத்திக் கொள்வது ஒரு இன்றியமையாத வேலை. சில இடங்களில்

மட்டும் சிற்சிலப் பறவைகள் என்பதை நிர்ணயிக்கும் நில இயல் கூறுகள் எவை என்பது அடுத்ததாக வரையறுக்கப்பட வேண்டிய தாகும். உதாரணமாக ஏன் ஏரிக்கரையில் மட்டுமே உள்ளான் குருவி கிடைக்கிறது என்பதை யாவரும் அறிவோம். ஆனால், வேறு பறவையினங்கள் அதற்குரிய சிறப்புப் பகுதிகளில் பரவியிருப்பதற்கு உணவு, மறைப்பு, குறிப்பிட்ட சில அனுசரிப்பு ஏற்பாடுகள், இனப் பெருக்கத் தேவைகள் என்று பற்பல காரண வகைகள் இருக்கின்றன. ஒரு முகாம் பகுதியின் சகலவித உயிரினங்களைப் பற்றியும் அறிந்துகொண்டுவிட்டோம் என்று உறுதியாக நினைக்க முடியும்வரை ஒவ்வொரு பகுதியையும் துருவித்துருவி ஆராய்ந்தாக வேண்டும். கவனிப்பதும் சிந்திப்பதும் போலவே சொல்வதும் அவசியமானது. எனது அடுத்த மடலில் ஒவ்வொரு பறவையினத்தைப் பற்றியும் கவனிக்கவேண்டிய செய்திகளை குறிப்பிட்டுக் கூறலாமென்று இருக்கிறேன். இப்போது பொதுவாகப் பார்ப்போம். எனவே நிலஇயல் பிரிவுகளைப்பற்றி விளக்க உதாரணத்துக்கு வானம்பாடி (Lark)கள்பற்றி மட்டும் சில செய்திகள் கூறுவேன். ஒரு முகாமில் 5 மைல் சுற்று வட்டாரத்தில் நால்வகை வானம்பாடிகள் ஒரே விகிதத்தில் இல்லாது பரவியிருப்பதாக வைத்துக்கொள்ளுங்கள். அந்த குறிப்பிட்ட விகிதம் என இல்லாமைக்குப் பின்னால் ஏதோ ஒரு காரணம் இருந்தே தீரும். அநேகமாக இதற்கு மூலகாரணமாக உணவு இருக்கலாம். உணவு வேற்றுமை வெளிப்படையாகக் கண்டுபிடிக்கக் கூடியதாகும்.-ஒருவித வானம்பாடி கருப்பு (கரிசல்) நிலத்தில் வாழலாம். இன்னொருவகை 'சால்' மரத்தடிகளில் கட்டாந்தரைப் பகுதிகளில் வாழலாம். அப்புறம் மூன்றாவதாக ஒருவகை இங்கொன்று அங்கொன்றாகக் காணப்படலாம். அந்த (3வது) நிலஇயல் சார்பான ஏதோ காரணத்தால் அருகிக் காணப்படலாம். அதன் தொகை குறைவாகவும், அதிகரிப்பு என்பதே கிட்டத்தட்ட இல்லாமலும் இருக்கலாம். அந்த எண்ணிக்கை வட்டாரமெங்கும் வாழுமளவு இல்லாது போகலாம். ஆக,

மிராப்ரா காண்டிலான்கள்—ஏராளம்–75 முகாம் அ, ஆ, இ, ஈ
மிராப்ரா அசாமிகா—மிக அரிதாக-ஒன்றேஒன்று-முகாம் ஆ
அலவ்டா அர்வென்சில்—21–அ விலும் 'ஆ' விலும்

என்பது போன்ற அமெரிக்க பாணிஅறிக்கைகள் நமக்குத் தேவையேயில்லை. ஒரு குறிப்பிட்ட வகை அதிகமாகப் பரவி யிருப்பதன் காரணம் ஒரு குறிப்பாகவாவது தரப்படவேண்டும். பரவலில் உள்ள வித்தியாசங்களுக்கு ஏதாவதொரு விளக்கம் கிடைக்கவேண்டும். அதனை அறிதலே பறவையியலின் நோக்கமாக

இருக்கவேண்டும். அவற்றைப் பிடிப்பதும் சரியான பெயரிடுதலும் அந்த நோக்கத்துக்கான வழிகளேதவிர அவையே இலக்குகள் அல்ல.

உங்களுக்கு இருக்கும் நேரத்துக்குள் இந்த அனைத்து அம்சங் களையும் ஆய்வில் தொட்டுவிட முடியாது என்பதையும் நான் நிச்சயமாக உணர்கிறேன். ஆனாலும் உங்கள் கருத்துகளும் உங்கள் கணிப்புகளும் ஏன் முக்கியம் என்றால் அவை நமது பிரச்சினைகள் பற்றிய ஆய்வுக்கு உங்கள் பங்களிப்பாகவும் உலகின் பிற பகுதிகளில் பணியாற்றும் பறவையியலாளர்களுக்கு ஊக்கமளிப்பதாகவும், அமையும். அதனால் அவர்கள் உங்கள் கணிப்புகளை வழி மொழியவோ, மறுக்கவோ வகை ஏற்படும். ஆக, உண்மைகள் கண்டு பிடிக்கப்படும்.

ஏன் என்ற கேள்வி இல்லாமல் ஆய்வு இல்லை, ஏன் இந்தப் பறவை இங்கொன்று அங்கொன்றாக உள்ளது? ஆற்றின் மணற் படுகை நெடுகிலும் காணும் அந்தப்பறவை கொஞ்சம் தள்ளி உள்ள வயல்வெளியில் ஏன் இல்லை? இந்தப் பறவை சாலைப்புற மரங்களில் இருக்கிறதே தவிர காட்டுக்குள் இருப்பதேயில்லையே, அது ஏன்? அந்தப்பறவையில் சில குறிப்பிட்ட மாற்றங்கள் ஏன்? பொமட்டார்பினஸ் பறவையின் அலகு ஏன் மற்ற பறவைகளின் அலகு போலன்றி அரிவாள்போல் குறுகலாயும் வளைந்தும் இருக்கிறது? ஏன் டிஸ்ஸெமுரஸ் பறவையின் வால் மட்டும் பந்தடிக்கும் ராக்கெட் போலுள்ளது? பிர்புலவுடாவின் அலகு கனமாயிருப்பது ஏன்? இந்த வகையான வித்தியாசங்கள், இந்தப் பறவைகளை அவற்றின் பறவைக் குடும்பத்தையே சார்ந்த பிற பறவையினங்களிடமிருந்தே பிரிக்கும் இந்த அம்சங்கள் இருப்பது ஏன், ஏன், ஏன் என்று கேட்டுக்கொண்டேயிருக்க வேண்டும்.

உங்கள் குறிப்பேடும், உங்கள் துப்பாக்கியைப் போலவே முக்கியத்துவம் நிறைந்ததாக இருக்கட்டும். நிறைய குறிப்பேடுகள் வைத்துக் கொள்ளுங்கள் என்றுகூட சொல்லுவேன். முதலாவதாக ஒரு பொதுவான குறிப்பேடு. அது நாட்குறிப்பேடு. சிந்துப்பயணத்தில் ஹியூம் எழுதியதும் (முதல்தொகுதி' சிதறலான சிறகுகள்' Stray Feathers) கிழக்கு தர்கிஸ்தான் ஆய்வின்போது ஸ்கல்லி எழுதியவை (Stray Feathers தொகுதி 4) ஆகியவை இதற்கு நல்ல முன்னோடிகள். இடம், அதன் நிலஇயல் வகைகள், கண்ட முக்கியமான இனங்கள், சிறப்பம்சங்கள் ஆகியவை இதில் இடம்பெறும். ஆய்வின் முடிவில் இதையே மெருகேற்றி அறிக்கையின் முன்னுரையாக அமைக்கலாம்.

அடுத்து நான் பறவையினங்களை வகைப்படுத்தி அந்தந்த

தலைப்பில் குறிப்பெழுதும் ஒரு குறிப்பேடு வைத்துக்கொள்வது வழக்கம். இதில் அந்த இனப்பறவையைக் காணநேர்ந்த ஒவ்வொரு நாளையும் தேதி குறிப்பிட்டு அன்று அதை எங்கு கண்டேன் என்றும் குறிப்பிட்டு சிறப்பம்சங்களையும் எழுதுவேன். முன்னது நாள்வாரி யானது-இது பறவை வாரியானது. புதிதாக ஒரு பறவையைக் காணநேர்கையில் அதன் பெயரே தலைப்பாக புதிதாக ஒரு பகுதி ஆரம்பிக்கப்படும். இதை நாள்தோறும் படித்து வருவது எதையும் மறந்து விடாமல் காப்பாற்றும். பறவைகளின் பரவுதல் பற்றிய ஒரு தெளிவான சித்திரமும் இதிலேயே கிடைத்துவிடும். ஈ. கட்ஸ் தயாரித்த அறிக்கைகளில் பல சமயங்களில் சாதாரணப் பறவைகள் சம்பந்தப்பட்ட கணக்கீட்டில் குறிப்பிட்ட இடத்தில் இருந்ததா இல்லையா என்பதற்கான விபரம் ஏதும் இருப்பதில்லை என்பது ஒரு எரிச்சலூட்டுகிற விஷயமாகும். சேகரிப்பில் தோல்கள் இல்லை யென்பது பல சமயங்களில் 'இதுதான் நமக்கு வேறாரு முகாமில் கிடைத்திருக்கிறதே' என்பதே காரணமாக இருந்திருக்கிறது. எனது பறவை வாரியான குறிப்பேட்டில் பெயருக்குக் கீழே காணப்படும் எண்ணிக்கை பறவைக்குப் பறவை வேறுபடும். காட்டு பாப்ளர் (Babbler) பற்றி "மே 2–31, ஹைலகண்டி முகாம், எல்லாவித நிலங்களுக்கும் பொதுவாக காணப்படும் சாதாரணப்பறவை"– அவ்வளவுதான். ஆனால், புலம்பெயர் பறவை அல்லது சீரற்ற முறையில் பல இடங்களில் சிதறி வாழும் இனம் என்றால் முழு விபரங்களுடன் பல நாட்கள் தொடர்ந்து குறிப்புகள் ஓடும். பஞ்சாப் வரும் புலம்பெயர் பறவை பற்றிய குறிப்புகள் நாள்தோறும் தொடர்ச்சியாக பல ஆண்டுகள் இடம் பெற்றிருக்கும். அவை வந்துபோகும் காலகட்டங்களின் வளர்ச்சியும் தேய்வும் அவற்றி லிருந்து தெளிவாகக் காணக்கிடைக்கும்.

மாதிரிகளின் மென்மையான பகுதிகள் பற்றி எழுத மூன்றாவது கையேடு. பறவைகளின் வண்ணங்களை பெயர்க்குறிப்பில் எழுதுவதில்லை. ஒவ்வொரு பறவையைக் காணும்போதும் ஒரு புதுப்பக்கம். தோலின் வரிசை எண்ணைத்தொடர்ந்து, மிக கவனமாக முதல் மாதிரியின் மென்பாகங்கள் பற்றிய குறிப்பு இடம்பெறும். அந்த இனப்பறவை எவ்வப்போது பிறகு கிடைத்தாலும் இந்த முதல் மாதிரியுடன் ஒப்பிடப்பெற்று, ஒற்றுமை வேற்றுமைகள் குறித்துக் கொள்ளப்படும். விவரப்படுத்துவதில் ஒரே மாதிரி அமைப்பை இந்த முறை உறுதிசெய்கிறது. தோல் ஆராயப்படுகையில் மென்பாகங்களின் வேறுபாடுகளுக்கும் பால், வயது, பருவகாலமாறுதல்கள் ஆகிய வற்றுக்கும் தொடர்பிருக்கிறதா என்று உணரலாம். பாரம்பரிய

முறையில் சீட்டெழுதி ஒட்டுவது கால விரயம் உண்டாக்குகிறது. பயனும் குறைவு. மாதிரிகள் பிரிக்கப்படுகின்றன; முடிவுகள் ஒப்பிட்டுப் பார்க்கப்படுவதில்லை. வண்ணத்தால் இரண்டு தோல்கள் வித்தியாசப்பட்டால், அது உண்மையிலேயே அடிப்படை வேறுபாடா அல்லது ஒரே வண்ணம்தான் இருகால கட்டங்களில் சற்று வித்தியாசப்பட்டுவிடுகிறதா என்று சிறிதும் புரிவதில்லை. இதில் ஒன்று கட்டாயத்தேவை; அதில் தகராறில்லை என்று வைத்துக்கொண்டு மேற்செல்கிறோம். அதாவது பிடித்த பறவையை உடனே வரிசை ரிஜிஸ்டரில் நாம் பதிவு செய்து விடுகிறோம் என்பதுதான் அது. தோலுரிக்கும் முன் அந்த ரிஜிஸ்டர் படியான வரிசை எண் அந்தப் பறவைக்குப் பொருத்தப்பட்டு விடுகிறது. பெண் பறவையா என்பது பற்றிய குறிப்பும் காலதாமதமின்றி எழுதப்பட்டுவிட வேண்டும். களப்பணி உபகரணங்களுடனேயே இந்தக் குறிப்பேடும் களப்பணியின் போது கையோடு எடுத்துச் செல்லப்படவேண்டும். வாயின் உட்புறத்தின் வண்ணம் குறிக்கப்பட வேண்டும். எவ்வளவோ செய்திசொல்லும் இந்த அம்சத்தை பலரும் மறந்து விடுகிறார்கள்.

முழு உடலை அளவெடுக்கவேண்டாம். ஆனால் பெரிய உறுப்புகளை அளந்து சொல்வது சில சுவையான உண்மைகளை உணர்த்தும்.

சீட்டு ஒட்டும்போது அந்த சீட்டு உறுப்புகளின் நிலை, மண்டையோட்டு நிலை, கொழுப்பு, சிறகுகள் ஆகியவை பற்றிப் பேச வேண்டும்.

ஆணா, பெண்ணா என்று குறிப்பிடுவது மாதிரி தயாரிப்பில் மிக முக்கியமானது. ஒவ்வொரு மாதிரியையும் ஆண்-பெண் என இனம் பிரிப்பது ஹென்ரிக்ஸால் முடியாது. குண்டுபட்ட அடையாளம், சூடு, முதிராமை, பருவகால வேறுபாடு இதெல்லாம் சமயத்தில் இதில் சிக்கலை ஏற்படுத்திவிடும். ஒரு பறவையை நீங்கள் ஆண் என்று குறித்தால், அதனை அறுத்துப்பார்த்து அந்த முடிவான சான்றின் அடிப்படையில்தான் நீங்கள் அப்படிக் குறிக்கிறீர்கள் என்பது எனக்கு உறுதியளிக்கப்படவேண்டும். சிறகுகளிலிருந்து ஊகிக்கிற வேலை வேண்டாம். அது எனக்கே தெரியும். அத்துடன் அந்த வழி நீங்கள் நினைக்கிற அளவுக்கு நம்பகமானதே அல்ல. நூற்றாண்டுகளாக பால் நிர்ணயிப்பில் தவறுகள் நடந்திருக்கின்றன, ஊகங்கள் தவறான முடிவுக்கு இட்டுச் சென்றிருக்கின்றன. ஆகையால், சிறகமைப்பில் பல செய்திகள் நமக்குத் தெரியவில்லை. அறிக்கை தயாரிக்கையில் சீட்டில் உள்ளபடி உறுப்புகளை

விவரியுங்கள். இயன்ற இடங்களில் பாலுறுப்பின் அளவுபற்றி படம் வரைந்து காட்டுங்கள், சந்தேகமாயிருக்குமிடத்தில். சந்தேகமாக இருக்கிறது என்று சொல்லுங்கள். 'உறுப்புகள் தெளிவாயில்லை; அநேகமாக ?' என்று எழுதுங்கள். இந்த அம்சத்துக்கு எவ்வளவுக்கெவ்வளவு முக்கியம் தருகிறீர்களோ, அவ்வளவுக்கவ்வளவு தோலிலிருந்து உரிய காலத்தில் எனக்குப் பயன்கிட்டும். அடைகாத்த அடையாளங்கள் இருக்கிறதா என்று குறிப்பிடுங்கள். கூட்டுக்கு வெளியேதான் சுட்டீர்களா என்பதையும் குறிப்பிடவேண்டும். அடைகாத்தது தாயா, தந்தையா என்று நமக்குத் தெரியாது.

மண்டை ஓட்டிலிருந்து அந்தப் பறவை குஞ்சா பெரியதா என்று ஒரு தேர்ந்த தோல் நிபுணன் கூறிவிடலாம். அது எவ்வளவு உறுதிப்பட்டிருக்கிறது என்பதை வைத்து தோராயமாக கிட்டத்தட்ட சரியாக சொல்லிவிடமுடியும். இளங்குஞ்சுகளின் தலைஓடும் மிக மென்மையாகதான் இருக்கும். ஒரு குருத்தாக, ஒரு ஜவ்வாக என்று சொல்லலாம். முழுதாக கெட்டிப்பட மூன்றுநான்கு மாதமாகும். கெட்டிப்படுதல் மண்டையில் அடிப்புறத்தில் ஆரம்பிக்கும் முதுகெலும்பு வரிசையின் முனை உள்வாங்கப்படும். அதேபோல் கண்ணுக்குப் பின்னுள்ள பாகமும் அதே சமயம் கெட்டிப்படத் துவங்கும். மூளைப்பகுதியில் இந்த இரு பகுதியில் சந்திக்க வகையாக ஒன்றை நோக்கி ஒன்று வளரும்.

சற்றே வளர்ந்து, முதல் சிறகுகளும் முதல் ரோமங்களும் உதிர்ந்தும் கெட்டிப்பட்ட நிலையிலும், தலையின் நட்டநடுப் பகுதியில் சன்னல் மாதிரி சிறுபகுதி தளதளவென்றிருக்கும். அந்த சன்னலும் நாளுக்கு நாள் குறுகிக்கொண்டே வந்து மறைந்தே விடும். முழுத்தலையும் கெட்டியாகி விடுகிறநிலை இது. மண்டை ஓடு கெட்டிப்படுதல் சற்று விரிவாக குறிப்பெடுக்கப்பட்டால், ஒரு பழகிய தோல்உரி நிபுணனுக்கு இது கை வந்த விஷயமே. அதுவும் முட்டையிடும் காலம் முதல் நவம்பருக்குள் (நவம்பருக்குப்பிறகு என்றால் மிகத்தாமதமாகி விடும்) செய்யப்பட்டால், சிறகுகள் பற்றிய ஆய்வுக்கு மிகப்பேருதவியாயிருக்கும். சிறகு தீர்த்தல் எப்படி நடந்திருந்த போதிலும் கெட்டிப்படுதல் முற்றுப்பெறவில்லை என்றால் பறவை குழந்தைதான் என்று பொருள்.

அதிகமாக கொழுப்பு சேர்ந்துவிட்டால் அந்தப்பறவை இனவிருத்தி செய்யமுடியாது. அநேகமாக அது இடம்பெயர்ந்து கொண்டிருக்கும்போது சுடப்பட்டிருக்கும். முடி (சிறகு) உதிர்தல் நிகழ்ந்துள்ளதா இல்லையா என்று குறிப்பு கூறுமானால், அது

சிறகாய்வில் உதவும். அதற்காக விரிவான விபரங்கள் தேவையில்லை.

உணவு பற்றி நீங்கள் மிக அதிக கவனமெடுத்துக்கொள்ள வேண்டும். புழுக்கள் என்றும் 'விதைகள்' என்றும் காலங்காலமாக தேய்ந்துபோன சொற்களை நான் கூறவில்லை. ஒரு குறிப்பிட்ட பறவையினம் குறிப்பாக விரும்பி உண்ணும் விசேஷ உணவு என வெளிப்படையாக தெரியவரும் உணவுபற்றி தவறாமல் எழுத வேண்டும். அந்த இனம் எத்தகைய நிலப்பகுதிகளில் பரவலாக வாழ்கிறது என்ற ஆய்வுக்கு அது உதவும். நிறைய சின்னச்சின்ன சோதனைக் குழாய்கள் வைத்துக்கொள்வது நலம். இரைப்பை, தானியங்கள் ஆகியவை சாராயத்தில் பாதுகாத்து வைக்கப்பட்டால் பிறகு அடையாளம் காணுவது எளிது.

சின்னச்சின்ன குஞ்சுகளை வைத்துக் கொள்ள சின்னஞ்சிறு குழாய்கள் ஏற்றதாயிருக்கும். பிறகு ஆராயலாமென்று, கூடுகள் காணப்படும் எல்லாவகை பறவையினத்திலிருந்தும், ஒிரு குஞ்சுகளை தனியேவைத்தல் நலம். முட்டையைவிட குஞ்சு நல்லது. குஞ்சுகளை இனங்காண்பதில் கவனம் இருக்கட்டும். மென்சிறகு கூட்டுநிலை குஞ்சுகளும், பெரிய கூறு இனங்களும் ஆகியவற்றின் தோல்கள் அதிக நேர்த்தியானவை, குஞ்சுகளை அடையாளங் காண்பதில் கவனமாயிருப்பது மிக அவசியம்.

இந்த நீண்டநெடிய உபதேசத்தைப் படித்துவிட்டு, இதில் புதிதாக எதுவுமில்லை எல்லாமே தெரிந்த அறிவுரைகள்தான் என்று உங்களுக்குள் சொல்லிக் கொள்வீர்கள்! உண்மைதான். ஆனால் 90 சதவீத பயணங்கள், சேகரிப்புகள் இந்த எல்லார்க்கும் தெரிந்த அறிவுரைகளைப் பின்பற்றாமல் புறக்கணிப்பதாலேயே தமது மதிப்பிலும் பயனிலும் பெரும்பகுதியை இழந்து விடுகின்றன என்பதே என் அனுபவம். இவற்றைப் பின்பற்றுங்கள். ஹைதராபாத் பறவைகளைப்பற்றி நாம் எழுதப்போகிற முதல்தரமான அறிக்கை ஹைதராபாத்துக்கு வெளியிலும் ஆய்வுமுறைக்காகப் பேசப் படுவதாக, அமையும்.

## பிற்சேர்க்கை 2

# பழைய பையிலிருந்து

இன்னமும் என்னிடம் மிஞ்சியிருக்கிற சில கடிதங்களிலிருந்து சிந்தையைக் கிளறும் சில பகுதிகள்!
(பிறைக்கோடுகளுக்குள் உள்ளவை எனது கருத்துகள்)

1. சாலிம் அலிக்கு ஹியூக் விஸ்லர்: 'பாட்டில் 13.9.1938. நமது சஸெக்ஸ் தொல்பொருள் ஆராய்ச்சிக்கழகத்தின் குழுவில் நீங்கள் ஒரு பழமைப்பித்தன்—நானும்தான்—என்று கேள்விப் பட்டு மிகவும் உற்சாகமடைந்தேன். என் பாட்டனார் கழகத்தின் துணைத்தலைவராக இருந்தவர். ஆனால் இந்தத் துறையில் எனக்கிருந்த ஆர்வத்தை பறவைகளுக்கு நஷ்டமாகி விடக் கூடாதென்பதாலே குறைத்துக் கொண்டுவிட்டேன்.'
2. சாலிம் அலிக்கு ரிச்சர்ட் மெய்னர்ட்சகன்: லண்டன் 16 டிசம்பர் 1938. ஹிட்லருக்கும் முசோலினிக்கும் அவர்கள் விரும்புவது எப்போது கிடைக்கும் என்று நினைக்கிறீர்கள், போரைத்தானே அவர்கள் விருப்பம் என்கிறீர்கள்? அப்படி யென்றால் உங்கள் எதிர்ப்பார்ப்பு நிறைவேறும் நாள் தொலைவில் இல்லை என்றே தோன்றுகிறது. இப்படி ஒரு வெறியை நான் கண்டதேயில்லை. இந்தப் பைத்தியக்காரர் களுக்கு போர் ஒன்றே மருந்து. வன்முறை தவிர இவர்களுக்கு எதுவும் தெரியாது. ஆனால் அடுத்ததரம் ஏற்படக்கூடிய உருத்தெரியமுடியாத அழிவு, புனரமைப்புக்கான வாய்ப்புகள் எல்லாவற்றையும் கடந்த முழு நாசமாயிருக்கும். சில ஆண்டு களுக்கு ஒருமுறை என்ற கணக்கில் இந்த அதிர்ச்சிகளை எதிர்கொள்வது இயலாது. நூற்றாண்டுகளுக்கு ஒரு முறை ஒரு செம்மையான குலுக்கு குலுக்குவது பரவாயில்லை. பத்து ஆண்டுகளுக்கு ஒருமுறை என்பது வீண்தொந்தரவுகள். அது என் பணிகளையும் பறவையியலையும் பாதிக்கிறது.

இலையுதிர்காலத்தின்போது ஸ்ட்ரெஸ்மான் இங்கு வந்தார். மனிதர் நல்லவர், ஆனால் அதிகப்பிரசங்கி! (ஹிட்லரைப் பற்றியும் நாஜிகள் பற்றியும்) மாட்டிக்கொள்ளத்தான் போகிறார். அவர் ஹிட்லரை ஏற்பதில்லை; ஆனால் மாற்று கூற முடியவில்லை. சீரழிந்த யூதர்களுக்கு இது கேடுகாலம். இங்கு அனைவரும் எங்களால் ஆனதை செய்து கொண்டிருக்கிறோம். ஆனால் கஷ்டமென்னவென்றால் இந்த ஜெர்மானிய யூதர்கள் இருக்கிறார்களே, அவர்களும் கடுப்பேற்றுகிற ஒரு கூட்டந்தான். நாம் [அவர்களை] நேசிப்பது, அனுதாபப்படுவது எல்லாம் நேருக்கு நேர் தொடர்புகொள்ளாத வரையில்தான். அவர்களே தங்களை ஐரோப்பிய தீண்டத்தகாதவர்கள் போல் ஆக்கிக் கொண்டுவிட்டனர். அவர்களுக்காக போரிட ஒரு ஐரோப்பிய காந்தி தேவைப்படுகிறார். (பேசல் நகரில் 1954இல் நடைபெற்ற அனைத்துலக பறவையாளர் மாநாட்டின் போதும் பல்கலைக் கழக மாணவர் விடுதியில் நான் சிறந்த பறவை இயலாளரான என் நண்பர் ஹெர்பர்ட் ப்ரைட்மான் என்பவருடன் ஒரே அறையில் தங்கியிருந்தேன். அவரே ஒரு யூதர்தான், நானறிந்த மிக அருமையான அமெரிக்கர்களில் ஒருவர். போர்க்காலத்தில் ஹிட்லரிடம் ஜெர்மானிய யூதர்கள் பட்ட அவதிகளைப் பற்றிப் பேசுவோம். அவர் அதிரடியாக அப்போது சொன்னது பொருத்தமானதும் அழகானதுமான கூற்றாகும். அவர் சொல்வார்: ஜெர்மனிய யூதர்கள் எல்லாரும் அமெரிக்க யூதர்களைப் போல் மட்டும் இருந்தால், என் அனுதாபம் முழுவதும் ஹிட்லர்பால்தான் இருக்கும்!)

3. சாலிம் அலிக்கு எர்வின் ஸ்ட்ரெஸ்மான்: (மியூனிச் அமைதி உடன்படிக்கைக்கும் இரண்டாவது உலகப்போருக்கும் இடைப்பட்ட காலத்தில் லண்டனில் எங்கள் பொது நண்பர், கர்னல், மெய்னர்ட்சகனுடன் தங்கியிருந்துவிட்டு திரும்பியதும் எழுதியது.) "பெர்லின், 1 ஜனவரி 1939. இது ஒரு புதிய ஆண்டின் முதல் நாள். அநேகமாக இது ஒரு அதிமுக்கியமான ஆண்டாக அமையும். இன்று ஞாயிற்றுக் கிழமை. நான்காவது மாடியில் உள்ள எங்கள் குடியிருப்புக்கு எதிரே பனிமூடிய கூரைகளை கதிரொளி மெழுகிக்கொண்டிருக்கிறது. இப்போது, இந்த அமைதியான காலைப் பொழுதில் ஓராண்டு காலமாக நான் எழுதவேண்டும் என்று எண்ணிக்கொண்டிருந்த கடிதத்தை எழுதிவிடப்போகிறேன். நீங்களும் தெஹ்மினாவும் 1938 கிறிஸ்துமஸ் பற்றி எழுதிய விரிவான

சுவைமிக்க கடிதம் வந்ததிலிருந்து நினைத்துக் கொண்டே யிருக்கிறேன்! நம்பிக்கைகள், சாதனைகள், ஏமாற்றங்கள் யாவும் நிறைந்த பரபரப்பான நிகழ்ச்சிகள் மண்டியதோர் ஆண்டினைத் திரும்பிப்பார்ப்பதாக அது அமையும். உங்களுக்கு அறிந்து கொள்ள பல விஷயங்களைத் தரமுடியும் என்றாலும், துரதிருஷ்டவசமாக நான் விவரங்களை அடுக்கப்போவதில்லை. அந்த விவரங்கள் ஏற்கெனவே உங்கள் மனதில் உள்ள சித்திரத்திலும் எதையும் சேர்த்து விடப்போவதில்லை என்பது எனது கருத்து. (ஹிட்லர், நாஜிகள் யூதர்எதிர்ப்பு ஆகியன பற்றி) என் அனைத்துலக பறவையாளர் மாநாட்டுக்குப்பின் கர்னல் மெய்னர்ட்சகன் அழைப்பை ஏற்று என் சகோதரியுடன் லண்டனுக்கு சென்றிருந்தேன். இவள்தான் ஹெல்முட் பேயரின் தாய். அங்கு இரண்டு வாரம் இனிதே கழிந்தது. பிரிட்டிஷ் அருங்காட்சியகத்தில் கொஞ்சம் வேலை இருந்தது. அதனிலும் மேலாக ஒரு இதமான சூழ்நிலையில் வாழ்வை அனுபவித்தது தான் பெரிய இன்பம். இந்தியப் பாலைவனங்களுக்கு சென்றீர்களானால் அங்கு தரைவாழ் பறவைகளைக் காணலாம். மண்ணோடு அவற்றை எடுத்துவரலாம். சூழலுக்கேற்ப மண்ணின் நிறத்தை பறவை ஏற்றுக்கொள்வதைக் காணலாம். முனைவர் நெய்தம்மாருக்கு நான் கூறியபடி தென்மேற்கு ஆப்பிரிக்காவில் இது வெற்றிகரமாக உதவியிருக்கிறது. எப்போதும் வெவ்வேறு வண்ண நிலங்களை அணுகிப் பாருங்கள். கறுப்பு, சிவப்பு, . . . நைல்நதிப் பள்ளத்தாக்கில் உள்ள கொண்டையுள்ள வானம்பாடிகளை எண்ணிப் பாருங்கள். உங்களுக்கு இன்னும் நான் நன்றி சொல்ல வில்லையென்று நினைக்கிறேன். திரு விஸ்லரின் மூலம் எங்கள் இந்தியப் பிரிவுக்கு திருவாங்கூர் பறவைகளை நீங்கள் அனுப்பியிருந்தீர்கள். நாங்கள் மிகமிக வரவேற்ற பலப்பல பறவைகள். அவற்றில் சில மிக அரிதானவை என்பதையும் கூறவேண்டும். மிக்க நன்றியுடன் நான் அதனை நினைவு கூர்கிறேன். என்ன அருமையான குறிப்புச்சீட்டுகள்!'

4. சாலிம் அலிக்கு ஹியூக் விஸ்லர்: 'பாட்டில் 6, ஏப்ரல் 1939. ஹிட்லர் நிறுத்தப்படவேண்டும். மாத இறுதியில் மீண்டும் போலந்து செல்லத் திட்டமிட்டிருந்தேன். இப்போது போர் வெடித்தால் இங்கிலாந்திலிருந்து வெளியே செல்ல எனக்குத் துணிவில்லை. காலம் சிறிது. அந்த நாசகாரவெறியனோ,

அலெக்சாந்தரையும், நெப்போலியனையும் அவர்களைப் போன்றவர்கள் அனைவரையும்விட தான் பெறும் போர் வெற்றிகள் தன்னைப் பெரியவனாக்க வேண்டும் என்ற சுயநல ஆசையில் உலகையே குழப்பத்திலும் அதிரடி சூழ்நிலை களிலும் தள்ளிக்கொண்டிருக்கிறான். அரசியல் கொலைக்கு நியாயம் இருக்கமுடியுமானால்! இந்த நினைவைத் தவிர்க்க முடியவில்லை-ஒரு உயிர் லட்சக்கணக்கான உயிர்களைக் காப்பாற்றலாம். நான் என்ன சொல்ல வருகிறேன் என்றால் ஏப்ரல் மாதம் போய் விட்டால் ஆபத்து தற்காலிகமாக நின்றுவிடும். அப்புறம் அறுவடைக்குப் பிறகுதான். அப்போது அவன் என்னை அல்ஜீரியா போகமுடியாமல் செய்வான் என்று தோன்றுகிறது. என்ன உலகமடா சாமி!'

5. சாலிம் அலிக்கு ஹியூக் விஸ்லர் (தெஹ்மினா 9.7.39 அன்று காலமான செய்தி அறிந்தது): "பாட்டில் 3 ஆகஸ்டு 1939. நமது கடிதப்போக்குவரவில் தடை ஏற்பட்டது குறித்து என்னவோ, ஏதோ என்று நானே கவலைப்பட்டுக் கொண் டிருக்கையில் அந்த சோகத்தை சுமந்த உங்கள் ஜூலை 26 கடிதம் கிடைத்தது. உங்களுக்காக எவ்வளவு வருந்துகிறேன் என்பதும் எவ்வளவு ஆழ்ந்த இரங்கல் ஏற்படுகிறது என்பதும் சொல்லொணாத செய்தியாகும். உங்கள் துணைவியாரை நேரில் காணும் பேறும் பேரின்பமும் எனக்குக் கிட்டவில்லை யாயினும், நீங்கள் மிகமிக காதல் சார்ந்த தம்பதிகள் என்பதையும் இப்படி ஒரு துணைவி எனும் இறைவன் கொடுத்தவரம் எல்லார்க்கும் அமைவதில்லை என்பதையும் தொடர்ந்து நீண்டநெடிய பல்லாண்டுகளாக கொண்டிருந்த கடிதத்தொடர்பால் உணர்ந்திருக்கிறேன். உங்கள் கடிதங்களைப் படிப்பவர் அதை உணராதிருக்க முடியாதே! நம்மால் புரிந்து கொள்ள முடியாத கடவுள் சித்தத்தை நம்ப எவ்வளவு சிரமப்பட்டுக் கொண்டிருப்பீர்கள் என்பது பற்றியும் இப்போது மன உடைதலும் தனிமையும் எப்படி உங்களை வாட்டும் என்பதும் கொஞ்சமாவது உணரமுடிகிறது. நான்கூறும் எதுவும் உங்களுக்கு உதவப்போவதில்லை. நீங்கள் தனியாகவே உழன்று தனியாகவே வெல்ல வேண்டிய சோகம். நீங்கள் வென்றே தீருவீர்கள். ஏனெனில் அதுவே தெஹ்மினா விரும்பக் கூடியது என்பது உங்களுக்குத் தெரியும். ஆனால், உங்கள் யுத்தத்தை நீங்கள் நடத்திக்கொண்டிருக்கையில், உங்கள் நண்பர்கள் உங்களுக்காக உணர்ந்து உருகி

சோகத்தில் பங்கெடுத்துக் கொள்கிறார்கள் என்றறிவதில் சிறிதளவாவது ஆறுதலும் உதவியும் கிடைக்குமெனில் அது உங்களுக்குக் கிட்டும். நான் பெரிதும் வருந்துகிறேன், கனிவான அனைத்துணர்வுகளுடனும்.'

6. சாலிம் அலிக்கு ஹியூக் விஸ்லர்: 'பாட்டில் 20 செப்டம்பர் 1939. போர் நீண்டு கொண்டே போகாது என்றே எனக்குத் தோன்றுகிறது. நான் இங்கே முடக்கப்பட்டுவிட்டால் வேலை செய்ய நீங்களனுப்பிய பறவைத்தோல் வந்து சேருமானால், அதுவே தெய்வம் தந்த வரம்தான். இந்தியப் பறவைகள் அடங்கிய அஞ்சல் மேசையில் காத்திருப்பதைக் காண்பதில் உண்டாகும் மகிழ்ச்சியை நீங்கள் அறிய மாட்டீர்கள்! அதில்தான் எவ்வளவு புதிர், பிரமிப்பு!'

7. சாலிம் அலிக்கு ஹியூக் விஸ்லர் [மைசூர் கணக்கீட்டுக்கு ஆயத்தம் செய்கையில்]: 'பாட்டில் 26 செப்டம்பர் 1939. மைசூர் ராஜ்யத்தில் நீங்கள் காணக்கூடிய பறவைகளின் பட்டியலை இத்துடன் இணைத்துள்ளேன். ஒழுங்கியல் முறையில் நான் விரும்புபவையும் அதுதான். நீங்கள் கவனிக்க வேண்டிய பணிக்களக் குறிப்புகள்—நமது புதிய கையேடு தயாரிப்பு, பல பறவையினங்கள் பற்றிய பணிக்களக் குறிப்புகள் எவ்வளவு குறைவாக உள்ளன என்பதைக் காட்டியுள்ளது. சாதாரணப்பறவைகள் பற்றிக்கூட போதிய அளவு இல்லை. பொதுப்படையாக கிழக்கு மேற்கு மலைத்தொடர்களில் அவற்றுக்கு உரியதாயுள்ள இனங்கள் ஒவ்வொன்றும் எந்தெந்தப் பகுதிகளில் பரவிக்கிடக்கின்றன என்ற விபரமும் தேவை. மாநிலத்தில் குளிர்ந்த-வறண்ட பகுதிகளையும் ஆய்வு செய்யவும். பெட்ஸ் தயாரித்த கூர்க் குறிப்புகள் எவ்வளவு தூரம் அவை சிறுவட்டாரத்தின என்று காட்டியுள்ளது.'

8. எஸ்.எச். பிராட்டருக்கு ஹியூக் விஸ்லர். [மைசூர் கணக்கீடு பற்றி மும்பைக்கழக அருங்காட்சியகக் காப்பாளருக்கு உரைக்கும் முகமாக]: "பாட்டில், 5 பிப்ரவரி 1940. உண்மையாகவே, ஆகக் கடைசியில், இந்தியாவுக்குள் அதன் பறவைகள் எவை-எங்கே என்ற ஒரு தெளிவான அடிப்படையைத் தயாரிக்கப்போகிறோம். அது துவங்கிவிட்டது. இதற்கு உங்கள் ஆர்வமும், இந்த கணக்கீடுகள் நடந்தேற நீங்கள் எடுத்த தளரா நடவடிக்கைகளும் பெரும் பொறுப்பு ஏற்கின்றன! பறவை இயலாளர்கள் உங்களுக்கு நன்றிக்

கடப்பாடு உடையோர் ஆகிவிட்டனர்.'

9. சாலிம் அலிக்கு ஹியூக் விஸ்லர்: [என் அன்பளிப்பாக ஸ்ட்ரெஸ்மானுக்கு மைசூர் கணக்கீட்டில் கிடைத்த சில தோல்களை அனுப்புமாறு கோரியிருந்தது குறித்து] 'பாட்டில் 26 ஏப்ரல் 1940. கிட்டத்தட்ட ஒரு டசன் அவருக்காக ஒதுக்கப்பட்டுள்ளது. ஆனால் அனுப்பி வைப்பதுதான் முடியாத காரியம். [போர் நடந்துகொண்டிருந்த காலம்] செய்தித்தாளில் வார்சா சேகரிப்புகள் சீரழிக்கப்பட்ட செய்தியைப் பார்த்து அவர் ஆறுதலடைய வேண்டியதுதான்!

10. சாலிம் அலிக்கு ஹியூக் விஸ்லர் [அரசியல் கருத்துகள் சிலவற்றை தெரிவித்தபோது அதற்கு எழுதிய பதிலில்]: "பாட்டில் 29 ஆகஸ்ட் 1941. இது மட்டும் உறுதி. இந்தியர், ஆங்கிலேயர் இருவர் பக்கமும் நியாயமும் இருக்கிறது. தவறுகளும் உள்ளன. எதிரியின் கருத்துகளைப் புரிந்துகொள்ள இன்னும் கொஞ்சம் முயல்வது இருவருக்குமே நல்லது. அதை மட்டும் சொல்லி முடித்துக் கொள்கிறேன். நீங்கள் ஆங்கிலேயர்களை எவ்வளவு வெறுத்தாலும், விலக்க நினைத்தாலும், அப்போதும் நீங்கள் ஒரு பறவையியல்காரனை (ஹியூவி) அவன் அந்த வெறுப்புக்குரிய இனத்தவனாயிருப்பதையும் மீறி நேசிப்பீர்கள் என்பது எனது நம்பிக்கை. என் பங்குக்கு நானும் சாலிம் அலி என்ற மனிதரில் எனக்கு ஒரு நல்ல நண்பர் இருப்பதாகவே உணர்கிறேன். அவரும் ஒரு அருமையான பறவை இயலாளர். அவருக்கு என் கனிவான அன்பு.'

11. சாலிம் அலிக்கு ஹியூக் விஸ்லர் [டைஸ்ஹர்ஸ்ட் காலமான போது]: 'பாட்டில் 5 அக்டோபர் 1941. உங்களிடையே உறவு சரியாயில்லாதது பரிதாபமானது. ஆனால், இப்போது காலம் கடந்துவிட்டது. நான் இப்போது எல்லா அடிநில மாதிரிகளையும் வெளியே கொண்டுவருகிறேன். அந்தந்த லார்க் பறவையுடனும் அதற்கான நில மாதிரியை பொருத்திப் பார்ப்பது நோக்கம். மிகச்சுவையான முறையில் பணி நடந்துவருகிறது. லல்லுலா (Lullula–அதாவது கறுப்புநிற பாடும் பறவை) போன்ற சிலவற்றைப் பொறுத்தவரையில் மண்ணின் நிறத்துக்கும் நிலத்தின் நிறத்துக்கும் எந்த உறவுமில்லை. Callen Drella, Ammumanes, Galerida போன்ற வேறுசில பறவைகளைப் பார்த்தால், மிக நெருங்கிய தொடர்பு காணப்படுகிறது. Galerida Theklae அதற்கு எடுத்துக்காட்டு. நான் இப்போது ஆறு பறவையின மாதிரிகளை நிலத்தோடு சேகரித்துள்ளேன்—

கருநிற போர்த்துகல் பறவை முதல் சகாராவின் கண்ணைப் பறிக்கும் செம்பறவை வரை. ஒவ்வொன்றும் மிக துல்லியமாக அது வாழும் நிலத்து நிறத்தை பிரதிபலிக்கின்றன.

12. சாலிம் அலிக்கு ஈ.எச்.என் லவுத்தர்: ‘அலகாபாத், 2 ஆகஸ்ட் 1942, (இந்திய தேசிய காங்கிரஸ் வெள்ளையனே வெளியேறு தீர்மானத்தை நிறைவேற்றுவதற்கு ஒருவாரம் முன்பு) உங்கள் ஏப்ரல் ஏழாம் நாள் மடலில் நீங்கள் கிட்டத்தட்ட ஒரு அரசியல்வாதியாக ஆகிவிட்டாற்போலவே உங்கள் கருத்துகள் அமைந்துள்ளன! சர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் தனது முயற்சியில் தோல்வியுற்றது எனக்கு வருத்தத்தைத் தருகிறது. நான் இந்தியாவை நேசித்தாலும், எனக்கு பல அருமையான நண்பர்கள் இருந்தும், ஒரு சிக்கலான பிரச்சினையைத் தீர்க்க ஐரோப்பியர்கள் பற்றிய காந்தியின் கண்ணோட்டம் ‘ஒரு போதும் உதவப்போவதில்லை என்றே நான் கருதுகிறேன். முதலாவதாக இந்து–முஸ்லீம் இடையிலும் ஆங்கிலேயர்–மற்ற எல்லா வகுப்பினர் இடையிலும் நல்லெண்ணம் ஏற்பட்டே தீரவேண்டும். இந்தோ–ஐரோப்பிய நல்லுறவென்பது கலப்பு மணம் இல்லாமல் சாத்தியமே இல்லை என நான் நம்புகிறேன். வசதியுள்ளவர்களிடையே இத்தகைய கலப்பு மணங்கள் சாதாரணமாக ஆகவேண்டும். இருபுறமும் நல்லெண்ணம் வளர வேண்டும். அதாவது முழுக்கவும் புதிய அணுகுமுறை தேவை. நான் சொல்கிறேன் கேட்டுக்கொள்ளுங்கள்—நிறபேதம் ஒழிந்தே தீரும். மீண்டும் அமைதி வரும்போது அழிந்து போனவையாக ஆகப் போகிறவற்றில் நிறபேதம் ஒன்று. ஏன் கூடாது, என்று கேட்கிறேன். இந்தியனைவிடத் தான் உயர்ந்த மனிதனென எண்ண, ஐரோப்பியனுக்கு என்ன உரிமை இருக்கிறது? அது தவறு. அது தவறென்பது அவனுக்கும் தெரியும். கலப்புமண வாரிசுகளை அவன் இப்போது குறிப்பிடுவதுபோல “கறுப்பு இழிமகன்கள்” என எண்ணுவதை நிறுத்தவேண்டியே தீரும்.’

13. சாலிம் அலிக்கு மாண்புமிகு [திருமதி] ஜோன் விஸ்லர்: “பாட்டில் 9 ஆகஸ்ட் 1943 (புற்றுநோய்க்கு பலியாகி 7.7.43 அன்று விஸ்லர் காலமானபோது நான் எழுதிய இரங்கல் மடலுக்கு பதிலாக). உங்கள் மீதும், உங்கள் ஞானம் பற்றியும் விஸ்லர் எவ்வளவு உயர்வான கருத்து கொண்டிருந்தார். உங்கள் நட்பை அவர் அவ்வளவு மதித்தார் என்பதையும் நான் உங்களுக்குக் கூறியே ஆகவேண்டும். உங்கள் அருமையான

மடல்கள் அனைத்தும் அவருக்கு எவ்வளவு மகிழ்வூட்டின என்பதையும்தான்! உங்கள் நூல் (இந்தியப் பறவைகள் நூல்) அவருக்கு அவ்வளவு பிடித்திருந்தது. முன்னுரையில் அவரைப் பற்றிய தங்கள் கனிவுரைகளும் அவரை நெகிழ்வித்தன. உங்களிடையே போட்டியோ, பொறாமையோ ஒரு நாளும் இருந்ததில்லை என்பதையும் நான் அறிவேன். உங்கள் நட்பை குலைக்கக்கூடிய எதுவும் இடையில் இல்லை. எனவே நீங்கள்தான் எனக்கு அறிவுரை கூறவேண்டும் (இது விஸ்லர் எழுதிய இந்தியப்பறவைகள் —மக்கள் கையேடு—Popular Hand Book of Indian Birds—என்ற நூலை நான்காம் பதிப்புக்காக திருத்தியமைப்பது பற்றியது. பிறகு 1949இல் இது வெளிவந்தது. விஸ்லரின் சேகரிப்புகள், ஹெச்டபிள்யூ வெயிட் சேகரித்தவை இரண்டுமாக சுமார் 26,000 தோல்களும் அவர் எழுதிய நுணுக்கமும் விரிவுமான குறிப்புகளும் இப்போது பிரிட்டிஷ் அருங்காட்சியக இயற்கை வரலாற்றுப் பிரிவில் உள்ளன.

14. 1968இல் களப்பணி தொடர்பாக நான் மும்பையை விட்டுச் சென்றிருந்தபோது லெனின்கிராட் உயிரியல் கழகத்தைச் சேர்ந்த சக பறவையியலாளர் முனைவர் ஏ.ஐ. இவனோவ் என்ற ரஷ்யரிடமிருந்து மும்பை கழகத்துக்கு ஒரு இரங்கல் மடல் வந்தது. "எனது அரிய நண்பர் சாலிம் அலியின் மறைவு" குறித்து இந்தியாவிலிருந்து அங்கு சென்றிருந்த உஸ்மானியா பல்கலைக்கழகப் பேராசிரியரான ஒரு சிங்(?) மூலம் தான் அறிய நேர்ந்ததாக அவர் எழுதியிருந்தார். மடலெங்கும் உயர்வு நவிற்சியாகப் பல அரியபண்புகளைக் குறிப்பிட்டு புகழஞ்சலி. பொதுவாக மரணமடைந்தவர்களுக்காகவே எழுதப்படுகிற உரைகள்! தன் வாழ்நாளிலேயே, தான் எவ்வளவு உன்னத மான இன்றியமையாத மனிதர் என்று உணர்ந்து பெறுகிற திருப்தி சிலருக்கே கிடைக்கும். நான் அப்படிப்பட்ட பேறு பெற்றவன்— ஒரு முறையல்ல இரண்டு புதுப்பிறவிகளில்! நான் திரும்பி வந்ததும் என்னிடம் கடிதத்தைக் காட்டினார்கள். உடனடியாக சிரத்தையுடன் அவருக்குத் தவறான தகவல் தரப்பட்டுவிட்டதென விளக்கினேன்.

(அ) சாலிம் அலிக்கு முனைவர் இவனோவ்: லெனின் கிராட் 9 ஜீலை 1968. எனக்குக் கிடைத்த தகவல் முற்றிலும் தவறான தென்று நீங்கள் எழுதிய மடலைப் படித்ததில் எவ்வளவு களிப்படைந்தேன் என்பதை என்னால் விவரிக்க முடிய வில்லை! ரஷ்ய நம்பிக்கைகளின்படி, ஒரு மனிதன் அதிக

பட்சம் எவ்வளவு காலம் வாழமுடியுமோ அவ்வளவு காலம் தாங்கள் வாழ்வீர்கள். நற்செய்தி கண்டு என் நண்பர்களுக்கும் மகிழ்ச்சி.!!

ஆகஸ்டு 1974 வரை எல்லாம் நல்லபடியாகவே நடந்து நானும் ரஷ்ய நம்பிக்கையை மெய்யாக்கினேன். சர்வதேச பறவையாளர் மாநாடும், பறவைக் காப்புப் பேரவைக் கூட்டமும் கான்பெர்ராவில் (ஆஸ்திரேலியா) 1974 ஆகஸ்டில் நடைபெற்றன. எதிர்பார்த்ததுபோல என்னால் அவற்றில் கலந்துகொள்ள இயலவில்லை.

ஆ கை மவுன்ட்போர்ட், பிரிட்டிஷ் பறவை இயலாளர் சங்கத்தலைவர் திருமதி சாலிம் அலிக்கு: (திருமதி சாலிம் அலி 1939யிலேயே காலமாகிவிட்டவர்.) 'பிளாக்பாய்ஸ், சசெக்ஸ், 21 ஆகஸ்ட் 1974. உங்கள் கணவரின் மரணம் (யார்தான் சொன்னார்களோ!) கான்பெர்ராவில் கடந்த வாரம் நடந்த பறவை இயலாளர் மாநாட்டில் அறிவிக்கப்பட்டது. அனைவரும் பெரும் துக்கத்திலாழ்ந்தோம். அவர் உலகிலேயே அதிகப்புகழ் வாய்ந்த பறவையாளரும், சிறப்புக்குரிய அறிஞருமாவார். நாகரிக உலகெங்குமுள்ள அவரது நண்பர்கள் அனைவரையும் இவர் மரணம் துயரில் ஆழ்த்தும். சுமார் நாற்பதாண்டுகளாக அவரை அறியும் பேறுபெற்றவன் நான். பிரிட்டிஷ் பறவை இயலாளர் சங்க உறுப்பினர்கள் சார்பிலும் செயற்குழு சார்பிலும் எங்கள் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன். உங்கள் தனிப்பட்ட இழப்புக்கு அனுதாபம் தெரிவிப்பதில் எனது துணைவியாரும் பங்கு கொள்கிறார்.

இ. சாலிம் அலிக்கு கை மவுண்ட் போர்ட்: "பிளாக் பாய்ஸ், சசெக்ஸ், 4 செப்டம்பர் 1974. கான்பெர்ராவில் செய்யப் பட்ட உங்கள் மறைவுகுறித்த அறிவிப்பு உங்கள் வார்த்தைகளில் "சற்றே தவறானது" என்று அறிவித்தபடி வந்த உங்கள் கடிதம் கிடைத்ததில் எவ்வளவு மகிழ்ச்சியடைந்தேன் என்பதை அப்படியே கூற இயலவில்லை. எப்படிச் சொன்னாலும் அதைவிட மகிழ்ச்சியடைந்தேன் என்பதே சரி. எல்லாரும் மகிழ்ச்சியடையப் போகிறார்கள். இப்படி ஒரு வதந்தியைத் தவறாக்கியதில், நீங்கள் முதல் மனிதரல்ல. உங்கள் சுய வரலாற்றில் இதை நன்கு பயன்படுத்திக்கொள்வீர்கள் என நம்புகிறேன். போர்க் காலத்தில் எனது பெயரையே மரணமடைந்தவர்கள் பட்டியலில் படித்தபோது எனக்கும் இத்தகைய அனுபவம் ஏற்பட்டிருக்கிறது.'

அனைத்துலக பறவை காப்புக்கழக ஆசியக்கிளைத்தலைவர் முனைவர் யாஷிமாரோ யமாஷினா எனது நண்பர். அவருக்கும் இதே தகவல் கிடைத்திருக்கிறது.

ஈ) 'திருமதி. சாலிம் அலி'க்கு யமாஷினா: 'டோக்கியோ, 11 செப்டம்பர் 1974. தங்கள் காதற்கணவரின் மறைவு என்ற துக்ககரமான இந்நேரத்தில் எனது மெய்யான இரங்கலைத் தெரிவித்துக்கொள்கிறேன். முதன் முதலில் 1958இல் ஹெல் சிங்கியில் நாங்கள் சந்தித்ததிலிருந்து அவர் எனக்கு உதவி வந்துள்ளார். எப்போதும் அவரை நான் பிதாவாகவும் குரு வாகவும் போற்றி வந்துள்ளேன். அவரது திடீர் மறைவுபற்றி ஆகஸ்ட் 19 அன்று அறிந்தேன். அவரது ஆன்மா அமைதி பெற செயற்குழுக்கூட்டத்தின் துவக்கத்தில் ஒரு நிமிடம் மவுன அஞ்சலி செலுத்தினோம். எப்போது, எந்த நோயினால் அவர் காலமானார் என்ற விபரங்கள் எங்களுக்கு கான்பெராவில் கிட்டவில்லை. விபரங்களுக்குக் காத்திருக்கிறோம்.'

(உ) சாலிம் அலிக்கு யமாஷினா: 'டோக்கியோ, 1 அக்டோபர் 1974. உங்கள் 16 செப்டம்பர் 1974 தேதியிட்ட நற்செய்தி தாங்கிய மடலுக்காக மிக்க நன்றி. தவறான செய்தி பரவிய தெப்படி என எனக்குத் தெரியவில்லை. எதுஎப்படியோ, நீங்கள் நலமாயிருப்பதாக நீங்களே எழுதியுள்ள கடிதம் போல எனக்கு மகிழ்வளிக்கும் கடிதம் வேறில்லை. எங்கள் ஜப்பானியர்கள் மரணவதந்திக்கு ஆளானவர் நெடுங்காலம் வாழ்வார்கள் என்று சொல்வார்கள். (உலகம் முழுவதும் இப்படித்தான் சொல்கிறார்கள்) எனவே எப்போதும் போல் நீங்கள் இன்னும் பன்னெடுங்காலம் உடல் நலத்துடன் வாழ்வீர்கள் என்பதில் எனக்கு ஐயமேயில்லை.

15. சாலிம் அலிக்கு எர்வின் ஸ்ட்ரெஸ்மான்: 'பெர்லின் 26 மே 1972. உங்கள் மகோன்னத நூலின் ஐந்தாம் பதிப்பு இன்று காலை கிடைத்தது. முதல்பக்கம் உங்கள் சொந்தக் காணிக்கை யாகக் கூறியிருக்கிறீர்கள். எனக்கு இது மதிப்பரிய விஷயம். இதுவும் இதன் முன்னோடிகள் போலவே எனக்கு மேலும் கற்பதில் பேருதவியாக இருக்கும் என்பதில் ஐயமேயில்லை. மிக்க நன்றி. இருவரும் ஜூலை 29 அன்று டிரிங் (Tring) நகரில் இருப்போம். அங்கு B.M அவர்களது பறவை சேகரிப்புகள் மறுதிறப்புவிழா. (சௌத் கெனிங்கஸ் டனிலிருந்து இடமாற்றம் செய்யப்படுபவை) பாவி, மொலாக்காஸ் ஆகிய இடங்களுக்கு செல்லுமுன்பு இதே

*ரோமிய நகரில் 1910இல் முதன் முறையாக தங்கி இருந்தேன். அங்கே ஏர்னஸ்ட் ஹார்ட்ரெட் என்னை வரவேற்று பயிற்சியளித்தார். (அவர் இவரது குரு) அது பன்னெடுங்காலம் முன்பு!*

....மற்றவர்கள் விழிகளால் நம்மையே நாம் பார்த்தால்

மோசமான சந்தேகங்களுடன் ஆரம்பித்து
புரிந்துகொள்ளும் ஒரு அருமையான நண்பராக ஆகிப்போன
ஒரு பறவையியல் பயண மேதையின்
வெளிப்படையான விமர்சனங்கள்
கர்னல் ரிச்சர்ட் மெய்னர்ட்சகனுடைய
நாட்குறிப்புகள் வெளிப்படுத்தும் அரிய உண்மைகள்

*14 ஏப்ரல் 1937:* கோர்பந்த் பள்ளத்தாக்கு, 6500 அடி, ஆப்கானிஸ்தான். "முகாமடிப்பது நீண்ட களைப்பூட்டும் பணியாயிருக்கிறது. சாலிம் இதைப் போன்ற வேலைகளில் உதவாக்கரை. வேலையாட்களிலும் எவனுக்கும் ஒரு மண்ணும் தெரிவதில்லை. எதற்கெடுத்தாலும் வேலைக்காரப் பட்டாளம் என்று அவ்வளவு பழகிப்போனதால் தானே ஏதும் செய்யவேண்டிய நிலைவந்தால் எந்த சக்தியுமில்லாத தண்டம். இந்த அழகில் இவனைப் போன்ற இந்தியர்களால் இந்தியாவைத் தாங்களே ஆண்டுகொள்ளமுடியும் என்ற பீற்றலுக்குக் குறைவில்லை. இந்த மாதிரி ஆட்கள் முதலில் தங்களைத் தாங்களே நிர்வகிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்."

*15.4.1937:* 'எனக்கு இது பிடிக்கவேயில்லை. சாலிம் முயற்சி செய்கிறான். ஆனால் திறமையில்லை. எதையும் எப்படிச்செய்வ தென்று நாம் சொன்னாலும் இவனுக்கு பொறுக்காது. எல்லா வற்றையும் தன் வழியிலேயே செய்யவேண்டும். பெரும்பாலும் அது தப்பாகவேயிருக்கிறது. முகாம் வாழ்க்கைபற்றிய சாலிமின் அறியாமை அனுதாபத்துக்குரியது. முகாமில் அவன் நிலையும் பரிதாபம்தான். முகாமில் தானே தன் வேலைகளைச் செய்துகொள்ள நேர்ந்ததே யில்லை என்றும் முன்பெல்லாம் எப்போதுமே வேலைக்காரப் பட்டாளமே வைத்துக்கொள்வான் என்றும் சொல்கிறான். முகாம் வாழ்வின் சுகமே நம்முடைய துணைவர்களைப் பொறுத்தே பெரும்பாலும் அமைகிறது"

*30.4.1937:* "சாலிம் பெரிய ஏமாற்றம். சேகரிப்புத்தவிர அனைத்

திலும் இவன் தண்டம். தோலுரிக்கத்தெரியாது, சமைக்கத்தெரியாது, முகாம் வாழ்வு தொடர்பான எந்தப்பணியிலும் ஒன்றும் தெரியாது, சாமான்களை மூட்டை கட்டவும் தெரியாது. விறகுவெட்டவும் தெரியாது. முடிவேயில்லாமல் குறிப்புகள் மட்டும் எழுதுவான், எழுதுவான், எழுதிக்கொண்டேயிருப்பான். எதைப்பற்றித்தான்-ஒரு வேளை என்னைப் பற்றி எழுதுவானோ! சேகரிப்பு வேலைகூட தானாக முன்னெடுப்பில் செய்யமாட்டான். எல்லா இந்தியர் களையும் போலவே இவனும் நான்செய்திற எந்தப்பணியிலும் திறமைசாலி அல்ல. ஒரு வேலையைத் தவறாகச் செய்யும் ஒரு வழி இருந்தால், அப்படியே செய்வான். மேலே என்ன என்று சிந்திப்பது சுத்தமாக முடியாத காரியம்."

*20.5.1937:* சாலிம் படித்த இந்தியனின் முழு உருவம். மிகவும் சுவையான ஆள். அவனுக்கே உரிய ஏட்டுக்கல்வியில் பிரமாதம்தான். நடைமுறைப்பணியில் நான் ஒரு மண்ணும் தெரியாது. அன்றாட வாழ்வின் சிறு சிறுபணிகளில் சுத்தத்தண்டம். ஆனாலும் எல்லாவற்றிலும் தானே சரி என்பதில் மட்டும் அவனுக்கு சந்தேகமே வராது. அவனது கருத்துகள் மலைப்பை ஏற்படுத்துபவை. நாளையே பிரிட்டிஷாரை வெளியேற்றிவிட்டு இந்தியாவை தானே ஆளவும் அவன் தயார். சாலிம் போன்ற ஆட்களின் தயவில் இந்தியாவின் இலட்சக்கணக்கான ப்டிப்பற்ற மக்களை விட்டுச்செல்லும் எண்ணமே பிரிட்டிஷ் அரசுக்கு இல்லை. ஏனெனில் மனிதர்களை எலிகள் ஆள்வதை எந்த பிரிட்டிஷ்காரனாலும் சகித்துக்கொள்ள முடியாது என்று நானும் இவனிடம் ஆயிரம்தரம் சொல்லி விட்டேன்."

*9. ஜன. 1952* சிக்கிம். (விடுதலைக்குப்பின்) "இந்தியா–இந்தியன் என்றாலே சாலிம் உணர்ச்சி வசப்படக் காண்கின்றேன். எந்த விமர்சனத்தின் நிழலும் அவனை எரிச்சலடையச் செய்கிறது. இந்தியப் பிரச்சினையில் தென்னாப்பிரிக்காவின் நிலைபற்றி தீவிர கசப்புடன் இருக்கிறான். கென்யா, தென்னாப்பிரிக்கா இரு இடங்களிலும் உள்ள இந்தியர்கள் பற்றிய என் அனுபவம் இவர்கள்தான் நோய், நேர்மையின்மை, ராஜதுரோகம் ஆகியவைகளை அறிமுகப்படுத்து கிறார்கள் என்பதாகும்". (மேலேயும் காந்தி பற்றிய கடுமையான மதிப்பீடுகள், காந்தி எனும் எலி, பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தோடு ஒப்பிடுகையில் இன்றைய இந்தியாவின்நிலை—திறமையின்மை, நேர்மையின்மை அழுக்கு...)